35-3

ITHIHASA MANJARI SERIES.

உ

வெற்றிவேலுற்றதுணை.

# கந்தபுராணவசனம்.

உற்பத்திகாண்டம், அசுரகாண்டம்,

மகேந்திரகாண்டம்

ஆகிய

முதன்மூன்றுகாண்டங்கள்.






இவை

சென்னபட்டணம்:

வித்வான் - தி - சண்முகம்பிள்ளையவர்களால்

வசனரூபமாக எழுதுவித்து

ப - மு - செல்வராஜமுதலியாரவர்களால்

தமது

அமரிக்கன் அச்சுக்கூடத்தில்

பதிப்பித்துப்பிரசுரிக்கப்பட்டன.

1890.

உ

திருச்சிற்றம்பலம்.

## நடேசர்துதி.

கார்மலி பொழிற்புலி யூர்க வின்பெற
சீர்மலி நான்மறைச் செல்வர் செய்கிற்கும்
நார்மலி பூசனைக் கிரங்கி நாடொறும்
ஏர்மலி நடஞ்செயு மிறைவற் போற்றுவாம்.

## திராவிடபாஷியகாரர்துதி.

பேசுசீரெழுத் தஞ்சின்முப் பொருள்பெரி துணர்த்திப்
பாசமேவர்களைத் தென்றனைப் பரிவினி னாண்ட
தேசுபூத்ததென் றுறைசையிற் றிகழ்சிவ ஞான
தேசிகோத்தமன் சேவடி தொழுதிருள் செகுப்பாம்.

## ஞானப்பிரகாசர்துதி.

சொல்லினற்றொடர் வருந்தன தூயசே வடிகள்
வல்விரைந்தடி யேன்முடி வயங்கிடச் சூட்டிக்
கல்லினைக்கனி வித்தருள் காஞ்சியின் மேய
நல்லஞானப் பிரகாசனை நயந்திருள் களைவாம்.

மெய்கண்டதேசிகன் திருவடிவாழ்க.

---




# அட்டவணை

## கந்தபுராணத்தில்

## உற்பத்திகாண்டம், அசுரகாண்டம், மகேந்திரகாண்டம்.

முதல்மூன்றுகாண்டங்களும், அடங்கியிருக்கின்றன.

---

உ

வேலுமயிலுந்துணை.

# கந்தபுராணப் பாயிரவுரை.

திகட சக்கரச் செம்முக மைந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயகன்
அகட சக்கர வின்மணி யாவுறை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம்.

இ-ள். திகழ் - விளங்கும், தசக்கரம் - பத்துக்கைகளையும், செம்முகம்-செப்பமாகிய முகங்கள், ஐந்துளான்-ஐந்தையுமுடையானாகிய சிவபிரானது, சகடம்-(நிலமாகிய) தேரிற்பூட்டப்பட்ட, சக்கரம் - உருளையாகிய, தாமரைநாயகன் - தாமரைக்கு நாயகனாகிய சூரியன், அகடு-வயிற்றினிடத்ததாக, அசக்கு - அசங்கச்செய்யாநிற்கும், அரவின் மணியாய் - உதரபந்தனமாகிய அரவின்மணிபோல, உறை - உறைகின்ற, விகடசக்கரன் - விகடசக்கரவிநாயகருடைய, மெய்ப்பதம் - மெய்ம்மையான பாதங்களை, போற்றுவாம் - துதிப்பாம் என்றவாறு.

திகழ்தசக்கரமென்பது திகடசக்கரமெனப் புணர்த்தமையை, வீரசோழியத்துச் சந்திப்படலத்து "நான்கொடு மூன்றொன்ப தாமுயி ரின்பின்பு நவ்வருமே, லேன்ற ணகார மதாகும் பதினைந்தொ டெண்ணி ரண்டாய்த், தோன்றுடற் பின்னர்த் தகாரம் வரினிரண் டுந்தொடர்பா, லான்றவைந் தாமுட லாமுன்பி லொற்றுக் கழிவுமுண்டே." என்றதனாலறிக.

ஐந்து திருமுகங்கட்கேற்பத் தசக்கரமென்றார். ஐந்துதிருமுகங்களாவன.—ஈசானம், தற்புருடம், அகோரம், வாமனம், சத்தியோசாத மென்பனவாம். அவை முறையே பளிங்கு, கோங்கு, கறுப்பு, வெட்சிப்பூநிறம், பானிறமென்ப. செம்முகமைந்துளான் சகடமென்றாராகலின் நிலமாகிய தேரெனப் பொருளுரைத்தாம். என்னை? இவர் மூவெயில் பொருதஞான்று நிலனே தேராகவும், நான்மறையே அத்தேரிற்பூட்டிய பரிகளாகவும், பரிதியு மதியு முருளையாகவும், மற்றைத்தேவர் முதலியோர் ஏனைப்போர்க்குரிய உறுப்பாகவும் கொண்டமையானும், தாமரைக்கு நாயகனாகிய பரிதியங்கடவுளே உருளையாகலின் இவ்விநாயகக்கடவுள் விச்சுவரூபங்கொண்டஞான்றுஇவரிடையானது பரிதிமண்டலத்து இயைதலின் அது ஞான்று அக்கடவுள் அவரதுதரபந்தனமாகிய அரவின் மணிபோற்றோன்றலான் "அரவின்மணியா" யென்றதென்க. மணியாயென்புழி ஈண்டாக்கச் சொல்உவமப்பொருள் குறித்துநின்றது. இக்கருதியே "ஆள்வாரிலிமாடாவேனோ" என்புழி ஆக்கச்சொல் உவமப்பொருள் குறித்து நின்றதெனக் கொண்டார் சிவஞானமுனிவரும். இனி அகடசக்கரவின் என்பதை அகடசக்கரம் வில்லெனக்கொண்டுவிரிப்பாருமுளர். விகடசக்கர விநாயகரென்றது, அத்தலவிநாயகரை. இவரது ஆலயம் திருவேகம்பத்தில் ஆயிரக்கால் மண்டபத்தருகேயுள்ளது. அவர்க்கிப்பெயர்வந்தமையை "ஏக்கறவானவ ரியற்றும் விகடாட நெடும்போதெம் பெருமானோக்கி, மாக்கருணை சுரந்தருளி யாழிய வன் றனக்களித்தான் வரத்தான் மிக்கீர், போக்கறுமிக் காரணத்தா லன்றுமுதற் காஞ்சியினப் புழைக்கைத்தேவை, யூக்கமுறுந் திறல்விகட சக்கரவி நாயகனென் றுலகங்

கூறும்.'' எனக் காஞ்சிபுராணங் கூறுதலானு மறிக. போற்றுவாம் தனித்தன்மைப்பன்மை. இது அளவடிநான்கா னமைதலில் கலிவிருத்தத்தின்பாற்பட்டதென்க. என்னே? 'அடிவடி நான்கின கலிவிருத்தம்மே' என்றாராகலின்.

இருப்பரங் குறைத்திடு மெஃக வேலுடைப்
பொருப்பரங் குணர்வுறப் புதல்வி தன்மிசை
விருப்பரங் கமரிடை விளங்கக் காட்டிய
இருப்பரங் குன்றமர் சேயைப் போற்றுவாம்.

இ-ள். இரும்பு - இரும்பினாற்செய்யப்பட்ட, அரம்குறைத்திடும்-அரத்தாற்குறைக்கப்படும், எஃகவேலுடைய - எஃகமாகிய வேலையுடைய, பொருப்பர்-குறவர், புதல்விதன் மிசைவிருப்பு - தம்புதல்வியாகிய வள்ளிநாயகியார்பால் வைத்தவிருப்பத்தை, அரங்கு அமரிடை - அழிவினையுடைய போர்க்களத்தில், அங்கு உணர்வுற-அங்கேயறியுமாறு, விளங்கக்காட்டிய-தோன்றக்காட்டிய,திருப்பரங்குன்றமர்சேயை-திருப்பரங்குன்றமென்னுந்திருப்படைவீட்டிலெழுந்தருளிய பிள்ளையாரை, போற்றுவாம்-துதிப்பாம். எ-று.

இரும்பு எதுகைநோக்கி வலிந்துநின்றது. எஃகவேல் என்பது இருபெயரொட்டுப் பண்புத்தொகை. இனி எஃகினாற்செய்த வேலெனக்கொண்டு மூன்றாவதன்றொகை யெனினுமாம். உடைய என்னும் குறிப்புப்பெயரெச்சத் தகரவீறு தொகுக்கப்பட்டது. அரங்கு முதனிலைத் தொழிற்பெயர். காட்டியவென்னும் பெயரெச்சஞ் சேய் என்னும் வினைமுதற் பெயர்கொண்டது. இப்படைவீடு பிள்ளையார் சரவணப்பொய்கையிற் பதுமப்பாசடையிற் பசுங்குழவியாக்கிடப்ப உலகன்னை இறைவனொடுஞ் சென்று ஞானபோனக முட்ட வுண்புழிஅது சிதற ஆங்குச் சாபவசத்தினராய பராசரன் மதலையராறுவர் மீனுயிருக்குநர் அருந்தி, ஆங்கு அச்சாபமொழிந்து பிள்ளையாரையிறைஞ்சுதலும், நாஞ்சூர்த்தடியத் திருப்பரங்குன்றுக்கு வருதும், ஆண்டுச் சிந்தையுமொழியுஞ் செல்லாநிலைமைத்தாய அந்தமிலின்ப நிலையையருள்வோமென்றவாறே யருளித் தெய்வயானையாரைமணம்புரிந்த தலமென்க. இதனை முற்கூறினர்; "மலையுருக்கொண்ட வுடல்வாளரக்கர், வெள்ள முஞ்சுரும் புள்ளியற்பொருப்பும், நெடுங்கடற் கிடங்கு மொருங்குயிர்பருகிய, மணிவேற் குமரன் முதனிலைவாழுங் குன்று" எனக் கல்லாடனார் கூறுவதுநோக்கி. இது மதுரையின்மேற்றிசை எல்லைக்கண்ணதென்பதனைத் திருமுருகாற்றுப்படையுள் "கூடற் குடவயிற் குன்று" என்பனாற் காண்க. செய்யவன் சேயென விகாரத்தானீண்ட தென்றுமாமென்றார் நச்சினார்க்கினியரும்.

சூரலை வாயிடை தொலைத்து மார்புகீண்
டீரலை வாயிடு மெஃக மேந்தியே
வேரலை வாய்தரு வெள்ளி வெற்பொரீஇச்
சீரலை வாய்வரு சேயைப் போற்றுவாம்.

இ-ள். சூர் அலைவாயிடைதொலைத்து - சூரபதுமனைக் கடலிடையொழித்து, மார்பு கீண்டு-மார்பைப்பிளந்து, ஈரலைவாயிடும் எஃகமேந்தி - அவனீருலை வாயிற்பெய்யும் வேற்படையைத்தாங்கி, வேரலைவாய்தரு - பிரப்பங்காடடர்ந்த, வெள்ளிவெற்பு ஒரீ - வெள்ளி வெற்பினையகன்று, சீரலைவாய்வரு - திருச்சீரலைவாயென்னுந் திருப்படைவீட்டி லெழுந்தருளிய, சேயை - பிள்ளையாரை, போற்றுவாம் - வணங்குவாம். எ-று.

சூரென்றது சூரபதுமனை. வேரலைவாய்தரு என்பதற்கு வேரல் ஐவாய்தருவெனக் கொண்டு பிரப்பங்காடழகாயமைந்த எனக்கோடலுமொன்று. ஒரீஇ சொல்லிசையளபெடை. இத்தலத்தைச் செயந்திநகரமெனவும், சந்தனசலமெனவும், சீரலைவாயெனவும், செந்திலெனவும்அத்தலபுராணங் கூறும். ஆயின்திருமுருகாற்றுப்படையுள் நச்சினார்க்

ஒனியரும் "காமனூரலைவா" யென்பர். இக்காலத்தில் திருச்செந்தூரென வழங்கப்படு கின்றது. சுருள் என்பது ஈரலென மரீஇயது. அலையென்றது ஆகுபெயராய்க் கடலையுணர்த்திற்று. அலைவாயிடை என்புழி உருபின்மேலுருபு பெற்றமையை "நிலவார் நிலமிசைமேல்" என்பதனானு முணர்க. வெள்ளிவெற்பு கயிலாயவரை.

காவினன் குடியூறு காமர் பொன்னகர்
மேவினன் குடிவர விளியச் சூர்முதல்
பூவினன் குடிலையம் பொருட்கு மாலுற
ஆவினன் குடிவரு மமலற் போற்றுவாம்.

இ-ள். காவினன் - தருக்களின் கூட்டங்கட் கிறைவனாகிய இந்திரன், குடியூறு - வசிக்கின்ற, காமர்பொன்னகர் - அழகிய பொன்னகரை, மேவி - அடைந்து, நன்குடிவர - நல்லகுடியேறப்பெறவும், சூர்முதல்விளிய - சூரபதுமனாகிய முதல்வன் இறக்கவும், பூவினன் - தாமரையில் வசிக்கும் பிரமன், குடிலையம்பொருட்கு - பிரணவப் பொருட்கு, மாலுற - மயக்கமடையவும் - ஆவினன்குடிவரும், திருவாவினன் குடியென்னுந் திருப்படைவீட்டி லெழுந்தருளிய, அமலன் போற்றுவாம் - மலரகிதராகிய பிள்ளையாரைத் துதிப்பாம். எ-று.

காவினன் என்பதற்குக் காவின்கூட்டங்கட் கிறைவனெனக் கோடலுமன்றிக் காவினன் என்புழி இன் என்பதனை சாரியையாகக் கொண்டு கற்பகச் சோலைக்கிறைவனெனவும், மேவினன்குடி வரவென்பதற்கு மேவிக்குடிவரவென வினைமுற்றை வினையெச்சமாகவுங்கொண்டு பொருள்கூறுவாருமுளர். ஐந்தருவாவன - கற்பகம், மந்தாரம், அரிசந்தனம், பாரிசாதம், சந்தானம் என்பனவாம். முன்னர்க்காமர் பொன்னகரோனும் சூரபதுமன்மகனாகிய பானுகோபனால் தீக்கொளுத்தப்பட்டு இஞ்ஞான்று பிள்ளையாரால் இந்திரனர் குடியேறச்செய்தலின் வாளாகுடிவரவென்னுது நன்குடிவரவென்றார். பிள்ளையாரையும் அமலனென்றது; இறைவனோடுபிள்ளையார்க்கு வேறுபாடின்மையானும், அவரோநாமுஞ் சுப்பிரமணியனுமொன்றேயெனக் கூறலானுமென்க. இக் கருதியன்றே காஞ்சிபுராணத்துக்குமரகோட்டப்படலத்தும் "பூந்தே - னக்கறுந்தொடைபிதழிக்கடவுளவர்தமைநோக்கிநவில்வானென்னே, அக்கமலன்விளம்பியவாநம் மையுநம்புதல்வனையுமன்றேமான - மிக்கபுகழ்ச்சுருதியெலாம்பிரணவத்தின்பொருளாக விளம்புமாறே" எனவும், "எக்கலைக்கும் பூதங்களெவற்றினுக்கும் பிரமனுக்கு மீசனென்னத் - தக்கமுதல் பரம்பிரமஞ் சதாசிவனேமென வேதஞ்சாற்றுமல்லான், முக்கணல்சூழ் வேள்வியிற்சுப் பிரமணிய னேமெனவுமுக்காற்கூறும்" எனவும் கூறுதலானு முணர்க. திருமுருகாற்றுப்படையுள் நச்சினார்க்கினியரும், இதனைச் சித்தன் வாழ்வென்று சொல்லுகின்ற ஊர், இக்காலத்து ஆவினன்குடியென்று பெயர்பெற்றதென்றும் கூறப்பட்டதென்றார். அது" "நல்லம்பரநல்ல குடியுடைத்துச் சித்தன் வாழ்வு" என ஔவையார் கூறலானுமறிக. இக்காலத்துப் பழநியெனப்படுகின்றது. சித்தன் என்றது பிள்ளையாருக்குத் திருநாமமென்க. சூர்முதல் சூரபதுமனாகிய முதல்வனென்றார் சூர்முதறடிந்த சுடரிலை என்பதற்கு நச்சினார்க்கினியரும்.

நீரகந் தேதனை நினையு மன்பினோர்
பேரகத் தலமரும் பிறவி நீத்திடும்
தாரகத் துருவமாந் தலைமை யெய்திய
ஏரகத் தறுமுக னடிக ளேத்துவாம்.

இ-ள். நீரகத்து-நற்குணம் அமைந்த நெஞ்சின்கண், தனை-தன்னை, நினையும்-நினைக்கும், அன்பினோர் - அன்பினையுடையாரது, பெரு அகத்து - பெரியநெஞ்சினிடத்து, அலமரும் - சுழலச்செய்யும், பிறவிநீத்திடும் - பிறப்பினை நீக்குகின்ற, தாரகத்து உருவம்

ஆம் - குடிலைப்பொருளின்வடிவமாகிய, தலைமை எய்திய - தலைமைப்பாட்டினை யமைந்த, ஏரகத்து அறுமுகன் - திருவேரகம் என்னுந்திருப்படைவீட்டி லெழுந்தருளிய ஆறுதிருமுகங்கொண்ட பிள்ளையாருடைய, அடிகள்-திருவடிகளை, ஏத்துவாம் - துதிப்பாம். எ-று.

அகம் மனம் நெஞ்சுமுதலியன ஒருபொருள்குறித்த பலசொல். நீரகமெனவும் பேரகமெனவு மடைகொடுத்தோதினுர் நிறைமொழி மாந்தராதலின், அவர் ஐம்பொறியடக்கலமைந்து சிவநேயந்தூடே யருளே துணையாகச் செந்நெறிப்படர்தனேக்கி. இத்திருப்படைவீட்டை அவாசிக்கண்ணதாய சாமிமலையென்பாருமுளர், இனித் திருமுருகாற்றுப்படையுள் "ஏரகத்துறைதலுமுரியன்" என்புழிநச்சினுர்க்கினியரும், "அது மலைநாட்டகத்தோர் திருப்பதி" என்ருராதலானும், இன்னோரன்னவர் கூறியவை மரபறியார் கூற்றென்ருெழிக. இக்காலத்து உடுக்கைச்சுப்பிரமணியமென வழங்கப்படுகின்றது. அலமரும் என்பதில் அலமாபகுதி; அதுகுறுக்கல்பெற்று ருவ்விரிக்கப்பட்டு உம்விகுதி அடைந்து உகரந்துவரக்கெட்டு முடிந்துநின்ற செய்யுமென்னும் வாய்பாட்டுப் பெயரொச்சம் தன் காரணமாகியபிறவியென்னுஞ் செயற்பெயர்கொண்டது.

ஒன்றுதோ ருடலை யொருவி யாவிமெய்
துன்றுதோ ருடலைத் தொடங்கி யைவகை
மன்றுதோ ருடிய வள்ளல் காமுறக்
குன்றுதோ ருடிய குமரற் போற்றுவாம்.

இ-ள். ஆவி - உயிர்கள், ஒன்றுதோறு - சங்காரத்தொடுங்குந்தோறும், ஆடலை யொருவி - திருநடனஞ் செய்யாது நீங்கியும், மெய்துன்றுதோறு - அவை உடம்பிற் பொருந்துஞ்சிருட்டிதோறும், ஆடலைத்தொடங்கி-திருநடனஞ் செய்யாநின்றும், ஐவகைமன்றுதோறு ஆடியவள்ளல் - பஞ்சசபைகளினு நடனஞ்செய்யாநின்ற இறைவன், காமுற - விரும்ப, குன்றுதோருடிய குமரன்போற்றுவாம் - குன்றுதோருடிய குமரனென்னுந் திருநாமத்தையுடைய பிள்ளையாரைத் துதிப்பாம். எ-று.

தோறு என்பது ஏழாவதன் பொருண்மையின் வந்த பன்மையிடைச்சொல். ஐவகைமன்ருவன தில்லையில் பொற்சபையும், மதுரையில் இரசிதசபையும், திருவாலங்காட்டின் மாணிக்கசபையும், திருநெல்வேலியில்தாம்பிர சபையும், திருக்குற்ருலத்தில் சித்திரசபையுமென்க. காமம் உறு என்பன காமுறுவென அம் குறைக்கப்பட்டுகாமுறு என நின்றது. காமரு என்புழியுமீதொக்கும். இனிச் சிலப்பதிகாரத்துக்குரைசெய்த அடியார்க்கு நல்லான் காமம் வரு என்னுந் தொடர்மொழியின் நிலைமொழியீற்று மகரமும் வருமொழிமுதல் வகரமுந்துவரக்கெட்டு முடிந்ததென்பர். ஒன்றுதோறுஎன்புழி ஒன்றுஎன்னும் வினைத்தொகை பெயராக்கொண்டு முடிதன்மரபேனும் ஈண்டையிடைச்சொற் கொண்டது அது பெயரோடொருபுடை யொப்புமையா னென்க. பெயரொச்சமு மிவ்வாறுகொண்டு முடிவ தூஉமாம்; இவற்றைத் திருவாசகத்தும் "காண்டொறும் பேசுந்தொறும்" என்பதனுனுமறிக. துன்றுதோறென்புழியு மீதொக்கும். மன்றின்கண் இறைவராடுதல் பஞ்சகிருத்திய நடனமாதலின் சிருட்டி தொடங்கிய ஞான்று திருநடனஞ்செய்தலும், அஃதொழிந்தஞான்று அங்ஙனஞ்செய்யாமையுங் கருதி "ஒன்றுதோருடலை யொருவியாவி மெய்துன்று தோருடலைத்தொடங்கி" என்றதூஉமென்க. வள்ளல் என்பதற்குத் "தற்பயன் குறியாது வேண்டுவார் வேண்டியவாறே நல்கு மருளுடைமைநோக்கி" அவ்வாறு விரிப்பார் சிவஞான முனிவரும். வள்ளல்பண்பாகுபெயர், ஆவிசாதியொருமை.

எழமுதி னைப்புனத் திறைவி முன்புதன்
கிழமுதி ரிளநலங் கிடைப்ப முன்னவன்
மழமுதிர் களிறென வருதல் வேண்டிய
பழமுதிர் சோலையம் பகவற் போற்றுவாம்.

இ-ள். இறைவிமுன்புமுதினைப்புனத்தெழ-வள்ளிநாயகியார் தாமுன்னரே பயறு விளையும் புனத்தி லெழுந்தருளாலும், தன்கிழமுதிரிள நலங்கிடைப்ப - தாங்கொண்ட மிக்ககிழப்படிவத்தேயே இளமைப்பருவத்திற்குரிய காமநுகர்ச்சி துய்க்கும்படி, முன்னவன் - மூத்தபிள்ளையாரை, மழமுதிர்களிறென - இளமைவாய்ந்த களிற்றைப் போல, வருதல்வேண்டிய - வருகையைவிரும்பிய, பழமுதிர்சோலையம்பகவன்-பழமுதிர்சோலையி லெழுந்தருளியஅழகிய பகவனென்னுந் திருநாமத்தையுடைய பிள்ளையாரை, போற்றுவாம் - துதிப்பாம். எ-று.

முதினைப் புனத்தெழ என்றெட்டுக. இதுபிள்ளையார் வள்ளிநாயகியாரை வேட்டாங்குச் சென்றுழி ஓர் முதுப்பார்ப்பனப்படிவங்கொடு போந்து அவரைத் தினைமா முதலியவற்றைத் தாமிசையக்கேட்பவும் நல்கப்பெற்று, வேட்கையான் அயர்வார் போன்று வள்ளிமலைச்சாரற்கண்ணதாயதோர் சுனைவயிற் கொடுசெல்ல, அவர் தமக்கு முன்னேகுழி,ஆண்டுத்தம்முன்னோனைக்கூவியிறைஞ்ச அவனோர் கடாத்தபுழக்கையாக அவன் முன்னிற்றலும் இறைவி அச்சுற்றுத்தழீஇக்கொள்ள, ஆங்கே அறுமுகக்கடவுளாகத்தாந் தோன்றி அவரின்னலந் துய்த்தாரென்பது. அற்றாகலினன்றே "இறைவி முன்புதன்கிழமுதிரிளநலங்கிடைப்ப"என்றார். இதனை இப்புராணத்தும் "பொன்னேயனையாண்முன் போகுந் திறநோக்கி, என்னே யினிச்செய்வ தென் றிரங்கி யெம்பெருமான், தன்னேரி லாதமருந் தந்திமுகத் தெந்தைதனை, முன்னே வருவாய் முதல்வா வெனநினைத்தான்" என்றும், "அந்தப்பொழுதிலறுமாமுகற்கிரங்கி, முந்திப்படர்கின்றமொய்குழலாள் முன்பாகத், தந்திக்கடவுட்டனிவாரணப்பொருப்பு, வந்துற்ற தம்மாமறிகடலேபோன்முழங்கி" என்றும்; தணிகைப்புராணத்தும் "மும்மதத்தனென்றொருபெயர்தனக்குமொய்கூந்தல், கொம்மைவெம்முலைக்கோற்றொடிக்கொடிச்சியையிலைவேற், கைம்மலர்த்தனியிளவற்குங்கஃஃறெனுங்கானத், தம்முந்துபுக்குறுத்தவன்" என்றுங்கூறியவாற்றானுமுணர்க. பகவன் அறுகுணமுடையவன்; இதனை ஆதிபகவனென வள்ளுவனார் கூறுதலுங்காண்க. அவ்வறுகுணமாவன; ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்னுமாறுக்கும் பகமென்னும் பொருளுண்மையான் அவ்வாறோதப்பட்டன. பழமுதிர்சோலையை இக்காலத்துச்சோலைமலையென்ப.

மூவிரு முகங்கள் போற்றி முகம்பொழி கருணை போற்றி,
யேவருந் துதிக்க நின்ற விராறுதோள் போற்றி காஞ்சி,
மாவடி வைகுஞ் செவ்வேள் மலரடி போற்றி யன்னான்,
சேவலு மயிலும் போற்றி திருக்கைவேல் போற்றி போற்றி.

முற்றிற்று.

---

ஸ்ரீசிவஞானயோகிகள் சேவடிவாழ்க.

## நேரிசையாசிரியப்பா.

---

மணிகொள்பஃறலைச்சூட்டு மாசுணம்பொறுத்த
அணிகொள்முந்நீர்சூ ழுவனியின்மாட்டிவ
ணெனைத்துமறிவென்ப தில்லாவேழையேன்
மனத்துயர்களைவான் வாவெனக்கூஉ
யைந்தியலொடுவள் ளுவரெழிற்கம்பர்
அருளியசெய்யு ளார்கவிபருகுவித்
தாண்டகுருராய னருங்கலைவிநோதன்
இராசகோபாலனு மியற்றமிழாரியன்
இராசிவபதமல ரிறைஞ்சுதூஉங்கந்த
புராணம்புகன்மூ விருதலத்துதிக்கும்
விராவுமோருரையை விளக்கெனச்சில்லோர்
விரித்தசொலென்றலை மேற்கொடுபுகன்றனேன்
வழூவெனக் கொள்ளா துலக
மழலைசொற்காமுறு மாண்பினினிதே

இதனாற் குருவணக்கமும், அவையடக்கமு முரைக்கப்பட்டவாறென்க.

---

உ

வெற்றிவேலுற்றதுணை.

# கந்தபுராண வசனம்.

## ஆற்றுப் படலம்.

"நிலநீர்நெருப்புயிர்நீள்விசும்புநிலாப்பகலோன்புலனுயமைந்தனேடெண் வகையாய்ப் புணர்ந்து நின்ருன்" எனப்படும் சிகண்டபரமசிவன்பால் மெய் யன்புடையாரும், ஐம்புலனைவென்ற அருந்தவரும் வசிக்கின்ற திருத்தொண் டைநன்னுடென்ருேர் நாடுள்ளது. அது தெய்வப்புலமை ஔவையாராற் 'சான் ருேருடைத்து' என்று சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. அதன்வளம் பலவற் றுள் சில கூறுகின்றேன்.

திருமகள் நாயகனுகிய விஷ்ணுமூர்த்தி பள்ளிகொள்ளுகின்ற பாற்கடல் போன்ற மேகங்கள் ஆழ்கடலிற் படிந்து அதனைக் குறைபடுத்து மீண்டும் அக் கடலேபோல, ஒய்யெனப் படர்ந்து மின்னி இடித்தார்த்து அழகுமிக்க வயிர வக்கடவுள் மதயானை யுரித்துப்போர்த்து நின்ற காட்சியின்விளங்கி நந்திவரைச் சாரலினையடைந்து,அவ்வரைச்சாரலில் உள்ள மூங்கிலில்தோன்றிய முத்தினை யொத்த நீர்த்திவலையைச்சிதறி யாழ்நரம்பேபோல மழைத்தாரையை யொழு க்கிக் கார்காலமட்டுங் கருங்கடல் வானில்தோன்றிப் பொழிவது முன்னர் வேட்டுவக்குலத் திண்ணனுர் அருட்பெருங்கடவுளாகிய பரமசிவனை வாயினீர் கொண்டு திருமஞ்சனமாட்டுந் தன்மையையொத்திருந்தது. அவ்வெள்ளம் பர ந்து காட்டுத்தீயை அவிக்குங்காட்சி வலியார் எதிர்ந்தபொழுது மெலியார் நடுநடுங்கியொடுங்கிய தொத்திருந்தது. மேகங்கள்கடலின் உவரைக் கெடுத்துப் பொழியுந்தன்மை தம்மையடைந்து இருவினையொத்து மலபரிபாகப் பட்டுச் சத்திநிபாதமுமுடையாரை அவரது மலவலிகெடுத்து நன்னெறியிற் செலுத் தும் ஞானதேசிகரையொத்திருந்தது. ஒன்றுணர்ந் திரண்டுகடந்து மூன்றுகெ டுத்து நான்கடக்கி யைந்துவென்று ஆறகற்றி யெழுமெய் யறிவுடையார் எண் குணமுடைய நவந்தருபேதத்து நாதனைநாடித் தவஞ்செய்யுமிடமென நந்தி மலையானது பலபுலவரால்துதிக்கப்பட்ட பான்மையுடையதாகலின் அதனைச் சூழ்ந்தவெள்ளம் முதிர்ந்துகாய்ந்த பசுவின்பால் அக்குடத்தினின்றும் பொங்கி யெழுதல்போலத் தோன்றிப் பார்முழுதும் பரந்தது பண்டுபகீரதன் தவத் தாற் பரமசிவன் சடைமுடியின்கண் விளங்குங்கங்கையை அவ்வரசன்வேண்டு கோளால் அமலன் இமையவரைக்கருகில் ஒருதிவலையைச்சிதற அதுவெள்ள மாய்ச் சூழ்ந்த கங்கையைப்போலு மிருந்தது. அப்படி நந்திமலையினின்று மிழிந்த அருவி அருந்தவத்தையுடைய வசிட்டமுனிவ ருச்சிரமத்தில் உள்ள 'ஆவிற்கருமுனியா' எனச் சிறப்பித்துக் கூறப்பட்ட காமதேனு ஒருகாலத்திற்

பால்சுரந்து வெள்ளமாகப் பொழிய அக்காரணக்குறியாற் பாலாறு என்னும் பெயரிற் பொலிந்ததெனக் கூறக்கிடந்ததுபோலு மிருந்தது. அது தன்னிலமாகிய குறிஞ்சித்திணையில் வசிக்கும் வேடரைப் பெண்டுபிள்ளைகளுடன் வாரிச் சிறுகுடில்களை யெடுத்தெறிந்தும், சந்தனமுதலிய விருக்ஷங்களை வேருடன் கல்லியு மெறிவது கொடிய சூரபதுமன் முன்னாளில் தேவரைச்சிறைகொண்டு செல்வதொத்தும்,காக்கைசூழ்ந்துவர மதயானைகளை வாரிக்கொண்டுவருவது மேகங்கள் மேற்றிசைக்கடலை வாரியுண்டதமையாது கீழ்த்திசைக்கடலையுங் கலக்கப்போவதுபோலவு மிருந்தது. பின்னும் அத்திணையின்கணுள்ள புலி, கரடி,மான் முதலிய விலங்குகளையும் அலைத்து, இலுப்பை மகிழ்முதலிய மரங்களையுமுறித்து மீறி ஆறலைக்கும்மறவர்சிற்றூரைக்கலக்கிப் பாலையிற்சென்று காலைவெம்பகல் மாலையிரவு வைகறை யென்னு மைந்து சிறுபொழுதினும் இடைவிடாமற் கனற்கொழுந்து விட்டெரிந்து கடலையுஞ் சுவறச்செய்யும் வெம்மையையோட்டிக் குளிர்ச்சியையீட்டி அதன் வடிவந் தோன்றாமற் காட்டி, முல்லையை யடைந்து கொன்றை, வில்வம், கூதாளம், வெட்சி முதலிய மரங்களைச்சாடி ஆனிரைகளையலைத்து ஒழுகும் பாலிமுன் தான்தோன்றிய காமதேனுவின் சம்பந்தத்தைநாடி அவைகளைக் கரையிலொதுக்கியோடி, மருதஞ்சென்று பலகால்களாக வயன்முழுதுங் தழைத்துச் சென்று 'நிலத்துக் கணியென்ப நெல்லுங்கரும்பும்' என்றபடி நெல்லையுங் கரும்பையு மோங்கச் செய்து நெய்தற் கருப்பொருளாகிய சோற்றைவிரிக்கும் மடல்களையுடைய தாழையையும், எல்லா நூல்களையு மெழுதுவதற்குக் கருவியாகிய மடற்பனையையும் களைந்துசென்று திரையாகியகையால் தன்னுயகனாகிய கடற்கரசனைத் தழுவி யொன்றுபட்டது.

மேலும் வில்வம், கொன்றை,குரா, சண்பகம், பாடலம், புன்னை இவைகளை யலைகளிலேந்தி வருவதனாற் பரமசிவனையொத்தும், ஆறலைப் போராகிய மறவருடைய குடிலைக்கெடுத்து வில், வேல், திகிரி, சங்க முதலியவைகளைக் கொண்டு செல்வதனால் திருமாலையொத்தும் ; தேன்பொழியும் தாமரை மலர் மீதுபாய்ந்தும், நான்குமுகத்தினு முழங்கிப் பெருகி மான்மரைகளையலைத்தும் வருவதனால் படைப்புத்தொழில்செய்யும் நான்முகக்கடவுளையொத்தும்; சுரிமுகச்சங்கங்களை வானத்தில்தோன்றும்நட்சத்திரவீதியைநெருங்கஅலைகளால் வீசியும் பல்லுயிரையுமழித்துமளித்தும் வருவதனால் திரிசங்கு என்னும் அரசனை விண்குடியேற்றிய விசுவாமித்திரனையொத்தும் ; யானைக்கோடுகள் பாயக்கூடுகள் சிதைவுண்டுபெருகிய தேனையலைத்துவருவதனால் வெண்ணிறங் கொண்டு பாயுங்கங்கைகருநிறமுடையயமுனையைக்கலந்ததோற்றத்தையொத்தும் ; சங்கங்கள் ஒலிக்கத்திரைகளையெறிவது சூரியனைநோக்கி நீயென்னுன்னும் உடல்முழுதும் வெம்மையடைந்து திரிகின்றனை, சற்று நீர்தோய்ந்து போதியாயின் அக்கொடுமை தணிந்து பலரும் புகழப் பெறுவையென்று அழைப்பதொத்தும்; சகலவேதங்களும், உபநிடதங்களும் துணிந்தமுழுமுதற் பொருளே பரமசிவமென்றுணராத பேதையருணர்வேபோற் கலங்கிய தொத்

தும்; தெய்வலோகமுதலியவை துலங்கப்பெருகும் அந்தி முன்னாள் இறைவி யார் திருவேகம்பத்திறைவனைமாவடியிற் பூசிக்கத்தொடங்கியகாலையில் அவர் தவத்தைச்சோதிக்க இறைவன் கருதிக்கம்பையை யேவியதொத்தும், வந்தி யம்மை பத்திமைக்கிரங்கி வைகையாற்றின் மண்ணை மதிமுடியிற் கொண்ட சோமசுந்தரேசரது திருவருளால் பிள்ளையார் சமணரோடு வாதிட்ட பச்சேட் டைப்போல மச்சவகைகளெதிர்க்கும், சிறுமையனைத்தும் பெருமையினொடுங்கு மென்பதுபோல பவளமரகதத்தில்விளங்குவதொத்துப் பாசிலைநடுவேபூத்திருக் கும்செந்தாமரை மலர்கள் பெருந்தடாகங்கள் மலிந்தபாலாற்றுவெள்ளத்தால் சிதைந்தழிபவும், விளைவடர்ந்தவயல்கள் ஓங்கிய மருதநிலத்தில்வந்து அவ்விட த்திலிருக்கும் பொய்கைகளி லலர்ந்ததாமரைகளை யதன்வேர் கொடி யிலை யுடன் பறித்துப்போவது ஒருவன் தன்பகைவன் மிக்க ஆற்றலுடையானாய் இருப்பது கருதிக் காலமறிந்து உபாயத்தாற் களைவதொத்தும், கழிசூழ்ந்த நெ ய்தற்றிணையிற்பாய்ந்து கழியர் உப்பைப்போராக வாரிவாரிக்குவித்த மச்சக் குவியலையும், உப்பின்குவியலையும் அலைத்துக்கொண்டு செல்வதனால்திரையெறி யும்கடல் மேகங்களுடன்கலந்து வானிற்சென்றாராய்ந்து பூமியிலிறங்கிச் சோ தித்துத் தன்வளங்களைக் கவர்வதொத்துமிருந்தது.

இவ்வகைச் சிறப்படைந்து பெருகியபாலாறு உயிர்களை முடிவில்தத்தம் வினைப்பயனுக்குத் தக்ககதிகளிற்சேர்ப்பதொத்தும், குலபரம்பரை யொத்தும், மரத்தினதுகுலைகளையொத்தும்; பலகால்களிற்பாய்ந்து பவளம்போலு மித ழும், கலசம்போலு முலைகளும், சேற்சண்டையினினம் பிறழ்வதுபோலக் கறுத் துச் சுழலுங்கண்களும், பிறையைப்பழித்த நுதலும், கிளியைப்போலு மொ ழியும், அரவைப்போலப் பரந்துவிளங்கும் அல்குலும், மயிலைப்போலுஞ் சாய லும், அன்னத்தைப்பழிக்கு நடையும், கருமணலைப்போன்று கடைகுழன்று கறுத்துப் பூவைமுடித்த கூந்தலும் பெற்று, புருடமையக்கித் தனித்தனி யே பொருளைக்கவர்ந்தும் நிலைபெறாத உருத்திரகணிகையர் நெஞ்சத்தை யொத்தும் பலதிசையினும்பரந்தவெள்ளமோ பாம்புகள்புற்றில் நுழைவதுபோ லக் கால்வாய்வழியாய் ஏரிகளிற்பாய மந்திரமொழிகளால் பாம்புகள் தடை பட்டுநிற்கச் செய்வாரைப்போலப் புறத்திற்கசியவொட்டாமல் அணைகள்போ ட்டுத் தடுக்கும்பள்ளங்களில் உண்டாகும் ஓசைகடையுகத்தின்முடிவுபோலச் சத்திக்கவும், அக்காலத்தில் கொட்டும்முரசினோசையும், உழவர்கள் ஆரவார மும், அலைபெருகிப்பாயும் வெள்ளத்தினைச்சிறைசெய்யும் ஓசையும், மேகமா யும் ஒலிப்பதைத்தேவர்கள் காதுசெவிடுபடக்கேட்டுத் தேவலோகத்தி லுண் டாகிய அதிர்ச்சிக்குமாறாக மண்ணுலகத்திலும் உண்டாயிற்றேவென மருள வும், மதயானைகள் பிரிந்தகாலத்தில்மீளவும் தம்மினத்தினைத்தேடிக் கூடுவது போலும், புறத்திற்பெருகிய தடாகங்களிலும், குளங்களிலும், மடுக்களிலும், வயல்களிலும் கலந்துகளிப்புழுழியாத ஆடவர்போல அலைந்திருக்கும்.

இவ்வகையான பாலாற்றுப்பெருக்கு நகரத்தின் இடங்களிலும், புறத்தி லும் பெருகியிருப்பது உலகைச்சூழ்ந்த சமுத்திரம்போன்றிருக்கும். ஏரிகள்

S 2.

முதலிய இடங்களிலேபாய்ந்து மிருந்த நீர் ஐம்புலன்களையும் வென்ற பெரியோர் நன்னெறிகளையுணர்த்தினும் சற்றும் அறிந்துகொள்ளாத மூடர்கள் தம்மனத்திற்கேற்ப நடப்பதுபோலக் கடலைநோக்கிச்சென்றது. அப்பெருக்கில் மீன்கள்முதலியவை உலாவுவன வாள், வேல், சங்குமுதலியவைகளைப் போலத்தோன்றும். ஏரிகள்நிறைந்துமேலிட்ட நீரைப்போக்கும் ஆண்தன்மையைப்பெற்ற உழவர்கள் தம் இருப்புக்குமேல்வரும்பொருளைத் தானம்கொடுக்கும் இடைவள்ளல்களை யொத்திருப்பார்கள்.

## நாட்டுப்படலம்.

மிக்கவலிபெற்ற உழவர்கள்திரண்டு கடல்சூழ்ந்தஉலகத்தின்வளங்களைப் பெறும்படியெண்ணி அந்நிலங்களின்பருவத்தைநோக்கிப் பருத்தமுசுப்பையும் சிவந்தகண்களையும் உடையனவாகிப் பலநிறங்களைப்பெற்றுள்ளஎருதுகளையும், நீண்ட கொம்புகளுள்ள கடாக்களையும் ஏர்களிற் பூட்டித் தாற்றுக்கோலால் தூண்டி அணியணியாய்உழுது நிலமகளுக்கு மணிமாலைபோன்றும்; வாயுவேகத்தினும், மனோவேகத்தினுமிருந்து உழவர்குறிப்பின்வழியேயொழுகும் காளைகள் காலைப்பெயர்த்துவைக்குந்தோறும் திரண்டசேற்கண்டைகள்,பறவையின் கூட்டங்கள் மருண்டோட விண்ணிலேபாய்ந்து மீண்டுசெலக்கென்றுவிழும்.

அதுவுமன்றி நிலம் பெயரும்படி சால்வளைந்து வரும்போது அவ்வயல்களி லிருக்கும் சங்குக்கூட்டங்கள் பயந்து நண்டுகள் கருப்பங்கொண்டு கிடக்கும் வளைகளிற் புகுவது அறிவுடையோர் விலைமாதரை விரும்பிச் சேர்வதையொக்கும்; கற்றூண்போலும் வலியதோளையுடைய உழவர் பொன் விளையுங் கனிகளைப்பார்க்கிலும் சிறந்த வயல்களில் செலுத்தும் கலப்பைக் கொழுநுனிகளிற்பட்டுப் பளீர்பளீரென்று தெறித்து எழுகின்ற செம்மணிகள்யாக குண்டத்தில் விளங்கும் காருகபத்தியம், ஆகவனீயம், தக்ஷிணாக்கினியென்னும் மூவகைத் தீயின் ஒளியைப்போன்று விளங்கும். இவ்வாறாக உழுதுகலக்கிச் சேடைசெய்து பதமாக்கிப் பதமாகுஞ் சமயத்தில் பள்ளர்கள் திரண்டு, சிலர் விதைவிதைக்கவும்; சிலர் விரைப்பக்கத்திலோடு நீரையிறைத்துநீக்கியும்; சிலர் குதிரைகளின் பிடர்மயிரைப் பின்னிவிட்டிருப்பதுபோல் தனித்தனியிருந்த நாற்றைப்பிடுங்கி முடித்திருப்பதை வரிசையாக நடவு செய்துவரும் தமதுமாதர்வருந்துதற்கிரங்கி மனநெக்குருகியும், இவ்வாறுவயல்களிலெல்லா நடவுசெய்த பின்னர் சோலைகளிற்சேர்ந்து மதுரமானகள்ளை வள்ளத்தி னிறைத்துத் தமது மாதரழகைப் பார்க்குங் கண்ணடியினை யொத்துத் தோன்றுவதுகண்டு மகிழ்ந்து குடித்துக் களியேறியோடியும், சிலர்தத்தங் கடவுளரைப் பாடியாடியும், சிலர்மயக்கமிகுந்து ஊடியும், சிலர் நெட்டுயிர்ப்பெறிந்து வாடியும், சிலர்கைக் கோத்தாடியும் திரிவார்கள்.

சிலர் ஆகாயத்திற் பறக்கும் பறவைகளும், வண்டுகளும் போலத் தம் சுற்றத்தோடு சூழவிருந்து இந்திரதெய்வதந் தொழுது கள்ளுண்பது வாமசமயத்தார் அப்பூசனைக் குரியாரோடு வேற்றுமையில்லாமல் ஒருங்கு கட்குடிப்

பதைக் காட்டியும், சிலர் மயக்கமிருந்து நாணமில்லாமல் உடுத்த ஆடைசோர்ந்துவிழ வாயிலிக்கள் மொய்க்கும்படி விழுந்தும் புரள்வார்கள். இதுகள்ளினும் களிப்பைச் செய்வதுவேறில்லை யென்பது தெரிவித்து நின்றது. இதுவுமல்லாமல் வரப்பிலும், தடாகப்படியிலும், மரச்செறிவிலும், கால்களிடறிப்போம் தன்மை சிறந்த ஒழுக்கத்தைப் போதிக்கும் ஆசிரியரில்லாமல் காமிகளாகத் திரிவார்களும் மெய்க்கதிகிட்டவே கிட்டாமல் சனனவேதனையிற் பட்டலைவதையே யொத்திருக்கும். இவ்வாறு களியாடலைச்செய்து தெளிவுற்றுப் பழைய ஞாபகமுண்டாகி, அதுவந்தவுடன் கற்றுண்போலத் திரண்ட புயங்களையுடைய தங்கணவரோவலால் அவர்களோடுகலந்து எங்கும் சூழ்ந்து இனிய மதுரமாகிய மழலைச்சொற்களையுடைய பள்ளப்பெண்கள் சுவாசம் விடுந்தோறும் அவர்கள் குடித்த கள்மணம்பரவி வெளுத்த ஆம்பற்பூவும்; அக்காற்றத்தைவீசச் சிநேகவாஞ்சை யுள்ளவர்களை மூர்க்கர் சத்துருக்களைப்போலச்சேர்ந்து ஒறுத்தலை நினைந்து தருணத்திற் கண்டிப்பதொத்தும், தழைத்தோங்கி வரு நெற்பயிருக்குமாறுக அடர்ந்திருக்கும் களைகளைக் களைந்தெறிந்தும், காலங்களில் நீரைக்கட்டியும், போக்கியும், மிருகமுதலியவைகள் மேய்ந்து மழித்தும் விடாமற் காத்தும் வருவர்.

அவ்வாறு காத்துவருகையில் பிரகாசிக்கும் வயிரக்கணைகளை மின்னுகின்ற அம்பின்கூடுகளைப்போன்று வரிசைவரிசையா யடுக்கியிருப்பது பசிய மூங்கிலின் குழையுச்சியில் வயிரத்தால் வேலையொழுங்குபடச் சேர்ந்த காலத்தில் ஒளிவீசுவதையொத்தும், வயலின்கண் நெற்பயிர்கள் தலைநிமிர்ப்பது இளநாகங்கள் தலைநீட்டுவதுபோலவும்தோன்றும். கள்ளமனமுடைய விலைமாதர் கண்ணுமனமுமகிழப் பொய்யுபசாரணைசெய்வதுபோல பயனில்லாத இளங்கதிரைக்காட்டிய நெற்பயிர்கள் தங்கணவனைக் கண்டவிடத்துத் தலைவணங்கி உபசரணைசெய்யும் கற்புடைய மாதரேபோலக் கதிர்களாகிய தலைசாய்த்து வணங்கியு மிருப்பதுகண்டு உழவர்கள் தங்கள் மருதநிலக் கடவுளாகிய இந்திரதெய்வதம் தொழ வெண்ணிப் பொங்கலிட்டுப் பூசித்து திரண்ட நெல்விளைவை யறுத்து அணியாய்ப்போட்டுப் பின்பு சுமைகள் கட்டிக்கொண்டுபோய் உயர்வாகிய நிலங்களிற் பூமிதேவி யுடல்வருந்தவும், அனந்தன் உடல்நெளிந்து வாடவும்; மேருமலையையொத்து வானமளாவிய பலபோர்களிட்டுப் பின்பவற்றைத்தள்ளிக் குண்டைகளையும், கடாக்களையும், பிணைகட்டியடித்துப் பலவிசைதிரும்புங் காலத்திலெல்லாம் பரமேஸ்வரனையும், தம் இஷ்ட தேவதையையும் தொழுதுவாழ்த்தி நெற்குவை விருத்தியாகுகவெனத் துதித்து வைக்கோலை நீக்கிப் பதர்தூற்றி யொப்படி செய்வர். பின்பு அவற்றை மலைமலையாகக்குவித்துக் குடிகள் ஏவலாளரால் அளந்து இரவலர்க்குத் தானம் வழங்கி அடிமைகளாகிய பண்ணையாட்களுக்கும் கொடுத்துக் களத்தில் வந்தியர் முதலானோர்க்கும் வேண்டியமட்டும் அளித்து ஆறிலொருகடமை யரசனுக்கு முதவி மிகுந்த தானியங்களையும் புன்செய்ப் பயிர்களையும் வண்டிகளில் ஏற்றி வீடுசேர்த்துத் தமது குடும்பத்திற்கு வேண்டியமட்டும்

வைத்துக்கொண்டிருந்தவற்றைத் தங்களஞ்சியத்திலும் சேர்ப்பர். பின்னர் தாம் தமதுபந்துவர்க்கங்களுக்கும் அதிதிகளுக்கும் வெறுக்கக்கொடுத்து முப சரிப்பார்கள். புன்செய்ப் பயிர்விளைவுக்கு மத்தியில் நன்செய்ப்பயிர்கள் விளை வது அநேகர் திரண்டிருக்கும் சபைக்கு மத்தியில் பேரறிவுடையார் கூடியிரு ப்ப தொத்திருக்கும். இதுநிற்க. உலகத்தில் மனிதர் பிறப்பதும், இறப்பதும் இயல்பாகலின் பயிர்விளைப்பதும் விளைந்தபின்பறுப்பதும் சாதாரணமாகவே தோன்றும். மேலும் பேரிகை, மிருதங்கம், டங்கா, முரசு முதலிய வாத்தி யங்கள் இடையறுமல் காது செவிடுபட்டுப்போக ஒலிக்க பிரமாலயம், விஷ்ணுவாலயம், சிவாலயமுதலிய விடங்களில் நித்திய நைமித்திக மென்பன சம்பிரமமாக மாறுமல் நடந்துவரும்.

ஒருபுறத்தில் மருதநிலப் பறையோசையும், ஒருபுறத்தில் சிறுவர் சிறு தேருருட்டு மோசையும், வண்டுமுதலியவை பாடுமோசையும், கடைசியர் பாடும் வள்ளைப்பாட்டி னோசையும், உழவர் ஓசையும், மிகுந்திருக்கும். ஆகாயமளாவிய மலர்ச்சோலைகளினும், தடாகங்களினும் நீர்ப்பூ, நிலப்பூ, கொடி ப்பூ, கோட்டுப்பூ என்னும் நால்வகை மலர்களும் பூத்துத் தேன்சொரியக் கருப்பந் தோட்டங்களுஞ் செழித்திருக்கும். இவைகள் காமனுக்கு ஆயுதசா லையெனக் காட்சியின் விளங்கும் தன்மையுடையன. கரும்பையிறுக்கி யாலை யிலிட்டு ஆட்டுவது நல்லொழுக்கம் தவிர்ந்த கொடியவர் இறந்தால் அவர்களை நமன்றமர் செக்கிலிட்டரைத்தாட்டுவ தொத்திருக்கும். அதினின்றும் சாறு ஒழுகப்பெருகுவது உலோபிகளைக் கண்டித்து அவருக்குக்கொடுப்பது போலி ருக்கும். அச்சாற்றைக் குடங்களில் நிரப்புவது கருப்பஞ்சாற்றுக்கடலை யொத் துத் தோன்றும். அதைக் காய்ச்சும்போது எழுந்தபுகை மேகமண்டலம் போல விளங்கும். அங்கே யடர்ந்திருக்கும் பூஞ்சோலைகளில் வண்டினம் பாடு வது ஏழிசையாற் பாடுவதை நிகர்க்கும். மேலும் குயில்கள் பாடுவோராகவும், மயில்கள் சிறைவிரித்தடிப்பது பறைமுழக்கமாகவும், கொடிகள் அசையுந் தன்மை நாடகமாதராகவும், நாரைகள் ஒலிப்பது புகழ்வோராகவும், தருக்கள் அசைவது வேடிக்கையை மதித்துத் தலையசைப்போராகவுந் தோன்றும். பூக் களும், தளிர்களுமுடைய மரக்கிளைகளில் இருந்து குயில்கள்கூவுவன தம்மி டத்தில இருக்கும் பொருள்களைக்கொடுக்க ஈகையுடையோர் யாசகரை அழை ப்பதொக்கும். வாழை, மா, பலா இவைகள் தம்மைவந் தடுத்தோர்க்குக் கொ டுக்குந்தன்மை பாத்திரமறிந்து வழங்கும் தலைவள்ளல்கள் கொடுக்குங்கொடை யையொத்திருக்கும்.

மடல்விரிந்ததாழை சூரியனை யடுத்து நிற்பது நிலமகள் தன்கரநீட்டி சந் திரனைப்போல மாசடையாமல் துடைப்பதொத்திருக்கும். மேலும் தாழை கள் ஓங்கி வீசும் பராகப்பொடியால் பசும்பொன் மேடைகளில் அமைத்திருக்கும் தாமிரக் குடங்களை வெள்ளிநிறமாக்கியும், அந்தநாட்டி விடமெல்லாம் பள் ளர்கள் தம்மனைவியரோடும் அடர்ந்து உலாவுவதனுலும், வயிறுளைந்து சங்கு கள் கால்களில் இடறுவதனுலும், வெண்பட்டுக்கொடிகளசைந்து தாக்குவத

ணல் கெண்டைமீன்கள்பாயத் தென்னஞ்சோலைகளில் குலைகள்குலுங்கி தெங்குகள் உதிர்வதனாலும், கமுகம்பாளைகளில்வாளைமீன்தாவுவதனாலும் பாக்குக் குலைகள் சிதறுவது ஆகாயத்தில் இருக்கும்விண்மீன்கூட்டங்கள் விழுவதொத்திருக்கும். கொடிகளில் மயில்கள் ஆடுவன இன்சொல்லையுடைய மாதர்கள்பொன்னூசலில்தம்மிடைவருந்தவும், தம்மைநாடும் இளம்பருவத்தையுடையகாளைகள்மனஞ்சுழலும்படியாடுவதுஒக்கும். மேலும் மாங்தருக்களில் பூட்டியிருக்கும் பொன்னூசலில் மாதர்கள்விளையாடுவது அவர்கள் காதிலணிந்தகுழைகளைவெல்லும் ஒளிபெறாதுதோற்றுப்போனமையால் அவைகளைக்கீழ்ப்படுத்ததுபோலவேதோன்றும். கிளிகள் ஒலிப்பது தம்மை யடுத்தாரை இப்படிசெய்வது தருமமல்ல வென்பதுபோலவிளங்கும். குயில்கள்கூவுவது விழாமல்தப்பினேர் இம்மரங்கள் குற்றஞ்செய்தது என்றுஙிந்திப்பதுபோலும்காட்டும். வேலைநிகர்த்துக் காதளவோடிக் கடைசிவந்து அமுதமும் விடமுமென்று சொல்லப்படும் பார்வைகளையுடைய குறிஞ்சிநிலமாதர்கள் தினைப்புனத்தைக் காவல்செய்து கவணில் மணிகளை யெறிந்து பறவைகளையோட்ட அவைகள் தம் சிறகுகளினல் விலக்கிக் கூவிபோடும். கடனீரையுண்டு கறுத்த மேகங்களைப்போன்ற எருமைகள்வந்து தடாகங்களில் புகுந்து நீரைமுழுதும் அருந்திக்கிடக்க வாளைமீன்கள் மடியிற்றுக்க அதனல் ஊரிலுள்ள கன்றினை நினைந்து மடிசுரந்து பொழியும் பாலாற் குறைவில்லாமல் நிரம்பச்செய்தும், செங்குவளைகள் அத்தடாகத்தில் மலர்ந்திருப்பது நமிநந்தியடிகள் முன் சமணர் நாணத் திருவாரூர்க் கமலாலய தீர்த்தத்தில் குளநீரால் திருவிளக்கெரித்ததை யொத்தும் விளங்கும். இவ்வாறு விளங்கிக் கிடக்கும் நாட்டில் உள்ள மலைபடுபொருள், கடல்படுபொருள், காடுபடுபொருள் விரும்பாமே தங்கள் நாட்டில் விளையும் பொருள்களையே கொண்டும் விற்றும்வருவர். ஏழிசைவழாமல் யாழைமீட்டி, துத்தமுதலிய குரலோசைகாட்டிக் கின்னரிப்பறவை நாணப்பாடுவதுகேட்டு மகிழ்ந்து அந்நாட்டார் கிம்புரிப் பூணணிந்த யானைகளைக்கொடுத்து வருவார்கள். அழகமைந்தமாதர் அகிற்கட்டையின் மணம்வீசுகின்ற ஆடைகள் வண்ணார் ஒலிப்பதனல் தேயும், கொங்கைச் சுமையால் வல்லிசாதக்கொடிபோன்ற இடைதேயும், பாதங்கள் செம்பஞ்சிக்குழம் பூட்டுவதனல்தேயும். அவர்கள் ஊடியுதைப்ப ஆடவர்சிகைதேயும். இவ்வாறு தேய்வதன்றி வேறுவகையே கிடையாது, கண்ணடிபோல் விளங்கும் கருவிழி சிவக்கவும், தேகந்துவண்டு வியர்வை அரும்பவும், கணவரோடு களிக்கும் மாதர்களும், நாயகருடன் ஊடிக்கொண்டிருக்கும் மாதர்களும் அளவற்றிருப்பர். இதுநிற்க. நாயகனைப் பிரிந்து வருந்துகின்ற தலைவியைப்பாங்கிபார்த்து அம்மே! நீயேன் வருந்துகின்றாய்; உன்கணவர் இன்றுவருவார்; நீ வருந்தாதை என்று கை கூப்பி வணங்கும் பெண்கள் பலர். தடாகங்களில் வாளைகள் சண்டையிட்டுப் பாய்ந்து அருகில் இருக்கும் கமுகம் பாளையில் தாக்க அதனல் தாமரை முதலிய மலர்களின் மணம் வீசிக்கொண்டிருக்கும். மன்மதனும் விரும்பும்படி விழிகளை யிமைக்கு மாதர்கள் அணிந்த கலவைச்சாந்து முத

வியவை அவர்களோடீக்கொண்ட பிணக்கொழியத் தம்மைவணங்கும் காளையர் குடுமியிலும் கைகளிலும் கமழ்ந்துகொண் டிருக்கும். மதயானைகள் கரும்புமுதலியவற்றைத் தின்று தமதிருக்கையையடையும். இலக்குமியோ தாமரையில் மகிழ்ந்து வசிப்பள். வண்டினம் தேனுண்டுறங்கும். கணிகையர் சதிமுறை பிறழாது நடிப்பர். இத்தன்மைய சிறப்புவாய்ந்து பொன்மயமான கோபுரம், மதில், மாடமாளிகைகள், அணியணியாக விளங்கும் கோபுரங்கள், மண்டபங்கள், கடைவீதிகள், பாடல்மண்டபம், நிருத்தமண்டப முதலிய பிறவும் அத்தொண்டை நாட்டிலெங்கும் செழித்திருக்கும்.

## நகரப்படலம்.

இருவகையுங் கடல்சூழ்ந்த நெடிய வுலகத்தில் சம்புத்தீவிலுள்ளதாய் தொண்டைமான் என்னும் அரசர் பெருமானால் புரக்கப்பட்டு மேழிக்கொடி உடையவேளாளராற் குடியேறப்பட்ட தொண்டைநாட்டின் பெருமிதமெடுத்துச் சொன்னோம்; இனி அதன்கணுள்ள நகர்வளங் கூறுகின்றோம்; நிலவுலகமே மலர்பொதுளிய தடாகம்போலும், குடிவளனும், வயலின் சிறப்பும் அமைந்த தண்டகநாடு தாமரை மலர்போலும், அந்நாட்டிற்கிராசதானியாகிய காஞ்சி நகரமானது அத்தாமரையில் வாசஞ்செய்யும் திருமகள்போலும் விளங்கும். கருடவாகனனாகிய திருமாலும், அன்னவாகனனாகிய நான்முகனும் அந்நகரத்தில் என்றும் விளங்கித் தோன்றுவதனால் அந்நகரம் முறையே வைகுந்தத்தையும், மநோவதியையு மொத்திருக்கும். சகலசாஸ்திர நிச்சய முணர்ந்த வியாழபகவானுடன் இந்திரன் தன் பரிவாரமாகிய தேவர்கள் சூழவிற்றிருப்பதால் அது இந்திரன் அரசுசெய்யும் அமராவதியை யொத்து விளங்கும். கின்னரர், சித்தர், கருடர், காந்தருவர் முதலாயினோர் வசிப்பதால் அவர்கள் தங்கியிருக்கும்பதவிகள்போலும் தோன்றும். ஆதிசேடன் முதலிய நாகராசர்கள் உறைவதனால் நாகலோகம்போலும் விளங்கும். திக்குப்பாலரனைவரும் வாசஞ்செய்வதனால் அவர்கள் பதங்கள் எனத் தோன்றாநிற்கும். வானில் தோன்றி விளங்கும் சூரியன், சந்திரன்முதலிய கிரகங்கள் வசிப்பதனால் கிரகநிலைபோலும் பிரகாசிக்கும் எனப் பெரியோர்கள் புகழ்வார்கள். இப்படிப்பலரும் அவ்விடத்தி லிருக்குங் காரணத்தால் ஒப்பனை யொன்றைக் குறிக்கப்படுவதாமோ! அந்நகரம் தனக்குத்தானே ஒப்பல்லது பிறிதொரு நகரம் அதற்கொப்பெனப்படுவதோ, அப்படிப்பட்ட காஞ்சிநகரம் சோதிவடிவா யெப்பொருளையுந் தானடித்தலினால் அசைப்பிக்கும் பரம்பொருளாகிய திருவேகம்பத்தொருவன் ஒப்பின்றித் தழைத்தோங்கிய மாநிழலில் வீற்றிருப்பானேல் அந்நகரத்துக் கொப்பாகப் பிரமன், திருமால் முதலியோர் பதங்களை ஒப்பாயுரைக்கவொண்ணுமோ. ஊழிகாலத்தில் எழுகடலும் பெருகி அப்பதியி னெல்லையையணுகி அலைகள் கொந்தளித்து நிற்க எப்பொருட்கு மிறைவன் அதனடுவில் நிற்பது கருவிகள் சூழவிருக்கும் ஆன்மாவையொத்து விளங்கும். சக்கரவாளகிரியில் அலைமோதும் பெரும்புறக் கடல்சூழ்ந்த பலவுலகங்கள் அடங்கிய

அண்டங்கள் சிற்றுருக்கொண்ட தொத்துத்தோன்றும். சக்கரவாகமுதலிய பறவைகள் ஒலித்துநிற்க அந்நகரத்துக்கு அரணாக விளங்கும் மதிற்புறத்தே யடர்ந்த அகழானது பிரளய காலத்தில் வளைந்த கடல்வெள்ளமொத்து இருக்கும். முன்னாளில் பிரமன் உலகைச் சிருஷ்டித்து அதன்பொறையைத்தாங்க ஆதிசேடன் முதலியோரை யமைத்துப் பின்பு அண்டத்தின் பொறையையுந் தாங்க ஆரைச் சுவரொன்றை யெழுப்பியதைப் போன்று வானையளாவித் தோன்றும். அது திரிபுராரியாகிய பரமசிவன் மேருமலையை வில்லாகத்தம்புய வலியால் வளைக்கவே யண்டவடுக்குக்குலைய நான்முகன் நோக்கி அதைத் தாங்கப் படைத்தது என்றுசொல்ல விளங்கும். பாதலம் வரையும் ஆழ்ந்து சென்று ஆகாயமட்டும் அளாவியுயர்ந்து விண்ணுலகினுக்கும், வித்தியாதரர் உலகினுக்கும், பிரம விஷ்ணுக்கள்வாழும் சத்தியலோகம் வைகுந்தங்கட்கும், ஆதிசேஷன் முதலிய நாகராசர்கள் வாழும் பாதலத்துக்கும் ஆதாரமாக எழுப்பிய பொன்மதிலை நிகர்த்துத் தோன்றும். பெரும்புறக் கடல்சூழ்ந்த சக்கரவாளகிரியும் அதற்கு உறையுளாக விளங்கும் அண்டச்சுவரும்போலச் சிறகு நீங்கிய மலைவரிசைகளுக்கு ஒப்பாகச் சித்திர வீதிகள்தோறும் பொன்மயமாய் மணிகள் பொதிந்து பிரகாசிக்கும் மாடமாளிகை, உப்பரிகை யிருமருங்கும் தோன்ற ஓங்கிநிற்கும் அம் மதிளிடத்திலுள்ள சில பொறிகளை யெடுத்துக் கூறுவோம்.

நாற்கடலும் வளைந்ததுபோல யானை, தேர், குதிரை, காலாள் என்னும் நாற்படையுடன் தன்னை யெதிர்ந்தபகைவர் முதுகிட்டோட முடுகி மின்னலை யொத்த வாளை விதிர்க்கும், எழுவினாற் கண்டிக்கும், சேனைகளை வாரி வாரி வீசும். திசைகளில் விட்டெறியும். விழுங்கும். பற்றி வலிக்கும். பெருங்காற் றிற்பட்ட காற்றூடிபோலஅரிக்கடையாகத்தள்ளும். கன்மழைபெய்யும். வில்லை வளைத்துச் சரமழைபொழியும். உருக்கிய வங்கமும், செம்பும் நெய்யோடு இறைக்கும்.சக்கரப்படையையும் வீசும்.வயிரப்படைகளைச்செலுத்தும்.தாழா நிற்கும். உலகை யளந்த திரிவிக்கிரமன்போ லோங்கும். மிக்க ஒலியையுடைய பறை, முரசமுதலிய வாத்தியங்களைக் காதுகள் செவிடுபட முழக்கும். வட்ட ணைவரும். வானிற்பறக்கும் பறவைக்கூட்டங்களை வருத்தும். மதிலிடமெங்கு மோடாநிற்கும். திரும்பாநிற்கும். சூரியனையும் தடைபடச்செய்யும். சரக் கூடங்கட்டும், சூலப்படையைச் சுழற்றி வீசும். தோமரங்களை யெறியும். சுடு கின்ற மணலை வாரியிறைக்கும். வலைகளை வீசியகழியில் எறியும். கொடிய பூத ங்கள்போல் உலாவி வரும். வெங்கனல் சொரியும். பகைவர் விடுகின்ற பாண ங்களைக் கவளங்கொள்ளும். பட்சிகளைப்போலப் பறக்கும். அவையன்றி அந் நகரத்தை இகழ்கின்றவர் நாவையும், மனத்தையும் வாட்டுமென்று சொல் வோ மெனின் அம்மதிலிற் கிடக்கையாயுள்ள சித்திரித்த யந்திரத்தின் வல்ல மையை இவ்வளவென்று சொல்ல வல்லமோ? அம்மதிலினின்று அசையும் கொடி விளங்கித் தோன்றுவது இறைமைக் குணமுடைய பரமசிவன் சோதி வடிவா யுலகத்தை ஊடுருவித் தோன்றிய தோற்றம்போல விளங்கும். அது

பறப்பது கோபுரசிகரங்களைத் தேடிப்பார்க்க அன்னவுருவங்கள் பலவெடுத்துப் பறந்தாற்போற் ளுென்னும். குளிர்ந்த கிரணங்களையுடைய சந்திரன் களங்க மடைந் திருக்கின்ருனென்று இவ்வுலகம் சொல்வதுசரியன்று,பொன்மயமான சித்திரப்பொறிகள்அமைந்த அம்மதிலின் அடர்ந்த கொடிகளின் செறிவைக் கடக்கப் பெருமையால் சூரியன் அவற்றின் கீழ்ப்புறவெளியில்நுழைந்து செல் வானெனின் அவன் பெருமிதத்துக் குலட்புண்டாமோ! 'ஒப்புர வொழுகு' என்றபடி உயர்ந்தோர் நெறியினொழுகும் அறிஞனொருவன் வகைமோசமாகக் கெடுவழியடைந்தொழுகின் அவனைக் குற்றங்கூறவகையறிந்திலர். இவ்வகைச் சிறப்பினையமைந்த சுவர்த்தலத்தின் நாற்புறத்தும் விசாலமாகிய நிலைகளைப்பெ ற்று ஆகாயமளாவி யுயர்ந்திருக்கும்கோபுரங்கள் மணிவிளக்கைப்போன்று விள ங்கும். அதன் கீழ்ப்புறத்தின் வாயில்கள் தோன்றும் காட்சி செந்தீவண்ணரா கிய பரமசிவனது திருமுடியைப் பிரமன் ஒருமுகங்கொண்டு காணப்படாதெ னக் கருதி நான்குமுகங்களைப்பெற்றதுபோல விளங்கும். இதுவன்றி சூரிய சந்திரர் முதலிய நவக்கிரகங்கள் தமது கதியிற்செல்லுங்காலையில் வட திசையி னும், தென்றிசையினும் மாமேரு வரைக்கொப்பாக விளங்கும்கோபுரங்களைக் கடக்கமாட்டாமையால் அவைகளின் வாயில்வழியே சென்று தத்தந் தொழி ல்களைச் செய்யத்துணிவர்.

தோடுடையசெவியனெனப்படும்திரிபுராந்தகனுகியபரமசிவன்திருவாணை யால் சிறந்துள்ள காஞ்சிககரை வளைந்திருக்கும் அளவற்ற ஒப்பனைகளைக் கொண்டு நிற்கும் மதிலின்மேல் உள்ளகொடிகள் புரத்தோடுபொருந்தியவைக ளாய் அந்நாளில் அமைத்தாற்போல அக்கோபுரங்களிற் கொழுந்துபோல விளங்கித்தோன்றும். மாடமாளிகைகளும், மண்டபங்களும், கோபுரங்களும், வீதிகளும், அநேகமாம். அவற்றினை யார் அளவிட்டுரைக்கவல்லவர். அக்கோ புரங்களால் தடையெய்திப் போக ஏலாத பறவைகளைப்போல அக்கோபுரங் களில் நாட்டப்பட்ட கொடிகளு மவ்வாறே யளவிடப்படாதன. பல சிகரங் களையுடைய மலைகளைப்போலத் தோன்றும் மாளிகைகடோறும் நாட்டப் பட்ட மகரதோரணங்களும், நிலைக்கண்ணடிகளும் ஒருங்குசேர்ந்து தோன் றும் காட்சி சூரியசந்திரரிருவரும் தத்த மொளிவடிவங்கரந்து அவ்வீதிகளின் சிறப்பினைக் காணவந்தாற்போலுமிருக்கும். செம்பொன்னாற் செய்யப்பட்ட உருளைகளையுடைய தேர்கள் கழைக்கூத்தர் சித்திரக்கோலினுச்சியிற் பம்பரத் தைச் சுழற்றிபதுபோலும் விளங்கும். பளிங்கினாற்செய்யப்பட்ட சித்திரத் தெற்றிகளில் முத்துவடங்களும், இரத்தினவடங்களும் தொங்கவிட்டு பாலி கைகளு மிருப்பன குளங்களில் பூத்த தாமரைப்பொகுட்டென்றே சொல்ல வமையும். பச்சைரத்தினத்தால் ஒப்பனைசெய்த சித்திரப் பிரதிமைகளடர்ந்த பொன்மாடங்களின் மேல்நிலைப் பரப்புகளில் முத்தினாலும், மாணிக்கத்தினா லும் அலங்கரித்திருப்பது மேகங்கள் சோமசூரியாக்கினியென்னு முச்சுடர்க ளின் ஒளிகொண்டு நிற்பதொக்கும். மன்மதனையொத்த ஆடவரை மாதருஞ் சேர்ந்து முத்துகளால் ஒப்பனைசெய்த மாளிகைகளின் புறத்தேசெல்லும்

பொன்மயமான சிறைகளையுடைய அழகிய மயிலினங்களின்தோற்றம் சந்திரன் மேகத்தினுழைவதையொக்கும். தண்டாகாரமாய்ப் பூமியிலுள்ளபணிகளெல்லாந்தழுவி அண்டத்தின்மேற்புறத்தில் சூரியனுஞ் சந்திரனும் அடைவதுகண்டு மாளிகையினது சூளிகையின்பால்சென்று அவரைக்கவரக் கோபத்தினால் நாவைநீட்டியதுபோலும் தோன்றும். கொடிகளின் தோற்றமாவது தேனைப்பழித்தசொல்லையுடையமாதரும்ஆடவருங்நீராடிவருமீன்களையுடைய மஞ்சனவாவிபோல் சிறந்தபடிகத்தாலாகிய வீடுகளின் மேல்தோன்றும் மாடமானது ஆகாயத்தினிற்கும் தெய்வவிமானம்போல் விளங்கும். தேவரும், தானவரும், சித்தரும், கின்னரரும், கருடரும், மற்றையேனையோரும் தத்தம்பதிகளையேவிடுத்து அந்நகரில் தனித்தனி யிருக்கைகொண்டு வாழ்வார்கள். கையில் கமண்டலமுடையராய், இரேசக பூரகமுதலியவைகளைச்செய்து நாசிமேல் விழிவைத்துப் பதுமாசனத்தில் ஸ்ரீபஞ்சாக்கரத்தை யுருச்செபித்து அனுதிமலமுத்த சித்துருவாகிய பரமேசுவரனுடைய சிபாதங்களைச் சிந்தைவைத்துப்பெருந்தவஞ்செய்வார்சாலைகள் அநேகமுண்டு. முன்னந்தன்னால் தேடப்பட்ட பரம்பொருள் மீண்டுமிவ்வகையே யிங்கெழுந்தருளினனோவென்று நான்குமுகங்களையுடையபிரமதேவனுநினைக்க நான்குவேதங்களையுமையமறக் கற்றுத்தெளிந்த பிராமணர் வேள்விகளைச்செய்ய அதனால் உண்டாகிய புகை யண்டமுழுதும்பரவி அதனையும் கடந்துநிற்கும். நான்கு வேதமுணர்ந்தாரும், குற்றமற்ற தோற்றத்தையுடைய ஊன்மறைத்த உயிரோபோலக் காக்குமொழுக்கமுடையாரும், மேன்மையானமுறைமையால், சத்தம், பரிசம், உருவம், இரதம், கந்தமென்னும் ஐம்புலனையும்வென்ற வொழுக்கமுடையாருமாகிய பிராமணருடைய ஆகாயமளாவிய திருமாளிகைகள் அமைந்த அக்கிரகாரமொருபுறமுண்டு. ஏவுகின்றபலபடைகளின் வன்மையையுடையாரும்,கொடியபகைமையாற் போர்ச்செய்கைகடந்தாரும், நாவால் நான்மறைபயில்பவருமாகிய மன்னர் வாசஞ்செய்யும் இராசவீதிகளில் எங்கும் அழகியமணிச்சிகரம்விளங்குதல் தேவருடைய அமராவதிநகரமே யென்றுசொல்லும்படி சிறந்திருக்கும். பலவகையான ஆபரணமாகிய மலைகளும், நவரத்தினராசிகளாகிய குவியல்களும்,ஏனையஉலோகக் குவியல்களுமாகத்தழைத்துக் கணிக்கக்கூடாமையாற் கணிதர்களுநாணமடையக் கற்பகத்தருவேபோலக் காட்சியையுடைய வணிகர் கடைவீதிகளின் வரிசை யொருபுறத்தேயிருக்கும். கங்காகுலத்தவரென்று சொல்லப்படுவோரும், நிலமடந்தை மைந்தரெனப்படும் வழக்குடையாரும், திருமாலினைப்போலும் பெருஞ்செல்வமுடையாரும், பிரமதேவன் திருப்பாதத்தில் தோன்றினருமாகிய சற்சூத்திரரென்னும் வேளாளர்வீதியும் அம்முக்குலத்தவர்வீதிகளோடு மெண்ணிலமைந்திருக்கும்.

கண்டுகேட் டுண்டுயிர்த்துற்றுணரு மைம்புலனையு மிகந்த மென்றொண்டு வன்றொண்டென்னு மிருவகைத் தொண்டுசெய்வார் திரளும், கண்ணின்வழியே தொடுமணற் கேணியிற்றூறென்றும் ஆனந்த பாஷ்பம்பொழிய நின்ற தேவர் கூட்டமும், திருவேகம்பமுதலிய ஆலயங்கள்தோறும் நீங்காமலும்; நான்கு முகங்களையுடைய பிரமனதூர்தியாகிய அன்னத்தினடிச்சுவடும், இறைவன்

திருமேனியிற் செம்பாதிகொண்ட திருமாலி னூர்தியாகிய கருடனடிச்சுவடும், மேகவாகனனாகிய இந்திரனூர்தியாகிய ஐராவதத்தி னடிச்சுவடும், என்றும் எவ்விதி மருங்கும் யாருங்காணத் தோன்றிக் கிடக்கும்; குதிரைப் பந்தியி னோசையும், களிற்றினோசையும், தேரினோசையும், கவிகைபோல் தழைத்த சோலைகளில் மன்னர்செல்லும் சிறப்பினோசையும்,ஒலிக்கின்ற தேவதுந்துபியி னோசையும் நீங்காமல் அத்தெருக்களிலிருக்கும். பின்னரும் அந்நகரின் நாட்டியச் செயலனைத்தும் அருமறைமுதலியாகிய அம்மையப்பனது ஆனந்த நடனமேயாம். இசையோடுகூடிய பாட்டுகளனைத்தும் அவ்விறைவன் கீர்த்தியே யாகும். அந்நகரத்தார் கேட்கப்படுவன எல்லாம் அவனது கேள்விச் செல்வங்களேயாம். அங்குள்ளாரனைவரும் அப்பெருமானுக்கு மென்றொண்டு, வன்றொண்டென்னும்இருவகைத்தொண்டுசெய்யும் தொழும்பரேயாம். பால், தயிர், நெய், தேன் இவைகளினிருக்கை யனைத்தும் அழகிய அந்நகரின்கண் கூவல் போலக் கிடக்கும். அட்டிற் சாலையனைத்தும் இறைவி அருட்பெருஞ் சோதியாகிய இறைவன்பால் ஈராழிநாழிபெற்று முப்பத்திரண்டு தருமங்களையும் வழுவாது செய்த அறப்பெருஞ் சாலையேயாம். பலநாள் தம்மைவிட்டு அயல்நாட்டிற்சென்று பின்னர் தம்பால்வந்து எய்திய உறவினரைக்கண்டு எழுந்து எதிர்சென்றழைத்து முகமன்கூறியுபசரித்து அவர்க்கு அறுசுவையோடுகூடிய இனியஉணவையூட்டி யுண்பிப்பதுபோல ஆதுலர்வந்துழிஅவர் எளிதினுண்ண இடம்பெறக் கிடக்கும் அன்னதருமச் சாலைகளும் பலவுண்டு. மேலும் மாடங்களையுடைய மாளிகைகடோறும் முற்றங்களில் கழைக்கூத்தர்போன்று இடைவிடாமல் நின்று ஆடுகின்ற பொற்பாவைகளைத் தேவருநாடிக்கண்டு விருப்பத்தால் அசைவற்றிருப்பர்; வளமுள்ளநகரில் வீரரூர்ந்து செல்லும் சுடரினையுடைய தேர்கள் சூரியர்பலர் தூண்டிச்செலுத்தும் சில்லியென்னு முருப்பினையுடைய தேர்களையொத்திருக்கும். வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்னு நாற்பாவும்; அவற்றி னினமாகிய வெண்டாழிசை, வெண்டுறை, வெளிவிருத்தம்; ஆசிரியத்தாழிசை, ஆசிரியத்துறை, ஆசிரியவிருத்தம்; கலித்தாழிசை, கலித்துறை, கலிவிருத்தம்; வஞ்சித்தாழிசை, வஞ்சித்துறை, வஞ்சிவிருத்தம் என்பனவும் நன்றாகப் பாடவல்ல செந்தமிழ்ப்பாவலரும், அவர்கள் நவரசாலங்காரமாகக் கருத்துவிரித் துரைக்கக்கேட்டு மகிழ்ந்துதவும் ஈகையாளரும் கழகங்கடோறுங் கூடியிருப்பர்.

யானைத்தந்தத்தினைப் பொருதுவென்ற கொங்கையையுடையமாதர் தங் குழலைப் புலர்த்த ஊட்டும் அகிற்புகைக்கும், வானினை யளாவிய மாடங்களையுடைய மாளிகைமே லுப்பரிகையில் அடர்ந்த மேகங்கட்கும் சிறிதேனும் வேற்றுமை தோன்றாமற் கிடக்கும். இதுவேயுமன்றிப் பண்ணினோசையும், நீலோற்பல மலர்போன்ற கண்ணினர் களிப்பினையுதவு நடனவோசையும், தண்ணிய நரம்பினுனியன்று முறுக்காணியாலமைத்த வீணையோசையும், தேவர்கட்கு விருந்துபோலத் தோன்றும். அழகு அமைந்த அரமகளிரும் அந்நகரத்திற் காளைபோல்வார்தோளைவிரும்பவும் விண்ணவரு மயங்கிக் கணிகைமாதரை விரும்பவு மேவலால் இக்காஞ்சி நகரம் மன்மதனுக்கு அரசிருக்கை

யென்றே சொல்லத்தகும். கூற்றினைப்போலச் செல்லுங் கொலைத்தொழிலை யுடைய யானைமதமும், இடபத்திற்செல்லும் ஆயர்பாடியில் கற்று ஊற்றிற் பொழியும்பாலும்இடைவிடாமல் கலந்து அக்கடைவீதிகளி னெம்மருங்கும்.ஆற் றினைப்போற் பெருக்கெடுத்தோடா நிற்கும். வீணைவாசிப்போர் பாணிக்கேற்பக் கணிகைமாதர் தம்மினத்தோ டாடலும், கழைக்கூத்தராடலும், காமனுட லும், தேவராடலும் யாவரும் வெறுக்கப் பொருந்தும். மாதரும் ஆடவரும் புனைந்து நீக்கிய ஆடையாபரணங்களே திருமகள் காதலிக்கும் செல்வமெனின் அந்நகரமாந்தர் செல்வ மிவ்வகைத்தென்று நான்முகங்கொண்ட பிரமனாலும் அளவிடப்படுவதோ. இதுநிற்க, மாறுபட்டு இராசகுமாரர் எறிந்தாடிய கத்தூரி யால் சேறுடைப்பட்டும், பொற்சுண்ணத்தாற் புலர்ந்தும், பனிநீர்சிந்த ஆறுகப் பெருக்கெடுத்தும், கர்ப்பூரத்தால் மணற்றிடரும், முக்குணவசத்தால் மாந் தர்க்குக் குணவேற்றுமை யமைதல்போல் அந்நகரி லுள்ள வீதிகளில்தோன்றக் கிடக்கும். மாதர் தடாகத்தின்மலர்ந்திருக்கும் தாமரையொத்திருப்ப, ஆடவர் வந்து செந்தேன் பருகிக்களித்தாடிய வண்டுகளைப்போல்வாராயினர். மே லும் எண்ணத்தக்க கருநிறங்கொண்ட மன்மதன் நாளத்தொடுகூடிய இர ண்டு வெண்டாமரை மலர்களைக்கையிலே பிடித்தமையால் சூரியனையொத் திருந்தான் எனக்கூறப்படும். பொன்னுலாகிய முரசவாத்திய முழங்க, மணங் கமழும் மலர்மாலைதூக்கி யிருக்கின்ற பந்தரில் தம்மரபுக்குரியவோமஞ்செய்து அந்நகரமாந்தர் மணம்புரியும் தன்மையே மிகுந்திருக்கும்.

ஆகாயமளாவிய அகிற்புகைகமழு மாடமீதில் குளப்பாகினைப்போலுஞ் சொல்லினையுடைய மாதர் கட்டிளமையுடையஆடவர்மேல் விசிறியால் பனிநீ ர்த்திவலை சிதறச்சோனைமழைசிதறும் பெயலேபோல அவ்வீதிவிளங்கித்தோன் றும். சூதாடு கருவியையொத்த கொங்கையையுடையமாதரும், கட்டிளமை யுடையாரும் மாடங்களினின்றும் ஒருவர்மேல் ஒருவர் எறிந்தாடும்பொற்சுண் ணமும், மலர்த்தாதுகளும் ஆகாயத்திற்பொலிய அதனால் பொன்முகிலாய்ப் பனிநீரை மேகஞ்சொரியாநிற்கும். மாலையணிந்துதோன்றும் தோளையுடைய வீரர் நீங்காமற்செல்லுந் தேரொலியும்,நான்றவாயையுடைய யானைகளின் பிளி றோசையும், காலாட்படையி னரவாரமும், அழகுமிக்க அந்நகரமாந்தர் நெருங் கிச்செல்கையில்அதட்டிச்செல்லுமோசையும்,மேககர்ச்சனையையும் கடலொலி யையுமடக்கிநிற்கும். அந்நகரம்வானைநோக்கிநிற்கு முலகேபோலும், அரசன் செங்கோலை நோக்கிநிற்கும் குடிகளேபோலும்,விண், மண்,பாதலமென்னு மூவு லகத்தினர்க்கு நடுநகராகியிருக்கும். கோடுகின்ற நெறியும், பகையும், மனக்கோ ட்டமாகிய கேடும், பிணியும்முதலாகிய குற்றமெல்லாம் அங்குவிரும்பி வசிப் பாரிடத்து நீங்குதலினால் வீட்டுலகமஎன்பதே அந்நகரமென்னின் வேறோ ருவமை யெடுத்துச்சொல்லுந்தன்மை அந்நகருக்குண்டோ சிறிதுமில்லையாகும். இதுநிற்க, பொன்னேதருவும், அதன்கிளையும், இளந்தளிரும் இலையும் அழகிய பவளமும்,பூக்கள்நீலநிறமாகவுமுதித்த வொருகாஞ்சிவிருட்சத்தில் கண்ணரோ வர்முன்கண்டு இனிதாக அருள்கின்ற பொய்கையின்பாங்கர் தன்னிழல்பிரியா திருத்தலினால் நிலவுலகமெண்ணும் காஞ்சிநகரமெனப்படும். பிரமன் நித்திரிக்

கின்ற இரவுதோறுமுடிகின்ற கற்பந்தோறும்விரைந்துவந் துலகையழிக்கின்றகட லானது அப்பதியினெல்லையிற் சிறிதுமடையவஞ்சிப்புறத்தில் சூழும்படிஒருசத் திகொப்பதனல் பிரளயசித்தென்றும், கயிலைவெற்பிற்சிவபெருமானைப்பூங்காவிற் கண்களைமூடினமையால், உலகைஇருள்மூட அதுகாரணத்தால் மாநிழலின்கண் உமைஏகம்பவாணனை அருச்சனைசெய்ய அப்பூசனையைக்கெடுக்கக் கம்பைவிரை ந்துவரக்கண்டு தாம்முலைத்தழும்பும் வளைத்தழும்புமபட இறைவனைத்தழுவக் குழைந்ததனல் சிவபுரமென்றும் ; இந்திரனூர்தியாகிய ஐராவதம் விரும்பிச் செய்ததவத்தால் முன்னே புண்ணியகோடி கிரியாய்த் தன்னைத்தாங்கவும், அதனருகிற்பெருகும் வேகவதியாற்றங்கரையில் பிரமன் வேள்விசெய்யத் திருமகள்நாயகன் எழுந்தருளியளித்தலால் விண்டுபுரமென்றும்; கார்போலுந் திருமேனியையும், தண்ணிய துவள்மாலையணிந்த கிரீடத்தையுமுடைய திரு மாலும், தாமரைப்பூவிலிருக்கின்ற பிரமனும், ஒலிக்குமியல்புள்ள அலையையு டைய கங்கைதரித்தமுடியையுடைய பரமசிவனும், முறையேதமக்குரிய மநோ வதி, வைகுந்தம், கயிலாயமென்னும் பதங்களைவிட்டு எஞ்ஞான்றும் இங்கே எழு ந்தருளியிருக்கையால் திருமூர்த்திவாசமென்றும்; உலகமுழுதும் படைத்தற் றொழில்செய்யும் பிரமன் தன்மனமாசுதீரத் திருமகள்கணவனுகிய விஷ்ணுமூர் த்தி கமடமாகப்பூசித்த கச்சபாலயத்தில் அமலனையருச்சனைசெய்துகொண்டு அங்கிருந்தமையால் பிரமபுரமென்றும் ; வீடுபேறு, மறுமை, இம்மைஎன் னும் இவற்றை வேண்டிவந்தடைந்தாருக்கு அவர்கள்வேண்டிய வேண்டியாங் குதவுஞ்சிறப்பினல் காமகோடிபீடமென்றும்; பிரமன்முதலிய தேவர்கள்வந்து அடைந்து தவஞ்செய்யுஞ் சிறப்பினல் தபோமயமென்றும் ; உலகமுழுதினும் புண்ணியபூமியென்று சொல்லப்படுவது நாவலந்தீவென்றுசொல்லப்படும் சம்பு த்தீவு; அதனினும்மிக்கதாய் அறத்தின்பயனைமுழுதும்பயந்தேவிடுஞ் சிறப்பால் சகற்சாரமென்றும் ; அணிமா, கிரிமா, லகிமா, மகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்னுமெட்டுச்சித்திகளையும்மாதவஞ்செய்வார் பெறச் செய்தலாற் சகலசித்திபுரமென்றும் ; கயிலைக்கிறைவனுகிய விமலையொருபங் குடைய வித்தகன்உமையை நீலியென்றுரைப்ப அவ்வுமையும் தன்காளிமநிறங் கழிக்க அதிற்காளிதோன்றலும் அவளை நீயிந்நகரை யொழியாதுவசிக்கவெ ன்றுசொல்ல அவள்வசிக்கையால் கன்னிகாப்பென்றும் ; சிவகணத்தில் துண் டீரனென்பான் மாலதியிடம் காமவிருப்பங்கொள்ளஇறைவன்அவளோடுநீபிறந் தின்பமடைந்து எம்பால்வருகவென அவ்வாறே, அக்கணத்தலைவனும் அரசர் மரபிற்றேன்றி அம்மாலதியு மன்னர்மகளாகவர அவளுடன் இன்பமுற்று இந் நகரிலரசுசெய்தமையால்துண்டீரபுரமென்றும்; தன்னையே அருச்சிக்கமலர்கொ ய்யத் தடாகத்திற்சென்று முதலைவாய்ப்பட்டுத் தன்னையேமூலமென்றுநினைந் தழைத்த யானையாகிய கஜேந்திரனைக்காத்தருளிய திருமாலே எனக்கருளவே ண்டுமென்று அடைந்த தண்டகனென்பானுக்கு எட்டுத்திக்கினும் அவன்செ ங்கோல்செல்லக் கருணைசெய்தநகரமாதலின் தண்டகபுரமென்றும்பெயர்கொ ண்டிருப்பது காஞ்சிநகரமாகும். அயோத்தி, மதுரை, மாயை, அவந்தி, காசி, காஞ்சி, துவாரகையென்று கடல்புடைசூழ்ந்த காசினியில் விளங்குமுத்தி

க்ஷேத்திர மேழனுள்ளுஞ் சிறந்ததாவது காஞ்சியென்று முற்காலத்தில் இறைவன் அமலைக்கருள்செய்ததெனில் இந்நகரம்போலுஞ் சிறந்தநகர மெந்நகர மென்று சொல்லலாம்.

மேலும் வடக்கண் 'ஆவிற்கருமுனியா' எனச்சிறப்பித்துக்கூறப்பட்ட காம தேனுபொழிகின்ற பாலியும், தெற்கட் சாட்குணப்பிரமமாகிய சண்முகத்தெள்ளமுதைப் பிரமன்முதலிய தேவர் திருமஞ்சனமாட்டுந் திருநதியுமிருக்க அவற்றினிடையே திருவேகம்பமுதலிய திருத்தலங்கள் கங்கைகாளிந்தி நடுவேசிறக்கும் காசிநகரம்போல் அந்தர்வேதியாகச்சிறந்திருக்கும். முன்பொரு கற்பத்திற் பிரமனிறக்க உலகைச் சமுத்திரஞ்சூழ்ந்தது. அவ்வாறுசூழ அதன்மேல் திருமால்செல்வதேபோற்செல்லுமார்க்கண்டேயர்கரத்தில்திருவேகம்பத்தைச் சார்ந்துநின்றவேதவுருவமாகிய மாமரத்திற்கிளைத்தகொம்பொன் றகப்பட்டது. அதைப்பற்றிக்கொண்டு இழிந்து போகமார்த்தபூண்முலைபூசித்த புனிதப்பெருங்கடவுளைவணங்கி அவனின்னருள்பெற்றது மிந்நகரத்தேயாம். அறுசமயங்களையுந் தாயெனவளர்க்கும் இறைவி சராசரங்கள் எல்லாமுய்யும் வண்ணம் 'காடுடைய சுடலைப்பொடிபூசி யென்னுள்ளங்கவர்கள்வன்' ஆகிய கருணை வடிவாளனிடம் ஈராழிநெற்பெற்று ஆதுலர்க்குச்சாலை, ஓதுவார்க்குணவு, அறுசமயத்தார்க்குண்டி, பசுவுக்குவாயுறை, சிறைச்சோறு, ஐயம், தின்பண்டநல்கல், அறவைச்சோறு, மகப்பெறுவித்தல், மகவுவளர்த்தல், மகப்பால்வார்த்தல், அறவைப்பிணஞ்சுடுதல், அறவைத்தூரியம், சுண்ணம், நோய்மருந்து, வண்ணார், நாவிதர், கண்ணாடி, காதோலை, கண்மருந்து, தலைக்கெண்ணெய், பெண்போகம், பிறர்துயர்காத்தல், தண்ணீர்ப்பந்தர், மடம், தடம், சோலை, ஆவுரிஞ்சுதறி, விலங்கிற்குணவு, ஏறுவிடுத்தல், விலைகொடுத்துயிர்காத்தல், கன்னிகாதானம் என்னுமுப்பத்திரண்டு தருமங்களையும் வழுவாதுசெய்து; சத்திபீடம் அறுபத்துநான்கினுள் ஆதிபீடமாகிய காமகோடி பீடத்தி லெழுந்தருளியிருக்க அம்மரகதவல்லியைக் கதிரவன்முதலிய நவக்கிரகங்களும் சூழ்ந்துவருவதனால் அந்நகரினைத் தேவர்கள்கண்டு திசைதோன்றாமல் மயங்காநிற்பர். ஒருவன் பாவங்கள் கோடிசெய்யினு மொன்றேயாம்; அன்பாகத் தருமமொன்று செய்யின் யாவரும் வியக்க அதுகோடியேயாகும். இத்தன்மையை நோக்கித் தேவரும், முனிவரும் தத்தம்பதங்களைவெறுத்துச் சிவார்ச்சனையை ஆகமவிதிப்படி இயற்றி அங்கேவிரும்பி யிருந்தவஞ்செய்திருப்பாராயின் அந்நகரின்சிறப்பினை யித்துணை யென்றெடுத்துச் சொல்லவல்லமோ. காங்கேயனென்னும் பெயரையுடைய முருகக்கடவுள் கையாற்குட்டுண்டகுடிலைப் பொருளினையுணர்ந்த பிரமன் உறங்கும்போதும், இறக்கும்போதும் உலகைமுற்றுங்கொண்ட சலப்பிரளயத்தில் இந்நகரம் அழியாதிருந்தமையால் ஒற்றைக்கலையையும், பாம்பையும் பகைதீர்த்தணிந்த கொன்றையஞ்சடைக்குழகன், சர்வசங்காரகாலத்தில் பிரமன், மால்முதலியதேவர்கள் என்பையவர்களுய்யுமாறு அணிந்த இறைவன், விமலை யோர்பாலுடைய வித்தகன் படைத்ததேயன்றிப் பிறந்திறந்தழியும் பிரமனால் படைத்த நகரமென்றே சொல்லும்பகுதியதன்று.

அங்குள்ள பல இசைகளும் வேதங்களேயாம், நீரெல்லாம் கங்கையே யாம், சிலைகள் எல்லாம் சிவலிங்கமேயாம், நகரமாந்தர் எல்லாம் தேவரேயாம். தருக்களெல்லாம் கற்பகமேயாம், இன்பந் துய்ப்பதுயாகத்திற்பெறப்படும் அவி யேயாம், உரையோசகஸ்திர நாமார்ச்சனையை யொக்கும், நடத்தல் எல்லாம் வலம் வருதல், உன்னுதல் தியானம், உறங்கல் சிவயோகம், இவ்வகைச் சிறப்பு காஞ்சி நகருக்கல்லது எந்நகருக்குண்டு. இதுவன்றி செக்கர்வானம் கருமேகத்தினைப் போர்த்ததுபோலும் கரியுரிபோர்த்த வயிரவரும், மணிகள் பிரகாசிக்கும் கிம்புரிப் பூணணிந்த யானைமுகத்தினையுடைய விநாயகரும், சூர் மாத்தடிந்த குகப்பெருமானும், அயன்போற்றேன்றிய மாசாத்தாவும், திரு மாலும்,காளியும்,விஜையையுமாகிய இவர்களாற் காக்கப்படுவதும் இந்நகரமாம்; சமயமாறுக்கு மதிதமாகிய வைதிக சைவத்தினன்றி ஈறிலின்பந்துய்க்கும் வீடுபேறு கிட்டாதெனத் தெளிந்து பிறரறியாவண்ணம் தாம் கைக்கொண்ட சமணசமயத்தி லிருந்துகொண்டே சிவபெருமானிடத்தில் பத்திமைகொண்டு கல்லையே மலராகப் பாவித்து எறிந்த சாக்கியனாரும், சிவனடியார் படிவங் கொண்டுவந்த சிவபெருமான் கொணர்ந்துகொடுத்த ஆடையையொலிக்கவே அதுமழையால் நனைதலும் தம்தலையையுமுடையொலிக்குஞ்சிலையின்மோதிச் சிவபதமடைந்த திருக்குறிப்புத்தொண்ட நாயனாரும் ஆகிய மெய்யன்பர் முத்தியடைந்ததும் இந்நகரமேயாம்.

இறைவனருளாற் கயிலையை யிகந்து கருணைவடிவத் தம்பிகை அறம் புரிந்து காசியில் முற்றுப்பெறுதுசென்று பொன்மயமான மாமர நிழலில் பரம்பொருளைச் சிவார்ச்சனை கடைப்பிடித்துச் செய்யக் கம்பையாறு பெருக்கெடுத்துவரக் கண்டஞ்சி அவரோமூலைத்தழும்பும் வளைத்தழும்பும் இறைவனுக் குண்டாக்கி அவனின்னருள்பெற்று நோற்றலால் அந்நகருக்கொப் பாவதும்யாண்டுளது. மூவகையணுக்களும் வீடுபேறடையப் பரம்பரனைநோக் கித்தவஞ்செய்யும் பிலத்தில் உள்ள காமகோடி பீடத்தமர்ந்து திருமகளையும், நாமகளையுங் கண்ணாகவுடைய பெருமாட்டிவழிபாடு செய்வதை விழைந்து சிவக்கொழுந்து அனந்த கலைகளுடன் அத்தலத்தைப் பிரியாதிருப்பர். அப்ப தியின்கண் இறைவி இற்றைவரையும் தவஞ்செய்தலாற் பிறப்பினும், இறப்பி னும், இருப்பினும், ஒருகணமேனும் வசிக்கினும் மறையுருவமாகிய மாநிழலின் கண் இன்ப நடம்புரியு மிறைவன் அடிமலரைக் கருதினும் தரிசிக்கினும் அன் னோர் வீடுபெறுவது திண்ணமேயாம். இத்துணைச் சிறப்பினையுடைய 'திசைமுகனு லஞ்சிக்கப்படுவதனற் காஞ்சியெனத் திசைபோய் மல்கும்' எனக் கூறப்பட்டுள்ள அந்நகரையொத்தநகரம்திரிவிதவுலகத்தினுமிருப்பதரிது. அது சோமசூரியாக்கினி யென்னு மூன்றுகண்களையுடைய முதல்வனும், தண்ணிய துளவமாலையணிந்த திருமாலும், தாமரைப்பீடத்தி லெழுந்தருளிய பிரமனும், விண்ணவர்கட்கிறையாகியஇந்திரனும், வெற்றியினையுடைய காளியும், முன்னை நாள்தோன்றிய மனுச்சக்கரவர்த்தியும், தண்ணளி யுயிர்கண்மாட் டியற்றும் துண்டீரனென்னு மரசனும், பகைவரைப் போரில்வென்ற தண்டகனும், பெரு மிதமுள்ள கரிகாற்சோழனும் பிறசோழராசரு மரசுபுரிந்த இராசதானி நகர

மாய் விளங்கும். கடல்புடைசூழ்ந்த காசினி முழுதும் மறுமை, வீடுபேறு வேண்டிய வேண்டியாங்கு விரும்பினர்க்குதவும்ஆலயம் அங்குநூற்றெட்டேயாம். அவற்றுள் ஈசானம், தற்புருடம், வாமனம், அகோரம், சத்தியோசாதமென்னு மைம்முகத்திறைவன் எழுந்தருளி யிருக்கும் தலங்கள் இருபதும், திருமகள் கொழுநனாகிய கள்ளமாயப்பிரான் தலங்கள்எட்டுமாக நாலேழ்திருப்பதிக ளிருக்கின்றனவெனின் நம்மாற்புகழப் படுவதாகிய வேறுநகர்யாதுளது. மேற்கூறிய சிவாலயங்கள் இருபதாவன ; கச்சபாலயம், திருவேகம்பம், திருக்கச்சிமயானம், காயாரோகணம், திருக்கச்சிமாகாளம், பச்சிமாலயம், அநேகதங்காவதம், பணாதரேசம், மண்ணீச்சரம், வராகம், சுரகரீசம், இராமம், வீரட்டகாசம், வேதநூபுரம், உருத்திரம், வச்சிரநகரம் ; பிரமம், திருமாற்பேறு, மறைசை முதலியனவாம். திருவத்திகிரி, திருவட்டபுயம், திருவெஃகா, திருவூரகம்,சகாளாங்கம்,நிராகாரம்,நிலாத்திங்கட்டுண்டம்,திருப்பாடகம்இவையே திருமால் வசிக்குந் திருப்பதிகளாம். இவையல்லது அறுபதினாயிரம் தலங்களுள; அவைசிவபிரான் அருட்சத்தி விநாயகர் முருகக்கடவுள் திருமால் முதலானோர் பலரும் வீற்றிருப்பன.

இது கிடக்க; தீவிளக்கமொன்று, இடமிரண்டு, மூன்றுதெற்றி, நான்கரணம், ஐந்தரு, ஆறுபுள், ஏழுநதி, எட்டுப்பொது, ஒன்பது வாசனையுள்ள பொய்கை, சிறந்த சிலைபத்து, பதினொருமன்று, இவைகளிருப்பதனால் மிகஅற்புதமாகவே விளங்கும். இனி அவற்றை விரிவாக விளக்குதும். உலகிற்சிறந்து விளங்கும் சூரியசந்திரர் தம்மொளியிற்முழஉலகனைத்துந்தன்னொளிபரப்பிஅறச்சாலை யிருக்கும் காமகோட்டத்தில் இறைவி எழுந்தருளியிருக்கும் பிலத்திற் கருகில் தூண்டாவிளக்கொன்று. இறவாத்தானம், பிறவாத்தானமென இறைவனிருக்கு மிடமிரண்டு, தோன்றிய உடலுயிர்க் குணவுதருவது ஒருதெற்றி, அவற்றைப் படைப்பதொருதெற்றி, மூகருக்குச் சொல்லைப்பயிற்றுவ தொரு தெற்றி. எனத்தெற்றிக ளொருமூன்றும். நகரினெல்லையோ நான்காம். அவை வடக்கண் வேங்கடம், தெற்கட்பெண்ணையாறு, மேற்பால் பவளமலை, கீழ்ப்பால்கடல் என நான்கரணாக விளங்கித்தோன்றும். வேதவுருவமாய்த் தழைத்தோங்கிய ஒப்பற்ற மா,மலர் காய்முதலியவின்றிப் பழங்களையுடைத்தாய் அவற்றையுண்பார்க்கு எண்சித்திகளை யுதவும்புளி, வாசனையுடைய பலவகைமலர் பூத்துத்தழைத்த இலுப்பை, வானையே நோக்கிப்பார்க்குமோரத்தி. தன்னிழல் புறத்தே செல்லாமல் நிற்கின்ற காஞ்சி, இவை அந்நகரிலுள்ள ஐந்தருவேயாம். அமுதருண்டியை யளிக்கும் சாதகப்புள், நவமணி களையுதவு மன்னம், நூல்களை வடித்துக்கூறிக் கொம்பிலுறையும்கிள்ளை, இனிவரும் காரியம்பகரும் ஆந்தை, குறையுறிற் கூவாக்கோழி, இங்கிலவுலகத்தில் பாவத்தினைத் துடைப்பதாகிய சக்கரவாகம், இவைகளே யாறுபுட்களாம். கம்பை, பம்பை, மஞ்சனி, பிச்சி, கலிச்சி, மண்ணி, வெஃகா எனநதிகளேழுளவாம். நீர்வேட்டோர்க்கு உதவியேதிரிகின்ற கூவலையுடைய பொது, குறியபடிவமுள்ள முயல்சென்று கரியினைத்தொடரும் பொது, எழிசைப்பயனை விளக்கும் பொது, திருமகள் நாயகனாகிய விஷ்ணுமூர்த்தி கண்படைகொள்ளும்பொது,

வேற்றுருவமைக்கும் புற்றிலொன்றின் முழவோசை யிடைவிடாதொலிக்கும் பொது, திசைமயக்கங்காட்டும்பொது, எமது பெருமாட்டி தவஞ்செய்யும் பொது எனப்பொது எட்டும் பொலிந்து நிற்கும்.

பின்னும் பழயபிணிகளை நீக்கும் பொய்கை, மனுவந்தரம், பிரமகற்பம், இவற்றைத் தெரிவிக்கச் செந்நிறமாய்த்தோன்றும் பொய்கை; திரிகாலமுணர்த்தும் பொய்கை, நெற்றிமே லொற்றைநாட்டமுடைய இறைவனது சீபாதங்களைக்காட்டும் பொய்கை, வேண்டிய வேண்டியாங் குதவும்பொய்கை, மெய்ஞ்ஞானத்தை யுதவும்பொய்கை, பொன்னிறம் பயக்கும்பொய்கை, திருமகள் விலாச மளிக்கும்பொய்கை; வசீகரம் வழங்கும்பொய்கை, எனப்பொய்கைகளெட்டாப் பொலிவுபெற்றிருக்கும். விடத்தினை நீக்கும்கல், ஆருயிர்கட்கு மெய்ப்பிணியை மாற்றுங்கல், அடைந்தாரை யெல்லாம் தேவராக அளித்திடுங்கல், கொடியபடைகளால் தடிந்திட வேருகத்துணிபடு முடலைச்சந்து செய்விப்பதொருகல், வேந்தர்கட்கரசியலை யுதவித் தஞ்சமதாக நிற்பதொரு கல், நிதியைப்புதைத்தோர் காணுதுமயங்கிக் கேட்கின் இதுவெனக்காட்டி நிற்பதொருகல், மிக்கவினையெல்லாம் போக்குவதொருகல், பழவழக்கறுப்பதொருகல், நெடும்படைவரினு மதுபயந்தோட நிலைத்துநிற்பதொருகல், இறந்தாரை யெழுப்புவ தொருகல் எனப்பத்துக்கற்கள் இருக்கும். பிறன்மனை நயந்தாரையும், கணவனைப் பிழைத்து ளாரையும், ஆசிரியனையிகழ்ந்து ளாரையு மூகராக்குவனவாகிய மன்றுகளொரு மூன்று, கள்வர்முன்னேநின்று சுழல்வதொருமன்று, பலநிறம்தோன்றச்செய்வதொருமன்று, விஞ்சைகள் வழங்காநிற்பதொருமன்று, திசைதெரியாது மயங்கினை அத்திசை மயக்ககற்றுவ தொரு மன்று, நாகர்நாட்டிற் செலுத்துவதாகிய பிலத்தையுடைய தொருமன்று, நவமணிகளை யுதவுவதொருமன்று, தேவருண்டியாகிய அமிழ்தமிருப்ப தொரு மன்று, வடிவினை மறைப்பதொருமன்று, மேகநின்றிடைவிடாது மழைபெய்வதொருமன்று, இரவுபகலாகவும், பகலிரவாகவும் ஆக்குவதொருமன்று எனமன்றம் ஓர்பதினென்றுக விளங்கும். அங்கிவையேயன்றிச் சிலைகளும் தருக்களும், இடங்களும், கூவல்களும், நதிகளும், குளங்களும், தீர்த்தங்களும், பிலங்களும், வயல்களும், சோலைகளும், இன்னனபிறவும் ஆங்கு அனந்தகோடியுண்டு; ஒவ்வொன்று மெடுத்துகூறுமிடத்து அளவிகந்த அற்புதமுடையதாம். அவற்றை யுலகையேபடைத்த பிரமனே யெடுத்துச் சொல்லினும் அவனாலுமுடிவுபெறின்றுகவேவிளங்கும். முன்னே தாமரைப்பீடத்தில் எழுந்தருளிய நான்முகக் கடவுள் இந்நகரத்தின் சிறப்பினை யெடுத்துக்கூற அவனடி வணங்கிக்கேட்ட சனகன் வியாசமுனிவனுக்குச் சொன்னான். கேடில்லாத சிறப்பினையுடைய அவ்வியாச முனிவனும் சூதமுனிவனுக் கருளிச்செய்தான், அச்சூதமுனிவன் நைமிசவனத்தில் சவுனகர்முதலிய முற்றத்துறந்தமுனிவர்கட் கியம்பிய பாட்டிலடங்குறாத பெருமித முழுதும் சொல்ல யான்வல்லேனோ! சொற்கடங்காச் சிறப்பினையுடைய காஞ்சிநகரத்தின் நடுவே கற்புருவப் பெருமாட்டியாகிய இமயவல்லியார் கருணையால் எழுந்தருளித் தவஞ்செய்யும்பொன்மயமான

காமகோட்டத்தைப்போன்று அதற்கோர்பால் மிக்கவொளியுள்ள குமரகோட்டமென்றொரு திருத்தலம் அந்நகரத்தே சிறந்திருக்கும்.

இக்குமர கோட்டத்தில் அருட்பெருங் கடவுளாகிய பரமசிவத்தின் நெற்றிக்கண்ணில்தோன்றி ஊன்தங்கிய வேற்படையேந்திச்சூரபதுமன்முதலியவர்களைச்சங்கரித்து தேவர்கள் சிறையொழித்து, இந்திரனைவிண்குடியேற்றிய எமது சண்முகப்பெருமான் அங்குவிரும்பியெழுந்தருளி யிருப்பான். இக்குமரகோட்டத்தில் எழுந்தருளிய இறைவன்மதுரையின் மேற்றிசையிலுள்ள திருப்பரங் குன்றிலும், சீரலைவாயென்னுந் திருச்செந்தூரிலும், திருவாவினன்குடியிலும், பழமுதிர்சோலையிலும், தணிகைமுதலிய குன்றுதோறும், 'சேயோன்மேய மைவரை யுலகமும்' என்றபடி குறிஞ்சி நிலத்துத் தெய்வமாயும் வீற்றிருக்கும். பின்னும் வயிரப்படையையுடையஇந்திரன் தனிநகரத்திலும், விஷ்ணுபதத்தினுக் கப்புறத்ததாகிய தன்பதத்திலும், கந்தகிரியிலும், எழுந்தருளியிருப்பதுமன்றி இத்திருப்பதியினும் விருப்பி யெழுந்தருளியிருப்பான். இவ்வுலகமெங்கும், எல்லையில்லாத விண்ணுலகத்தும், ஆண்டன்மையையுடைய இந்திரன் சிறப்பும், பிரமன்முதலிய தேவர்கள் வாழ்வும், பிறப்பிறப்பில்லாது நிலைபேறுடைய வீடுபேறும், தம்மைத்துதித்துவேண்டினோர் வேண்டியபடியேயுதவ மேகமண்டலத்தை யளக்கும் மதிலையுடைய குமரகோட்டத்தில் எழுந்தருளியசெவ்வேள்கண்டிகையும், செபமாலையும், கமண்டலமும்கரத்திலேந்திப் பண்டைக்காலத்தில் பிரமனை மாற்றிப் படைப்புத்தொழிற் கடவுளாய் நின்றதுபோலவேடங்கொண்டு தேவர்கள் யாவரும் வணங்கவும் எழுந்தருளி யிருப்பான்.

அவ்வகைப்பட்ட குமரகோட்டத்தினையுடைய காஞ்சியின்கண் தாமரைமலரிலெழுந்தருளிய பிரமன் தன்மனத் தூய்மையாகும்பொருட்டு பூர்வத்தில் ஆமையுருக்கொண்டு வழிபடும்கச்சபாலயத்தில் முக்கட்பெருமானாகிய மஹாதேவனை அர்ச்சித்து நாமகளோடு அத்தலத்தே வசிக்க, இல்லறநெறிகடவாது நின்று அதற்குரிய செயல்களையெலலாங் குறைவற நடத்தினோம் என்று முனிவர்களெல்லாம் அங்கெழுந்தருளிய பிரமனையணுகி அவனடி தாழ்ந்துவணங்கி இதனைச்சொல்வாராயினர். இறைவனே இத்தனைநாளும் இல்லறநெறியினை அறநூல்கூறியவண்ணம் கடவாதுகுறைவறச்செய்தே இங்கிருந்தோம். இனி யாம் மனமொருவழிபட்டு நோற்றுச்செய்கின்ற கடமையெல்லாம் தங்கியிருந்துசெய்யு மெய்மையாகிய தவஞ்செய்வதற்குரிய வனமொன்றுகாட்டிவிடுத்தருளவேண்டுமென, அதற்கு அப்பிரமனும் தருப்பையொன்று எடுத்து அதனையுருள்கின்ற சக்கரவடிவாகச்செய்துருட்டிப் பூமியின்கண் இதன்பின்னே நடந்துசென்று இச்சக்கரவடிவமாகச் சமைந்த தருப்பை தங்கும் வனமே நீங்கள் தவஞ்செய்தற்குரிய தபோவனமாமெனக்கூறினர். அவர்களும் அப்பிரமனை வணங்கித்தாழ்ந்து விருப்பினால்விடைகொண்டுசென்று விரைந்து அவன்விடுத்த தருப்பையினாலாகிய சக்கரஞ்சென்ற வழியேசென்று அதுதங்கியவனத்தே அவர்களும் அன்பினால் இருப்பிடங்கொண்டிருந்தனர்.

பிரமன்செலுத்திய தருப்பையினாலாகிய சக்கரத்தினால் நைமிசவனம் என்கிறவனத்தில் வசிக்கும்அருந்தவரும் சொல்லுதற்கரிய தவங்களெல்லாஞ் செய்துமுடித்து நான்குவேதங்களாலும் சிறப்பித்துக்கூறப்படும் வேள்வியொன்றுசெய்யலாயினர். இவ்வாறு மெய்யுணர்ச்சிசிறக்க அவ்வேள்விசெய்து அது கைகூடச் சிறந்தபேரறிவுடையாராய்த் தோன்றுநிற்கச் சுகமுனிவனையொத்த மெய்யறிவினையுடைய சூதமுனிவன் எழுந்தருளலும், அவரை எதிர்கொண்டழைத்து அருக்கியபாத்தியமுதலிய சோடசோபசாரஞ்செய்து அடியற்றபனைபோல் அவன்பாதமலரைப்பணிந்து முற்றத்துறந்தமுனிவர்பெருமானே! முன்னொநாளில் பிரமதேவர்கருணையால் யாங்களனைவரு மிங்கேவசிக்கும்பாக்கியம் பெற்றோம்; பின்பிங்கிருந்து நாங்கள்செய்தநோன்பாலேதங்களைத்தெரிசிக்கப்பெற்றோம்; யாங்கள் மனமகிழ்ச்சியோபெற்றதற்களவுகிடையாது; பிறவியெடுத்தபெரும்பய னின்றேபெற்றோம் என்றுகூற, சூதமுனிவர்கேட்டுச்சொல்கின்றார். நீங்கள் ஆதிபாண்டரங்கனை நாடிச்செய்த தவத்தால் மனந்தூயராய் மெய்யுணர்ச்சியையடைந்து சிறந்தீர்,உங்கள் கழகத்தில்யானடைந்த தவமெத்தனைசிறந்ததென, முனிவரெல்லாம் பெருங்களிசிறந்து அருமறையனைத்தும் நான்கெனவகுத்த வியாசமுனிவருடைய மாணக்கருட்சிறந்தபெருந்தவனே! யாங்களோ சூர்மாத்தடிந்த சுடர்நெடுவேற் குகப்பெருமான்கதை கேட்கமிக ஆசைகொண்டோம்; எங்கட்கு அதனை யனுக்கிரகிக்கவேண்டுமென்று இரந்து கேட்டனர். அவ்வாறுகூறவேசூதரும் அழலிடைப்பட்டமெழுகேபோலநெஞ்சங்கசிந்துருகி நெடுங்கணீர்வார மெய்ம்மயிர்பொடிப்பமொழிகுழறப் பரவசமாய்த்தமதுஆசிரியராகிய வேதவியாசமுனிவர்தாள்மலரைவணங்கிஅருந்தவரோ! அரசன்மகன், ஆசிரியன்மகன், தன்மகன், சொற்கொண் டொழுகுவோன், பொருளீவோன், வழிபடுவோன்என்றித்தகையோர்க்கே அறம் பொரு ளின்பம்வீடென்னு நாற்பயனையும்விளக்குநூலனைத்துங்கூறுவர். உம்மைப்போல நன்னெறிப்படருஞ் சிந்தையாளர்க்கே யான்கூறத் தொடங்கினேன் புராணமென்பதனைத்துமென்று சூதமுனிவரும்கூறி தன்னொப்பாரில்லாச் சண்முகப்பெருமான்பால் கழிபேரன்புசிறந்த பெருந்தவரோ சொல்வோர்க்கே யன்றிக் கேட்போர்க்கும் பெறலரும் பேரின்பவீடுதவும் காந்தபுராணத்தின் உண்மையைக்கேட்க விழைந்தீர், நீரும் கேளுமென அவர்க்கு ஆசையுடன் கூறுவாராயினர்.

திருநகரப்படலம்

முற்றிற்று.

---

# பாயிரப்படலம்.

முன்னொருநாளில் மூவுலகத்திலுள்ள உயிர்கள்செய்த கன்மவசத்தால் அளவில்லாத வேதங்களும் முறைதடுமாறி நிற்பதையறிந்துதேவர்களும் முனிவர்களும் மதிமருண்டு நெற்றியில் அக்கினிக்கண்ணையுடைய இறைவனருளால் அவ்வேதங்கள்தோன்றின ; ஆதலால் தெளிவாக அவ்வேதங்களை யொழுங்குபடக்கூறுவதற்கு யாவராலுமரிது ;அதனால் நாமென்செய்வதென்று எண்ணியதன்றி கடல்சூழ்ந்தநிலவுலகத்திலுள்ள மனிதர்கள் சிறிதேனும் மனத்தினிடத்தே ஞானமில்லாராகித் தீயவழியில்நடந்து வேதபாகியமாகிய பாஷண்ட நூல்களைச்செய்துகொண்டு அறநூலில்விதித்த தருமங்களைத் தீவினையென ஒறுத்துக் காலங்கழிக்கின்றன ரென்பதனை உலகமுண்ட திருமாலும், தாமரை மலரிலெழுந்தருளிய நான்முகக்கடவுளுந் துணிந்து எப்பொருட்கு மிறைவனாகிய சிவனது திருவருளாலன்றி யாதொருகருமமுஞ்செய்ய முற்றுப்பெறாது என்பதும் அறிந்து,பொன்னுலகைப்புரக்கும்இந்திரனும்,வசுக்கள்எண்மர்,உருத்திரர்பதினொருவர், சூரியர் பன்னிருவர், அச்சுவினி தேவரிருவர் இவராலாகிய முப்பத்துமுக்கோடி தேவரும், தம்மைப்புடைசூழ உமையொருபாகத்திறைவனது கயிலாயவரையை யணுகிச்சென்றனர். அம்மலையினிடத்துச் செம்பொன்னாலாகிய அழகியகோயிலின்கண் முற்பட்டகோபுரவாயிலின்முன் கடைசென்றடைந்துஅத்தலைவாயிலின்காவலாளராகியநந்திபெருமானைக்கண்டு வணங்கி, தேவரீர் எங்கள் வருகையை நமதிறைவராகிய அழகனுக்கருளிச்செய்யவேண்டுமென்றனர். அதுகேட்டுநந்திபெருமானும்தேவர்கள்வருகையை எடுத்துச்சொல்ல கொன்றையஞ்சடைக்குழகன் இவ்விடத்தில்வரக் கட்டளையிடுமென்றருளிச்செய்ய, அவ்வாறே செய்கின்றேனென்று நந்திபெருமான் மரகதவல்லிபாகனை வணங்கி விடைபெற்றுத்தேவர்களிடத்துச்சென்றுநன்னெறியிற்சென்ற சிந்தையையுடைய தேவர்களைநோக்கி, எம்மையாளாகவுடைய பரமசிவனது திருவருள்பெற்று விளங்கும் நந்திபெருமான் சொல்வாராயினர்.

எம்பெருமான் உங்களைவரக்கட்டளையிட்டனர் இனிவாருங்கோளென்று விரைந்து கூவியழைக்க, அதுகேட்டு கண்களில் ஆனந்தக்கண்ணீர் பெருக்கெடுத்தோட நெஞ்சம் தழுதழுப்ப உடல்புளகரும்ப எம்பெருமான் சந்நிதானத்தில் விடுக்கவென்று நந்திபெருமானோடுசென்றனர். இவ்வாறுசெல்கையில் பூதகணங்களால் காக்கப்படும் பலவாயல்களையுங்கடந்து மன்மதனைநெற்றியின் ஒற்றைநாட்டத்தெரித்த பரம்பொருள் எழுந்தருளிய சந்நிதானத்தையடைந்தார்கள். அத்தேவர்கள் இறைவன் சந்நிதானத்தைநெருங்கியவுடன் வரன்முறையாகவணங்கி அன்பாகியகடல்வசப்பட்டாராய் எங்களைவருத்தும்மும்மலக்கிழங்கை இன்றோடே பேர்த்தெறிகின்றோமென்னுஞ்செருக்கடைந்து அவ்விறைவனது பாதமலரில் நாண்மலர்சொரிந்து பகலில் நீங்கியதாயைநோக்கியுருகும் கன்றின்தன்மைபோல வந்தடைகின்றவராய்த் தம்வாயில்வந்தபடி துதித்துநின்றனர். இறைவனதுவ்வடிவத்தை மனத்தினெண்ணுமிடத்து எல்லை

யில்லாத இன்பத்தைத்தருமெனின் கண்ணினலேயே அவன்காட்சியைக் காண்பாராயின் அவர்செயல்கூறவேண்டுமோ. தேவரும்இந்திரனும் எமதிறை வனது சந்நிதானமடைந்தனர். திருமாலும், நான்முகனும் வந்திருபாலுமாகி வணங்கிநிற்க, அவர்கள் வணங்கியபடிதேவர்களும் இறைவனை வணங்கித் துதிக்கையில் பொன்போலும் முடியின்கண் ஒற்றைக்கலையணிந்த பரம்பரன் கருணையால் இது சொல்வானாயினன்.

சிறிதுங்குறையில்லாமல் உங்களுக்குரிய அரசியல் நடந்துவருகின்றன வோவென்றுமேருவில்லையுடைய இறைவன்தேவர்களைநோக்கிக்கேட்க, அதற் குத் திருமால், பிரமன் படைத்தற்றொழிலும், என்காத்தற்றொழிலும், எரு மைக்கடாவில்வரும் எமன் கொலைத்தொழிலும், ஏனையதேவர்களுடைய குற்றமுடைய தொழிலும் கண்ணுதற்பெருமானே நின்னருளாலேயே நடந்து வருகின்றன. நீலமணிபோலுங் கண்டத்தையுடைய இறைவனே! இன்னுமெ ங்களுக்குக் கிருபைசெய்வதொன்றுண்டு. அதாவது உலகிலுள்ளமானிடரோ மாயையின்புணர்ப்பினல் நின்னைப்பரம்பொருளென் றெண்ணுதிருக்கின்றனர். உனக்குரிய இறைமைக்குணங்களைப் பிரமன்மேலும், என்மேலுமேற்றி என் னையும் பிரமனையும்பரம்பொருளாகக்கருதிக்காலங்கழிப்பவர்சிலர். அவ்வாறன் றியும் உன்னொடுபலரையும் ஒன்றென்று எண்ணிச்சொல்வோரும் சிலருண்டு. ஆற்றுநீர்படிந்தும் உடன்மாசினையொழிக்காமல் சேற்றிற்படிந்து புரள்வார் போலவேதநூல்கூறியவிபூதி, கண்மணிமுதலியசிவசாதனம்புனையாமல்வேறு சாதனங்களையுந் தரிப்பவருஞ் சிலராயினர். காமம் வெகுளி மயக்கம் என் னும்மூன்றினையும்தருவதனல் வாமதந்திரமே பொருள்எனத்துணிந்து காலங் கழிப்பவருஞ்சிலருண்டு. குற்றமற்றமூவகைத்தொழிலும்வேள்வியும்தம்மைநன் மையடைவிக்கும்பொருளென எண்ணுவோருஞ்சிலருண்டு. சிலர்சத்தப்பிரம வாதமே மெய்யுணர்ச்சியெனத்துணிவர். விரதங்களால் அடையப்படும்சித்தி களே பொருளன்றிப்பிறிதில்லையெனத் துணிந்தவரும் சிலருண்டு. நாற்குலங் களிலும்பிறந்து அக்குலத்தொழுக்கமாகிய ஆசாரத்தைப் பாதுகாத்தலேவினை கள் நீங்கற்குரிய வழியெனச்சொல்வோர் சிலர். பலமுறையறிந்து உயிர் தொறுமதுவதுவாகிப் பிறந்திறந்து உணர்வெல்லா மறப்பெற்றுநோன்புதுறந்து கொன்றவற்றையேதின்று பஞ்சகந்தம்கெடுவதே முத்தியென்பர் சிலர். மாதர் சுகத்தைவிழைவதே பரமசுகமெனத்துணிந்தவர்சிலர். இவ்வகையானதுறைக ளில் அமைந்துகிடந்துயாவரும்துன்பமடைந்துநின்றுபெருந்துயராகிய பிறவித் துன்பநீங்காதவராயினர்.எம்பெருமானே உலகமோ வரம்புகடந்துநிற்கின்றது, யாவரும் வேதநூல்மறந்தவராயினர். பவநெறிமிகுந்து நாடோறும்சிறந்தன வாயின. அவற்றை யுயிர்கள் செய்யாநிற்க, பழவினையையறிந்தூட்டுகின்றேன் நீயேயாயினும் அவ்வுயிர்கள் போதமடைந்து முக்குற்றமகன்று மனச்சந்தேக மகன்று நின்திருவடியையடைய அநாதிமலமுத்தனாகிய இறைவனே நீசிறிது அருள்செய்யவேண்டும், அடியேங்கள்பொருட்டென்று அவர்கள் வேண்டிக் கொள்ள, இறைவன் இனி ஒருவகையுண்டென்று சொல்கின்றனர். ஆருயிர் அனைத்தையும் காக்குந் தொழிலையுடையவனாகையால், அவர்வினைநீங்குநெறி

யினைவேண்டுகின்றனை ! உன்மனக்கருத்தைவிட்டுவிடு. அன்பொடு உலகத்தைக்காக்கும் உன்கலைக்கூட்டங்களில்ஒன்றினைக்கொண்டு சக்கரவாளகிரிசூழ்கின்ற பூமியின்கண் வியாசனென்று சொல்லப்படும் ஞானசொரூபியாக அவதரித்துச்சகலவேதங்களையும் நீயாராய்வாயானல் நால்வகையாகத் தொகுத்துவிடுவாய்; அவ்வாறுதொகுத்து உன்னை மரபின்வழிபடு மாணுக்கர்களுக்கு உபதேசித்து அவர்களால் பரம்பச்செய்வாய்; நீவேதங்களைத்தொகுத்து நான்காகச்செய்தும் நன்ருய்ப்புலப்படாதிருக்கின்ற மந்தாதிகாரிகளுக்கும், வேதத்துக்கு அதிகாரிகளல்லாத மரபினருக்கும், மாதர்களுக்கும், சிறப்பினையுடைய வேதங்களுக்கும், யாம் ஈசானம் தற்புருடம் அகோரம் வாமனம் சத்தியோசாதம் என்னும் திருமுகங்களினுல் எம்மால் அருளிச்செய்யப்பட்ட ஆகமங்களுக்கும்வேறுபாடில்லாததாயும்,எமதியல்பினைமுற்றும் அறிவிப்பதாயுமுள்ள புராணங்கள் பதினெட்டினையும் நந்திபெருமான்அறியத் திருவாய்மலர்ந்தருளினேம். ஆதியில் யாம் நந்திபெருமானுக்கு அளித்த புராணங்கள்அனைத்தினையும் கிருபாவசத்தால்அவன்சொல்ல சனற்குமாரமுனிவன்தெரிந்துகொண்டான். அவனிடத்திற்சென்று நிலவுலகத்திற் கேட்கவேண்டும்என்று அருளிச்செய்ய, அவ்வாறே செய்கின்றேனென்று மும்முறைவணங்கிநின்று பிரமன்முதலிய தேவர்கள் தத்தம் இருக்கையிற் சேரத்திருமால் தன்வைகுந்தநகரம்போய்ச் சேர்ந்தான். திருமகள்நாயகனுகிய திருமால் எங்கும் பரவப்படுகின்ற பகவானுகையால் பூமியின்கண் அருளினுல் தனது சத்தியினெருகலைகொண்டுபிறக்க வெண்ணி, தாமரைமலர்மேல்வசிக்கின்ற பிரமனதுமரபில் பராசரமுனிவன் பனித்தூவலினுல் சூரியகிரணம் மறைக்கப்பட்ட பகற்காலத்தில்கங்கைக்கரையில் யோசனைகந்தியினிடமாகத் திருவவதரித்தான். அங்ஙனம் அவதரித்த பின் சிலநாள் இலந்தைக்காடு எனப்பொருள்படும் வதரிகாச்சிரமத்தில் வசிக்கையினுல் வாதராயணனெனப்பட்டு எமதிறைவன் சங்கற்பமாத்திரத்தால் அனந்தவேதங்களையும் ஓதாதுணர்ந்தான். மௌனநெறிபெற்றுள்ள முனிவர்களுக்கு மேலோனுகிய வியாசபகவான்தான்அறிந்த அம்மறைகளைநன்ருகஆராய்ந்து அறிஞர்பெறும்படி நான்காகத்தொகுத்தான். அவ்வேதங்களை நான்காகத்தொகுத்தமையால் வேதவியாசனென யாவரும்சொல்லும்படி புகழ்பெற்றுநின்ருன். வியாசபகவானே குரவர்சிகாமணியாகிய சனற்குமார பகவானிடத்தே பதினெண்புராணங்களையும் மரபிற்கேட்டு அவைகளைத் தன் மனத்துட்கொண்டான். வேதங்களினுல் எடுத்துக்கூறப்பட்ட மாட்சிமைப்பட்டபொருளனைத்தையும் பார்த்துணர்ந்ததன்மையால் வேதாந்த சூத்திரமெனப்பட்ட உத்தரமீமாஞ்சையென்னும் பிரமமீமாஞ்சையையும் அருளிச்செய்தான்.

குற்றமற்றபயிலவரும், வைசம்பாயனரும், சயிமினியும், சுமந்துவுமாகிய முனிவர் நால்வருக்கும்சிறந்த இருக்குமுதலாகிய நான்குவேதங்களையும்பெருந்தவத்தினையுடைய வியாசபகவான் அருளிச்செய்து அவ்வேதங்களினுட்பொருளாகத்தொகுத்து வேதாந்தசூத்திரத்தையும் மேன்மையையுடையசயிமினி முதலிய அறிவுடையோர்நால்வருக்குமுணர்த்தினுன். ஆலநிழலில்அன்று நால்

வர்க்கும் அருமறையினுச்சிப்பொருளாகிய உபநிடப்பொருளை யருளிச்செய்த கண்ணுதற்பெருங்கடவுளையொத்த வியாசபகவான் பின்பு அம்முனிவர் நால்வரையும் அழைத்து நீங்கள் இனி உங்களுக்கருளிச்செய்த வேதநான்கினையும் உம்மைவழிபடுவோர்க்கு அருளிச்செய்கவெனக்கட்டளையிட அவர்களும் அதிகாரிகளாவார்க்கு அவைகளைப்பிரவசனஞ்செய்தனர். இவ்வாறு அந்நான்கு முனிவர்களுக்கும் கட்டளையிட்டனுப்பிய பின்பு பதினெண்புராணங்களென உலகஞ்சொல்லப்புகழ்பெற்றவைகளைத் தன்கிருபாவசத்தால் அடியேனுக்கும் அருளிச்செய்து வேதங்களையெல்லாம் நான்காகத்தொகுத்த வியாசபகவான் தன்னை வழிபடுமாணாக்கனாகிய அடியேனையழைத்து உலகின்கணுள்ளஇருபிறப்பாளரொழிந்த ஏனையோர்க்கும் மாதர்களுக்கும் உண்மைஞானம்விளங்க அறிவிக்கவேண்டுமென்று கட்டளையிட யானும் அவ்வாறே அறிவிக்கலானேன்.

துளவமாலையணிந்த திருமாலின் அமிசாவதாரமெனப்படும் வியாசபகவான் அருளினால் நான்குவேதங்களும், குற்றமற்ற புராணங்களும் கடல்சூழ்ந்தவுலகத்தில் எங்கும்பரவின. அப்புராணங்களோ பரமசிவனுக்குப் பத்தும், விஷ்ணுமூர்த்திக்கு நான்கும், பிரமனுக்கு இரண்டும், சூரியனுக்கு ஒன்றும், அக்கினிக்கு ஒன்றுமெனவுங்கூறப்பட்டன. அச்சிவபுராணங்களின் பெயர்கள் சைவம், பௌடிகம், மார்க்கண்டேயம், இலிங்கம், காந்தம், வராகம், வாமனம், மச்சியம், கூர்மம், பிரமாண்டம்என்பனவாம். விஷ்ணுபுராணங்களின் பெயர்கள் காருடம், நாரதீயம், விஷ்ணு, பாகவதமென்பனவாம்; பிரமபுராணங்களின்பெயர்கள் பிரமம், பதுமமென்பனவாம்; அக்கினி புராணம் ஆக்கினேயமாம் ; சூரியபுராணம் பிரமகைவர்த்தமாமெனக்கூறப்படும்; இப்படிப்பட்ட பதினெண்புராணங்களுள் சிவபுராணங்கள் பத்துள்வெற்றிவேலைக்கையிலேந்திய பிள்ளையார் திருவவதாரம், திருவிளையாடல் முதலியவற்றைவிளக்கும் காந்தபுராணத்தினைத்தொகை வகைவிரியாகச் சொல்வேனெனச் சொல்லத்தொடங்கினர்.

தாமரைமலரில் எழுந்தருளியிருந்த பிரமன்பெற்ற புத்திரருள் தக்கப்பிரசாபதிபெற்றுத் தாக்ஷாயணியெனச் சொல்லச்சிறந்து பின்பு ஒருகாரணத்தால் அப்பெயரோடும் தான் இந்நிலத்தில் இருப்பதெவ்வாறென்று இறைவி சிந்தைகொண்டு தன்னைமகளாகப்பெறத் தவஞ்செய்யும் மலையரையனுக்கு மகளாகப் பிறந்து வளர்ந்துகொண்டிருந்த காலத்தில் மாயையினிடமாகக் காசிபமுனிவனுக்குச் சூரபதுமன், சிங்கமுகன், தாருகனெனமூன்றுமைந்தர்தோன்றி, தம்மோடு பல அவுணப்படை சூழ்ந்துவரச் சிவபிரானை நோக்கித் தவசெய்து அரும்பெருந்திருவும்பெற்றார். அவருள் சூரபதுமன் மகேந்திர மென்னும் நகரத்தில் இனிதுவீற்றிருந்து கொடுங்கோல்செலுத்தி ஆயிரத்தெட்டண்டங்களையும் தன் ஆணைநடக்க ஆண்டுவந்தான்.

இவ்வாறிருக்க வெள்ளிமலையாகிய கயிலாயத்தில் சனகர், சதானந்தர், சனற்குமாரர், சனாதனரென்னும் நால்வருக்கும் கல்லாலினிழலில் எழுந்தருளியிருந்து சரியைகிரியாயோகமென்னும் மூவகைநிலைமையுங்கூறி ஞானநெறியை

அனுக்கிரகிக்கும்படி எண்ணிமோனமாக எவ்வுயிர்க்கும் இறைவன் சொல்லாமற் சொல்லியருளியகாலத்தில்,கொடிய சூரபதுமன்முதலானோர்மிகுதியுங் கொடுமைகளைச் செய்பவராய் தேவர்களிற்சிலரைப்பிடித்துச் சிறைவைத்து வருத்த, இந்திரன்முதலியதேவர்கள் இதனையறிந்து தாங்கள்கரந்துறைய, சங்காரகருத்தாவாக நின்றுயாவருக்கும் சுகப்பேறு தரும் இறைவன் மோனநெறி கைக்கொண்டு நின்றமையைப் பிரமதேவனுக்கு அறிவிக்க, அதுகண்டுபிரமன் மன்மதனைச்செலுத்த, அம்மன்மதன்இறைவன் நெற்றிக்கண்ணின் தீயால் வெந்துசாம்பராக அதனையுணர்ந்தபிரமன்முதலியோர் வருந்திஅர கர,சம்போ, மாதேவாஎன்றுஇறைவனைவணங்கத்தாம்மோனநிலையைவிட்டு,அவர்களுக்குத் திருவருள்செய்தபின்பு சத்தருஷிகளைவரத் திருவுளங்கொண்டு அவர்கள் வந்தவுடன்மலையரையனிடத்தே எல்லாவுலகையுமீன்றமுதல்வியினைத் திருமணஞ் செய்யப்பெண்பேசிவாருமெனக் கட்டளையிட்டு இமயமுதல்வியினது அன்பினையுமளவிட்டறிந்துசிகண்டபரமசிவன் தமதுபூதகணங்கள்புடைசூழ இமயமலையைநோக்கிச் செல்வானாயினன். இவ்வாறுசெல்லவே சகலதேவர்களும் ருஷிகளும், மற்றுமுள்ளபலரும் இமயமலையை வந்தணுகினர். அதனால் வடதிசைதாழ்ந்து தென்புவியுயரக்கண்டு தமிழாசிரியராகிய அகத்தியமுனிவரைக்கூவித்தென்றிசைக்கேகஆக்கினைசெய்து, கிரிராசகுமாரியைத்திருமணஞ் செய்துகொண்டு, பின்பு மன்மதனைமீட்டு மெழுப்பி அவனை யாவருக்கும் அருவமுடையவனாகவும், தன்மனைவியாகிய இரதிதேவிக்கு மாத்திரம் உருவமுடையவனாகவுந் தோன்றவும் அருள்செய்தான்.

மலையரையன் வருந்தித் தவஞ்செய்து பெற்றெடுத்த பராபரையுடன் கயிலாயவரைக்கு இறைவன் மீண்டு முன்போல் அமர்ந்தருளி உயிர்கட்கெல்லாம் யோகியாயிருந்து யோகங்களையுடையராக்கியவண்ணம்போகியாயிருந்து போகத்தையும் அளித்துக்கொண்டுதேவர்களெல்லாரும் வேண்டத் தன்பெருமையமைந்த நுதல்விழியிற்றோன்றக்குமாரசற்குருவை யளித்து,முடிவில்லாத திருவிளையாடல்களைச்செய்யும் அப்பெருமானையளித்தபொழுதே அப்பெருமானுக்குச் சேனைத்தலைவராக வெற்றியையுடைய வீரவாகுதேவர்கள்முதலிய நவவீரர்களையும், இலக்கத்தவரையும், இறைவிகாற்சிலம்பினின்றும் சிதறிய சிலம்பின் மணிகளாற் றோன்றச்செய்தான். பின்பு அருட்பெருங் கடலாகிய குமாரசற்குரு அற்புதமாகிய திருவிளையாடல்களைச்செய்து மண்ணுமறி கடலு மலையு முதலியவைகளைத் தத்தம் நிலைமைபெறச்செய்துத் தாம் ஒரு சிறுகுகுந்தாக வெளியேதோன்ற அவரை மாபாவிகளாகிய அரக்கர் செய்கையேயென்று எண்ணிப்போர்செய்ய அவர்களையெல்லாஞ் செயங்கொண்டு நின்றுமீண்டும் அவர்களைக்காக்கவேண்டுமென வியாழபகவான்வேண்ட, அதற்கு அவர் உயிர்பெற்றெழச்செய்துபெருஞ்செல்வம் அளித்ததுமன்றித் தமது திருவுருவக்காட்சியையும் கருணைசெய்து நாரதமுனிவன்யாகத்திலே பிறந்து உலகைநாசப்படுத்தநடந்த ஆட்டுக்கடாவைவாகனமாகக் கொண்டு உள்ளந்து இனிது வீற்றிருந்தருளினன். வேதத்துக்கு முதற்காரணமாகிய பிரணவத்தின் மாட்சிமைப்பட்டபொருளை முறைமையின்வினவ மணங்கமழ்கின்றதாம

ரைப்பூவிலிருக்கிற பிரமன்விடைகொடுக்க அறியாமல்மயங்கக்கண்டு அவனைக் குட்டிச்சிறையிலிட்டுத் தானே அவனது சிருஷ்டித்தொழிலை நடத்திப்பின்பு இறைவன்வந்துவேண்ட அவனுக்குக் குருமூர்த்தமாய் எழுந்தருளிஅதன்பொருளை உபதேசித்துத் தமிழாசிரியர் ஒருகாலத்தில் தம்மைவந்தடைய அவருக்குவேதாகமங்களின் முடிவாகிய பொருளை யுபதேசித்தும் இருந்தான்.

அக்காலத்தொருநாள் ஆறுமுகங்கொண்ட பிள்ளையாரைநோக்கி யாவராலும் வெல்லுதற்கரிய சூரபதுமன் முதலியோரைச்சென்று போர்செய்து வென்று பிரமன் முதலிய தேவர்கள்படுந்துயரத்தை மீட்கவென்று கட்டளையிட, அக்கட்டளையையேற்று குகப்பெருமான் இலக்கத்தவரும், வீரவாகுமுதலியநவவீரரும், இரண்டாயிரவெள்ளம் பூதவெள்ளமும் புடைசூழச்சென்று கிரௌஞ்சகிரியினைப்பொடிபடுத்துத்தாருகனைக்கொன்றுபிரமன்முதலிய தேவர்கள் வழிபாடுசெய்ய மேருமலையினையடைந்து அவர்கள்செய்த பூசனையையேற்றுத் தென்றிசைநோக்கிநடந்துதமது பிதாவெழுந்தருளியதலங்களினெல்லாஞ்சென்றுபூசித்து,சண்டேசராகியசேய்ஞலூர்ப்பிள்ளையார்மண்ணியாற்றங்கரையில் இறைவனைப்பூசித்த அப்பதியினையடைந்து ஆங்கு எப்பொருட்குமிறைபவனை, இமயமயிலிடத்தெந்தையை, ஏறூருமெம்பரனைப்பூசித்துப் போற்றிப்பாசுபதப்படையை அப்பெருமானளிக்கப்பெற்றுக்கூடற்குடதிசைக்குன்றாகியதிருப்பரங்குன்றினையடைந்து சரவணப்பாசடையின் மீனாகவிருந்து தமதின்னருள்பெற்றுச் சாபநீங்கித் தமதுகட்டளையால் அப்பதியில்வந்திருந்த பராசரமுனிவன் மக்களறுவரும்வராநாம்சூரனைத்தடிந்து இங்குவந்தருள்வோம், அப்போதுஉமக்கு வேதாகமங்களின் உச்சிப்பொருளைவழங்குவோமென்று விடைகொடுத்தனுப்பி, நாமனூரலைவாயென்னுஞ்செந்திற்பதியையெய்திச்சூரபதுமன்வரலாற்றையும், அவன்பெற்றதிருவையும், அவன்பெற்றவரமுதலியவற்றையும், இந்திரன் குறையையும் வியாழபகவானாலறிந்து தமக்கிளவலாகிய வீரவாகுதேவரையழைத்துஅறத்தினை நினைத்து அவ்வீரவாகுதேவரைச் சூரபதுமன்கருத்தினை யறிந்துவாவெனத் தூதனுப்பி,பின்புதாம் மகேந்திரநகரமடைந்து சூரபதுமன் கிளையைக்கொன்று வீழ்த்து, அவன் இளவலாகிய சிங்கமுகாசூரனுடைய ஈராயிரம்கைகளையும், அவன்பெற்றவரங்களையும், கற்றமாயையையும்,சிறப்பையும்,செல்வத்தையும் அழித்து, ஆயிரத்தெட்டண்டத்தையும் ஒருகுடைநிழலிலாண்டசூரனைத் தமது வெற்றிவேற்படையால் மார்பிரண்டுபடக்கீண்டுசிற்க, அச்சூரபதுமன்மயிலாகவும், சேவலாகவும் வடிவங்கொண்டுவர, அதனையறிந்துசேவலைக் கொடியாகவும்,மயிலைவாகனமாகவும் கொண்டருளிச் செந்திலில்வந்து சிறிதுநாள்தங்கித்திருப்பரங்குன்றமடைந்து, இந்திரன் தனது மகளாகிய தெய்வகுஞ்சரியை மணம்புரியவேண்டுமென்றுவேண்டஅதற்கிசைந்து திருமணங்கொண்டருளி, பராசரன்மதலையர் அறுவர்க்கும் வேதாகமங்களின்முடிவிலுரைக்கும் உச்சிப்பொருளை யுபதேசித்து, சிலநாள்வதிந்து, இந்திரனுலகஞ்சென்று பழையபடியே இந்திரனை விண்குடியேற்றி, தாம் தேவசேனாபதியென்னும் திருநாமம்புனைந்து தெய்வயானையோடு கயிலைவரையை

யடைந்து, இமயவல்லிபங்கனை இணையடிதொழுது கந்தவெற்பிற்சென்று பின்பு தொண்டைநாட்டிலுள்ள முப்போதும் செங்கழுநீர் மலர் முறையே பூக்குந் திருத்தணிகைமலையை யடைந்தருளினன்.

இவ்வாறு ஆறுதிருமுகத்தருட்பெருங்கடல் தணிகைமலையில் எழுந்தருளலும் அப்பெருந்தகையை நாரதமுனிவர்வந்துவணங்கி வள்ளிமலையில் மான் வயிற்றிற்பிறந்து வேடரால் வளர்க்கப்பட்ட வள்ளிநாச்சியார் அழகுமுதலியவற்றையெடுத்துச்சொல்லஅதுகேட்டு அவளைமணம்புரியத் திருவுளங்கொண்டு தாம்வள்ளிமலையையடைந்து, அங்குவள்ளிநாச்சியார்க்குப்பலதிருவுருவங்கொண்டு நடந்துகாட்டி, தாம்களவியற்பொருளின் உண்மையினைமெய்யென்று காட்டுவதற்கிணங்கக் களவியலுக்கு இலக்கியங்காட்டத்துணிந்து களிறுதரு புணர்ச்சியால் வள்ளிநாச்சியாரைக்கவர்ந்துசெல்லவே வேடர்கள் அம்மையைக் காணாதவராய்த் தேடிவந்து போர்செய்ய, அவர்களைத் தமது கொடியாகிய சேவலொலியால் திப்பிரமையோடுவிழச்செய்து இறைவிவேண்ட அவர்களை யெழுப்பி அவர்கள் வேண்டுகோளுக்கிசைந்து வள்ளிநாச்சியாரைத் திருமணங் கொண்டருளி, சிபூர்ணநிலயமாகிய திருத்தணிகை மலையினையடைந்து சில நாள் அங்குவள்ளிநாச்சியாரோடு மெழுந்தருளியிருந்து,அவ்விறைவியுடன்கந்தகிரியைச்சேர்ந்து, தன்னைப்பிரிந்திருந்ததெய்வகுஞ்சரியைப் பிரிவுநீக்கிக் கிரியாசத்தியாகிய அத்தெய்வகுஞ்சரியும், இச்சாசத்தியாகிய வள்ளிநாச்சியாரும் இருபுறத்தே இனிதிருக்க, ஞானசத்தியாகிய வேலாயுதத்தைக்கரத்திலேந்திக் கருணைநெடுங்கடலாகி எழுந்தருளியிருந்தனனென்று சூதமுனிவர் சொல்லக் கேட்டு, இதனைப்போலவேறொருகதையையுங்கேளோம், எங்களுக்கோ அக்கதையினைச் சுருக்கமாகச்சொன்னீர், நாங்களோ அதன்விரிவைக்கேட்கமிகவும் ஆசைகொண்டிருக்கின்றோம் என்று அம்முனிவர்களெல்லாம்சொல்ல, சூதமுனிவனே? அவர்களுடையபேரவாவையெண்ணி அக்கதையினைவிரிவாகவே சொல்லுகின்றார்.

பாயிரப்படலம்

முற்றிற்று.

உ

வேலுமயிலுந்துணை.

# உற்பத்திகாண்டம்.

## திருக்கயிலாயப்படலம்.

திருக்கயிலாயமலை பஞ்சபாசத் தடைகளைநீக்கித் தன்பால்தோன்றும் நல்லபேரருளையே இறைவன் தருந்தன்மைபோலத் தன்னையடைந்தவர் ஒளியைமாற்றிச் சிறந்த தன்மெய்மையானபிரகாசம்வீசுவதுபோலும், கங்கையை முடித்த இறைவன் ஏறிவரும் வெள்விடையும், அப்பெருமான் திருவெண்ணீற்றுக்கோலமும், அவ்விறைவனையுணரும் மெய்யன்பர்சிந்தையும்போலும், மோனநெறிபெற்றவருடைய ஞானப்பிழம்பினையொத்த தன்மையையுடையதாகி உடம்பொடுகூடிய உயிர்வகைகளின் குற்றம்போக்கித் தானெங்கும்பரந்ததுபோலும் தோன்றும். பின்னும் வாசனையுள்ள கொன்றையும், வில்வமும், உடையதாய்த்தேன்சொரியும் மலர்ச்சோலைசூழ்ந்தசிகரத்தினிடத்து ஆகாய கங்கையும்வருதலினால் குற்றமற்ற ஞானநாயகனாகிய பரமசிவன்போலவும், துளவமாலையணிந்த திருமால் யோகநித்திரைசெய்கின்ற திருப்பாற்கடலானது கண்ணுதற்பிரானாகிய பரமசிவனுக்கும் ஓரழகியபீடமா யமைந்ததென்று சொல்லுதல்போலவும், இனிய அமிர்தகலைகள்பொருந்திப் பிரகாசங்கொண்டு களங்கநீங்கிய தோற்றமாய் ஆயிரங்கோடிசந்திரர் உதயமானாற்போலவும் விளங்காநிற்கும்.

அது நெற்றியின்மேல்விளங்கும் கண்ணும் அழகிய புயங்களனைத்தும் உடையாராய் எமதிறைவனருளால் திருவேத்திரப்படை கையிலேந்திக் கொண்டு அன்பால் நந்திபெருமான் காக்குந்தன்மையுடையதாய், இந்திரன் முதலிய இறைவரும், மற்றைத்தேவரும், அளவில்லாதமாதவரும், குற்றமற்ற காட்சியினையுடையாராய்த் தொக்கபூதகணங்களும் என்றும்விரும்பிவணங்கி நெருங்குந் தன்மையுடையதாகிவிளங்கும், அரம்பையராடலும், வித்தியாதரர், கின்னரர் ஆகிய தேவசாதியார் பாடலும், இந்திரன்முதலிய தேவர்கள் வாழ்த்தொலியும், தெய்வவாத்தியங்களும் என்று நீங்காமலிருக்கும். அம்மலையோ கீழ்நிலைபெற்றிருக்கின்ற கூர்மாண்ட உருத்திரர் புவனமுதலிய புவனங்களெல்லாம் நீங்கிக்கீழ்சென்றும், மேலேயுள்ளசுவர்க்கமுதலிய எல்லாப் பதங்களையுங்கடந்து மேற்சென்றும், மாட்சிமைப்பட்ட அண்டத்தினடியுமுடியு நெருங்கிக்காணத் தாணுவாகிக் கற்பாந்தகாலத்தி னிற்குந்தன்மைபோலவும், தன்பக்கத்திலுள்ள மேருமுதலிய பருவதங்களழிந்தாலும், உலகங்களெல்லாம் அழிந்தாலும், பரந்து நெருங்கிநிற்கும் அண்டவடுக்குகள் குலைந்தாலும், கொன்றைமலர்முடித்த குழகனேபோலத்தனக்கொருகேடில்லாமலிருப்பதும்; நன்மையமைந்த சந்திரனும், சூரியனுமாகிய இருசுடரும், நாககுலத்தே

தோன்றி உடற்குறைபெற்ற இராகு கேதுக்களாகிய சாயாகிரகங்களும், மற்றையகிரகங்களும், நக்ஷத்திரராசிகளும், தேவரும், பிறரும் வலம்வரும்படியிருப்பதும்; மேருமுதலிய மலைகளே மலையரணாகவும், சமுத்திரஞ்சூழ்ந்திருப்பதே நீரரணாகவுமிருக்கவிளங்கியிருக்கும். அதுவல்லாமல் உலகமுழுதுமுண்டும் ஆதிவராகமாய்த்தாங்கியும் ஒருகாலத்தில் தன்னடியினுன்றால் அளந்து அகப்படுத்தியும், தோண்டியும், உலகத்தைதண்ணருள்செய்துநின்ற திருமால் கற்பாந்தகாலத்தில் இறைவன் வடிவமேயெனக் காணுதற்கரிதாகியுந் தோன்றும்.

அப்படிப்பட்ட கயிலாயமலையின்மத்தியில் பொற்பிரகாசம் பொருந்திய மலையொன்று சூற்றமகன்றுவிளங்குவதுபோல மிக்ககாவலையடைந்துமாணிக்கராசிகளின் ஒளிக்கற்றைசுற்ற, பொன்னெடுங்கோயிலொன்று பொலிவாய் விளங்கும். அதுவோ முத்தினாலும், வயிரக்கல்லினாலும், பதுமராகத்தாலும், முழுநீலமணியினாலும், மற்றையமணிகளாலும், சாம்பூனதமென்னும் பொன்னாலும் வேலைகள்செய்துள்ளதாய் அருளினாலேவிளங்கும் சிகரங்கள் முதலியன அணிகளுக்கணியாய்விளங்கும் அவ்வாலயத்தி னிடங்களெல்லாம் என்றுமுடிவில்லாமல் விளங்கியிருக்கும். கயிலாயமலையில் பொன்னாலாகிய நகரத்தில் கோள்களும் நாள்களும் நெருங்கியதன்மைபோலப் பாடமமைந்த மாணிக்கராசிகள்சூழ மண்டபமொன்று அழகினொடுபொருந்தியிருக்கும். பிரகாசமமைந்த அம்மணிமண்டபத்தின்மேலாகியசிங்காசனத்தில் கிரிராசகுமாரியாகிய இறைவியோடுவேதநாயகனாகிய இறைவன் எழுந்தருளியிருக்க, பெருந்தவத்தினையுடையாரும், தேடுகின்றசிறப்பினையுடைத்தாகிப் புகழைநாடுகின்ற தும்புருநாரதர் வித்தியாதரர்கள் முதலியோர் தம்பாணியிற்பாடவும், இறைவனதுசடாமகுடத்திலிருக்கும் கங்கையைப் பிரமன், இந்திரன்முதலிய தேவர்கள் நகரத்திலிருக்கும் நதிகள் தாழ்ந்ததுபோலஅன்பால்வழிபடும் அன்பர்கள் கவரிவீசவும், சந்திரசடாடவியைத்தேடிப் பூமியினின்றும் எழுந்த நாகனைப்போல இறைவனது கருணைததும்பும் முகத்தினருகேயெங்கும் ஆலவட்டப்பணிசெய்வாரும்,இறைவனருளெய்தி அவன்பாததாமரைகளைச்சூடி அவனது சாரூபபதம்பெற்றுளாரும் நெருங்கியடைந்தனர்.

திருக்கயிலாயப்படலம்
முற்றிற்று.

---

## பார்ப்பதிப்படலம்.

இப்படிப்பட்டசமயத்தில் இறைவனைப்பூவின் மணம்போலும், வண்ணம்போலும், அவனைப்பிரியாது இருக்கும் இறைவிதன்கருத்தி லொன்றெண்ணி வருந்தியெழுந்து தனக்கு ஒப்பாருமிக்காருமில்லாதஇறைவனைவணங்கிஅவன் சந்நிதானத்தில் கற்பனையனைத்துங்கடந்த காரணனே! நின்னைப்பரம்பொருளெனமதியாததக்கனால்வளர்க்கப்பட்டஉடலோடும் அவன்பெற்றமகளென்று சொல்லப்படும் தாக்ஷாயணியென்னும் பெயரோடும் இருக்கின்றேன். இனி

அப்பெயரையும் உடலையும்பரிகரிக்கவேண்டும் என்று விண்ணப்பிக்க, எல்லா முடைய தம்பிரான், பத்திமை யெம்பாற்கொண்ட நெஞ்சினையுடைய அருட் சத்தியே! நின்னையொப்பார் இவ்வுலகிற் பிறரில்லை, இவ்வாறு நீ எண்ணங் கொண்டுமுயன்றது உன்புத்திரராகிய உயிர்கள் வீடுபேறு அடையும்பொருட் டென்றே துணி. நீகொண்டகருத்துமுற்றுப்பெறவேண்டின்நான்சொல்வதைக் கேள். மகாமேருமலையின் கிளையென்றெண்ணப்படும் மலையரசன் தவஞ் செய்கின்றான். அவன்செய்யும் தவம்யாதெனின் பெண்ணருங்கலமே! எவ் வுயிரையும் ஈன்றுங் கன்னிகையாயிருக்கின்ற உன்னை மகளாகத் தான் பெற்று வளர்த்து எமக்கு மாதுலனாகவிருக்க எண்ணங்கொண் டிருக்கின்றான். ஆகையால், நீ குழந்தையாகி அவனிடத் தைந்தாண்டுவரையிலும் வளர்ந்து பின்பு பெருந்தவஞ்செய்துகொண்டிரு, ; அவ்வாறு தவஞ்செய்கையில்நாம் முனிவர், தேவர், பூதகணங்களாகிய கூட்டத்துடன் எழுந்தருளி உன்னை மணஞ்செய்து இக்கயிலைமலைக்கு வருவோமென்று கடல்விடமுண்ட கருணை யங்கடல்கட்டளையிட அக்கட்டளையையேற்றுக்கயிலையைநீங்கி இமயமலையை யடைந்தனள்.

அம்மலையோ மதச்சுவட்டினையுடைய யானைபோலும் சோனைமழை பொழிவதனால் வெள்ளிமலைபோலவும், மேகங்களடர்ந்து தோன்றுவதனால் கடலிற்றோன்றிய காளவிடத்தினையும், அக்காளவிடமுண்ட கண்டத்தினையு முடைய இறைவனைப்போலவும், அம்மேகங்கள் மின்னலோடுகூடி விளங்கு வதனால் திருமால் திருமகளோடும் யோகநித்திரைசெய்கின்ற சர்ப்பசயனம் போலவும், அவை ஆரவாரத்துடன் எழுகின்றதோற்றமுடையதாய் மிக்கபனி யுடன்கூடி விளங்குவதனால் வண்டினம்பண்பாடிக்கொண்டு சுற்றிக்கொண் டிருக்க அரும்பவிழாத வெண்டாமரைபோலவும், பூமிதேவி நிதிக்குவிப்பைத் தன்னுடையில் முடிந்துகொண்டிருப்பதுபோலவும் விளங்கிக்கொண்டிருக்கும். மேலும் மேல்கடலும் கீழ்க்கடலும் ஒன்றுகூடாதபடி ஒருபெரியவராகம் நின்றுதடைசெய்வதுபோல் அம்மலை அண்டமுகட்டையுங்கடந்திருப்பதும் அன்றி, தேவர்கள் தயிர்க்கடல்கடையத்தோன்றிய வெண்ணெய்போலவும், பாற்கடல் கடையத்தோன்றியஅமுதம்போலவும் விளங்கும்; அம்மலையில் ஓர் தடாகமுண்டு. அத்தடாகத்தில்மலையரசன் ஒப்பாருமிக்காருமில்லாத இறை வியைமகளாகப்பெற்றுவளர்த்து இறைவனை மருகனாகப்பெறத்தவஞ்செய்து கொண்டுவந்தான். இவ்வாறுதவஞ்செய்துவரும் மலையரசன்காணும்படி அப் பொய்கையினிடத்து மலர்ந்திருக்கும் ஒரு தாமரைமலரின்மேல் ஒருபச்சிளங் குழந்தையாய் எல்லாவுயிரையுமீன்றபராபரைஉருவங்கொண்டுஇருக்கக்கண்டு என்பொருட்டன்றோ!சோமசூரியாக்கினியென்னும்மூன்றுகண்களையுமுடைய இறைவனைப்பிரிந்தாள் என்றுதுணிந்து தன்னோன்புபலித்ததாக எண்ணி, இவையனைத்தும் எல்லாமுடையான் பேருளேயென்று மகிழ்ச்சியடைந்து, கண்களில் இன்பக்கண்ணீர் மணற்கேணியின் ஊற்றுப்பெருக்கேபோல்வார, மெய்ம்மயிர்பொடிப்ப அடியேனுய்ந்தேன், உய்ந்தேனென்று குடந்தம்பட்டுக்

கூத்துமாடி, அத்தாமரைமலர்மேற்கிடந்த இறைவியைத்தொழுது இருகைக ளாலு மேந்திக்கொண்டு தலைமேல்தாங்கிவிரைந்துசென்று தன்மனைவியாகிய மேனையிடத்தேகொடுத்து இறைவிவரலாற்றையுங்கூறினன். அம்மேனையிரு கையாலும்வாங்கி எடுத்துமார்போடணைத்துக்கொள்ளவே, இருகொங்கையும் விம்மிப் பால்சுரக்கஉடல்புளகரும்ப உள்ளங்கவலையொழிய 'முன்னைப்பிறவி யிற்செய்தமுதுதவம், பின்னைப்பிறவியிற் பெற்றோரறியலாம்' என்றபடிபழவினை யொழிந்துநின்றாள்.

இவ்வாறு மேனை தன்னிரண்டுகைகளாலும் பரிந்தேற்ற மகளை நாளொரு வண்ணமும் பொழுதொருமேனியுமாகவளர்த்து ஐந்தாண்டெல்லையானபின்பு, பராபரை பிரமன்முதலியதேவர்கட்கும் பரமபிதாவாகிய இறைவனைநினைத்து தவஞ்செய்யவேண்டி தன்பிதாவாகிய மலையரசனுக்கு இம்மலைச்சாரலில் இறைவன்என்னைத் திருமணஞ்செய்து கொள்ளத்தவஞ்செய்யக் கருதினேன், என்னைத்தோழிமாரோடும் விடுக்கவேண்டுமென்றுசொல்லிவேண்ட, அம்மலை யரசனும் அம்மா! பால்மாறுக்குழந்தைப் பருவமுடையவளா யிருக்கின் றனை! இன்னும் ஐந்தாண்டே முற்றுப்பெறவில்லை; இக்கருத்தொழியென்று சொல்ல,அதற்கெப்பொருளையுமீன்ற இறைவிஎவ்வுயிரையுங்காப்பவன் ஈசனல் லதுவேறியாவர்! பிறரால்தம்மைத்தாம் காப்பதற்குமாமோ! இங்கேபேசிய தன்மையும் அவனையல்லதுமுற்றுப்பெறுமோ! எனதுவேண்டுகோளைத் தடுக்க வேண்டாமென்று சொன்னாள். அம்மலையரசனே அப்படியே செய்கின்றே னென்று அம்மலையினோர்புறத்தில் தவச்சாலையொன்றியற்றிக்கொடுத்து தன் சுற்றத்தவரில் தவத்தால்வந்த தன்மையையுடைய கன்னியர்பலரையும்வரு வித்துக் கௌரியோடு துணையாகவிடுக்க விடைபெற்று, தன்தாயாகியமேனை யிடத்தும் விடைபெற்றுப் பலகன்னியர்புடைசூழ்ந்துவரப் பரம்பொருளாகிய இறைவனைச்சிந்தித்துப் போற்றித் தவஞ்செய்வாளாயினள். இவ்வாறு தவஞ் செய்கையில் மேனையும் மலையரசனும் அம்மையைப்போற்றிச்செல்ல, இறை வியைப்பிரிந்த கண்ணுதற்பெருமானும் செய்ததன்மையைக் கூறுகின்றேன்.

பார்ப்பதிப்படலம் - முற்றிற்று.

---

## மேருப்படலம்.

சொல்லுதற்கரிய சிறப்பினையுடைய இறைவி மலையரசன்மகளாகித்தவஞ் செய்யாநிற்கையில், காசிபமுனிவனுக்குமாயையிடந்தோன்றியசூரபதுமன்பல அவுணவெள்ளம்புடைசூழ ஆயிரத்தெட்டண்டங்களையும்தன்னாணைசெலுத்தி வந்தான். அவன் அரசாண்டுவரும்போது வேதங்களால் துணிந்துகூறப்படும் முழுமுதற்பொருளாகிய பரமசிவனைநோக்கி சனகர் முதலியமுற்றத்துறந்த முனிவர்நால்வரும் பலகாலும் மெய்யுணர்ச்சிபெறத் தவஞ்செய்து இறைவ னருளால் கயிலைமலையையடைந்து முழுதொருங்குணர்ந்த நந்திபெருமான் காக்கின்ற முதல்வாயிலைச் சென்றடைந்தனர். அவர்கள் வரவைக்கண்ட

நந்திபெருமான் இறைவன் திருமுன்னர்க்கொண்டுசென்று விடுப்ப மாலும் அயனுங்காணுத மலரடிப்பெருந்தகையைக்கண்டு மொழிதடுமாற, உடல்புள கரும்ப, விழிகளில் ஆனந்தபாஷ்பம்பொழிய, அழலிடைப்பட்ட மெழுகது போல நெஞ்சநெக்குருக, மறைகளு மமரருமறியமாட்டாவண்ணம் வணங்கித் துதித்து, பெருங்கடலில் யாமத்தில்வீசும் சுழற்காற்றி லகப்பட்டாற்போல் பொருட்பொலிவினையுடைய வேதமாகிய கடல்புடைக்குந்தொறும் அலேக்க இந்நாள் வருந்தினின்றேம்; அருட்பெருங்கடலே! உணர்ச்சிசிறிதும் பெற்றி லோம்; எங்கள்மதிமருட்சி நீங்கும்வண்ணம் அருளவேண்டுமென்றிரந்தனர்.

அதற்குக்கருணைவள்ளலும் நீங்கள் மெய்யுணர்ச்சி தலைசிறக்க மறைமுத லியகலைகளின் துணிபைவிளக்குகின்றேமென்றுகூறி நந்திபெருமானைநோக்கி, மலரம்புகோத்துமயக்குமன்மதனையன்றிதேவர்கள்எவர்வரினும்விடவேண்டா மென்று கட்டளையிட, அவரும்அவ்வாறேசெய்கின்றேனென்றுவிடைபெற்றுச் சென்றபின்பு வேதாகமங்களில்துணிந்துகூறப்பட்ட சரியாபாதம், கிரியா பாதம், யோகபாதம் என்னும் மூன்றுபாதங்களையும் நன்குவிளக்கிக்கொண்டு வர, அவர்களும் இறைவனே எங்களுக்குமனமொடுங்கிநிற்குந்தன்மைவாய்ந்த ஞானபாதத்தை போதிக்கவேண்டுமென வேண்டினர். அதுகேட்டு நகைத்து எதிர்மொழியொன்றும்சொல்லாமல் அதுசொல்லுந் தன்மையதேயன்று, இவ் வாறுசும்மா இருப்பதேயாகும் என்றுயார்க்குமேலாம் பரம்பொருளாகிய பரம சிவன் யானைக்கோடும்,யாமையோடும், சிரமாலிகையுமணிந்தமார்பினிடத்தே சின்முத்திரையாகப்பிடித்த கையையமைத்து ஒருகணப்போது யோகஞ்செய் பவர்போ லெழுந்தருளியிருந்தான்.

பஞ்சகிருத்தியஞ்செய்யும் ஆனந்தத்தாண்டவராசன் இவ்வாறு எழுந் தருளியதனல் சனகர்முதலிய அருந்தவர் நால்வரும் ஞானபாதமானது வேதாகமங்கள் எடுத்துக்கூறும் அளவைகடந்ததென்று இறைவனருளே கண் ணுகக்காட்டக்கண்டுணர்ந்து தம்புந்தியினொடுக்கம்பெற்று, இறைவனதுதிரு மேனியைநோக்கியவண்ணம் சித்திரப்பாவையினத்தகவு அசைவற்றிருந்தனர். பரமசிவன் அவ்வாலநிழலின்கண் அருமறைதுணிந்தமெய்யுணர்ச்சியையறிவிக்க எழுந்தருளியிருந்த அவ்வொருகணப்போதே பிரமன்முதலிய தேவர்கட் கெல்லாம்அளவிறந்தயுகங்களாயின. அதுஎவ்வாறுஇருந்ததெனின் காஞ்சியில் கம்பாநதியையேவஇறைவனை இறுகத்தழுவிக்கொண்ட இமயவல்லி அவன் விழிபுதைத்தகாலம்போல விளங்கிக்கிடந்தது. எப்பொருட்குங்காரணராகிய இமயவில்வாங்கியவிர்ஞ்சடைவாணன் அன்றாலநிழலில் அருந்தவருக்கு ஞான பாதப்பொருளையறிவித்தலினல் போகபூமியில்வசிக்கும் தேவர்கள் அனைவரும் முற்றத்துறந்தமுனிவர்போலஅரம்பைமாதர்போகமேவிழையாமல்இருந்தனர். மண்ணுலகவாழ்க்கையுடையாரும் காமப்பற்றெழிந்துகிடந்தனர். இதனல் "அவனசைந்திடினணுவசைந்திடும்,அவனசையாவிடினணுவசைந்திடா,சிவன் சத்தியோடுநிற்செகம்விரிந்திடும், சிவன்சத்திநீங்கிடிற் செகமதில்லையே." என் றதுவிளக்கிக்கிடந்தது. இதுகிடக்க; சூரபதுமன் தேவர்களுக்கே இடுக்கண் செய்பத்துணிந்து வருத்துதலினல் இந்திரனேதேவர்களோடும் சுவர்க்கலோக

நீங்கி இந்திராணியோடும் பூமியிற்சேர்ந்து பின்பு கயிலாயமலையையடைந்து, இறைவனைக்காணும்பரிசிலனாக மேருமலையையணைந்து, சூரபதுமன் மூத்த குமாரனாகிய பானுகோபன்என்மகனாகிய சயந்தனையும்சிறைகொண்டுபோயினனேயென்றுபொருமிவிம்மி அம்மலையினேர்பால் ஏகாயனாகிய பரமசிவனையெண்ணித்தவஞ்செய்ய அதுகண்டு, அப்பரம்பரன் விடையேறிவந்து ஒன்றுமறியான்போல எதுபெறத் தவஞ்செய்கின்றனையென்றுகேட்க, அவனும் சூரபதுமனேயலால் அவன்மகனாகிய பானுகோபன் என்மகனைச்சிறைகொண்டு போனதுமன்றிப் பொன்னுலகையும் அழித்துப் போயினான் ; அவனையழித்து முன்போல் பெருஞ்சுகம் பெற்றிருக்கவேண்டுமென் றிரந்துவேண்டினான்.

பரமசிவனேஇந்திரனைநோக்கிக்கவலைகொள்ளவேண்டாம்,மெய்யுணர்ச்சியில்லாத தக்கன்சொற்கொண்டு எம்மைப்பிழைத்ததனால் இத்தீமைநேர்ந்தது. எமக்கு ஒருகுமரன் தோன்றுவன், அவன் சூரபதுமனைவெற்றிகொண்டு உன்னையும் தேவரையும் விண்குடியேறச்செய்வனென்று சொல்லிமறைந்தனர். கருணைக்கடலாகிய பரமசிவன்மறைந்தபின்பு, இந்திரன் ஆலநிழலின்கீழ் அருமறைதுணிந்தமெய்யுணர்ச்சியையுதவஇறைவனேயோகஞ்செய்வார்போலவிளங்குகின்றனன். உமையன்னையோ மலயரசன்மகளாகத் தவஞ்செய்வாளாயினள். நமது குமரன் சூரபதுமனைவெற்றிகொண்டுவிண்குடியேற்றுவனென்றது எவ்வாறுமுடியுமோ என்பதனையெண்ணி இறைவன்சொன்னபோது ஆனந்தக்கடலில் அமிழ்ந்து கரைகாணாதவனாயிருக்கினும் பின்பு கவலைகொண்டு மனோவதி நகரமடைந்து வியாழபகவான்மனைவியிடத்தே தன்மனைவியாகிய புலோமிசையைவிடுத்து தேவர்களோடும் பிரமன்வீற்றிருக்கும் இடத்தே சென்றுகண்டு பலவாறுபுகழ்ந்து சூரபதுமன் வருத்துவதும், இறைவன் நால்வருக்கும்ஞானபாதப்பொருளை விளக்கக் கல்லானிழலில் வீற்றிருப்பதும், சொல்லிப்பின்பு தவஞ்செய்ததும் பரமசிவன்வந்து தனக்குறுதிசொன்னதும் செப்பியாங்கள் பிழைக்கும்வகை யெவ்வாறென்றுவேண்டி வணங்கினின்றான்.

தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமன்கேட்டு இந்திரன்முதலிய தேவர்களைநோக்கிச்சொல்லுகின்றான். உலகின்கண் இருமுதுகுரவரும் பிள்ளைகளுக்கு நோய்வந்தடுத்தகாலத்தில் பிறரைக்கொண்டு துயர்செய்தும்தீர்ப்பர். அது மறக்கருணையோ, அல்லது அறக்கருணையோ அதனைநீங்களே தெரிந்து கொள்ளுங்கோள். நம்பால் தீங்குகளனைத்தும் நீங்குகின்ற காலம்வந்தடுத்தமையால் உனக்குக்காட்சிதந்தருளிநமதுகுமாரனால்சூரபதுமனைமுடிப்பித்து விண்குடியேற்றுவேமென்றருளிச்செய்து மறைந்தனன். இனி நமக்கிறைவனே கருணைசெய்வனென்பதை யெண்ணித்துணி. அதுபற்றி "முயற்சிதிருவினை யாக்குமுயற்றின்மை -யின்மைபுகுத்திவிடும்." என்றும், 'தெய்வத்தாலாகாதெனினுமுயற்சி, மெய்வருந்தக்கூலிதரும்" என்றும் தேவர்சொல்லியபடி சிறிதுநாமும் முயலவேண்டியது இருக்கின்றது. ஆதலால் திருமாலையடைந்து இவற்றையறிவித்துச் செய்யவேண்டிய முயற்சியைவிரைந்து செய்வோமென்று தமது தாமரைமலர்ப்பீடத்தைவிட்டிழிந்துநடக்க, அதுவேதக்க

காரியமென்றுசொல்லித் தேவர்கள்பின்தொடர்ந்துசெல்ல வைகுந்தநகரை யடைந்து,அக்கடவுள்எழுந்தருளியிருக்கும்திருமாளிகையையணுகி,வாயிலோனால் தன்வரவையறிவித்து அவர்கட்டளையிற்சென்று அடிதொழுதுவணங்கி நிற்பதையறிந்த மாயப்பிரான் பிரமன்முதலியதேவர்களை ஆசனத்திலிருத்தி விதிக்கும்தொழில் குறைவின்றிநடக்கின்றதோ! என்றுசொல்லப் பிரமனுஞ் சொல்லலாயினன்.

இரணியனறைந்த தூணின்கண் அவன்அஞ்சச்சிங்கப்படிவங்கொண்டருளியஇறைவனே! சனகன்முதலியநான்குபேரும் எனதுமானசிகபுத்திரராகும். அவர்களைப்பார்த்து என்அருந்தவத்தில்வந்த பெருந்தவரே! எனதுபடைப்புத்தொழில்செய்ய வேற்றுக்கொள்ளுங்கோள் என்றுசொல்ல அதனையுறுதிப்பொருளென்று நினையாதவராய் புன்னகைசெய்து பாசமாகிய வலிய சிறையிலகப்பட்டுப்படைப்புத்தொழிலென்றுசொல்லப்படும்பெரியவிலங்கைப் பூணமாட்டோம். எப்பொருட்கும் இறைவனாகிய அனாதிமல முத்தனது திருவடியேதஞ்சமென்றடைந்து ஈறிலின்பம்பெறுவோமென்று பெருந்தவஞ் செய்தனர்.

அப்படி பெருந்தவஞ்செய்வதறிந்து இறைவன் விடைமேலிவர்ந்து தெரிசனந்தந்தருளிஉமக்குயாதுவேண்டுமென்றுகேட்டனன். மைந்தர்களோஎமது பெருமானே! வேதாகமங்களின் உச்சிப்பொருளை விளக்கவேண்டுமென்று இரந்துகேட்டனர். பரம்பொருளாகிய இறைவனோ அவர்களையழைத்துக் கொண்டு அக்கயிலாயமலையின் தென்சிகரத்திலிருக்கும்கல்லானிழலிலமர்ந்து வேதாகமங்களால் பிரதிபாதிக்கப்படும் பொருளையெல்லாநன்றாகவிளக்கினன். இறைவனிவ்வாறு அருளிச்செய்துசெல்ல, அச்சனகாதிகள் நால்வரும் அவற்றின் உண்மையினைத்தேர்ந்தும்அதன்பொருள் உள்ளத்தமைதல்அரிதாதலால் பின்னும் இறைவனைநோக்கித் தவஞ்செய்யும் உள்ளமுடையவராய் அவனருளால் கயிலாயமலையினைமீட்டு மடைந்துநின்றனர். அவருக்கு இருவினையொப்பு, மலபரிபாகம், வந்து சத்திநிபாதம் எய்தக்கண்டு இவர்களுக்குசிவாகமங்களிற்கூறியபடிசரியாபாதம், கிரியாபாதம், யோகபாதம் என்னும் மூன்று பாதங்களையும் நன்றாகவிளக்கிப் பின்பு ஞானபாதத்தை யருளிச்செய்யுந்தன்மையாய் மோனமாய்நிற்கும்முதற்குறியைக் காட்டிநின்றனன். அச்சமயத்தில் அவர்கள்அவனருளேகண்ணாகக்கண்டுஅறிந்துஆணவம்,மாயை,காமியம் ஆகிய மூவகைமலமோசனமாகவே போகியாயிருந்துயிர்க்குப் போகத்தையுதவுமொருவன் அவர்கள்பொருட்டு யோகியாயிருந்து கல்லானிழலிலமர்ந்தருளிஞானபாதப்பொருளையுணர்த்திநின்றமையால்பலயுகமாயின. எப்பொருட்குமுதல்வியாகிய இறைவியைநீங்கி யோகியாயெழுந்தருளியிருந்து தானசைவறவிருப்பதால்அவனசைப்பித்தாலல்லது அசையாதஉயிர்த்தொகைகளோ ஆண்பெண் முயக்கமின்றிக் கிடந்தன. இனியானென்னவென்றுசொல்வேன்காமப்பகுதியின்றிஉலகமிருந்த தன்மையினாலே என்படைப்புத்தொழில் நடவாமல்நின்றுவிட்டது. இதுநிற்க; இறைவனருள்பெற்று ஆயிரத்தெட்டண்டங்களையும்

ஆண்டுவரும் சூரபதுமன் என்னை யேவல்கொண்டு வருத்தியும் வருகின்றான். என்னையேயன்றி இத்தேவர்களையும், இந்திரன்முதலிய இறைவரையுங்குற்றே வல்கொண்டு அவர்கள்வருந்தித் துயருறும்படிசெய்கின்றான். சந்திரனை இராகு பிடித்துவருத்துவதுபோல இவ்விந்திரன்மகனாகியசயந்தனையும்சிலதேவர்களை யும்அச்சூரபதுமன்மகன்பிடித்துச் சிறைகொண்டதுமன்றி விண்ணுலகத்தின் பொற்கோலத்தையுங் கரிக்கோலமாக்கினான். இவ்வாறு நடப்பதையறிந்தும் ஒன்றுமறியாதவன்போல அவரவர் உள்ளத்தே நினைத்தபடியடைகின்ற பரம சிவன்சும்மாஇருக்கின்றனன், இனிச்செய்யத்தக்கது யாதென்றுவேண்டினான்.

அதற்குத் தத்துவங்கள் இருபத்தைந்தெனவும், இருபத்துநான்காவது குணதத்துவத்தின்மேல் இருபத்தைந்தாந் தத்துவம் வாசுதேவனெனவும் பாஞ்சராத்திரிகளால் பிரதிபாதிக்கப்படும் திருமகள்நாயகன்பிரமனைநோக்கிச் சொல்வானாயினன். எல்லாவுயிர்க்குயிராயும்அருவமாயும் உருவமாயும்மூவகை யியற்கையினையுடைய மூலகாரணமாயும்நின்றமஹாதேவனேயோகஞ்செய்வா ரைப்போல எழுந்தருளியிருப்பானெனின் யாரேஇவ்வுலகினிடத்துகாமப்புணர் ப்பினால் வருந்துகின்றவராவர். ஊழ்வினையின்வழியால் முன்னேதக்கன்பெரிய யாகமொன்றுசெய்து தாழ்வினை யடைந்ததன்றி, அவனோடு சம்பந்தப்பட் டிருந்த பாவவிசேடத்தினாலே வருத்தப்பட்டோம், அதுகழியுங்காலம் நேரிட் டதனால் இறைவன் தன்கருத்திலெண்ணிச் சூரபதுமன்சேர்ந்ததும், அவனோடு சூழ்ந்த அவுணரும்பெருவலிகொண்டு உலகமுழுதும் வருத்தித்திரிந்தமையும், பரமசிவன் சனகாதிகளுக்கு யோகியாயிருந்து யோகநெறிகாட்டி யுயிர்களுக் கின்னலாகியமுறைமையைச்செய்தமையும் ஆராயும்போது பேரருளேயல்லது வேறொன்றுமில்லை. முனிவர்களுக்கு எழுந்தருளி மோனநிலைகாட்டுமிறைவன் அம்மோனநெறியினின்றும்நீங்கிஇமாசலபுத்திரியாகியஇறைவியைத்திருமணஞ் செய்துகொண்டு அவ்விறைவியினிடமாக ஒரு குமரனைப்பெற்றாலல்லது சூர பதுமன் முதலியோர் நாசமாகார்; உலகம் அப்போதுதான் உய்யும். இதுவே துணிவான பொருளென்று பின்னுஞ்சொல்லுகின்றான். அவ்வகைமுடியும் விதமோ எவ்வகைப்பட்டதவஞ்செய்வாரையும் தன் மலரம்பால் மயக்குகின்ற மன்மதனையனுப்பினால் சனகாதிகட்கருளிச்செய்ய வெழுந்தருளிய மோன நெறியானது நீங்கி அருட்சத்தியாகிய இமயவல்லியாரைத் திருமணஞ்செய் தருளிக் குமாரக்கடவுளை எம்பெருமா னளிப்பனென்றுசொல்லவும், பிரம தேவனும் உள்ளத்திசைவுகொண்டு மாயப்பிரானது பொன்போலுந் திருவடி களைவணங்கிநின்று இதுசெய்வதே தகுதியென்றுசொல்ல, திருமாலும் விரை ந்து மன்மதனையழைத்து அனுப்புகவென்றவுடன் அவனைத்தொழுது தேவர்க ளுடன் விடைபெற்றுத் தன் நகரத்துக்கு இந்திரனோடும் தேவர்கள் புடை சூழச்சென்று தாமரைமலர்ப்பீடத்திலெழுந்தருளினான்.

மேருப்படலம்

முற்றிற்று.

---

## காமதகனப்படலம்.

இந்திரன் தேவர்கூட்டத்தோடுவரப் பிரமன் எழுந்தருளியிருந்து பஞ்ச பாணங்களையுடைய மன்மதன் வரும்படி தன்மனத்தினினைத்தவுடன் மன்மதன் அவன்முன்விரைந்துவந்து வணங்கி என்னைநினைத்தகாரியம்யாதென்று கேட்க, அதற்கு நீஎங்கள்பொருட்டுக் கயிலைக்குச்சென்று பரமசிவன் மோனநீங்கி உமையம்மையைத் திருமணஞ் செய்துகொள்ளச் செய்யவேண்டும். இதுதான் எங்கள் கருத்தென்று பிரமதேவன்சொல்லக்கேட்டுப் பொறுமல் சிவசிவவென்று கையைக்காதில்வைத்துக்கொண்டு பல பிறவிகளிலுஞ்செய்த தீவினையால் இச்சொல்லைக் கேட்கலானேன். எட்டுக்கண்களிருந்தும் எள்ளளவேனும்இரக்கமில்லாமல் இக்கொடுஞ்சொல்சொல்லினுய் என்றுமனக்கிலேசப்பட்டுப் பின்பு பிரமனைநோக்கி இதைச் சொல்லத்தொடங்கினன்.

கொடுமையுடையவரும் குற்றமற்றகுணமுடையவரை யடைந்தால் நலமனைத்துமடைவர். உம்மைவந்தடைந்த எனக்கு இக்குற்றமானமொழிகளைக் கூறினீர்! என்பால் உமக்கருளென்பதில்லையோ! யானே மலரம்புதொடுத்து என்பிதாவாகிய திருமாலையெய்து திருமகளையும், புவிமகளையும், பிறரையும் புணரச்செய்து வெற்றிகொண்டேனன்றோ! உம்மையன்று மலரம்புதொடுத்தெய்து கலைமகளை விரும்பச்செய்ததுமன்றி உமதுதொடையின்கண்வந்த ஊர்வசியைவிரும்பிஓடிச்சென்றுஅலையவெற்றிகொண்டேனன்றோ! சிறப்பமைந்த திருமகளைத் திருமாலினது மார்பில்குடியாயிருக்கவைத்ததில்லையோ! உம்மையுங்கலைமகளைஉமதுநாவிலேயேதங்கியிருக்கச்செய்ததில்லையோ! இந்திரனையும் இந்திராணியோடு கூடியிருக்கச் செய்ததல்லாமல் அகலிகைபொருட்டு உடம்பெல்லாங் கண்ணாக்கியதில்லையோ! முன்னொருநாளில் இந்திரனும் சூரியனும் அருணனென்னும் தேர்ப்பாகன் பெண்ணுகவர மயங்கித் தனித்தனி மருவிப் போகச் செய்ததில்லையோ! மேலும் சந்திரனையொருநாள் குருமனைவியாகிய தாரையைப் புணரச்செய்து புதனைத் தரச்செய்ததில்லையோ! தேவர்களை எல்லாம் அமுதம்புசிப்பதினும் அவரவர்மாதரைநாளும்விழைந்திருக்க வெற்றிகொண்டிருந்தேனன்றோ! வேதமுணர்ந்த வசிட்டர், மரீசி, அகத்தியர், அத்திரி, கௌதமர், அறிவாலுயர்ந்த காசிபர் முதலிய முனிவரை யெல்லாம் அவர்கள் ஆற்றலைக் கெடச்செய்ததில்லையோ! மனிதருள் பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரரென்னும் நால்வகை வருணத்தாரையும், அநுலோமர், பிரதிலோமர், சங்கரசாதியாரென்னும் இத்திறத்தாரையும் மாதர்கண்வலையில் அகப்படச்செய்ததில்லையோ! யாரோ என் ஆணைகடந்தவர்கள், ஒருவருமில்லையே! இவ்வளவும்என்வலிமையென்றுசொல்லுந்தன்மையோ! எல்லாஞ்சத்திமானய் எவ்வகையுயிரையும் இயக்கும் இறைவன் ஒருவனது பேராற்றலினலல்லாமல் என்னாற்றலால் முடிவது ஒன்றுண்டோ! திருமாலேமுதலாகிய தேவர்கள்பாற்சென்று யான்வெற்றிபெறுதற்கு ஆற்றலுடையேனல்லது எனக்கு உள்நின்று

தன்னாற்றலால் இயக்கும் இறைவன்மேல்பாணப்பிரயோகஞ்செய்யவும் சமர்த்துடையேனாவேனோ! கிருத்தியகர்த்தர்களி லொருவனாகவெண்ணி நினைந்து அவன்மேல் அம்புதொடுக்கக்கட்டளையிட்டனை! அவனோ செந்தீவண்ணன் ஆகையால் என்னம்பு அவனையொன்றுஞ் செய்யாது! அவனோ திருமேனி மாத்திரம் செந்தீவண்ணமல்லாது கண்ணும் கையும் நகையும் செந்தீவண்ணமாகையால் என்மலரம்பு செந்தீமுனெதிர்நிற்கவல்லதோ! பற்றற்றிருக்கும் பரம்பொருளாவானை எவ்விதமாக மயல் எய்தச்செய்ய வலியுள்ளவனாவேன்! நான்மலரம்புதொடுத்து எய்யும்படி செய்வேனாயின் நானுயிர்கொண்டுதிரும்பி உய்யும்வகை சிறிதேனும் உண்டோ! சூறாவளியில்பூளைமலரகப்பட்டதுபோல நீறணிந்த திருமேனியையுடையநின்மலன்மேல்விரூப்பாக அடியேன்போர்செய்ய முடியுமோ! ஆறணிந்தசெஞ்சடைவாணனாகியபரமசிவனுடன்மாறுகொண்டவருண்டென்றால் அவர்கள் அறவேகெட்டவரல்லாமல் உள்ளத்தில் துயரங்கொண்டு கெடாதொழியார், அன்றி யிருந்தவர்யாவர்? இத்திருமால் முதலிய தேவர்கள் எல்லாம் இறைவனுக்குத் திரிபுரதகனவிஷயமாய்ப் போர்க்குரிய் கருவிகளா யமைந்திருக்க, அதுகண்டு அவர்கள் நமது துணைவலியா லல்லவா சயிப்பொன்று எண்ணியதறிந்து தமது நகையால் எரித்தழித்ததையறியாதவரரோ? முன்னொருநாள் மிருகண்டுமுனிவன் புத்திரனாகியமார்க்கண்டேயன் எந்தாயே எமக்குக் கருணைசெய்யவேண்டுமென்று இரந்துகேட்டுச் சிவார்ச்சனை கடைப்பிடித்தொழுகக்கண்டும் எமன் அவனைப் பற்றத்தொடர்ந்ததனால் அவனைத்தமதுகாலால் உதைத்தழித்ததையறியாதவர்யாருளர்? முன்னாளில் நீரும் திருமாலும் கருவங்கொண்டு பரம்பொருளாவார் யாமேயென்று இறுமாந்தபொழுது அங்கேபரமசிவன்தோன்றி மிகவும் கர்வங்கொண்டிருந்த உமதுசிரங்கொய்துசென்றதையு மறியீர்போலும்.

வெற்றிமிகுந்த சலந்தரன்முதலாகிய உலகத்திலுள்ள அரக்கர்பலரும், ஒன்றாலுமழியாத பரமனைப்பொரவெண்ணிவர அவர்களெல்லாரையு மழித்த கதையுங்கேட்டதில்லையோ? தேவர்களும் அசுரரும் செருக்குக்கொண்டுகடல் கடைந்தகாலத்தில் தோன்றியவிடத்தையுண்டதும், உலகமுழுதும் அழிக்க வந்த கங்கையை ஒருசடைநுனியிற்கரந்தவிதமும்அறியாதவர் யாவர்? உள்ளத்தில் தருக்கேகொண்டு தன்னையிகழ்ந்த அரியையும், கயாசுரனையும், புலியையும் தனது மேனியிற்போர்த்த விதத்தையறியாதவருமுண்டோ? தன்னுண்மையை நெஞ்சிலறியாதவர்யாராயினும் மிக்கஅகந்தையாற் சொல்வாராயின் வந்துஅவர்வலியை யறக்கெடுக்கும் இறைவன்செய்கையைச்சிறிதேனு மறிந்ததில்லையோ? சர்வசங்காரகாலத்தில்முடிவில்லாதகறைமிடற்றிறைவன்கண்ணினின்றும் வீழ்கின்ற தீப்பொறியொன்றினால் பொடியாய்விடுகின்ற நீ அகிலங்களும் படும்பாட்டினைச் சிறிது மறியமாட்டாயோ? இத்தன்மையனாகிய இறைவனை என்கையிற்பிடித்த வில்லையேகொண்டு மலரம்புதொடுத்துஎய்யவேமாட்டேன். அரிய உயிரின்மேல் மெய்ம்மையான பற்றிலாதவரும் இச்செயலை வேண்டுவரோ? இத்தன்மையனாகிய இறைவன் தன்னைநீங்காதிருக்கும் அருட்சத்தியை உலகந்தர அமைத்து ஒருபால் தானாகிநிற்கின்ற தயாபரனை நானோ

பயல்பூட்டத்துணிவது, நன்று நன்று என்று மறுத்துவிட்டான், பொன்னூர் கமலத்துப்புங்கவனாகிய பிரமன்சிறிதுபோதுமனக்கவலையுடன்சிந்தித்துப்பெருமூச்செறிந்து வெள்ளறிவுடையராய்த் தம்மையேவியக்கின்ற தேவர்கட்கரிய பெருமானியல்புகூறினை! இதுவுமுண்மையானசெய்கையே! உன்னைப்பொருவது மெளிதோ! எவர்க்குமரிதல்லவோ! அத்தன்மையேயாயினும் தம்மையடைந்தார் துன்பத்தைநீக்கும் இறைவன் பெருங்கருணையால் இக்காரியம் உன்னால் முடிவுபெறும்; பிறரால் முற்றுப்பெறுவதோ! நினைக்குமிடத்து நீயே இதற்குமுதற்காரணமாம். எல்லார்செய்கையும் இறைவன்செய்கையேயல்லது வேறோ! அணுவும் அவனசைப்பிக்க அசைவதல்லது தானாயொன்றுமசையாது, அவனருளாலல்லது எதுவும்இல்லாது, நீயோ அவனிடஞ்செல்லவேண்டும்; நீசெய்யும்செய்கையும்அவன்செய்கையேயென்றுதுணி. இறுமாந்து தன்னைப்புகழும் தேவர்கள்கூட்டமாக ஓர்காலத்தில் அசுரருடன்யுத்தஞ்செய்யச்சென்றனர். பின்பு இறைவன்கருணையால் தேவர்கள் வெற்றிகொண்டனர். வென்றபின்பு தேவர்கள் தம்மையேபுகழ்ந்து செருக்கடைந்து தமக்குள்ளே பிணக்குற்றகாலத்தில் சிவபெருமான் ஓரியக்கவடிவங்கொண்டுஅவர்கள்எதிரே ஓர்துரும்பைநட்டு இறுமாந்திருந்து அவர்களைநோக்கி இத்துரும்பைத் துணிக்கவல்லவனெவனோ அவனே அசுரர்களைவென்றசுத்தவீரனென்றனன். இந்திரன் முதலிய இறைவரொண்மரும், பிரம விஷ்ணுக்களும் மற்றைத்தேவரும் தத்தம் படைக்கலங்களைப் பிரயோகிக்கவும் சிறிதும் அதுதுணிக்கப்படாததுகண்டு வருந்திச் செருக்கொழிந்துஅவ்வியக்கவடிவங்கொண்டுவந்தஇறைவனைநோக்கி நீர்யார் என்றனர். உடனே அவ்வியக்கவடிவங்கொண்டுவந்த இறைவனோ தன் உருக்கரந்தனன். உமையன்னை அத்தேவர்கள் எதிரேதோன்றி இயக்கவடிவங்கொண்டு ஓர்துரும்பைநட்டு உங்கள்செருக்குஅழியச்செய்தவன் பரமசிவனேயாகும், 'சிவன்செயலாலே யாதும்வருமெனத்தேரோன்' என்றும் அவனருணிலை பெற்றபெரியோரும் கூறியிருக்கின்றனர். ஆகையால் நம்மாலும் சிறிது செயல் செயப்படுமென்பது ஈனத்தைவிளைப்பதேயாமல்லவோ? பலவுயிர்ப்பேதங்களாகிய யாவும் அல்லவுமாகிய அனைத்தையும் ஆட்டுவிப்பவன் இறைவனேயாகும். அப்பெற்றி நோக்கியன்றோ 'ஆட்டுவித்தா லாரொருவராடாதாரே' என்றுமருளிச்செய்திருக்கின்றனர். நாமிடத்துஅவனையல்லது நம்மாலொருசெய்கையும் செய்யவல்லதோ! என்னே இதனிலைமையை இந்நாள் வரையிலுமறிந்தாயில்லை.

முதலும் முடிவுமில்லாத முதற்பொருளைக்கரும்புவில்லைவளைத்துநாணேதிட்டமேலரம்புகோத்துஎய்யும்படி வழிக்கொண்டுசெல்வதும்அவனருளென்றே துணி. இதுமெய்யானசெய்தி, அதற்கேதுவும் மேனாளேகண்டோம். இங்கிதுவுமல்லாமல் எவரேனும் தமக்கடங்காததீமையேபெற்றாலும் உதவிசெய்யென்றிரந்தால்உதவிசெய்யெனவேண்ட ஒருவன்செய்யாது மறுத்துத் தன்னுயிரையேனும் தாங்குதல் உலகவழக்குக்குத் தகுந்தகாரியமோ! எவ்வகைச்சிறிய உதவிஎனும்பாதொருவன் எவ்வகைப்பட்டவர்க்கேனுந்தன்னால்முடிவதாயின் தானேமுடிப்பது தலைமையான காரியம், அதனைச்சொல்லிக் கேட்டபிறகு

முடிப்பதுமத்திமம், சொல்லிக்கேட்டகாலத்திலும் பலநாள்தாழ்த்துச்செய்வது அதமமாகும். எவரேனும்துன்பமடைவராயின் நீங்காதகுறையொன்றுடையரா னால் அதைமுடிக்கும்பொருட்டுத் தமதுயிரையோர் துரும்பாகஎண்ணித் தம துயிரைத்துறப்பது பெருந்தருமமேயாம். அதை மறுப்பாரேயாயின் அதனால் வருவதும் பாவமேயல்லது பழியுமொழியாமல்வரும். உய்வதுபொருட்டாக ஒருவர்க்கு மோருதவியென்பதைச்செய்யானேயாயின் அச்சிறியோன் கழித்த காலமோ பயனற்றதேயாகும். அவன் வாழ்க்கைச்செல்வம்தடாகத்தில்மலர்ந்த கொட்டிமலர்போலும் விளங்கும்.

மேலும் ஒருகாலத்தில் திருமாலுடன் எதிர்த்தததீசிமுனிவனை இந்திரன் சென்றிரந்து வயிரப்படையை வேண்டும் எமக்கருளுமென்று வேண்டத் தன் முதுகெலும்பை விருத்திராசூரனைக் கொல்லும்படி உதவி தன் உயிரைச் சிறி தேனும் நினையாமல் விட்டுவிட்டதன்மையை நீ சிறிதும் கேட்டதில்லையோ! இதிலும்மேலானபொருளொன்றுண்டோஎப்படிப்பட்டவர்க்கும்தன்னுண்மை பிறராலறிவரிய பித்தன், பிறப்பிலி, அன்று பாற்கடலைக்கடைந் தமுதம்பெற வெண்ணிக்கடைகையில் அதில் ஆலவிடந்தோன்றக்கண்டு தேவர்கள் நெஞ் சங்கலங்கி முறையிட அவ்வாலவிடமுண்டு தேவர்களுக்கு தேவாமிர்தம்மகிழ் ந்து கொடுத்த செய்தியைச் சிறிதுமறியமாட்டாயோ! அப்படி அவ்விடந் தோன்றிய உடன் தேவர்கள் உள்ளநடுங்கிஉடம்புவெயர்த்துவருந்தவே அவர் களைத் தளரவேண்டாமென்று சொல்லி உற்சாகமாய் திருமால் நம்மைக்காக் கும்படி ஒருகணப்பொழுதுநின்று தன்செம்பவளமேனிகறுத்தசெய்தி நீயறி யாயோ! எவ்வளவுகீழோராயினும்அன்பிற்றலைப்பட்டு பேராதரத்துடன்பிறர்க் குதவிசெய்வாரேயாயினும் நீங்காத கொடியதுயரத்திற் சேர்வதும் மாய்வது மாகிய இவற்றையேபாரிலுள்ளார்புகழும் பெருங்கீர்த்தியெனக்கூறுவர். சூரனுந் தன்மையின்மிகுந்த சூரபதுமனேவலினால்மிக்க துயர்கொண்டுவருந்தினோம், அதுதீரும்படி பரமசிவன் ஒரு குமாரனைத்தரப் பஞ்சபாணங்களைக்கொண்டு நீயேபோகவேண்டும். ஆகையால்எங்கள்துன்பத்தைநீக்கும்பொருட்டுபுகழைப் பெற முயல்பவர்க்கு அதனுற்சாவேநேரினும்தடையாகவரமாட்டாது. எதுவந் தாலும் எதிர்செல்லக்கடவை, எமது வேண்டுகோளின்படி போகவேண்டும், எதிர்மொழிசொல்லவேண்டாம் என்றனன்.

தாமரைமலரில் வசிக்கின்ற பிரமன் இதுசொல்லவும் பஞ்சபாணங்களை யுடைய மன்மதன் துன்பமடைந்து எப்பொருட்கு முதல்வராகிய பரமசிவ னுக்கு எதிரியாகச்சென்று போர்செய்யேன், இதுவல்லாமல்இங்கெனக்கடுத்த தொன்றுசொல்லும் யான்செய்கின்றேன்என்றான். அதுகேட்டுப் பிரமதேவன் கோபங்கொண்டு நன்மைகளையெல்லாம் பொருந்தும்படி சொல்லிய எமது சொல்லையுந்தடுத்தாய், யாம்சொல்வதற் குடன்பட்டுச்செய்தாற் பிழைப்பாய், இல்லாவிட்டால் உனக்குச்சாபமிடுவேன் உன்கருத்தென்ன சொல்லென்று கேட்க, மன்மதனும் இச்சொல்லைக்கேட்டு மனம்புழுங்கி பெருமூச்செறிந்து யான் இனிசெய்வதென்ன இருக்கின்றது என்று சிந்தைதெளிந்து நின்வாயி

னின்று தோன்றும் சாபத்தால் யான்கெடுவதைப்பார்க்கிலும் இறைவன்முன் சென்று பாணமெய்துமாண்டாலும் உய்யும்வகையுண்டாகும். நீர் கோபிக்க வேண்டாம், பரமசிவனிடத்திலே இன்றே மலரம்புதொடுக்கச்செல்கின்றேன் என்றான். அதுகேட்டு மனமகிழ்ந்து உன்னைவிடாமற் பின்றொடர்ந்து வருகின்றோ மஞ்சேலென்று அவர்பால் விடைபெற்றுக்கொண்டுபோக இந்திரனும் மன்மதனைப்பார்த்து நானும் தேவர்களும் பட்டுவரும்கொடுமைகள் நீயறியாததல்லவே, எனக்குப் பெருவாழ்வு கொடுக்கவேண்டுமென்று சிந்திப்பாயானால் நீ பரமசிவன்பார்வதியாரைமணஞ்செய்யும்படிசெய்விக்கவேண்டும். இதுதான் என்வேண்டுகோளென்றுசொல்லவிடைபெற்றுப் பிரமலோகத்தைவிட்டு, தன் இருப்பிடமடைந்து தான்போகின்றகாரியத்தைஇரதிக்கறிவித்து அவள் மனத்தைத்தேற்றித்தன்மலரம்புடையதூணிரத்தை முதுகிற்கட்டிக்கொண்டுவில்லையேந்திக்கொண்டு கிளியென்னும் குதிரைபூண்ட தென்றலாகியதேரில் இரதியோடும் ஏறிக்கொண்டு விலங்கின் கூட்டத்தின்மேலும், பட்சிசாலங்களின் மேலும் பாணப்பிரயோகஞ் செய்துகொண்டே இறைவன் எழுந்தருளியிருக்கும் கயிலாயமலையிற்போய் புலியை நித்திரையினின்று மெழுப்பும்மான்போல அடைந்தான்.

இவ்வாறு காமன்பாணப்பிரயோகஞ்செய்துகொண்டுவருவதை நந்திபெருமான் உங்கரித்த அளவில் விலங்கு, பட்சி, இவைகளின்மேல்செலுத்தப்பட்ட பாணங்களின் வேகம்செல்லமாட்டாமல் தடுக்கப்பட்டது. இவ்வாறு மன்மதன் நந்திபெருமான் கயிலாயமலையைக் காத்தல்செய்யும் விதத்தைக்கண்டு மனம் நடுநடுங்கி யாதுசெய்வது எனத்துணிந்து அவர்முன்சென்று பணிந்து நின்றான். அவன் இங்குவந்தகாரணம் யாதென்று நந்திபெருமான்கேட்க, அதற்கொன்றுமொழியாமல் பிரமதேவன் அனுப்பிய தந்திரத்தை எடுத்துச் சொல்ல, நந்திபெருமான் இவன்பிரமதேவன்முதலிய தேவர்கள்பொருட்டாக வந்தவனாகத்தோன்றுகின்றது. மேலும் இறைவன் கல்லாலினிழலில் சனகராதியாய பெருந்தகைமையுடைய முனிவோர்க் கருள்செய்ய எழுந்தருளியபோது எப்படிப்பட்ட தேவர்கள்வந்தாலும் உள்ளேவிடுக்கவேண்டாம், மன்மதன்மாத்திரம்வந்தால் விடு என்றருளிச்செய்து மற்றவர்கள்வந்தால் விடாமலிருக்கவேண்டுமென்று பரமசிவன் கட்டளையிட்டுப்போனாரல்லவா? இவன் பரமசிவன் சந்நிதியிற்சென்றால் கரிந்து பொரிந்துபோவனேயென்று எண்ணிய தன்றிவேதங்கள்சொன்னவாறுபோலப்பசுத்தடிந்துவேள்விசெய்துஅப்பசுவை முன்போல்எழுப்புவதுபோல மன்மதனைக்கொன்றுமலையரசன்மகளை மணந்து அதன்பின்பு அவனையெழுப்பத் திருவுளங்கொண்டனன்போலும்; ஆகையால் இதுவுமவனதுதிருவருளேயாம். இவன்வருகையும் அவனதுகட்டளையேயாகும் என்று மிக்கமகிழ்வோடு அறிந்து மன்மதனைநோக்கித் தேவர்கள் துன்பத்தை நீக்கஎண்ணியஒப்பில்லாதகருணையையுடைய ஏகநாயகன்சந்நிதானத்தண்டை நீபோகவேண்டுமோவென்று நந்திபெருமான்கேட்கவே, அதற்கவன் எனக்கு முடிவுநேரினும் பொற்கொன்றைபூத்த சடாபாரத்தையுடைய இறைவன் சந்நி

தானத்தையடையக் கருதிவந்தேன் ; அதற்குச்செல்லும்படி கட்டளையிட வேண்டுமென்றான்.

இவ்வாறு மன்மதன்சொல்லக்கேட்ட நந்திபெருமான் அன்புசிறிதுமில் லாமல் எவ்வுயிர்க்குமிடமாகிய ஓர் புகலிடத்தைநாடு முறையைவிரும்பிச் சென்றடைபவர்க்கு தகுதியான கருணைசெய்கின்ற தனிமுதல்வனாகிய இறை வன் சந்நிதானத்தின்முன்பு நீபோக எண்ணங்கொண்டிருப்பையாயின் மேலை வாயிலின்வழியாகச் செல்வாயென்று கட்டளையிட, அம்மன்மதனும் இரண்டு கைகளையுங்குவித்து வணங்கி நின்று அவரிடத்துவிடைகொண்டுசென்று மகா தேவன் நீற்றழற்குன்றம்போல மோனநிலையினி லிருப்பதைக்கண்டு அடைந் தான். சிம்புளைக்கண்ட சிங்கக்கூட்டமேபோலக் கண்டு நடுநடுங்கி பயந்து உடன்முழுதும் வெயர்த்து துன்பக்கடலிலாழ்ந்து தன்படையுடன்வீழ்ந்து, அவசமாய்ச்சிறிதுமறிவின்றிஇறந்தனனேயென்று சொல்லும்படிவருந்திஅவன் மனைவியாகிய இரதிதேவிசெய்கின்ற சயித்தியோசபசாரங்களால் தெளிந்து நெஞ்சமானது நல்லுணர்ச்சியடைந்து முன்னாளில் இப்பரம்பரன் ஒருவராலு மழிக்கப்படாத திரிபுராதியரைத்தீயெழநகைத்துப் பிரமன், விஷ்ணு,இந்திரன் முதலிய தேவர்கள்படுந்துயரத்தை யொழித்துவிட்டானன்றோ, எனக்கும் அவ்வாறே மரணமென்னும் துன்பநோய் வந்துநேரிட்டதோ. இதற்கேதேனும் சந்தேகமென்பதுண்டா! தன்வயத்தனாதல், வரம்பிலின்பமுடைமை, தூய வுடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், இயல்பாகவே பாசங்களினீங்கு தல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, முற்றுமுணர்தல். என்னும் எண்குணங்களையுடைய இறைவன் எழுந்தருளியிருந்த வண்ணங்கண்டுபயந்து ஆவிகாணாது என்கையிற்கொண்டதோர் கணைகள்வாகைகொள்ளுமோ, இத் தன்மையாகியவகையைத் தேவரும் பிரமனும் மாலும் யாருமறியமாட்டார் கள். சுழற்காற்றின்முன் விளக்குநிற்பதுமுண்டோ! அதுபோல தேவர்கள் என்னை வாக்காலும் மனத்தாலும் எட்டாத இறைவன் சந்நிதானத்திற் செலுத்தினரே. இனிச் சிறிதுநேரத்துள் சாம்பராயெரிந்துபோவதே வாய்க் கும். உலகமுழுதும் முடிக்கின்ற முதற்பரம்பொருளை அழகிய மலர்களைக் கொண்டு யானேசண்டைசெய்யநினைக்கின்றேன். இதுநகையை விளைவிப்பதே யல்லவோ. ஆ! இதுவிதியின் செயலேயாகும், அதனைக்கடக்கவல்லவர் யார் இருக்கின்றனர். உலகைப்படைக்கும் பிரமனாலும் முடிவுபெறாதே. இதுநிற்க; இறைவனது சூழ்ச்சியாதோ முடிவதறியேன். இனிசும்மா தூங்கிக்கிடப்பதே தக்கதல்ல என்று திடீரென்றெழுந்து வில்லைக்கையில்வாங்கி வளைத்து பாணத் தைப்பூட்டி வல்லவாறுசெய்யவல்லேன். இறைவன்பாங்காகநின்றுபட்டவாறு படுகவென்றுகூறி இவ்வாறாகப் பலவும் எண்ணியெழுந்து மீண்டும் வில்லை வளைத்து மலரம்புதொடுத்து மனைவியாகிய இரதி தன்னையகலாதிருக்க சந்திர சேகரனது ஒருசார்சென்று போர்செய்யமுயன்று இருப்பதைக்கண்டு இந் திரன் பிரமனைநோக்கி வணங்கிநின்று, தேவரீர் நீலகண்டத்தையுடையபரம சிவனிடத்தே மன்மதனை யனுப்பினீர், அவன் செய்யும் போர்த்தொழிலைப்

பார்க்கவேண்டுமென்று வேண்ட, அதற்குப் பிரமனுமிசைந்து விரைந்தெழுந்து தேவர்கள் சூழ்ந்து வரச்சென்று கயிலைமலையின் ஒரு புறத்தே யடைந்து மன்மதனுடைய இயல்பையறிந்து இறைவனைத் துதித்துநின்றனர். பரமசிவனையே இலக்காகநாடும் குறியையுடையார்போலநின்ற கொடுந்தொழிலையுடைய மன்மதனும் உலகின்கண் சாகத்துணிந்தவர்களுக்கு அச்சமென்ப துண்டோ, ஆகையால் நானினித்துவந்த காரியத்தைச்செய்தே முடிப்பேனென்று புட்பபாணங்களைந்தையும் இறைவன்மேல் பிரயோகிக்க அவ்வை தமதுதிருமேனியிற் படுதலும் ஒருசிறிது விழி திறந்துநோக்கினன். அவ்வாறுநோக்கவே மிக்க அனலைச்சொரியும் நெற்றிக்கண்ணில் உண்டானதீப்பொறி உடன்முழுதும் சுட்டுக்கயிலாயமலைமுழுதும் புகைமூடிக்கொண்டது. கரும்புவில்லையுடைய மன்மதன் உடன்முழுதும் அவனது அக்கினியால் வெந்துநீறுகவே கயிலைதீப்படலமூடிக்கொண்டதனுல் பிரமன்மால்என்னு மிருவரும் தேவரும் பிறரும் தமதறியாமையால் பாற்கடலைக்கடைந்தகாலத்தில் ஆலகாலவிடந்தோன்றிய சமயமொத்திருந்தது. நெருங்கியதீப்புகைபடர்ந்துவருதலைமேற்றிசையின்வாசலில் நந்திபெருமான்விரைந்து நோக்கி, மன்மதன் இறந்துபோனுன் என்று அறிந்து அங்கடைந்தவர்களுக்குச் சொல்லத்தொடங்கினன்.

அது யாதெனின் நுட்பமாகிய அறிவுடையவரோ! உங்களுக்கிதுசொல்கின்றேன், எமதிறைவன் நெற்றிக்கண்ணினின்றும்சொரிந்ததீயானது காமனையழித்ததன்று, அவனை இறைவனென்று துணிந்தும் அஞ்சா நெஞ்சுபடைத்திங்கேவந்த செய்கையே அவனைசுட்டதுபோலும்; தனக்கினிய கணவன் இறக்குமியற்கையை இரதிதேவிபார்த்து, நெருப்பிலிட்ட பூமாலைபோலவயிற்றிலடித்துக்கொண்டு அழுது எமதிறைவனைச்சென்றுவேண்ட மன்மதனைத்தருவது அந்தமுதல்வன் அணுக்களின்பொருட்டு முறையேசெய்கின்ற கருணையாமென்று அன்று திருவையாற்றின்கண் சிவபரஞ்சுடரைப்பூசித்துத் திருவருள்பெற்ற சிலாதரமுனிவர் திருக்குமாரராகிய நந்திபெருமான் இவ்வாறு எடுத்துச்சொல்லவும் அவரைச்சூழ்ந்துநின்ற அளவிடப்படாத சிவகணங்கள் கேட்டு உலகமுழுதும் உய்யும்பொருட்டு எமது கடவுள் அருட்செயலைப் போற்றிசெய்பவராயடுத்தனர். கிளிபூண்ட தென்றற்றேரையுடைய மன்மதனுடைய கொடியசெய்கையால் அவன்உடலைவேகச்செய்து, பிரியாது அவன் பக்கத்தினின்ற இரதிதேவியை முடிப்பதுசெய்யாமை ஒருபகையென்பதேயில்லாத தாருகாக்ஷன் கமலாக்ஷன் வித்துன்மாலி என்னுந் தலைவர்மூவரையும் தடுத்து திரிபுராதியரை முழுதுமழித்ததிறம்போல என்று நோக்கவேண்டும்.

இவ்வாறு இறைவன் திருக்கண்ணி னின்றும் தோன்றிய அக்கினியாலே மன்மதன் உடல்முழுதும் பொடியாய்விழ இறந்தனன். அவன் அவ்வாறாக இறைவனே முன்னைநிலையிலே சிறிதும் குறையாமல் இருந்தான். எல்லாம் எண்ணியவண்ணம்செய்யும் இறைவனுக்கருமையானகாரியம்யாதிருக்கின்றது, இது ஒன்றுமில்லையென்பது விளக்கியபடியேயாகும். இவ்வாறு நாயகனிறந்ததைப் பார்த்திருந்தலும் இரதிதேவி யுள்ளமோ மிகத் துயரங்கொண்டது,

தான் கொண்டிருந்த முன்னையுணர்வுங்கெட்டது, கண்ணீர் ஆறுகப் பெருக்கெடுத்தது, உடல் வெயர்த்தது, நெடுமூச்செறிந்து ஆவியொடுங்கிற்று. இவளும் உடனிறந்தாளோஎன்றுசொல்ல விரைந்து பூமியில்விழுந்துசுழித்தோடும் ஆற்றில் அகப்பட்டமானேபோல துன்பக்கடலின் நடுவே படிந்துபற்றில்லாமற் சோர்கின்ற இரதிதேவி சிறிதுநேரத்துள் தொல்லையுணர்வுகூடிக் கையை நெறித்து வயிறலைத்துக்கொண்டு பின் வருமாறு புலம்புவா ளாயினள்.

• திருமகள் மகனே! என்னுருயிரே! உலகைக்காக்கும்விஷ்ணுமூர்த்திக் குச்சேயே! சம்பரனைப் பொருதுவென்ற சூரனே! கரும்பை வில்லாகக் கைக்கொண்ட வீரத்தன்மையுடையானே! நீ அம்பவள மலைபோன்ற சிவபிரான் விழியினின்றும் தோன்றிய தீயால் உடல்வெந்து அழிந்து போனாயோ! என் சொல்வேன்;இப்போதுதான் தேவர்களெல்லாந் தூக்கங்கொண்டனரோ;பிரமனுக்கும் சந்தோஷமுண்டாயிற்றோ! நான்உன்னை முன்னாளில் திரிபுரங்களை நகைத்தெரித்த சிவபிரானுடன்போர்செய்வது முறையல்லவென்று சொல்லியுங்கேளாமற்போயினையே! பின் தேவர்கள் காரியத்தையே செய்யவேண்டுமென்றே துணிந்தாயே, உன்னுடல்பொடியாகிப்போய்விட்டதே,இதைப்பார்த்தும் உய்வார் உண்டோ! என்னாவிபோன்ற நீ யிறந்துவிடக்கண்டும் நான் தனியேயிருப்பதும் நலமாமோ! மேலும்இறைவன்விழிக்கிலக்காய்வலியற்றுப்போக உன்உடலெல்லாம் நீறாய்ப்போய்ஆகாயமுழுதும் நெருப்பாகத் தேவர்கள்நெஞ்சங் கவலைகொண்டிருக்கவும், யான் ஆறாப்பெருந்துயரத்தால் வருந்த நீயெங்கொளித்துக்கொண்டாய்! அருவமாயேனும் வந்துசொல்லாயோ, என்பிராண நாயகனே! சும்மாயிருக்கின்றாயே! யான் ஏதேனும் உனக்குக் குறைசெய்ததுண்டோ! இதுகிடக்க, பரமசிவன் கண்ணினால் வெறும்பொடியாய் நீ யிறந்துபோன இப்பழி யாரிடத்திலமையும் தேவர்களிடத்திலேயோ இந்திரனிடத்திலேயோ, அல்லதுஉன்னைச்செலுத்திய பரமனிடத்திலேயோ, அச்சிவன்செயலைச் சிதைப்பேனென்று விரைந்துவந்த உன்னிடத்திலேயோ! யாரிடத்திலென்று சொல்வேன். வில்லால் திரிபுரதகனஞ்செய்துவிட்ட பரமசிவனது யோகந்தவிர்க்கவேண்டினால் தேவர்களெல்லாருமே இறந்தாரோ, என்பிராண நாயகனே! நீயன்றோ இலக்காய் நின்றாய்! உன்னைக்கொல்லாததுபோல கொன்றாரோ! என்னுயிர்போன்றஉனக்கும்கொலைசூழ்ந்தாரோ! என்னவென்று சொல்வேன். பொல்லாதார்க்கு நன்றிசெய்வது தம்முயிர் போகும்பொருட்டே யல்லவோ! இதுநிற்க; என்னபாவஞ்செய்தேனோ! என்போன்றவருக்கு என்ன துன்பஞ் செய்தேனோ! முன்செய்தவிதிப்பயனேயன்றோ! இப்படியே முடிந்துவிட்டது. ஐயோ! கரும்புவில்லைப்பிடித்த வல்லமையுடையகாவலனே! என்னைக் காக்கமாட்டாயோ! அக்கினிக்கண்களையுடைய பரம்பரனை நினைத்து வருந்துவதற்கு வழக்குண்டோ! பசும்பொன்னாற் செய்யப்பட்ட முடியைக் காணேன்! அழகொழுகுகின்ற திருமுகமண்டலத்தின் பொலிவைக்காணேன்! மின்னுகின்ற ஆபரணங்கள் விளங்கும் புயங்களைக்காணேன்! அகன்றமார்பின் மேன்மைகாணேன்! அச்சம்விளைவிக்கும் பூங்கணைகாணேன்! சிலைகாணேன்!

ஆடல்புரியும் வில்லையும்கோலமும்காணேன்! என்னசெய்வேன்! என்கணவா! என்னை விட்டுவிட்டு எங்கே போயிருக்கின்றாயோ! என்னை அக்கினிசாக்ஷியாகத் தேவர்களோடு அயனு மாலும் காணப் பொன்னாற் செய்யப்பட்ட மங்கல சூத்திரம்புனைந்து மணஞ்செய்துகொண்டு மருவியகாலத்தில் எந்நாளிலும் உன்னைவிட்டுப்பிரிவதே யில்லையென்று உண்மைமொழி சொல்லினாயே! வேனிற்காலத்திற்குத் தலைவனே! எனக்குந் தலைவனே! என்னைத் தனியே!விட்டுப்போதல் உமக்குத் தகுமோ சொல்லும்! என்று கதறினாள்.

பின்னும் உன்னைப்போகவிட்ட தேவர்களெல்லாரும்பொடியாய்ப்போய் விட அவர்வாவென்று விரைவாகவந்து எழுப்பமாட்டார்களோ! உன்னுடைய தகப்பனாகிய திருமாலோ மிகவும் வல்லமையுடையானென்று சொல்லக்கேட்டிருக்கின்றேனே! நான் கோ வென்று புலம்பக்கண்டும் என்னை ஏனென்று வந்து பார்த் திரங்காமலிருக்கின்றானே! அவன்பாம்பணையிற் படுத்துறங்குகின்றானோ'யான்என்செய்வேன்!உன்னுடையதலையில்நீவெந்து சாம்பராகும்படியே யெழுதிபிருந்தால் அவர்களை நொந்தாவதென்ன! அதிருக்கட்டும்; அன்பாய் வேதம்பயிலும் பிரமனையும் இந்திரனையும் உன்னைப்பெற்ற திருமாலையும் முனிவர்களையும் இவர்கள் முதலானோரையும்உன்னுடைய பஞ்சபாணங்களால் முழுதும் பஞ்சைகளாக்கி மருட்டி வெற்றிகொண்டதுபோல இலேசாகவே யெண்ணிஒற்றைக்கலையை முடியிலேதரித்த பரமசிவனிடத்தே யுத்தஞ்செய்ய முயன்று அழிந்துபோனாயே!உலகத்தில்விளக்கினையடுத்துச் சென்றவிட்டிலின் செய்கையு மிதுவே யல்லவோ! தண்பனிநீர் விசிறிகொண்டு விளையாடிப் பூக்கொய்து குளிர்ந்த பூஞ்சோலையை யடுத்து எண்ணத்தக்க பூம்படுக்கையில் சிறிய தென்றற்காற்று கவரிபோல இனிமையாகவீச வெண்மையான கஸ்தூரியும் சந்தனமும் கலந்த சேறாடி இருவரும் சந்தோஷமாய்ப் பேசிக் குலாவித்தூங்கும் பெருஞ்சுகம் பெற்றிடுங் காலம் இனி எனக் கெப்போது வாய்க்கப்போகின்றது? மருமகனென்றே சொல்லி யவமதித்துத் தக்கன் யாகஞ்செய்ய, அந்த யாகத்தையும் அழித்து அவன் தேகத்தையு மழித்தபரமசிவனிடத்திலும் போய்ச் சண்டைசெய்யென்றே தேவர்களெல்லாரும் விட்டாரோ!நீயோ சற்றும் எண்ணிப்பாராமல்அவரோடும்எதிர்க்கவந்துபொடியாய்ப் போய்விட்டாயே! நானும் நீ யெரிந்துபோனதுபோல ஆறாத பெருந் துன்பத்தால் எரியாகின்றேன்! நானுஞ் சிறிது நேரத்திற்குள்ளாக வருகின்றேன்!என்னுயிரைப்போன்றவனே! என்று புலம்பிக்கொண்டிருந்தாள்.

காமதகனப்படலம்

முற்றிற்று.

---

## மோன நீங்குபடலம்.

இவ்விதமாய்இரதிதேவி வருந்திக்கொண்டிருக்குங்காலத்தில்பரமசிவனே முன்போலவே மோனவிரதங்கொண்டிருந்தான். அப்பரமசிவனை எதிர்ந்து சென்ற மன்மதன் வெயில்முன்பனிபோல ஒழிந்ததை வேதமுதலிய ஆய்ந்த கலைகளையுணர்ந்த பிரமன்முதலியதேவர்களெல்லாரும் கண்டுகலங்கி,புற்றீசல்கள் புற்றினின்று மெழுந்தாற்போல் கண்ணீர்ப் பெருக்கெடுப்பவும், துன்ப மிகுந்து பெருங்குரல் பாய்ச்சியழுவதனால் வாய்கள் பதலைபோலவும், தேமல் படிந்ததுபோல் உடல்வெயர்க்கவும், உள்ளடுங்கவும் மகனிறந்தவிடத்தேபெற்றோர்வருந்துவதுபோலத் தாங்கள் துன்பப்பெருங்கடலிலழுந்தித் துறைகாணாதவராய்ப் பின்வருமாறுசிந்திக்கின்றனர். நீலகண்டத்தையுடைய பரமசிவனிடத்திலே புட்பபாணங்களைந்தையுங்கொண்டு உலகமுழுதும் வெல்லுகின்ற மன்மதனை யனுப்பினேம்,நாம் வருவதறியாமல் அனுப்பவே,அவன் பொடிப்பொடியாய்ப் போய்விட்டான். நமதிறைவனே சற்றேனும் மோனத்தினின்று நீங்காமல் பழயபடியே யோகஞ்செய்வாரின் விளங்குவானாயினன்.ஐயோ ! இனியாம் செய்வதென்ன விருக்கின்றதென்று அயர்ந்து, புஷ்பபாணத்தையுடைய மன்மதனை ஒற்றைநாட்டத்தால் எரித்தபரமசிவனுடைய சர்வசத்தியையே நாம் நமதுதந்திரத்தால் நீக்கலாமென்று நினைப்பது அருமையானகாரியம். அப்பெருமானே நமது துயரம் நீக்கவேண்டுமென்று எண்ணினால் விரைவாக அவனைத் தோத்திரஞ்செய்து துதிப்பதே முறையென்று சொல்லி யாவரும் மனமிசைந்து கயிலாயமலையையடைந்து கோபுரவாயிலின் புறத்திலே சென்றுகூட்டமாயிருந்துகொண்டு துதிக்கலாயினர்.

விஷத்தையுண்டும் கங்கையையணிந்தும் நெற்றியிலிருக்கும் ஒற்றைநாட்டத்தில் தீயைத்தாங்கியும் கொடியானாவென்று இருக்கின்றநீ அஞ்சேலென்று காத்தருள்வை. இப்போது எம்மைக்காவாவிட்டால் பெற்றதந்தையரல்லாது மக்கட்குத் துணையாவார்யாவரோ ! குற்றமற்ற அன்பர்கள் குற்றமுள்ள காரியங்களையே செய்தாலும் குணமாகக்கொண்டு ஆளுகின்ற எம்பெருமானே ! நின்னுடைய பாதமே தஞ்சமென்றடைந்து வருந்திய எங்களை என்றும் சூரபதுமன்முதலிய கொடியவரால் வருந்திவாடிமாளும்படிசெய்தாய்.சிறிதேனும் எங்கள் துயரங்கண்டு இரங்காயோ ! உமையன்னையைப் பிரிந்து யோகியாயிருந்து உயிர்க்குயோகத்தைத்தரும் நிலைமை உமக்கு ஒருகணமேயாயினும், அக்காலத்தில் வருந்துகின்ற எங்களுக்கோ யுகம்பலவாயின. நாங்களெல்லாம் பிழைப்பதெப்படி ? நீயும் இன்னும்எங்களைப்புறக்கணிப்பது நல்லதோ! விஷ்ணுமுதலியோர் யாவரும்உனது புண்டரீக பாதங்களைத்துதித்துஅர்ச்சனைசெய்து எல்லாத்திருவும்பெற்றார். தோற்றமில்லாமல் சிருஷ்டி திதி சங்காரம் திரோபவம் அனுக்கிரகம் என்னும் ஐந்தொழில்களைச் செய்துவருகிறபழையோனே ! நீ செய்துவருகின்ற தவநிலை எம்பொருட்டேயன்றோ ! என்றும் வருந்தும் எங்களைத் தவறுமிகுந்த துன்பமாகியவாளால்கித்தலும் துணிக்கின்றீர், அச்செயலினை நீக்கி அத்தனே இங்கினிக்காத்தருள் ; அல்லாவிட்டால் எம்மை விரைவாகஒழித்துவிடு; உனக்குத்திருவுளமென்ன? அதைஎங்களுக்குச் சொல்

ஙியருள், கங்கையைத்தரித்த சடாமகுடத்தையுடையானே! உமையை மண ந்து எங்களைக்காக்க சந்திரவட்டக்குடை பிடித்துச் செல்லும் மன்மதனைத் தெளிவில்லாமல் விடுத்தோம்; அவன்சரீரம்பொடிபடச்செய்தனை!நீசிறிதேனு மெங்கள்பொருட்டு இரங்கலாகாதா! அன்று வேங்கைமுதலியவற்றை யுரியாக வுரித்துத்தரித்தனை! தக்கன் யாகத்தை வீரனைவிடுத்தழித்தனை! அதுபோல எங்களுக்குச் சூரபதுமன் கொடுமையினைத் தொலைத்துவிடு என்று வேண்டிக் கொண்டனர். வண்டுகள் இசைபாடுகின்ற தாமரையில் வீற்றிருக்கும் பிரமன் முதலாய தேவர்கள் உருக்கிய அரக்கேபோல மெய்தளர்ந்து இவ்வகை உளம் நொந்து கூவிவணங்கலும் அவர் துன்பமுடிதற்கு இரக்கங்கொண்டு இறைவன் நந்தியை வரநினைந்தனன்.

எம்பெருமானாகிய நந்திபெருமான் நினைத்தலும் அதனை நந்திபெருமான் அறிந்து எம்பெருமானை யடைந்து வந்தனை செய்து கைதொழுது நிற்கவும், வேத முதல்வனாகிய பரமசிவன் வாசனைதங்கிய தாமரைபீடத்தில் இருக்கும் பிரமன்முதலாகிய தேவர்களைவிரைவாக எம்முன்கொண்டுவாருமெனக் கட்டளையிடவே, அக்கட்டளையை யேற்று முதற்கடையில்வந்துசேர்ந்து பிரமன் முதலாகிய தேவர்கள் வணங்கப்பெற்றுநிற்க அவர்களைநோக்கி உம்மை யெம் பெருமான் வருகவென்று கட்டளையிட்டனன், வாருமெனச்சொல்லவே, நந்தி பெருமான்சொன்னதைக் காதாரக்கேட்டு மகிழ்ந்து மீட்டுமொன்றுஞ்சொல் லாராகிப் பரம்பொருளை வாயாரப்பாடியாடி மகிழ்ந்துநின்றார்கள். திருவை யாற்றில் இருவகைபறத்தோரும் உய்யவும் மிகவும் நோயுழந்து ஆள்வாரில்லா மல் பெருங்காலம் நரகவேதனையாழ்ந்தவரை யெடுக்கவும் அவதரித்த நந்தி பெருமான் அருளால் இறைவன் உங்களை வருவித்தான், அனைவரும் வாருங் கோளென்று சொல்லச் சனனக்கடலை வற்றச்செய்யும் வகையுடையாராய் மையல்கொண்டதேவரை விரைவாக இறைவன் சந்நிதானத்தில் அழைத்துக் கொண்டு வந்தனர். இவ்வாறு கொண்டுவரவே வண்டுகள் ஆரவாரிக்கின்ற தாமரைமலரில் இருக்கும் பிரமன், இந்திரன், தேவர்கள்முதலானோர் அன் போடு சென்று உயிர்களெல்லாவற்றையும் கருணைசெய்கின்ற பரம்பொருளைக் கண்ணாற் பருகித் துதித்துக் கைகூப்பி நின்று ஆகாயத்தில் தவழ்கின்ற சந் திரனையணிந்த சடாமகுடத்தையுடையானும் வேதகீதனுமாகிய பரமசிவனை நெருங்கிவணங்கி முன்னாளில் விஷ்ணுமூர்த்தி அன்போடுசெய்த பூசனைபோல ஆனந்தக் கண்ணீரொடு ஒருசேர வணங்கியபோது தாம் ஒன்று மறியாதா ரைப்போன்று அவர்களைநோக்கி நீங்கள் துன்பமுற்றமையாது? சொல்லவே ண்டுமென்று கேட்கவே, அதற்குத் தேவர்கள் அநேககாலம் சூரனது ஆணை யால் துன்பப்பட்டோம், நீலகண்டனே! அடியேங்களுக்குத் தஞ்சமென்பது உம்மையன்றி எவர்? நீர் சூரனை வெற்றிகொள்ள ஓர் மைந்தனை யளிக்கும் படி இமயமலையில் தவஞ்செய்யும் இறைவியைத்திருமணஞ்செய்யவேண்டும் மென்றுசொல்லி அவர்களெல்லாரும் நின்றுவணங்கப் பரமசிவனும் அத்தேவர் கள் முறையைக்கேட்டு தேவர்களே! நாம்இமயமலையிற்சென்று உமாதேவியை மணந்து உங்கள் துபரத்தைபெல்லாம் நீக்குகின்றோமென அம்மொழியைக்

கேட்டுத் தேவர்களெல்லாரும் தமது துயரம் நீங்கி மேருமலையிற் போயினர். அவர்களோ விடைபெற்றுச்சென்றபின்பு இரதி எமதுபெருமானை நினைத்து வணங்கி இறைவனே! முறையோ! முறையோ! பிரமன்முதலிய தேவர்கள் சூழ்ச்சியினால் எமது தலைவனாகிய மன்மதன் இங்கேவந்து உமது தீவிழியினால் அழிந்தனன், அவன்செய்த பிழையத்தனையும் பொறுத்தருளவேண்டுமென்று வணங்கினாள்.

இவ்வாறு இரதிதேவி வேண்டலும் ஒப்பில்லாத பரமசிவன் நல்லருளெய்தி மங்கையே நீ புலம்பாதை, நமதுகவுரியைச்சென்றுமணம்புரியுங்காலத்தில் உனது மணவாளனாகிய மன்மதனையளிக்கின்றோமென்று சொல்லக்கேட்டு இறைவனைவணங்கிச்சென்று மேகத்தின்வரவைநோக்கும் மயிலேபோல மேருமலையையடைந்தாள். தனியாகி இரதிதேவி யங்கடையவும் தேவர்களாவார் துன்பம் நீங்கவும் இமயமலையிலிருந்து தவஞ்செய்யும் பிராட்டியைத் திருமணஞ்செய்துகொள்ளவும் மனத்திலெண்ணி, சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரரென்னு முற்றத்துறந்த முனிவர் நால்வரையும் நோக்கி, ஞானநிலையாவது சொல்லாலுணர்த்தும்தன்மையதன்று, துயரநீங்கிஇவ்விதமாக மோனமோடிருந்து நம்மைத்தியானிப்பதேயாகுமென்று, கண்மூடுகின்ற இமையிரண்டாலுமாகும் காட்சியாகியயோகத்தை நுட்பமாகவுணர்த்திநிற்க, பிரமகுமாரராகிய சனகாதி அருந்தவர் நால்வரும் தெளிவுடையராகி இறைவனைவந்தனைசெய்து யாம் பிழைத்தோமென்று வணங்க அவர்களைநோக்கிநீங்கள் இவ்வாறு ஞானசாதகம் சேய்வீரேல் வீடுபேறடைவீரென்று திருவாய்மலர்ந்தருளினர். இதுகிடக்க;

மோனநீங்குபடலம்
முற்றிற்று.

---

## தவங்காண்படலம்.

---

சனகாதி யருந்தவர் கயிலைமலையைவிட்டுச்சென்றபின் இறைவன் பெருந்தவஞ்செய்பவளாய் நிற்குமலைமகளின் தனிமையான அன்பும்,காதலும் யாவர்களுக்குங் காட்டும்படி சோதனைசெய்வாரைப்போல விரைவாக எழுந்தருளினர். பவளம்போன்ற சடையையும், சிகையையும், திருநீற்றின் குறியையும், பிரகாசிக்கு முந்நூலையும், கமண்டலமசையும் கையையும், சந்திரன்போற்று மோலையும்,கோலினையும் உடையானாய் வேதம்பழகிய கிழப்பிராமண வடிவங்கொடுசென்றார். இவ்வாறு அக்கோலங்கொண்டு எமதன்னை தவஞ்செய்யும் இமயமலைச்சாரலிற்போய் அணுகிநிற்க,அங்கே வாயில்காப்போராகிய மாதர்கள் இவரோ முற்றத்துறந்த முனிவர்போலத் தோன்றுகின்றனரென்று அப்பெண்களெல்லாரும் எண்ணி அவரைநோக்கி தளர்நடையை யுடையாரே இத்தடவரையில்வந்துசேரல் எளிதான காரியமல்ல; வந்தகாரியம்யாதென அவர்கள் சொல்லியசொல்லைக்கேட்ட இறைவன் மலையரசன்மகளாகிய உமை தவஞ்செய்யும் வகையைநாடிக் காண இத்தனைதூரம் வந்தகாரியமென்றுசொல்ல,

அங்கிருந்த பெண்களிற்சிலர் ஓடோடியுஞ்சென்று ஆளுடையநாயகியை இறைஞ்சிவணங்கி இங்குற்றதொழிலை யெடுத்தியம்ப, அவ்வாறேல் அம்முதியோரை வருவிக்கவேண்டுமென்ன, அவர்களும் முன்னைப்பழம்பொருட்கு முன்னைப் பழம்பெருளை அவர்பாற்கொண்டுவந்துய்த்தனர். அகிலநாயகி ஆராவமுதனாகிய அருட்பெருஞ்சோதியைக்கண் டாங்குபணிந்து நிற்றலும் இறைவிக்கு உயிர்ப் பாங்கியாகிய விசயை இறைவனுக் கோராசனமளித்து இருக்கச்செய்தனள். விமலையும் அயலினின்றுகொண்டிருந்தார். அதுபொழுது இறைவன் எம்மை யாளுடைய அருமறைமுதல்வியை ஆதரவினுற்பார்த்தருளி யெடுத்துச்சொல் வதற்கரிதாகிய உனது திருமேனி வருத்தமடைய உடலிற் பொருந்திய தசைகள் சென்று என்புருவமாகத்தோன்ற மிக்க தவஞ்செய்கின்றனை ; எப் பொருளைகாடி. தவஞ்செய்து கொண்டிருப்பது எடுத்துச்சொல்ல வேண்டு கின்றேன், இமயமுதல்வியேயென்றுஎப்பொருட்கு மிறைவன்கேட்க, இறைவி தமக்குஉசாத்துணைவியாகிய விசயையென்னும்உயிர்ப்பாங்கியைமுகநோக்கித் தமதுகருத்தைத் தெரிவிக்கக்குறிப்பித்தருள, அக்குறிப்புணர்ந்தவிசயை இறை வியைநோக்கி எமக்கு இது கட்டளையிட யானென்னதவஞ் செய்தேனென்று வணங்கிநின்று இறைவனைநோக்கி எவ்வுயிர்களையும் இயக்கும் இறைவனாகிய மறைமுதல்யோகியை மணஞ்செயற்பொருட்டு எண்ணி இமயமலையில் தவஞ் செய்கின்றனள்என்றுபடித்துச்சொல்லவே, ஆனந்தத்தாண்டவராயன்உலகைப் பூத்தும் காத்தும் அழித்தும் மறைத்தும் அருளியும்வரும் இறைவன் ஐவரும் அறிவரிய புயங்காடகன், இவர்செய்யும் தவத்திற்கெளியனே! அவன் எய்தி னும் இவரை விருப்பொடுமணப்பனே! இதனை இறையேனுமறியாமல் தவஞ் செய்யா நின்றனர். சங்கர னெவர்க்கு மெளியனே! அல்லற்பட்டு இவர் தவஞ்செய்வதனாலாம் பயன்யாது! தவத்தாற்பலகாலம் வறிதுபோக்கினர் ; விரைவாகத்தவஞ்செய்வதினின்றும் விட்டொழிவதே அவர்க்குரியகடன்மை யென்றெண்ணுகின்றேனென்று தவவடிவங்கொண்டுநின்ற சங்கரன்சொல்ல, எப்பொருட்கும் முதல்வி கேட்டு இவரோ எமதிறைவற் கன்பராவாரென்று துணிந்து எடுத்துச்சொல்லியதன்றி வேறன்று, இவரோ இக்கொடுமொழிகூறு கின்றனர் என்று சினங்கொண்டு மனம்நொந்து அழலிடைப்பட்ட மெழுகே போன்றுருகி பெருமூச்செறிந்து நாணொழிந்து பொறாது இறைவனைத் தாமே முகம்நோக்கி முடிவிலாற்றலையுடைய முதல்வன் என் விருப்பினைக்கண்டருளி மணஞ்செய்யானேல் என் தவநிலையைவிடுவனே! இன்னும் அருந்தவம்பலகால் செய்து என்னுருபிர்கழிவேன்; நீரோ மிகமூத்தவடிவத்தீராதலின்பித்துடையி ரோவென்று கூறிநிற்க, மீட்டுமோர்புணர்ப்பினை யுள்ளத்தேநினைந்து நீவிரும் பிய நாட்டமூன்றுடைய நம்பனாகிய அருட்பெருஞ் சோதியின் வளத்தியலை நன்குய் ஆராய்ந்து கேட்டிலாய்போலும், வேண்டினையேல் கூறுகின்றே னென்று சொல்லத்தொடங்கினர்.

இமய முதல்வியே நீ விரும்பிய கண்ணுதற்கடவுளுக்கு ஆடையோ தோலாம்;வாகனமோவிடை; அணிகலமாவன அரவும் என்பும் வெண்டலையும் பன்றியின்கொம்புமாம் ; பாத்திரமோ பிரமகபாலம் ; உண்ணுமுணவோ ஆல

விடம் ; நாடகசாலையோ சுடுகாடு ; அணிந்துகொள்ளுவதோ வெள்ளெருக்கு, அறுகு, கங்கை, கொன்றைமலர், அரவு, நொச்சி, ஊமத்தமலர், கூவிளமுதலி யவாம் ; சாந்தமோ வெண்பொடி ; கையிலேந்துவனவோ சூலம், மான், மழு, துடி, அழல்; தம்மைச்சூழ்ந்துவரும் படைகளோ பூதகணங்கள் ; தந்தைதாய் சுற்றமென்பாரு மொத்துணையுமில்லான் ; வடிவுகுணமென்பனவும் எத்துணையு மில்லான் ; அவனுக்கு இனையவாகிய பலவளமுண்டு. அவையனைத்தும் நினக்குரிமையாகவோ தவம்புரியாநின்றனை! இவையனைத்தும் மலைக்குலத்துக் கெல்லாம் அரசன்பாவையாகிய நினக்கடுப்பதோ என்று சொல்லிமுடிக்கவே, இவையனைத்தும் மலையரசன் மடப்பாவைகேட்டுக் கைகளாற் காதுகளைப் பொத்திக்கொண்டு கண்ணுதற் பெருமான் றிருநாம மைந்தெழுத்தினையுஞ் செபித்துப் போற்றி நெஞ்சிரங்கிக் கொடியகோபமுடையவராய்த் துன்பத் தால் நெடிதுவருந்தி இவைகளைக் கூறுவாராயினர்.

நீர்தவவேடங்கொண்டது காட்டிலுள்ள புள்ளினங்களைக்கவரும் வேடன் அவைகளைப் படிப்பதற்குக் கொண்ட வுருவம்போலு மென்பதல்லது உள்ள வாறு எமதிறைவன் பெருமையை யறிந்ததனாலன்று. சற்றுஞ்சிவநேசமில்லாது இழித்துக்கூறினை ! அவன்பெற்ற வகைகளையும் சிறிது மறிந்தாயில்லை. என்முன் ஒன்றுமறியாதுபேசினை, இதுவரையும் உடம்பு மூத்தும் வேதங்கள் அவனைக்கூறும்பரிசு சிறிதேனு மறிந்திலை. வேதங்கள்கூறும் பரிசினையறியாது தீயவொழுக்கமேற்கொண்ட சிலர் முக்கட்பெருமானையிகழ்ந்து முத்திப்பெருஞ் செல்வத்தையெய்த முயலாமைபோல முன்னைநாளில் வேதியர்பெற்றசாபம் நின்னையு மயக்கிற்றோ! தாதையாய்த் தம்மைத்தந்து தமது தொழிற்குரியா னைப் ஆதியாகித் தமக்கின்றியமையாச் சிவபிரானையொழிந்து ஏதிலார் பக் கஞ்சார்ந்து அறவொழுக்க மிகந்தார்போன்ற வேதியர் முறைமையேசெய் தொழிந்தனை ! நின்னை வெறுப்பதனால் ஆம்பயன்யாது! அவ்வாறுயினும் அம் மறையோருள் அருமறைகூறும் சிவவேடந்தாங்கிநின்றுஎமதுபெருமானுக்குத் தொண்டுசெய்வாருமுண்டு ; அவர்போலும் நீவேடங்கொண் டிருக்கின்றனை ! நீ அவ்வேடமாத்திரத்தால் விளங்குகின்றனையன்றித் தீயார்பிறர் நின்போல்வா ரில்லை. நீயோ வேண்டுதல் வேண்டாமையிலானாகிய விமலனை யிங்கு இகழ்ந் தனவனைத்தும் யாரையும்அளிக்கின்ற அன்பேபூண்ட அறிகுறிகளேயாம்;ஆக வின் அவைகள் அனைத்தும் புகழ்ச்சித்திறமேயா மன்றி இறைவன் இயற் கையனைத்தும் எவரோயறியவல்லார். பிரமன்முதலியதேவர்களெல்லாம் வழி பாடுசெய்துவணங்கக் குற்றமொன்றில்லாத இறைமைக்குணமுடைய இறை வன்செயலனைத்தும் விருப்புவெறுப்பில்லாச்செயல்களேயாகும். பேதைமைக் குணத்தால் நீயிகழ்ச்சியேபோற் புகழ்ச்சியுங்கூறினை. இம்முறையே மறைகள் முதலிய ஆப்தகலைகள் எடுத்துக்கூறின; இவைகளனைத்தும் செம்மைக்குணம் பூண்ட மனத்தாரறிவர்;இறைவனை நிந்தைமொழிகூறிய அந்தணனே! நினக்கு இவையனைத்துங்கூறுவனேல்பெரும்பாவமுண்டாம், பொய்மறைவேடத்தோய் போதியென்று சொல்லியருளினள்.

அறப்பெருஞ்செல்வி இவ்வாறுசொல்லியருள இறைவன் உன்பாற்பரிவாய் இத்தனையுஞ்சொல்லிய என்னைப்புறத்தே போதியென்றுபுறக்கணிப்பது தகுதியாமோ! யாம் எழுந்தருளியதன்மை மறைகள் சடங்குகாட்ட உம்மையா மணஞ்செய்துகொள்ளவந்ததன்றி வேறன்று என்றுசொல்லவே அம்மொழி கேட்டு இறைவிதமது செவிகளைப்பொத்திக்கொண்டு பெரிதுமனமழுங்கி உடல்பதைப்பப் பொருமிவிம்மி இம்முதியானோ நம்மைவிட்டகலான்; நாமேபோய்விடுவது நலமென்றுதுணிந்து தமது செம்பஞ்சூட்டியபாதஞ்சிவப்ப ஆங்கோர்புறத்திற்செல்லத்துணிந்தனள்; அவ்வாறு இமயமுதல்வி போகத்துணிதலும் இறைவியினுள்ளக்கருத்தினையறிந்து அளவில்லாமகிழ்ச்சியடைந்து தாமுந்தொடர்ந்துசென்றுதமது பொய்வடிவநீங்கிமால்விடைமேல்நந்திபெருமான்முதலிய பிரமதகணங்கள் தம்மைச்சூழ்ந்துவர என்றுந் தொலையாவிருநிதியாகிய இறைவன் இறைவிமுன்தோன்றியருளினான். இறைவன் மால்விடைமீது எழுந்தருளியவண்ணம் கண்டுமனம்நாணி மலையரையன்மகள் பலகாலும் அஞ்சலிசெய்துவணங்கி அளவிடப்படாத உணர்வையுடைய ஆதிபகவனே நின்னுடைய மாயையறியேன்! அறிவிலாச்சிறியேன் இகழ்ந்த அனைத்தையும் பொறுத்தருளவேண்டுமென்று விண்ணப்பிக்க, இறைவன் தவவுருவங்கொண்ட இமயமயிலே! நம்மிடத்தன்பால் நீமுன்சொல்லிய இகழ்ச்சியனைத்தும் புகழ்ச்சியாகக்கொண்டனம்; குற்றமுண்டாயினன்றோ பொறுப்பதென்ப தொன்றுண்டு; இனிநீதவஞ்செய்து வருந்தவேண்டாம்; உன்னை நாளை மணஞ்செய்ய வருகின்றோம்; நின் திருமனம்நாடிச் செல்கின்றோமென்று மறைந்தருளலும், மலையரையன்பாவை மகிழ்ச்சியடைந்து இறைவனை நினைந்துவணங்கி அங்கேயே வாசஞ்செய்துகொண்டிருந்தாள். இறைவன் எழுந்தருளியசெய்கையை மலையரசனுக்குச் சிலர்சென்றுசொல்ல உள்ளத்தில் அயர்ச்சிநீங்கி தன்மனைவியாரோடும் உமாதேவியாரிருக்குமிடம் அணைந்து அவரைத் தன்நகரத்தினையடைவித்தான். இதுநிற்க;

தவங்காண்படலம்

முற்றிற்று.

---

# மணம்பேசுபடலம்.

---

இமாசலபுத்திரி செய்யும் நோன்பினைக்கண்டு அருள்புரிந்த இறைவன் கயிலை மலையை யடைந்து சத்தமுனிவரைவர மனத்திலெண்ண அதை யுணர்ந்த அம்முனிவரெழுவரும் பயந்து உடல்நடுங்கி விரைவாகக் கயிலை மலையை யடைந்தனர். அவ்வாறு அடைந்த அவர்கள் பிரமன்மால் முதலிய தேவர்களாலும் அறியப்படாத அரும்பெருஞ் சோதியே! அத்தேவர்களோ நின்குற்றேவல் செய்வதற் கருகராயிருக்க, துரும்பினும் பற்றுதளளியேங்களை யாது கருதி நினைத்தீர்! யாங்கள் செய்ததவம் அவர்கள் தவத்தினும்அதிகம் போலும்! எங்களைத் தேவரீர்வர நினைந்தமையால் யாங்கள் பிறவிப்பிணியற வொழிந்தோம்! இனி யெங்களுக் கொருதீங்கு மணுகாது. சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகம் என்னும் ஐந்தொழிலையுமியற்றும். ஆதி பாண்டரங்கனே! எங்கள் கொடியபாவமெல்லாம் நீங்கநினைந்தீராகையால் நீர் விரைவாகக் கட்டளையிடவேண்டிய காரியம் யாதென்று வினவினர். அனுதி மலமுத்தனுகிய பரமசிவன் அம்முனிவர் சொல்லிய சொல்லைக் கேட்டு நீங்கள் மலையரையனைக்கண்டு எமக்குத் தன்மகளாகிய பார்வதியாரை மணஞ் செய்யக்கேட்டு நமது சந்நிதானத்தினை யடைமினென்று கட்டளையிடவே, அக்கட்டளையை யேற்ற முனிவரெழுவரும் அவ்வாறே செய்கின்றோமென்று விடைகொண்டு சென்று இமயமலையையடைந்து மலையரசனுக்குத் தமதுவரு கையையறிவிக்க, அம்மலையரசனும் தன்மனைவியோ டெதிர்சென்று வணங்கி அவர்களைத் தகுந்த ஆசனத்திலிருத்திப் பூசித்து ஒப்பில்லாத உமது பாத தாமரைகள் இங்கே பொறிக்க யான் என்ன தவஞ் செய்தேனே! இதனாலே யன்றோ மேருமலை முதலிய மலைகளினும் யான் உயர்ந்த பேறடைந்தேன். என்னுடைய கொடியபிறவியும் வேரோடின்றே யகன்றது. சத்தமுனிவராகிய நீங்கள்எழுவிரும் இங்கோடிவந்த காரியமென்ன ?தெரிவிக்கவேண்டுமென்று வணங்கிக் கேட்க, அதற்கவர்கள் உலகமீன்ற அபீதகுசாம்பையை எல்லா வுயிர்க்கு முயிராயுள்ள பரமசிவன் மணம்செய்யநாடி எங்களை யனுப்பினர். இதுதான் எங்கள் வரலாறென்று முனிவரெழுவரும் மெடுத்துச் சொல்லினர். அதைக்கேட்ட மலையரசன் எவ்வுயிரையு மீன்ற உமையன்னையை இறை வனுக்கு வேதவிதிப்படி திருமணஞ் செய்விப்பதன்றி எம்மையும் அடிமை யாகக் கொண்டருளவு மிசைந்தேனென்று தன் கருத்தை வெளியிட, அவ னருகே யிருந்தமேனையோ முன்னாளில் தாமரை மலரிலிருக்கும்பிரமன்குமார னுகிய தக்கன் தன் மகளாகிய தாக்ஷாயணியை வேதவிதிப்படி திருமணஞ் செய்து கொடுக்க, ஆயிரமுகக் கங்கையாளை மதிமுடியிற்கரந்த மாசிலாமணி அவன்றலையைக்கொய்து அத்தலைக்குப்பதிலாக ஆட்டுத்தலையைப் பொருத்தினு னென்பர். அதனை உன்னுந்தோறும் என்னெஞ்ச மஞ்சாநின்றது! ஆகையால் எங்கள்அருந்தவப்பயனுகியஉமையன்னையை அச்சங்கரனுக்கு வதுவைசெய்து கொடுப்பது எவ்வாறென்று தெரிவிக்க, அம்மேனையைப்பார்த்துச் சத்த முனிவரும் நீ சற்றும் வருந்தவேண்டாம், நீயோ இறைவனதுகருணைச் செய லைச் சிறிது மறிந்தாயில்லை. இறைவனுக்குரிய அவிர்ப்பாகத்தை யளிக்காமல் அவ்விறைவனை யிகழ்ந்தமையால் அருட்பெருங்கடவுள் அவன் தலையைக்

S 8.

கொய்தானென்றறி. உலகில் தம்மை யன்பாலடைந்த மெய்யடியார்க்கு அறக்கருணைசெய்வதும் அடையாதவர்க்கு மறக்கருணைசெய்வதும்இறைவன் செய்கையேயாம். இதனையாவரும் மனத்தின்கண் துணியவேண்டுவதேயுசிதமாகும், நீதிடமாக வுணர்ந்து வேறுசிந்தனை செய்யவேண்டாமென்று கூறினர்.

இவ்வாறு முற்றத்துறந்த முனிவரெழுவருஞ் சொல்லக்கேட்டு மலையனையன் இதுவே யுண்மையான செய்கையென்றுரைத்தலும் அயலில்நின்றமேனையும் மிகப்பயந்து அனாதிமல முத்தனாகிய இறைவனது திருவருட் செயலினை யறியாது இவ்வறியாமையுள்ள சொற்களை சொன்னேனென்று மனத்தில் வருத்தமெய்தி அவர்களுடைய மலர்போன்ற பாதங்களை வணங்கி 'எண்ணறக்கற்று மெழுத்தறவாசித்தும் பெண்ணறி வென்பது பெரும்பேதைமைத்தே' என்றபடி பெண்ணறிவுடையேனாதலால் யான் பெரும்பேதைமையையுடையேனாயினேன். இறைவனது திருவருட் செயலைச் சிறிதுமறியேன். புண்ணிய சொரூபர்களாகிய முனிவர்களே! என் புன்மையாகிய சொற்களைப் பொறுத்தருளவேண்டு மென்றுவணங்கினாள். இவளும்பணிவைப் புலப்படுத்தியமொழியை யுடையாளாய் வணங்கி நிற்கவே அம்முனிவரும் அளவிடப்படாத கருணைசெய்ய அதைக்கண்டு ஒப்பமைக்கவொண்ணாத முனிவர்களே! இவள் சொல்லை யொருபொருளாக மதிக்க வேண்டுவதில்லை. நமது பரம்பரனைக் கலியாணக் கோலமாய் வரச்சொல்ல வேண்டுமென்று பேசினன். அம்முனிவரும் இமயமலையை யகன்று தன்னொடும் ஒப்பில்லாத் தனிச்சிலம்பாகிய திருக்கயிலாய வரையையடைந்து இரண்டாவது சம்புவாக விளங்கும் நந்தி பெருமான் கட்டளை பெற்று சினகரத்துட்புகுந்து அளவில்லாத மகிழ்வொடும் ஆதிபாண்டரங்கனைத் திருவடி தொழுது வணங்கி நடந்த பரிசனைத்தும் நம்பிக்கும் உணர்த்தி விடைபெற்றுத் தமதிருக்கை சென்றணுகினர். இவ்வாறு குறையகன்ற எழுமுனிவரும் தத்தமதிருக்கையைச் சென்றணுகிய பின்பு இமயமலையில் மலையரையன் செய்கையை இனிக் கூறுகின்றேன்.

மணம்பேசுபடலம்
முற்றிற்று.

---

## வரைபுனை படலம்.

---

மலையரையனே நெற்றியி லொற்றை நாட்டத்தையுடைய இறைவன் உமை தவஞ்செய்வதுகண்டு மண்ணினுள்ளார் புகழ இனிவதுவை செய்வோமென்றதும், சத்தமுனிவரும் அத்தனுக்குத் திருமணம் பேசச்சென்றது முதலியவற்றைச் சிந்தித்து மகிழ்ச்சியிற் சிறந்தானாய் அளவிலாத உயிர்கட்குள்ளும் புறம்பும் எள்ளி னெய்போற் பிரிவறக்கலந்திருக்கும் பெருந்தகைக்கொரு தன்தவத்திற்றோன்றிய உத்தமியை மணஞ்செய்விக்கும் வகையை மதித்துத் தெய்வத் தச்சனை யன்பாகநினைக்கவே, அத்தெய்வத் தச்சனும் அவ்விமயமலையை யடைந்து என்னை நினைப்பானேன்? யான் செய்யத்தக்கதாகிய குற்றேவல்யாது? உள்ளவாறு எடுத்துச்சொல்ல வேண்டு மென்று

வினவ, அதற்கு மலையரசனும் என்னை எழுமையு மாளாகவுடைய கண்ணு தற் பெருமானுக்குயானருந்தவத்தாற் பெற்ற அரும்பேறாகிய பெண்ணமுதத் தைத் திருமணஞ்செய்வித்தற் பொருட்டு இவ்விமயமலைமேல் உள்ள எனது நகரத்தை அழகமைந்த பொன்னகரம்போல ஒப்பனை செய்யவேண்டுமென்று வேண்டப் பெருமகிழ்ச்சி சிறந்து அங்கரினை ஒப்பனை செய்யநினைத்து அம் மலையிலுள்ள நீண்டதருக்களின் வரிசைகளைக் கால்களாகவும், பலகப்புக் கிளைகளையும் கழிகளாகவு மூடி அதன்மேல் தவழும் மேகங்களைப் பந்தராகவு மமைத்து ; கோபுரம், மன்றங்கள், சூளிகைகள், மாளிகைகள், தேர்நிறுத்துஞ் சாலைகள், அத்தாணிமண்டபம், நாடகசாலை, வேதிகை முதலியவற்றையும் நிருமித்து ; கொடிகள், பந்தர்கள் இவைமுதலிய வமைத்து ; சாமரையும், முத்துமாலைகளையும்தூக்கி; வாழை,கமுகுவரிசைவரிசையாக நட்டுதோரணந் தூக்கி; இருநிதிக்கிழவனாகிய குபேரனுடையஅளகாபுரியும், இந்திரனது அம ராவதியும் இந்நகரத்திற்குச்சமானமென்னுமலிருக்கும்படி யமைத்து, இனி ஒருபுறத்தை உலகனைத்தையளிக்கும் இறைவனுக் கிருபுறத்தினுஞ் சூழ்ந்து வரும் அளவில்லாததேவரும், பிறரும் சார்ந்திருக்கப் பதினாயிரம் யோசனை விஸ்தாரம் மதிலொன்றைப்புனைந்து; கோயிலினொருபுறத்தேயமைத்துகோபுர வாயில்கள் நான்கினையும்முறையாகச் செய்து அதனடுவில் எல்லா வுயிரையு மீன்ற கருணை வடிவியை மங்கலவதுவை செய்யும் சாலையைப் பொன்னால் கயிலையின் கோலம்போல அழகுபெறச்செய்து ; அளவில்லாத வேதிகைகளை நிருமித்துக் கண்ணாடி, பூமாலை, கவரி, பலதுகில், மணிமாலைகள் இவைகளைத் தூக்கி;இறைவனோடு திருமணங்காணவரும் தேவர்கள் கண்களுக்கு விருந்து செய்யச் சமைத்துப் பின்புதேவரும் முனிவரும் திருவன்னரும்பாவையினாற் சிருட்டித்துஅவைகட்குகவரி,பூமாலை, வீணைமுதலியவற்றையேந்திவரும்ஏவ லாளராகச் சமைத்து, பெண்களாகச் சமைத்த பாவைகள் மத்தள முதலிய வாத்தியங்கள் முழக்கப் பண்ணொடு களிநடம் பயிற்றுவோராகப் புனைவித்துக் கிளி, மயில், சக்கரவாகம், புறா, யானை, பரி, வீரர்முதலியோராக மணிகளால் ஓவியங்குயிற்றி, இறைவியும் எப்பொருட்கு மிறைவன் இனிதுவீற்றிருக்கும் படி இந்திர நீலரத்தினத்தால் சிங்கம் சுமந்த ஆசன மொன்றமைத்து, கண் டார்கவரும் சந்திரகாந்தக்கல், பொன், பவளம், முத்து, வயிரம்,பதுமராகம், முதலிய இரத்தினங்களால் குண்டமும் வேதிகைவகையும், குற்றமற்றசிறப் பினையுடையமண்டபங்களும் கலியாணமண்டபமும்செய்து தேவமங்கலமாகிய கண்ணாடி, பூரணகும்பம், இடபம், இரட்டைச்சாமரம், ஸ்ரீவற்சம்,சுவஸ்திகம், சங்கம்; தீபமுதலியவையேற்படுத்தி; பின்பு நீலோற்பலப் பொய்கை,செங்கழு நீரோடை, தாமரைப்பொய்கை முதலிய நீர்நிலைகளும், மரகதமேபாசையாக வும், பளிங்கு, வயிரம், மாணிக்கம், பொன்இவைகளா லமைந்த மலரோடை களும்செறித்து கற்பகம், மந்தாரம், பாரிசாதம், அரிசந்தனம், சந்தானம், கதலி, சந்தனம், கமுகு, மா, பலா, புன்னை முதலிய விருட்ச சாலங்களையும் அணியணியாகஇன்னவகையெனத் தேவராலும் அமைத்தற்கரிதாகச்செய்து முடிப்ப,அச்சிறப்பினை மலையரசன் கண்டு மகிழ்ச்சியடைந்தான். இது கிடக்க;

திருமால், பிரமன் முதலிய தேவரும், பெருந்தவத்தினையுடைய முனிவரும்,மாதவப் பன்னிமாரும்,அன்பொடும்உலகமாதாவினது திருமணக்காட்சி காணவரும்படி பலவிடத்தும் தூதரையனுப்பவே, மலையை வில்லாகக் கொண்டு முப்புரம் பொடிபடுத்திய முதல்வனது திருமணக்கோலங்காண வருவோ மென்று அவரும்சொல்லிவிடுத்தனர். வெற்றிமிகுந்தபுலிவாகனத்தினையுடைய துர்க்கை, யாமளை, காளி, சத்த நதிகள், இவர்களும் இமயமலையை யடைந்து இறைவியை வணங்கி யொருபுறத்திருந்தனர். மலர்மகள், கலைமகள், சசி, இருடிபத்தினிமார் முதலியோரும் தத்தங் கணவர் கட்டளையால் இறைவியைச் சென்றடைந்தனர். திருமகள் முதலியோர் தாம்செய்த நற்றவத்தால் உடல் வருந்தியிருக்கின்ற உலகமீன்ற உமையம்மையின் திருவடி தொழுது தவவடிவம் நீங்கி எண்ணிலாத அழகுக்கோ ருறையுளாக விருக்கின்ற உமாதேவியின் திருமேனியை இறைவன் வழிபடும் இயல்பினர் போலக் குறையில்லாத நிலைமையாற் கோலஞ்செய்து நின்றனர். இவ்வாறிருக்க மேரு, மந்தரம், மைநாக முதலிய சகல மலைவர்க்கங்களும், எழுகடல்களும், நாகராசரும் திக்குப்பாலர்களும் வந்து சேர்ந்தனர்.

இத்தருணத்தில் மலையாசனும் தமதுறவினரோடு பிறரும் ஒருங்கடையக் கயிலைவரையை யணைந்து முதற்றிருவாய்தற்றடை நீங்கி நந்திபெருமானது விடைபெற்று எவ்வுயிர்க்குயிராகிய இறைவனைத் திருவடி தொழுது முன்னாளில் உலகமனைத்து மீன்ற வொருபெருமுதல்வியாகிய உமாதேவியைத் திருமணஞ் செய்துகொள்ள இசைந்தாய், சோதிடநூலார் மதிக்கும் பங்குனி மாதத்து உத்தர நன்னாளின்றேயாகும், ஆகையால் கருணைமேற் கொண்டு இறைவியைத்திருமணஞ்செய்துகொள்ளுதற்குத்திருவுள்ளமாய் தேவர்களோடு எழுந்தருளவேண்டும் என்று இறைவனை யடிதொழுது கேட்க, அதற்கு நீலகண்டத்து நின்மலக்கொழுந்து இப்போதேயாம், அளவிடற்கரிய தேவகணங்களும், இருடிகணங்களும் பிரமதகணங்களும் புடைசூழ்ந்துவர வருகின்றேம். நீ முன்னே போவென்று கட்டளையிட அதைக்கேட்டு அகமும் புறமுங் களித்து திருவடிதொழுது விடைபெற்று மலையரசன் விரைந்துசென்று தன் உறவினரோடும் இமயமலையை யடைந்தான்.

வரைபுனைபடலம்
முற்றிற்று.

---

## கணங்கள்செல்படலம்.

---

அத்தருணத்தில் கயிலாயத்தில் ஆளுடைய பெருமான் திருவருளால் நந்திபெருமானையழைத்துநமது திருமணக்கோலங்காண முதன்மையான சிறப்பினையுடைய உருத்திரகணங்களையும், மால், அயன், இந்திரன் முதலியோரையும் தருவிக்கவேண்டுமெனக் கட்டளையிடவே, இன்பத்துன்பங்களில்லாத இறைவன் கட்டளைமேற்கொண்டு அவர்கள் யாவரும் அரைக்கணப்போதில்வரத் தன் உள்ளத்தில் நினைக்க அதையுணர்ந்து திருவருளையிறைஞ்சி

வணங்கி விம்மிதம் பத்திமை பெருமிதம் மகிழ்ச்சி முதலியவும் பிடர்பிடித்துந்த ஸ்ரீ கயிலாயத்தை யடையவேண்டுமென்றெண்ணி நெற்றியில் ஒற்றை நாட்டமுடைய ஐம்முகத்தரசே! மூலாக்கினியையொத்த இடபகேதுமுதலாகிய சூலாயுதமேந்திய கையையுடையார் ஆயிரங்கோடிபேர்சூழக் காலாக்கினியுருத்திரனும்; சுழல்கின்ற சூறைக்காற்றும் வடவாமுகாக்கினியும் தொலைய எல்லா உயிர்த்தொகைகளும் வருந்த வுயிர்க்கும் வலிமையுடையோர்எழுபத்திரண்டு கோடி பூதகணங்கள்சூழ மழுவாயுத மேந்திய பிரமாண்டருத்திரனும்; நீண்ட பாதாளத்தில் வசிப்பவராயும் நெற்றிமேற் கண்ணை யுடையவராயும் பெருமையமைந்த பல்வேறுநிறமுடையாராயும் பெருமையு முடையாராயும் கோடிகோடியாமுருத்திர கணத்தவர்|கூட்டத்துடன் சூழஆடகேசவுருத்திரனும்;கோரமிகுந்த ஆயிரலக்ஷங்கோடி பூதகணங்கள் சூழவும் பிரமன் முதலிய தேவர்களெல்லாரும்அஞ்சவும்சரபமாய்வந்தருள்புரிந்த வீரபத்திரரும்; மலைகளால் தாங்கப்படும் உலகோடு ஆருயிர்வருக்கமும் ஓர்விரலிற்கொண்டுதாங்கும் பூதவெள்ளம் நூறுகோடி சூழ்ந்துவரஅந்நாளில் அரியரனிருவர் கலப்பாலும் பிறந்து செண்டு கையில்ஏந்துகின்ற ஐயனும்; முன்னைநாளில் பிரமன் சிருட்டித் தொழில் செய்ய முடியாமல் வருந்தலும் முக்கட்பெருந்தகையின் பேரருளால் அவனது நெற்றியின்கண்வந்துதோன்றி அப்பிரமனுக்குக் கருணைசெய்து மெய்யுணர்வுமுதலிய வரவுதவிய பதினொருகோடி உருத்திரரும்; இவ்வகையானஉருத்திரபேதங்களே யல்லாமல் பலபுவனங்களையு மளித்துஅவ்விடத்திலெழுந்தருளி இறைவனன்புறு முருத்திரகணங்களும் புத்திதத்துவத்திலுள்ள சூக்குமபுவன மெட்டின் அதிபதிகளாகிய அதிசூக்கும புவனட்டகமாகிய பைசாசம், இராக்ஷசம், யாக்ஷம், காந்தருவம், மாகேந்திரம், சௌமியம், பிராசேசுவரம், பிராமம் என்னும் புவனேசுவரரும்; கடலைத் தூர்க்கும் எண்ணூறுகோடிபூதவெள்ளஞ்சூழச் செஞ்சடையுடையாராகிய பவர்முதலிய அட்டமூர்த்திகளும்; ஏறுபோலும் அதட்டுகின்றவரும் இறைவன் அக்கமணிமாலைபூண்பவருமாகிய நூறுகோடி பூதவெள்ளஞ் சூழக் குண்டோதரனென்னும் பூதநாயகனும்; எல்லாஅண்டங்களையும் உயிர்த்தொகைகளையும் அழித்து முன்போலவே சிருட்டிக்கவும் வல்ல நூற்றிருகோடி பூத வெள்ளஞ் சூழக் கண்டாகன்னனும், பிஙகியும்; ஆயிரமுகமும் ஈராயிரங் கையையு முடையராய் மேலோங்கிகின்ற பொன்மலை போலும் நிறம்படைத்து நூற்றைம்பது கோடி தானைத்தலைவர் சூழப் பானுகம்பனென்னும் பூதவீரனும்; தங்கள் பெருமிதத்தையே மதிக்கும் தேவர்கள் சிரங்களையும் கேசத்தையும் பறித்து ஆயுதங்களையும் கவர்ந்து உயர்வடையும் பலகோடி கணங்கள் சூழச்சங்குகன்னனும், காளகண்டனும், தண்டியும்,நீலனும், கரனும் வரப்போரில் வல்ல விச்சுவமாலியும், மற்றும் சிங்கப்போலுந் திறலையுடைய பல பூதவீரரும் அவருடன் அனந்தவெள்ளமும்; எமனது வலிமையைக் கடந்த பூதகணங்கள் நூற்றுமுப்பது கோடி சூழத் திரிபுராந்தகன் பாதங்களிலே யன்புமிக்கு உயர்ந்த ஈசானனும்; அன்னவடிவங்கொண்ட திருமாலும் அயனும் இந்திரன்

முதலிய இறைவரெண்மரும், தேவர்களும், சூரியரும், சந்திரனும், தாரகா கணங்களும்,மற்றைக்கிரகங்களும்,வசுக்களும், வித்தியாதரரும், முனிவரரும், மற்று முள்ளோரும், வேதசிவாகமங்களும், மந்திரங்களும், பிருதிவி முதலிய பஞ்சபூதங்களும், காலதத்துவமு மாதியாகிய யாவும் தெய்வவுருக்கொண்டு வந்திருக்குஞ் சமயத்தில், நந்தி பெருமான் கண்டு மகிழ்ச்சி யுடையாராய் உட்புகுந்து இறைவனை நோக்கி இவ்வாறு அவர் வருகையை யெடுத்துச் சொல்ல அவர்களையெல்லாம் தமது சந்நிதானத்தின்முன் வரக் கட்டளையிட சைலாதியாகிய நந்திபெருமான் இறைவன் சந்நிதான மடைவிக்கச் சிங்கஞ் சுமந்த திருவணையின்மேல் வீற்றிருக்கும் இறைவனைத் தரிசிக்கப் பெற்று பேரன்புடன் திருவடி தொழுது வணங்கித்துதித்து விரைவினணுகியிருப்ப, அங்கு நந்திபெருமான் திருவேத்திரப் படையேந்திய திருக்கரத்தின் விரலாற் சுட்டி இவருருத்திரர்களென்றும், இவர்கள் பூத கணங்களென்றும், இவர் மாலயன் இந்திரன் முதலிய தேவர்களென்றும், இவர்கள் முற்றத்துறந்த முனிவரென்றும் வேறு வேறாகக் காட்டியருளி வணங்கி நின்றனர்.

அத்தருணத்தில் காலாக்கினியுருத்திரன், கூர்மாண்ட வுருத்திரன், ஆடகேசுர ரெண்மர், வீரபத்திரர் முதலிய உருத்திரகண நாயகர் துதித்து வணங்கவும், பூதவெள்ளங்கள் திருவடிதொழுது வாழ்த்தி யேத்தெடுத்துநிற்கநான்கு முகங்களையுடைய பிரமன் ஆகிய உந்திவந்தோன் பொன்முடி, ஆரகேயூர கடக கங்கண வாகுவலய முதலிய ஆபரணங்களைக் கொண்டுவந்து பொன்னாலாகிய் பீடிகையின்மேல் வைத்து வணங்கி எப்பொருட்கு மிறைவனே! நீ பற்றற்ற பரம்பொருளேயாவாய்! அடியேங்கள் உய்யும் வண்ணமே யோகியாயிருந்துயோகத்தை யுதவுதலொழிந்துபோகியாயிருந்து போகத்தைத் தருவதற்கு எண்ணியே திருமணஞ் செய்து கொள்ள விசைந்தனை? அடியேங்களிடத்துக் கருணைமேற்கொண்டு மாசுணப்பூட்டை யொழித்து நாசுபதித்த பொன்னாபரணம் பூண்டு விளங்க வேண்டுகின்றேனென்று விண்ணப்பிக்க அவ்விண்ணபத்தினைக் கேட்டருளி அவன் அன்பிற்குக் கழிபேருவகை பூத்துத் தன் மெய்யணிகளைப் புற்றில்வா ளரவணியாகவே கொண்டருளிய பெருமான் தமது செல்கையால் அவன் கொணர்ந்த அணிகளைப் பரிசித்து நாம் அங்கீகரித்தனவேயாமென மிகவுமுகந்து நின்றனர். இவர்க்குச் சகல சராசரங்களையும் படைத்துக் காத்தளிப்பதே தொழிலெனின் இச்செய்கை யறிதாகுமோ. யாவரும் இறைவன் கோலத்தைக் கண்டு திருவடிதொழுது வணங்கவும் வண்டார்குழலியாகிய கவுரியிடத்துச்செல்ல மனங்கொண்டு அயலிலிருந்த சிவகண நாயகருக்குணர்த்தி முன்னுளில் மாலயனுக்கரிய இறைவன் எழுந்தருளுங் குறிப்பினை யறிவித்தனர். இது நிற்க;

கணங்கள் செல்படலம்

முற்றிற்று.

---

# திருக்கலியாணப்படலம்.

நான்கு தடந்தோளையும் நெற்றிக் கண்களையுமுடைய நந்திபெருமான் துதித்து முன்போகவும், தேவரும் முனிவரும் புகழ்ந்து முன்செல்லவும், தும்புரு நாரதரும் வித்தியாதரரும் பருந்தின் ஆரோகணம் அவரோகணம் போன்ற கானம்பாடிப் பின்செல்லவும், வேதசிவாகமங்கள் துதித்துப்பாடவும், வெள்ளியங்கிரியாகிய ஸ்ரீகைலாயமலையை நீங்கி தமது அழகிய திருவடிகளைக் குண்டோதரன் தோளின்மேல்வைத்து ஞானமேயோர் திருமேனிகொண்ட ஒப்பற்றமால்விடைமீது சிவபெருமான் எழுந்தருள அருகேயிருந்தவரல்லது திருநகரத்தின் கடைப்புறத்து நின்றாருங் கண்டு களிக்கும்படி ஒருங்குவணங்கியேத்திக் கடலொலிபோல் அரகரவென்னு முழக்கொலி செய்தனர். இவ்வாறு நந்திமேற்கொண்டு நந்தியென்னுந் திருநாமமுடைய இறைவன் எழுந்தருளவே யானை முகத்தினையுடைய கயமுகாசுரனைச் சங்கரித்துத் தேவர்கள் துயரமோட்டிய விநாயகமூர்த்தி ஐந்நூற்றேழுகோடி பூதவெள்ளம் தம்மைப் புடைசூழ இறைவனையடைந்து முன்னே பூசித்துச் சென்றனர். இறைவன் மால்விடையூர்ந்து வருகையில் சூரியனும் சந்திரனும் கவிகைதாங்கினர், வருணன்பனிநீர்த்திவலை சிதறியும், இந்திரனும் ஆலவட்டமும் எடுத்துக்கொண்டு அன்பாகக்குற்றேவலையும்செய்தனர். பூதவெள்ளமோ பேரிகை, கொக்கரை, சல்லிகை, கரடிகை, பீலி, சாரிகை,உடுக்கை,மத்தளம், குடமுழா, தடாரி, காகளம், ஊதுகொம்பு முதலாகிய வாத்திய விசேடங்களைச் செய்துகொண்டும், இறைவனேவலினால் உருத்திரகணங்களும், மாலுமயனும், தவமே பொருளாகக்கொண்ட முனிவரும், மற்றைத் தேவரும், தேர் விமானம் பறவைமுதலிய வாகனங்களி லேறிக்கொண்டும் பின்சென்றனர். வணங்கிநின்று தன் குற்றேவல்செய்யும் சிவகணத் தலைவரும், தவத்தால் வயிரம்பற்றிய மனமுடைய பூதரும், ஏனைய கணங்களும் நெருங்கிச்செல்ல ஸ்ரீகபிலாயமலையை நீங்கிப் பழமைபான பூவுலகம் வாழும்படி இமயமலையை நோக்கி நடந்தனன். பணமுதலிய வரம்பில்லாத வாத்தியங்களின் ஓசையும் வெள்ளிடை யில்லாமல் எங்குமொலிக்க ஆகாயமுழுதும் தூர்க்கவெழுந்த சேனைகளினோசையும், தேவர்கள் ஆரவாரமும் வாழ்த்தொலியும் கடலோசையை யடக்கிவிட இம்மயமலையையடையவே, மலையரையன் தன் சுற்றத்தோடுந் தொடர்ந்துவர இறைவனை யெதிர்சென்று வணங்கித் தன் பரிசுத்தமான நகரத்திற்கழைத்துப்போக அவனது நல்வரவைக்கண்டு அவ்வீதிகள் எல்லாம் திருவிழாக்கொண்டாடிற்று. இதுநிற்க;

அவ்வீதியில் இறைவன் பவனிவரக்கண்ட பெண்கள் அவன் அற்புதப் பேருருவைக்கண்டு வணங்கிக் கரையிடுதற் கரிய காதற் பெருவெள்ளத்திலே மூழ்கிச் செயலற்றிருந்தனர். சிலபெண்களோ அணிந்திருந்த ஆபரணங்களும், உடுத்திருந்த பொன்னுடையும், வாசனையுள்ள சாந்தமும் முடித்திருந்த மலர் மாலையும் பிறையைத்தரித்த பெருமானது வரவைக்காண மறைத்ததென்று மனந்தளர்ந்தும்; சில மாதர்கள்தமது உடம்பைச் சுடுவதனாலுண்டாகிய நீறு தானே அவன் பூசிய நீறென்றும் ; சிலர் யாழோசையையுடைய பெண்ணின் கூட்டத்தை யகன்று தலைவனைச் சேர்தலும் மேகலாபரணம் வீழ்ந்திடா

மல்வணங்கியும்; தாமரை மலரிலிருக்கிற திருமகளை யொத்த பெண்கள் தம தாடை புறத்தே சோர்ந்து விழக்கண்டு மின்போலுமிடையையுடைய பெண் களுக்கெல்லாம் ஆடையில்லையோ வென்றும்; ஆடை சோர்ந்து வீழ்வ தறியாதாராய் வீட்டில் வந்து நாம் ஆடையுடுக்கவில்லையே யென்றுடுக்க அது வும்சோர்ந்துவிழ ஊசல்போல மாதர்களெல்லாம்தம்மைவிரும்பிமால்கொண்டு வருந்தும்போது இறைவன் என்னைவணங்கென்றுசொல்ல எண்ணுமையோ என்றும்; பெண்களெல்லாம் விரும்பிவேண்டலும் சத்துருக்களைப் போலும் எண்ணியது அவனுக்கு உள்ளமும் இரும்போவென்றும்; செம்பவள மேனிச் சிவபெருமானை நோக்கிநின்றுமனமுருகுகின்ற சிலர்மனம் வெதும்பிக்கருகியும், தமதுகாதலைத் தோழியர்க்குச் சிலருரைத்தும்; சிலர்மாதர்கள்உடம்புவிளர்த் திருப்பதைப்பார்த்து முடிவில்லாத இவரைஅணைந்தாரோ அதனுலேதான் நீறு இவருடம்பில் விளங்குவதென்றுகண்டு சிரிப்பகைகொண்டும்; முடியில் தரித்த சந்திரனைக் காலாலே நடக்கவிட்டதனுல் அவன் பெண்களைத்தான் சுட்டெரித்தானல்லாமல் வேறல்ல, இவன்சீரைச்சுமப்பது மென்னகாரணமோ வென்றும்; பிரமன்முதலாகியதேவர்கள் சரணுகதியென்றடைய முன்னுளிலே உண்ட ஆலவிடத்தைப்பார்க்கிலுங் கொடியதோ இப்பெண்களின் மார்பின் மேல் படுத்துறங்குவதென்றும்; பின்னேயுள்ளபெரியகாரியத்தைச் செய்து முடிக்கவெண்ணுவீராயின் ஆடவர்களெல்லாம் நல்லசுகத்தையடைய பெண் களையே வருத்துவது என்னகாரணமோ வென்றும்; இடப வாகனத்தை யுடைய இறைவன் எம்மைமணஞ்செய்துகொள்ள நாங்களேநோற்றே மென் றும்; தேவர்கள் உய்யும்படி திருமணஞ்செய்துகொள்ளச் செல்வர் மெல் லியமாதரது உயிர்வாங்க அமைந்தனர் இவ்வகையாரோசெய்வா ரென்றும்; யானையையும் புலியையும்போல்வருகிற கொடியவரைவருத்தாமல் அற்பமா கிய மான்போன்றகண்ணையுடைய பெண்களுக்குந் துயரை விளைப்பதோ வெ ன்றும்; நமது அரசன் நல்லதவத்தாற் பெற்றபெண்ணை மணஞ் செய்யும்படி சென்றவர் இங்கே எமக்கினிமையான காரியஞ்செய்யமாட்டார் சங்கரனுக் கிதுதகாதென்றும்; பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரி வை, பேரிளம்பெண் என்னும் எழுவகைப் பருவத்துமாதரும் வீதிகடோறும் நெருங்கி அந்தத் தாருகாவனத்து இருடிபத்தினிமாரைப்போலமயக்கமடைந்த னர். இதுகிடக்க;

பரமசிவன் பிரமபதத்தினும் மிகப்பொலிவுபெற்றுவிளங்கிய அந்நகரத்தி னது இராசவீதியைப்பார்த்துக்கொண்டே திருமகளும் விரும்பத்தக்க செல்வ நிறைந்துள்ளமற்றைவீதிகளையும்தாண்டி பரம்பரைஎழுந்தருளியிருக்கும்மாளி கையை யடையவே, மலையரையன் ஏவலால்வேதங்கள் இதுவரையிலும் நாடு தற்கரிய எம்பெருமான்முன்பு மங்கலதீர்த்தமேந்திக் கொண்டு வரவும்,அட்ட மங்கலமேந்திவரவும்,அறுகு, வேம்பு, மஞ்சள், அக்ஷதை, சிறுகடுகு முதலிய வற்றை யேந்தி மங்கலப் பெண்கள் வரவும், இவ்வாறு செலல எங்கள் நாய கன் எதிரே மாதர்கள் சிலர் பொருக்கென்றெழுந்திருந்து எல்லா வுயிர்களுக்கு முயிராகிய எம்பெருமானை எதிர்ந்து ஆலத்தியேந்திவந்து திருஷ்டிகழிக்கவும்

சென்று ஞானநாயகன் நட்பினோடு நடந்துபோகத் தேவர்கள் யாவரும் தத்தம் வாகனத்தினின்றுமிழிய வானமார்க்கமா யுலாவிவரும் வெள்விடையினின்று மிழிந்தான். அவ்வாறிழியப் பலமாதர்கள் தன்னைப்புடைசூழ்ந்துவர மேனை இறைவனது பாதபூசனைசெய்வதற்கெண்ணிப் பசுவின்பால் கொண்டுவந்தாட்டிக் கைதொழுதுவணங்கினாள். பிறகு நந்திபெருமான் கொண்டுவந்து பாதுகையைவைக்க அதனை யிட்டுக்கொண்டு பிரமன் மாலென்னு மிருவரும் கைலாகுகொடுக்கத் திருமணச்சாலையை யடையவே, பலவாத்தியங்களும் முழங்கின, தேவர்கள் தோத்திரஞ்செய்தனர் வித்தியாதரர்கள் பாடினர், பூதகணங்கள் ஆரவாரித்தன, கூர்மாண்டருத்திரர் ஆடகேசகர்முதலிய சிவகணத்தலைவர் புடைசூழ்ந்தனர். இவ்வாறு யாவருங்காணத்திருவோலக்கமாய் மெல்லெனச்செல்லும் பரம்பொருள் பிரமன் மாலென்னும் இருவரும்வேண்டிக்கொள்ள அத்திருமணச்சாலையிலுள்ள அலங்காரங்களையெல்லாம் நோக்குவானாயினான். உலாவுகின்ற வண்டுகள்பொருந்த செவ்விய மலர்களையுடைய சோலைகளும் வாவியும் நிலவினையொத்ததெண்ணீர்தங்கிய நீரோடையு நிறம் வேறுபட மண்டப முதலியவைகளைக் காட்டிக்கொண்டே சிலாதமுனிவர் புத்திரராகிய நந்திபெருமான்போக, அநாதிமல முத்தனாகிய பரமசிவன் பராபரையோடு மணச்சாலையிலே போடப்பட்டிருந்த இந்திர நீலத்தாற் செய்யப்பட்டிருந்த ஆசனத்திலெழுந்தருளியிருந்தான்.

அவ்வண்ணம் எல்லாமறைகட்கும் பரமாசியப்பொருளாய்நின்ற பண்ணவர்பெருமான் வீற்றிருந்தகாலத்தில் வீரபத்திரர் காலாக்கினி யுருத்திரர் கூர்மாண்ட யுருத்திரர் ஆடகேசர் முதலானோரும், தம்மைத் துதித்துவணங்கிப திருமால் பிரமன் இந்திரன் முனிவர் தேவரும்தத்தமக்கிட்டிருந்த ஆசனத்தின்கண் இறைவனைச்சூழ வீற்றிருந்தனர். இவ்வாறிருக்க முன்னைப்பழம்பொருட்கு முன்னைப்பழம்பொருள் திருமணஞ்செய்துகொள்ளவந்த காட்சிப்பெருக்கம் காணும்படிவந்த பலவண்டக்குவைகளினின்றும் யாவரும் வந்து நெருங்கினமையால் இமயமலை துன்பமெய்திப்பெரிதும் அசைந்தது. இவ்வண்ணம் இமயந்துளங்கிய சமையத்தில் தன்னிடத்திற் பூமியென்று சொல்லப்படும் துலாத்தட்டிரண்டில் வலிமையுடைத்தாகிய வடபுறந்தாழத் தென்புறமானது தேவர்கள் வருந்தும்படி உயர்ந்தது. இன்னபடி தென்புறம் ஓங்கிய காலத்தில் தேவர்களெல்லாந் தியங்கினர். மண்ணுலகத்தவர்இடுக்கணடைந்து நமக்கேதேனும் தீங்குவந்து படர்ந்ததோவென்றெண்ணித் திப்பிரமைகொண்டனர். முற்றத்துறந்தமுனிவரும் வருந்துவாராயினர். இவர்க ளெல்லாரும் சிவனேயென்று வருந்துதலும், பின்னையெப்பொருட்கும் பெயர்த்தும்பெற்றியனாகிய பெருந்தகை முறுவலித்து அன்னோர் குறைதீர்க்கத் திருவுளங்கொண்டு நந்திபெருமானைத் திருக்கண்சாத்தியருளி அந்நாளில் கடலனைத்தும் தன்னொருகரத்திற்செறித்து வயிற்றிற்பெய்த அருந்தவத்துச் செந்தமிழாசிரியனை எம்பாற்றருதியென்று கட்டளையிட்டனர். அக்கட்டளையையேற்ற நந்திபெருமான் துருவிச்சென்று செந்தமிழ்ப்பரமாசிரியனைக் கூவிக்கொணர்ந்து

சந்நிதானத்திலிட அம்மலயத்திருந்தவத்தோனுமன்றுளாடியமாமணியைமலரடிவணங்கின்றனர். அங்ஙனம் வணங்கின்ற கலசயோனியைக் கண்ணுதற்சாமி திருக்கண்சாத்தியருளி அமருமுனிவனே! நீ தென்றிசை யமர்ந்துசென்று பொதியில் வீற்றிருப்பையாயின் வையமனைத்து மேனாள்போலச்சமன்படநிற்கும், எவ்வுயிருங்களியெய்துமென்று கட்டளையிட்டனன். அக்கட்டளையேற்ற கடவுண்முனிவன் இறைவனைநோக்கிவருத்தமடைந்துயான்யாதுகுற்றஞ்செய்தேனோ! அறியேன், எம்பெருமானே! என்னை யிங்குவசியென்னாது இங்குநின்றும் அகற்றவெண்ணினையென, அதைக்கேட்டருளிய அநாதிமலமுத்த சித்துருவாகிய சிவபிரான் நமதன்ப! உன்னையொத்த முனிவருமுளரோ? அன்னவாகனத்தையுடைய பிரமனு முன்னையொப்பானல்லன் ஆகையால், நீநினைந்த செயல் ஒவ்வொன்றும் முற்றுப்பெறுதொழியமாட்டா. நின்னின்வேறுபட்ட பழமையான முனிவரானும், விண்ணவரானும் இச்செயல்முடியக்கடவதோ அன்று. எவரினுமேம்பட்ட பேறுடையநின்னாலேயேமுடிவது பெயர்கவென்று திருவாய் மலர்ந்தருளலும், அகத்தியமுனிவர் கூறலாயினர். மேகநிறத்தையுடைய திருமால் ஆயிரம்பரிமேதங்களைச்செய்து சுவர்க்காதிபத்தியம்பெற்ற இந்திரன் தேன்சிந்தும் தாமரைமலரில் வசிக்கும் பிரமனென்னும் பெருந்தேவர்கள் கிடக்க இச்செயலைக் கொடியேனாகிய யானேசெய்யக்கட்டளையிட்டனை. இதுவே கட்டளையாயின் நான்செய்ததவமே சிறந்ததாகிய நலம்பெற்றுள்ளது. இப்பணியை யான்செய்யக் கட்டளையிட்டனையேல் எம்பெரும! தேவரீரது தெய்வத்தன்மை அமைந்த திருமணக்கோலக்காட்சியினைக்கண்டு தெரிசிக்காமல் நீங்குகின்ற கவலையே என்னெஞ்சினை மிகவருத்தாநின்றதென்று விடைதந்த கும்பமுனிவனை நோக்கி வெள்ளி மலையை வீடாகக் கொண்ட விண்ணவர்பெருமான் விளம்பலாயினன்.

நம்பாலன்புடையாய்! சிந்தை வருந்துத லொழிந்து தென்மலயத்திற் சென்றாயாயின் நாம் நமது திருக்கலியாணக் காட்சியினைக்காட்டியருள்வோம், நீமகிழ்ந்து காணக்கடவாய், நம்மைநாடிச் சிலநாள் அங்ஙனே நம்மைத்தியானித்துக்கொண்டேவசி, பின்பு முன்போல் எம்மிடத்து வருவையென்றனர். அதைக்கேட்ட தமிழ்முனிவன் ஒருவாறிசைந்து மன்றுளாடுகின்ற குஞ்சிதபாதத்தை யெண்ணி யெண்ணிக்குழைந்துருகி மும்முறைவலம்வந்துபணிந்து கைதொழுதுநின்று நெட்டுயிர்த்து அவ்விடத்தினையரிதிற்பெயர்ந்து தென்றிசையெல்லையையேநோக்கிச் செல்வாராயினர். அவ்வாறு அவாசிக்கண் அகத்தியமுனிவன் செல்லாநிற்கையில் மிக்க மாயாவியான கிரவுஞ்சவரையையும் விந்தமலையையும் அடக்கி வில்வலனையும் வாதாவியையுமுடித்துக் காவிரியாற்றோடு முன்னாள் படர்ந்தவாறேபோலத் தென்றிசைநாடிச்சென்றான். வேதஞ் சொன்னபடியே யாகஞ்செய்யத்தொடங்கிய மாவலியின் வலியைக்கொண்ட காட்சியினையுடைய குறியவன்போல வேறொருகுறியவன் தோன்றினனோவென்றுசொல்ல வழிபடர்கையில் நெறியிற்படர்ந்த அவுணருள் ஒரு சிலர் நில்லாமலொழிய உள்வழியேபடர்ந்து மலயமலையடைந்து பிரமனது வலிகொண்டுள்ள முப்புரங்களையும் அழிக்கவெண்ணித் தேவரும் புவனமுமுற்றுமாகிய

வைதிகத்தேரினை யொருபதத்தா லூன்றிப் பாதலத்திலிட்ட பரம்பொருளின் திருவுருவத்தைச் சிந்தனைசெய்வாராய்ப் பொதியிலிற் பொலிவுற்றிருக்கையில் துதித்தற்குரிய வடபுறமும் தென்புறமும் துலையின்காவினைபோலச் சமனு யிற்று. அற்றைஞான்று ஆருயிர்கள் துன்பமொழிந்து அருட்பெருங்கடலைத் திருவடிகைதொழுது மனமகிழ்ந்திருந்தன. இதுகிடக்க ;

இங்கு நின்றும் விரைந்து கலசத்திற்றோன்றிக் கருங்கடலகட்டிற்பெய்த முனிவர்பெருமான் மலைமலைநோக்கிச் சென்றுஏக, பழமையான இமயமலை யில் நடக்கும் திருமணக்காட்சியினைக் காணவந்திருக்கும் முனிவரும் தேவ ரும் ஆராய்ந்து மதிபொதிந்த நெடுஞ்சடிலத்து மாமணியின்அளவிகந்த பேரரு ளும்; அவனது சிபாதங்களை முறையே வழிபட்டார் பான்மையும் பரவி நிற்கையில், மலையரசன் ஏவலால் எங்கள் அன்னையை ஐயைகாத்துவர இந்திராணி அடப்பமேந்த, கங்கைமுதலிய நதிகள் கவரிவீச, காளிகள் வெண்கொற்றக் குடைபிடிக்கத், திருமாமகள் கைலாகுகொடுக்க வெள்ளைக் கிழத்திதுதிக்க வெழுந்தருளிவந்து திருமணச்சாலையையடைந்து ஆதியந்தமில் லாத அமலனது குஞ்சிதபதத்தைக் குடந்தம்பட்டுக் கூத்துமாடித்துதித்து முழுமுதற்கடவுள் தன்திருமுன்னிட்ட ஆசனத்திலிருவெனக் கட்டளையிடத் திருமாமகள் முதலானோர் துதிக்க எழுந்தருளியிருந்தனள், அச்சமயத்தில் ஏவ லார் குழலியென்னும் நீலாயதாட்சியை நெற்றிமேலொற்றை நாட்டமுடைய நம்பனுக்குத் திருமணஞ்செய்யக்கருதி மலையரசன்ஏவலால் மேனையும் பெருந் தடப்புனலும் சந்தனமும் மலரும் பிறவும் கொணர்ந்துதாழ, மலையரசனும் கரகநீர்விடுப்பஇறைவனது திருவடிகைதொழுது சந்தனம்புட்பாட்சதைகளால் அலங்கரித்து பெருமகிழ்வோடு பூசனைசெய்வானாயினன். இவ்வாறு பூசனை செய்தபின்பு புவனமெலாங் கருக்கொள்ளாமலீன்றகருணைமுதல்வியைஅனாதி மலமுத்தனாகிய பரமசிவனது கையில்வைத்து அன்பொடுதந்தேனென்றுவேத மந்திரங்களாற் கொடுத்தருளிநீரோடுதவிமருகனென்றுஅப்பரம்பரனையுன்னிக் கொடுத்தனன். எப்பொருளும் கிரகங்களும் கொடுத்தலும் தானேயாகுஞ்சங் கரன் உலகமெல்லாமீன்ற ஒருத்தியை மலையரசன்கொடுப்ப மங்கலமுறையாற் கொண்டானெனின் அவனது திருவருளின் செய்கையையாரே யளந்துரைக்க வல்லார். அச்சமயத்தில் தேவர்கள் நடனஞ்செய்தனர்; அரமங்கையர் கானம் பாடினர் ; சித்தர் கந்திருவர் நாரதர் தும்புரு ஏழிசை யமுதகீதம்பாடினர். பூதேவரும் தேவரும் மறைமொழிகூறினர் ; வெண்டாமரைமகளும் செந்தா மரைமகளும் மங்கலப்பாடல் பாடினர் ; சல்லரி திமிலை காளம் மத்தளம் சங்க முதலிய வாத்தியமுழங்கின ; பூதகணங்கள் ஆரவாரித்தன. அத்தருணத்தில் மலையரசன் பசுவின்பால், வாழைக்கனி, பலாக்கனி, நெய், தேன்முதலியவற் றினைப் பொற்கிண்ணத்திலமைத்து இறைவன்முன் வைத்தனன். வேதச் சடங்கின்வழியே மலையரசன் வந்து இதனைத்தேவரீர் நிவேதனஞ்செய்ய வேண்டுமென்று திருவடிகைதொழுதுவேண்ட, அவற்றைத் தமது திருக்கை யாற் பரிசித்து அங்கீகரித்தோம் கொள்ளென் றுரைத்தருளிய அப்பரிசுத்த

மான சேடத்தையெடுத்துக்கொண்டு நறுமலர் சாந்தம் தீர்த்தமுதலியவற்றை வைத்து வேதநாயகராகிய பரமசிவனுக்கிது சொல்வானுயினன். ஆயிரம்பண மகுடந்தங்கிய அனந்தனல் தாங்கப்பட்ட இந்நிலவுலகமேயொழிய சுவர்க்க முதலிய உலகங்களிலுள்ளா ரனைவரும் திருமணக்காட்சியைக் காணவந்தனர் அவ்வவர்க்குச் செய்யவேண்டுவனவற்றைச்செய்து நடக்கவேண்டிய ஒழுக்க நெறியை நடத்தவேண்டுமென்றுவேண்ட புன்முறுவல்செய்து இறைவன் கருணைசெய்ய, பிரமன் அக்கினியும் அதற்குவேண்டும்பொருள்களும் மரபினல் தந்து,வியாழனும் சுக்கிரனும் ஏனைமுனிவரும் தன்புடைசூழத் தன்னெப்பில்லாத திருமணச்சடங்கு செய்யத்தொடங்கி அந்தணர்க்குரிய கடன்மையெல்லாஞ்செய்துமுடித்தான். சராசரங்களாகிய உலகுக்கெல்லாம் அம்மையு மப்பனுமாகிய சர்வலோகமாதாவையும் சர்வலோக நாயகனையும் பிரமனு மாலும் இந்திரனும் முனிவரும் வானேருமுறையே வணங்கிநிற்க அனந்தேசர், ஆடகேசர்முதலிய சிவகணத்தலைவரும் இறைவனையடிவணங்கினர். தம்மைவந்து பணிகின்றவர்கட்கெல்லாம் அம்மையுமப்பனும் பெருங்கருணைசெய்ய இது தான் தக்கசமயமென்று மலைபரசனே இறைவன்நுகர்ந்தசேடம்பரிமாறுவனென்று சிந்தித்து மறைகளெல்லா மோலமிட்டிறைஞ்சும் அச்சேடத்தினைப் பரிவோடும் அம்மையையும் அப்பனையும் அடிபணிந்துநின்றமாலயன்முதலியதேவருக்கெல்லாங்கொடுக்க அச்சேடப்பொருளை யுட்கொண்டு களிப்பெய்தி இன்றேடே நமது மூலவினைகளெல்லா முடிவுற்றதென்றிருந்தனர். அத்தருணத்தில் மலையரசனும் மேனையும் அவன் உறவினரும் அவ்வமலப்பொருளை யுட்கொண்டு வினைவலிகடந்து மேலாம்பரபோகந் துய்க்குஞ் சிவஞானச் செல்வர் போல் எல்லையிலின்பந்துய்த்தனர். இதுகிடக்க;

தன் கணவனுகிய மன்மதன்இறந்தமையால் விதவை விரதமாகிய தாபத நிலையளாகித் துன்புற்று அம்மணச் சாலையையடைந்த இரதிதேவியும் உலகெலாம்கருக்கொள்ளாமலே யீன்றகருணை முதல்வியை மணந்தகருணைக்கடலைத் திருவடிதொழுது கொடியேன் துன்பத்தைத் தவிர்த்தருளென்று வேண்டியிறைஞ்சாநிற்க, தன் சிறந்த ஆருயிர் போன்ற தலைவனில்லாது வருந்தும் இரதிதேவியின் ஆராத் துயரத்தொடுகூடிய சொல்லைத்திருச்செவியிற் சாத்தியருளி என்குணத்தொருவனுகிய இமையவர் முதல்வன் இரதியை நோக்கி நீவருந்த வேண்டாமென்று கையமைத்து மன்மதன் வந்து தோன்றுமாறு சிந்திக்கவே, நெடுமால்முதலிய தேவர்கள் எல்லாரும் மயக்கமெய்த இதுகாறும் வருந்திநின்ற இரதியும் மேகத்தைக்கண்ட மயிலைபோல மனமகிழ்ச்சியடைய யாவரையும் வில்லால்வெல்லவல்ல மன்மதன்தோன்றி,அமலையோடினிதெழுந்தருளியிருந்த அருமறை முதல்வனைத் திருவடிதொழுதுநின்று என்பிழை பொறுத்தருளவேண்டுமென்று வேண்ட யாஞ் சினங்கொண்டாலன்றே பின் பதுதணிவது என் மைந்தனே மனம் வருந்தாதை நமது நெற்றிமேலுள்ள ஒற்றைநாட்டத்தால் நின்னுடலமிருந்து தீப்பட்டொழிந்தனை ! உன்னைவேண்டிநின்ற இரதிதேவிக்கு மாத்திரம் நின்னுருக்கொண்டிருக்கவென்றும், அவளொழிந்த மற்றையர் யாவருக்கும் அனங்கனு யிருக்கவேண்டுமென்றும், உன்

னரசினை முன்னைநாள்போற்செய்து வருகவென்றும் திருவாய்மலர்ந்தருள, அதைக்கேட்டு அனங்கனும் இரதியும்இறைவன்பாற் பெறவேண்டுவன அனைத்தும்பெற்று விடைகொண்டு சென்றனர். இவ்வாறு இரதியும் மன்மதனும் விடைபெற்றுச் சென்றபின் இந்திரநீலத்தாற்சமைத்தசிங்காதனத்தில் இறைவியொடு மிழிந்து, திருமால்முதலிய தேவரும் முனிவரும் அரகரவென முழக்கஞ்செய்ய, பூதகணங்கள் பலவாத்தியங்களையும் முழக்க, மால் விடைமேல் ஆரோகணித்து உமையன்னையைத் தன்னொருபாகங் கொண்டருளித் தேவர்களைப் பழைய நிலையிற்போக்கிக் கணங்கள்புடைசுற்றப் பொன்னிமயங்கடந்து பொருவில் கயிலைவரையை யடைந்தான். அத்தருணத்தில் மூலமுமுடிவுமில்லாத முதல்வன் மலரயனேயாதி யமரர்முதலியயாவரும் தத்தமிருக்கையைச்சென்றடையக் கட்டளையிட்டுப் பின்பு காலாக்கினியுருத்திரர் கூர்மாண்ட உருத்திரர் ஆடகேசர் வீரபத்திரர் மகாசாத்தாமுதலிய உருத்திரகணங்கட்கும் அவரவர் இருக்கைக்கேகக் கட்டளையிட்டுப் பின்பு யானைமுகத்தினையுடைய விநாயகர்க்கும் கணநிபருக்கும் அவ்வாறே விடைதந்தருளி இறைவன் தன்பெருங்கோயில்சென்றடைந்து விடைத்தேவர் மீதினின்றுமிழிந்து எம்மனோர் பேருகிய குன்றுதவியகுமரியொடும் அத்திருக்கயிலாயவரையின்நடுவடைந்து அருமறைக்கொழுந்தாகிய பரமசிவன் சிங்கஞ்சுமந்த திருவணையில் முன்போல் இனிதுவீற்றிருந்தான். இவ்வாறு அடியார்க்கெளிய அனாதி மலமுத்தசித்துருவாகிய பரமசிவன் அச்சிங்காதனத்தில் இனிதுவீற்றிருக்கையில் துன்பமகன்று இருபகுதித்தாய்விளங்கு முயிர்களெல்லா மின்பமயமான போகந்துய்த்தினிதாயமர்ந்திருந்தன.

திருக்கலியாணப்படலம்
முற்றிற்று.

---

## திருவவதாரப்படலம்.

---

பலகாலும் இவ்வாறுநடக்கப் பின்னொருநாள் முதற்பெருந்தேவரான மாலயனிந்திரன் திக்குப்பாலகர் முனிவர் தேவர்முதலானோர் யாவரும்பழமையான மேருமலையிற் கூடிச் சூரபதுமனால் வருந்துதலைச் சொல்வாராயினர். உலகினைமுற்றும் அவுணர்களுக்காக்கி யோகிபோ லெழுந்தருளி நம்மிடத்து மெலிவினையுண்டாக்கி யாம்சென்று வேண்டிக்கொள்ளலும் இரக்கமுற்று மலையரசன் மகளாகிய ஏலவார்குழலியை மணந்தும், நம்மைத்தலையளிசெய்யாது சும்மாவிருப்பது என்னகாரணம் ? தாணுவாயிருக்கின்றபரமசிவன், பகையும் இவறலுமில்லாமல் யார்க்குமோர் தன்மையனாய் அவரவர் வினைகளைநாடி யதனாற்படும்பொருளை நல்க அச்சிவபெருமானை நாம்வெறுப்பது குற்றமானசெய்கையேயாம் .சிறந்ததாகிய நோன்பியற்றுமலே தவறுசெய்தோமென்றுநம்மை நொந்துகொள்வதே தக்கதென்றுசொல்லிப் பின்னும் அவனது குஞ்சிதபதத்தைக்கும்பிட்டுத் தெண்டனிட் டடைந்தால் அனைத்தும் நன்மையேயாம்,

திபனவகன்றுவிடும் இது உண்மையேயாம் ஆகையால், இன்னும் சூரியர் ச திரர் சூழ்ந்நடையும் கயிலைவரையிலே முக்கட்பெருமானிடத்தே இதனை விண்ணப்பிக்க நாமெல்லோரும் போவோமென்றனர். அவ்வாறு போகத் துணிந்தகாலத்தில் பூந்தாமரையான் யாவர்க்குமேம்பட்ட பரமசிவன்செயலை வினவியே நாம் போவதுதகுதி ஆதலின், நாம் தூதுவனொருவனையனுப்பி முன்னேயறிவோமென்று வாயுதேவனைநோக்கிப் பொன்மலையின் மூன்று சிக ரங்களைக்கவர்ந்து சென்றுகோபத்தீயையுடைய அனந்தன் மனநாணச்செலுத் திய வலிமையமைந்தானே! சிவன்செயலைச்சென்று கயிலையினறிந்து மீளென் றுணர்த்த மிக்க ஆற்றலையுடைய மதனனை விழித்தெரித்த கடவுள்முன் செல்வ தோவரிது,சென்றால்தீமையேபயக்கும்என்னுலைமைவுடைத்தலலாத செய்கை யாகும், என்னுள்ளமஞ்சாகிற்கின்றதென்றுகாலோன் விடைகூறினன். அது கேட்டுப் பூந்தாமரையான் நீ அஞ்சலை! யாண்டுஞ்சென் றுலாவிவருஞ்செயலை யுடையநின்னையல்லது பிறர்யாவர்? இச்செயலைச்செய்யவல்லார். துன்பம்வந்து சேர்ந்தவிடத்துஉதவிசெய்யத்துணிவோர்மனங்கோணுதெப்பொருளையுந்தரு தற்கிசைவர்? கெடுதலில்லாததவத்தைச்செய்தாரும்போர்செய்யும்வீரராவோ ரும் வேறொருபொருளையுஞ் சிறிதேனும் விரும்பிலர், துன்பத்தினையுநாடார், இறுதிநேரினு மதனையொருபொருளாக மதியார், தாம் உதவிசெய்தலையே இனியசெயலெனத் துணியாநிற்பர் ஆதலின், எங்கட்கெல்லாம் செயற்பால தாகிய உதவியின்பொருட்டே போகவேண்டுமென்று இவ்வாறுகப் புகழ்ந்து பலமொழிகளையு மெடுத்துக்கூற, அதற்கிசைந்தானுயெழுந்து நின்றுதக்கரப் பரியோனுகிய எழுநாவினன் நண்பன் விடைகொண்டு சென்று கயிலையை யடைந்து, அக்கயிலையின்புடையேவிழும் ஒலிபுனலாற்றினைநாடி, வாசனைகம ழும் அழகிய பூஞ்சோலையின் நறுமணமளாவி வாரிக்கொண்டு மந்தமாருதமாய் மெல்லென்றசைந்து, மெல்லமெல்லக் கோயிலின் வாய்தற்புறமணையும் சமை யத்தில், இரண்டாவது சம்புவாய்க்கைலைவரையைக் காப்பவராகிய சைலாதி யென்னும் நந்திபெருமான் கண்டு சிறியதட்டக்கண்டு, கார்காலத்து மேகம் மின்னியிடிக்க அவ்வோசையைக்கேட்ட விடநாகந்தளர்ந்து சோர்ந்துபோவது போலவருத்தமெய்தி தன்னுற்றல் முழுதுங்கெட்டு விழ்ந்தான்.

இவ்வாறு அச்சமெய்தி வருந்திவீழ்ந்த காற்றரசனும் தன்சுயவடிவங் கொண்டு துணுக்குற்று அந்நந்திபெருமான் சேவடித்துணையிற் கும்பிட்டுப் பணிந்து கூத்துமாடி வணங்கி மாலயனு மிந்திரன்முதலாகிய தேவரெல் லாம் கல்லாலனிழலி லமர்ந்த கன்னுதற் பெருமானை யடையவெண்ணி என்னைச் சமயமறிந்துவா வென்றனுப்பவந்தேன். ஆலவிடமுண்ட வமரர் பெருமான்திருவிளையாடலைக்குறிப்பதறிது, அப்பெருந்தகையையடைவதற்கு மஞ்சாநின்றேன், அவர் என்னைவிடுத்தகாலத்துந் தடுத்தேன்; தத்தம்வருத் தஞ்சொல்லி வருத்திவிடுத்தமையால் யானுள்ளமஞ்சியே மெல்ல மெல்ல வலிந்து மந்தமாருதமாகவந்தேன்,தேவரீருக்கிதனைமுன்னமேதெரிவிக்காமலு மிருந்துவிட்டேன், என்பிழைபொறுக்கவேண்டும். அவுணர்வணங்க அரசு செலுத்தும் மேம்பாடொழிந்த சூரபதுமனுல் மானமொழிந்து மதிகெட்டுப்

போயினேன். அவ்வருத்தத்தாலல்லது வேறொன்றினைஅறிவுகெட்டேனில்லை. இவ்வாறே மற்றைத்தேவரும் வருந்துவாராயினர். "குணமென்னுங்குன்றேறி நின்றார்வெகுளி - கணமேயுங் காத்தலரிது." எனப்பெரியோர் பணித்தமையால் நின்கோபத்திற் கிலக்காவார்யாவர். 'சிறியோர்செய்த சிறுபிழையெல்லாம் - பெரியோராயிற் பொறுப்பதுகடனே.' என்பாராகலின் என்சிறுபிழை பொறுக்கவேண்டும். என்னிடத்தே கோபங்கொள்வது தகுதியாமோவென்று வணங்கிநின்றனன். இரண்டாஞ்சம்புவாகியசைலாதிதான்கொண்டசீற்றந்தணிந்துபிழைத்துப்போய்விடு, இங்கேயேநில்லாதொழியென்று அனுப்பிவிட்டனர்.

இவ்வாறு நந்திபெருமான் கட்டளையிட் டனுப்புதலும் காற்றுக்கடவுள் அச்சயிலாதி சேவடிகளைவணங்கி விரைந்து தன்னில் ஒப்பில்லாத கயிலைமலையைநீங்கி நீண்டபொன்மலையிற்போய்த் தேவர்கள் கூட்டத்தையடைந்து பிரமன் மால் என்னும் பெருந்தேவர்பாதங்களைவணங்கிநின்று நந்திபெருமான் காவலின் வன்மையும் அங்குநிகழ்ந்த காரியமுழுதும் முறையாகத்தெரிவித்தான். காற்றுக்கடவுள் சொன்னதைக்கேட்ட நான்முகனும் நாரணனும் புரந்தரனும் சொல்லுதற்கரிய துன்ப முடையாராய் எமதிறைவனது செயலையறிந்துவாவென மருத்தினைவிடுப்ப அவன் நந்திபெருமான் காவலுக்கஞ்சி நடுக்கமுற்றடைந்தான் ஆகையால், யாம் கயிலையைவிரைந்தடைந்து இறைவன் முன்னணுகி நம்குறையெல்லாமெடுத்துச்சொன்னாலன்றித் தீராதென்று யாவருந்துணிந்து மேருமலையைநீங்கிக் கயிலையையடைந்து நந்திபெருமானை வாய்தலிலன்பாய்த்துணிந்து தொழுது எங்கள் துன்பமனைத்தும் சிந்திக்க வேண்டுகின்றோம், மகாதேவனது சந்நிதானத்தில் எமது வருகையைத்தெரிவித்து எம்மை யவன் சந்நிதானத்திற் கழைத்துப்போகவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தனர். இவ்வாறு தேவர்களெல்லாம் விண்ணப்பிக்கக்கேட்டு இங்கேயிருங்கோளென் றவரையெல்லாம் நிறுத்திவிட்டு சைலாதியாகிய நந்திபெருமான் தாம்தனியேசென்று கற்றைவார்சடைக்கண்ணுதற்பெருமான் திருமுன்புசென்று தேவரீரைத் தெரிசித்தற்பொருட்டு மாலயனிந்திரனாதி தேவரனைவரும் சந்நிதானத்தின் திருக்கடைவாய்தற் புறத்தே வந்திருக்கின்றனரென்று விண்ணப்பிக்க, எப்பொருட்கு முதல்வன் அங்ஙனே வரக்கட்டளையிட அக்கட்டளையையேற்று இறைவனைமும்முறையடிதொழுதுவிடைபெற்றுத் தேவர்கள்வந்துநின்ற சூழலைவிரைந்தடைந்துஇறைவன்கட்டளையாயிற்றுவம்மினென்றுசொல்ல, அச்சொல்லைக்கேட்டு மேகமுழக்கங்கேட்ட சாதகப்புள்ளேபோல் உள்ளந்தழைத்து உலகன்னையோர்பாலுடைய உம்பராளியை மும்முறைவலம்வந்து திருவடிகைதொழுதுநோக்கரிய நோக்காய்வாக்கிறந்த பூரணமாய் மனாதீதமாய் நிற்கின்ற நின்மாயம் எம்மாலறியும் தன்மையதாமோ! இருமையுமன்று, ஒருமையுமன்று, இரண்டுமொன்றிய ஒருமையுமன்றென உலகம்யாவையும் பெருமையினியற்றிய பெருமானே நின்னுடையசெயலைஅருமறையனைத்தும் அளவிட்டுரைப்பதாமோ, உருவம் செயல் பெயரொன்றின்றியே பரவியிருக்கிற நீ அவற்றைத் தாங்கிக்கிடப்பதெல்லாவுயிர்கட்கும் வீடுபேறுத

வும் பெருங்கருணையே யல்லது வேறுகூறவல்லேமோ! அவ்வுயிரனைத்தும் நின்னருளில்லா வழிச்செய்தற்குரிய தொழில் சிறிதுஞ்செய்கில ஆகையால், வேண்டுதல் வேண்டாமையிலாத நீ எவ்வாறு உலகைவிதிக்குந்தன்மை பூண்டொழுகாகின்றனை. முன்னைப்பழம்பொருட்கு முன்னைப்பழம்பொருளென்று நாங்கள் மொழியாநிற்போமெனிற் பின்னதிற் பின்னுமாயும் பேசநிற்கின்றனை, அவையேயெனின் ஒழிந்ததல்ல, யாமென்னென்றுரைப்பது! அளவிறந்தவிதி முதலிய அனைத்தும நின் திருவருளாலே நடத்தலாற் புரமூன்றும் நகைத் தெரித்தமையும், காமனைவிழியாற் சுட்டெரித்தமையும், உனது சிறப்பென்று சொல்லப்படுவதாமே! எங்களை முன் நீயேபடைத்தும், அரசியற்றுவித்தும், எங்களோடொருவனென்றுசொல்ல நின்றும் எங்களாலும் அறிவரியானுயிருக் கின்றனையென்று பலபடத்துதிப்பதாயினர்.

தேவர்களெல்லாம் மேற்கூறியபடி துதித்துநிற்கையில் மணிமிடற்றிறைவன் அவர்கள்முகத்தைநோக்கி மிகவருத்தமடைந்தீர், உங்களுக்கென்னவரம் வேண்டுமோ அவ்வரத்தைப் பாலிப்போம், வேண்டியது கேளுங்கோளென்று கேட்க; தேவர்களும் நாங்கள் மிக்கவலியையுடைய அவுணரால் வாட்டமுற்றேம், இனிப்பழயபடியே யாங்கள் பெருஞ்செல்வமடையத் திருவருள்செய்ய வேண்டும். விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலரென்னும் மூவகையணுக்களையு மீன்றும் கன்னியாயிருக்கும் உலகன்னையைத் திருமணஞ்செய்து கொண்டமையாங்கள் அவ்வன்னையிடமாக வீங்கோர் சேயினையருள்செய்து தீவினைக் கடலிற்பட்டு வருந்துமெங்களை யாண்டருள்செய்தற்கேதுக்காட்டிய வியற்கை யல்லாமல வேறல்லவே! ஆகையால் ஆதியு நடுவு மீறுமருவமு முருவமு மொப்பு மேதுவும் வரவும்போக்கும் இன்பத்துன்பங்களுமில்லாமல் வேதங்களெல்லாங்கடந்துநின்ற விமலனே! நின்பால்நின்னையேநிகர்க்க ஒருசேயினைத் தரவேண்டுமென்று வருந்தியசமயத்தில் அவர்களை நீங்கள் வருந்தவேண்டாமென்று திருவாய்மலர்ந்தருளிய செவ்வானவண்ணராகிய சிவபெருமான்மெய்யுணர்ச்சியுடையாராற் சிந்திக்குந் தனது பழமையானதிருமுகங்களாகிய ஈசானம் தற்புருடம் வாமனம் அகோரம் சத்தியோசாதமென்னு மைந்துடனே அதோமுகமுந் தோன்றும்படி நின்றனன். அவ்வாறுகொண்ட சமயத்தில் அருகேநின்ற தேவரெல்லாம் நெஞ்சந்துளங்க மிக அற்புதமெய்தி இறைவன் திருவருளை யுன்னித்துதிக்க, அவ்வாறுமுகங்களினுமுள்ள நுதல்களினின்றும் ஆறுபொறிகளையுதவினன். அங்ஙன முதவிய ஆறுதீப்பொறிகளும் எவ்வகைப்பட்ட தேவர்களும் எய்தவொண்ணு வெப்பமுடையனவாயிருந்தன. அத்தீப்பொறிகள் அப்பரமசிவன் திருக்காத்திலேந்திய செந்தீயானது ஊழிகாலத்திற் படர்வதேபோல எங்கும் படர்வதாயின; அவ்வாறு தழலெழ உலகமுழுதும் ஊர்கின்ற காற்றுகளும் உலைந்தொழிந்தன; உலகினைச்சூழ்கிடந்த கடல்களும் வற்றிப்போயின; அக்கடல்களின் நடுவேகிடந்த வடவைத்தீயுஞ் செருக்கொழிந்தது; உலகம் வெடித்துப்பிளந்தது; நாகங்கள் வருந்திநெளித்தன; திக்கயங்கள் வீறிட்டுத் திப்பிரமைகொண்டன; உயிர்த்தொகையெல்லாம் வருந்தின. மூலகாரணமில்லாத முதல்வனதுநெற்றிக் கண்ணினின்றும்

கான்றதீயானது யாவருக்கும் பேரருள்செய்யத் தோன்றிய தன்மையால் ஒருபிழையும் வருத்தாதொழிந்தது. ஆயினும் இயங்குதிணை நிலைத்திணையென்னும் இரண்டனையும் அஞ்சும்படிசெய்தது. அத்தீயின்வெப்பத்தைநோக்கி இறைவன் அருகேவீற்றிருந்த உலகமீன்றகன்னியும் வியர்த்துக் கலக்கமுற்றெழுந்து தன்கால்களிலணிந்த சிலம்புகளொன்றோடொன்று தாக்கத் தன்னிருக்கையை விட்டுச்சென்றாள். பிரமன் மால் முதலிய தேவரனைவரும் அவ்வழலுக்காற்றாதாராய் ஆலவிடமெழுந்த காலமேபோன்று நீங்கித்தலைத்தலையஞ்சியோட்டெடுத்தனர். கொழுங்கனல்படர்தலாற்செம்பொன்செய்கோயிலிலெங்கணும் ஓடியதேவர்கள் கெட்டுயிர்ப்பெறிந்து மீண்டும் எப்பொருட்குமிறைவனாகிய பரமசிவனது சந்நிதானத்தை அடையக்கருதி வலையிலகப்பட்டமானேபோன்று தம்மின்மீண்டு இனத்தைநீங்காத காகமேபோன்றுசங்கரனைச் சேர்ந்துநின்றனர்.

நுதல்விழியினின்றுந் தோன்றிய சுடர்ப்பிழம்பின் வெப்பத்திற் காற்றாராய் அடைந்ததேவர்கள் நாற்றடந்தோளையுடைய நம்பனையடிதொழுது யாங்களெல்லோருங் கொடும்பாதகராய் அவுணரைவேரறுக்க ஒருசேயினைத் தரவேண்டுமென்று வேண்ட, தேவரீரோ அழற்பிழம்பைத் தந்தருளினீர், யாங்களுய்வதெங்ஙனம்? பின்னும் எம்மிறைவ நினதுபாகத்தி னினிதுவீற்றிருக்கும் கருணைப்பிராட்டி கரத்தினின்றுந் தோன்றிய கங்கை உலகெங்கும்படர்ந்தாற்போல, நினது நெற்றிமேலொற்றை நாட்டத்தினின்றுந்தோன்றிய அழற்பிழம்போ உலகெங்கும்படர்ந்தது. அவ்வாறு தோன்றிய அவ்வழற் பிழம்பின் வெப்பத்தை நீ மாற்றிலாயெனின், நால்வகையோனி யெழுவகைத்தோற்றத் தெண்பத்துநான்கிலக்கஞ் சீவபேதங்களு முடிவுறுமென்பதற் கையமேயில்லை. யாங்களோ அவ்வழற்பிழம்பின்வெம்மையையாற்றாது பயந்தோடிநின்னிரண்டு சேவடித்துணையே துணையாகப்பற்றிப் புகலடைந்தோம்.! உன்னையல்லது புகலிடம்வேறுண்டோ? எங்கள் துயரமனைத்தும் முற்றுமொழிக்கின்ற நீரெங்களுக்கே துன்பமுண்டாகச்செய்விரேல் அதைநீக்க உலகின்கண் யாவருளர்; வையமும் வானமுஞ்சென்று போந்தழிக்கும் இத்தீப்பிழம்பைத் தணித்துப் பிறையைமுடிக்கணிந்த பெரியீர்! எமதுகுறையை முடிக்கவேண்டுமென்று பணிந்து நின்றனர். அவரையெல்லாம் பயப்பட வேண்டாவென்று அபயத்தமளித்துப் புதிதாகவந்த ஏனையைம்முகங்களையுங்கரந்தருளியொருமுகத்தொடுநின்று தன் சண்முகங்களினின்றுந்தோன்றிய தீப்பொறியாறினையும் தன்சந்நிதானத்தின் முன்னேவரும்படிசிந்திக்க, அவையுமங்ஙனே யொருங்கெய்தக்கண்டு, தேவருள் காற்றுக்கடவுளையுங் கனற்கடவுளையுநோக்கி நீங்கள் இச்சுடர்களை முறையே தாங்கிக்கொண்டு மிக்கநீரையுடைய கங்கையிலிட்டு வாருங்கோள்; அக்கங்கையும் இவற்றைச் சரவணப்பாசடையிற் செலுத்துவள்; இது தான் நாம் உமக்கிட்டபணியென்று இறைவனியம்ப, அதைக் கேட்டுக் காற்றுக்கடவுளும் கனற்கடவுளும் கூற்றுரங்கொண்ட குழகன் கட்டளையையேற்று இறைவனை மும்முறை வலம்வந்துபணிந்து ஒருகணத்தே உலகமுழுதும் படர்ந்து உயிர்கள் யாவையும் வருத்திய இத்தீப்பொறிகள் நின்

னுடையதிருவருளுணுக்காற் சிறுகியது, அவற்றையாங்கள்தாங்குதல் அரியதே
யன்றோ? எவ்வாறுநாங்கள் தாங்கவல்லோமென்று கருணைநெடுங்கடலிடத்தே
விண்ணப்பிக்க, அதற்கு அநாதிமல முத்தசித்துருவாகிய சிவபெருமான் இத்
தீப்பொறியைக் கங்கையில்விடுக்கும் துணையும் உமக்குப்பேராற்றலுண்டாக
வரந்தந்தோம், கொண்டு சென்மினெனக் கட்டளையிட்டனன். உடனேகாற்
றுக்கடவுளும் கனற்கடவுளுங்கொண்டு செல்வாராயினர். அதைக்கண்டமாலே
யயனை முதலாய மற்றைத் தேவரெல்லாருந் தம்மன நடுக்கமொழிந்து நம்
மின்னலனைத்தும் இன்றேபட்டதென் றுவகையங்கடலிலாழ்ந்து நிற்கையில்,
அவரைநோக்கி இறைவன் இத்தீப்பொறிகள் சரவணத்தையடைந்து நமது
சேயாகவிளங்கும், நீவிரஞ்சாதொழிமினென்று கட்டளையிடவே, அவர்களும்
இறைவனை யடிதொழுது தமது குறையொழிந்ததென்று அத்திருக்கயிலாய
வரையையகன்று அத்தீப்பொறிகளைக்கங்கையாற்றில் விடும்படிசெல்லும் காற்
றுக்கடவுளையும் கனற்கடவுளையுமடைந்து தொடர, அவ்விருவோருள்காற்றுக்
கடவுள் தன்னால் அத்தீப்பொறியைத்தாங்க வலியற்றுக் கனற்கடவுளிடத்தே
கொடுப்ப, அவனும் கங்கையை விரைந்தடைந்து அத்தீப்பொறியாறினையும்
விடுத்தான். அத்தீப்பொறிகளடையவேமுன்னுளிற் கங்கைஇறைவன்சடாமகு
டத்தில் கரந்துநின்றாற்போலிருந்தது. கங்கையுந் தன்னிடத்திலேவந்த தீப்
பொறியாறினையும் இது சிவபெருமான் றிருப்பணியென்று தன்சிரமேற்றாங்கி
ஒருகணப்போதிற் சரவணப்பொய்கையிற் சேர்த்தனள். அதுகண்டு மாலே பிர
மனேயன்றி மற்றைத்தேவரும் திக்குப்பாலகரும் எண்டிசையினுஞ் சரவணத்
தடஞ்சூழ்ந்து வணங்கினர். கங்கையும் தன்னைவருந்தச்செய்த கடுங்கனற்
பொறிகளாலும் இறைவிவாழ்கின்ற இமயமலைச்சாரலிற் றங்கியிருக்குங் கமலம்
பூத்த சரவணத்தடத்தில் நெற்றிமே லொற்றைநாட்டத் திறைவனருளால்
தொன்மைபோல் வறட்சியின்றியிருந்தது. விண்ணிடத் திழிந்தவாற்றினும்,
பொருந்துவதரிதாகியகனலினுந்தோன்றும்அழகமைந்தஒள்ளியகமலஞ்செய்ய
முளரிக்குமாறாகத் தன்னளியுடன்பெற்ற சரவணத்தடப்பொய்கை இறைவ
னதுகண்ணிற்றோன்று நெருப்பினைமேற்கொண்டுநின்றது. அருவமாயும் உருவ
மாயும்அநாதியாயும் பலவாயும்ஒன்றாயும்பிரமமாயும் நின்றதாகியதோர்சோதிப்
பிழம்பு ஒருவடிவங்கொண்டு, கருணைகூர்கின்ற அறுமுகங்களும் பன்னிரண்டு
கைகளுங்கொண்டு, உலகமுவக்கும்படி முருகனுருவமாய்த் தோன்றிநிற்க,
ஆகாயதுந்துமிமுழங்க, பழமையான வேதங்கள் ஆரவாரிப்ப, பிரமன் மால் இந்
திரன்முதலியதேவரும் முனிவரும் கற்பகநறுமலர்பொழிந்துஎமக்கருள்செய்ய
வேண்டுமென்று குறையிரந்து துதித்துச்சூழ, யாவராலுமளக்கரிய எல்லை
யகன்றபகவானென்னும் பெயரினுக்குரித்தாகிய ஐசுவரியம் வீரியம் புகழ் திரு
ஞானம் வைராக்கியம் என்னும் சட்குணங்களும் குமாரக்கடவுளுக்குத் திரு
முகங்களாகத் தோன்றியதென்றுசொல்லும்படி பூக்களாலியன்ற சரவணப்
பாசறையில் வீற்றிருந்தனன். இறைவன் அணுக்களைக்காக்குமுறைமைநோக்கி
அறுமுகங்கொண்டு நின்றமையால், எல்லாப்புவனத்துள்ளு மிருக்கின்ற நிலை
பெற்றஅணுக்களெல்லாம் மகிழ்ச்சியெய்த வுவகைக்குவியெய்தின. சூரபதுமன்

தாருகன் சிங்கமுகன் முதலிய அவுணர்கட்கெல்லாம் மாணக்குறிதோன்றின. இவ்வாறு வேதாகமாந்தங்களினானும் வாக்கானும் மனத்தானும் அளத்தற்கரியதாகி யாண்டும் பூரணமாய் நிறைவுற்றுநின்ற நின்மலக் கொழுந்தாகிய சாட்குணியமூர்த்திசண்முகங்கொண்டு அருளொடு சரவணப்பாசடையிற் பதும்பூத்த மலர்த்தவிசி லெழுந்தருளியிருக்குங் காலத்திலே, பக்கங்களிலடர்ந்தோங்கிய தருக்களே கால்களாக, பலதழைகளையுடைய கிளைகளுங் கொம்புகளும் நீக்கமறப்புடைபோய் வானின்கண் வரிசையாய்ச்செறிந்து பந்தராக, அவற்றிற் றூங்கிக்கிடப்பனவாகிய பழங்களுங் காய்களும் உள்ளேதோன்றிப் பொருந்தியிருந்து அதனடுவில் நறுநிழல்செய்திருக்க, உலகைத் தாங்குதலாற்றூது சுமக்கும் நாகர்களே கால்களாக, உலகமேபலகையாக, தொடர்ந்திருக்குங் கரையினிடத்திருக்கும் மரங்களே வானினின்றுந்தொங்கிக் கிடப்பதாகிய நாணாக, அறத்தெளிந்த நீர்த்தடத்திற்பூத்த மலர்களேபாயலாக, சரவணப்பாசடையாகிய மஞ்சத்தின்மேற் றென்றற்காற்று மெல்லென்றசைப்ப, அட்டமாநாகங்களுஞ் சேடனுஞ் சிங்கமாக, அச்சரவணப்பொய்கையே அணையாக, நாள்களுங் கோள்களும் விண்ணிற்படர்ந்தவிதானமாக, கருங்கடற்கடவுள் காலையிற்றோன்றும் ஒள்ளிய பகலவனாகிய கண்ணடிகாட்ட, உமாதேவியார் புத்திரசிகாமணியாகிய கருணையங்கடல் இனிது வீற்றிருந்தருளினான்.

இங்ஙனம் இளையபிள்ளையார் அச்சரவணப்பொய்கையில்வீற்றிருந்தருளியது, இறைவன் பெருவடிவங்கொண்ட மாமாயனது மனத்தின்கண் தன்னை னென்றதெரிசுடர்விளக்கத் துச்சியிலிருப்பதுபோலும்,விராட்புருடனதுஇதயகமலமாகிய புண்டரீகபுரத்தி லெழுந்தருளி யிருப்பதுபோலு மிருந்தது. பின்னும் பாசிலைபரந்து அதில் நீர்த்துளி தங்கியிருப்பன நாள்களின் கூட்டம்போலும், அத்தடாகத்திலடர்ந்த பாசேமேகமாக, அதிற்பூத்த தாமரைமலர்களே குற்றமற்ற சூரியராக, அத்தாமரைக்கூட்டத்தின் மத்தியில் பிள்ளையாரெழுந்தருளி யிருக்குந்தாமரைமலரே ஞானசூரியனாக, பிள்ளையார் இறைவனென்றுசொல்ல அங்குவீற்றிருந்தருளியதுபோலும். இதுவுமன்றி, மாலும் பிரமனும் மற்றை இந்திரன்முதலிய தேவசேனையோரும் பக்கங்களிற்பொருந்தியிருப்ப மரங்களும்மிருகங்களும் பறவைகளும் பிறவுஞ்சூழ்ந்துகிடப்பப்பிள்ளையார்வீற்றிருப்பதுஎம்பெருமானாகிய எண்குணத்தொருவன் சிருட்டிகாலத்தே தாமரைத்தவிசுகந்து வீற்றிருந்ததொக்கும். பின்னும் அவ்வாறிருந்தமை இனிசிலபகற்குள் இளையபிள்ளையார் நான்முகத்தொருவனைச் சிறையிலிட்டு எல்லாவுயிரையும் அவன்போலச் சிருட்டிசெய்யத்தொடங்கிப் பதுமபீடத்தில் வீற்றிருந்ததுபோலும் விளங்கிற்று. சரவணப் பொய்கையிற் றாமரைப் பூவொன்றிற் சண்முகங்கொண்ட சாட்குண்யமூர்த்தி யிருக்க அவரிருக்குந் தாமரைமலரைச்சுற்றி வண்டுகளிசைபாடும் தாமரைக்காடிருப்பது, தேவர்கட்கிறைவனே! எம்மை எல்லாம்பீடமாகக் கொண்டருளவேண்டுமென்றுஅத்தாமரைமலர்கள்வேண்டித் தவஞ்செய்தற்கு நின்றதுபோலுமிருந்தது. வருத்தஞ்செய்யுந்தோற்றத்தினை யுடைய பவளம்போலும் விளங்குஞ்சுடர்த்தோற்றமுடைய குமாரக்கடவுளைச்சூழ மணமமைந்த கமலக்காடு மலர்ந்திருப்பது, அவனைச்

சேரும்படி தண்ணியநீருட்புகுந்து சூரியன்மேல் நாட்டம்வைத்து நுணங்கிய இடையையுடைய மாதர் பலர்தவஞ்செய்து ஆண்டுநிற்பதுபோலு மிருந்தது. மேலும் ஒள்ளிய சுடரைவிரிக்குஞ் சங்கஞ் சிலகமலமலரில் வைகத்தண்ணிய நறவினைச்சொரியும் பலதாள்களையுடைய தாமரைபரித்துச் சூழ்ந்திருப்பது, தெய்வத்தன்மைபொருந்திய அச்சரவணப்பொய்கை தன்னைச் சேர்ந்து வைகிய சண்முகங்களையுடைய பிள்ளையார் உண்ண வெண்ணெயுஞ்சங்கமுஞ் சூழவிட்டதுபோலும். முத்துந் தாமரைத்தோடும் அழகிய மகரந்தச் சேறும் மணங்கமழும் அழகிய தண்ணியதாகிய நறவும் முறைமுறைவீசிக் கையால் ஒருசேரக்கொண்டு பிள்ளையாருடைய திருவடிதிளைக்கச் செலுத்துவது வருவாயையுடைய அப்பொய்கை அன்பால் வழிபாடுசெய்யுந் திறம்போலும். செந்தாமரைப்போது பதனழிந்து அவிழ்ந்து பக்கத்தில் அங்குள்ள இலைமேல்வீழ்ந்தது, அவைபுறத்தேயசையுந் தோற்றமோ அணுக்கட்கெல்லா மின்பநலந் தரும்படி வடிவேறு சூலத்தெம்மணிக்கண்டப் பெருமான் ஆறுமுகங்கொண்ட முத்துக்குமாரக்கடவுளைச்சூழச் சரவணப் பூந்தட்டில் பரிசுத்தமாகிய விளக்கமாட்டித் திரையாகியகையாற் சுலாவல்போலும். மாணிக்கம்போலுஞ் செந்நிறமமைந்த தாமரைமலர்கள்ஆசியதாக, மேற்சொல்லுகின்ற பச்சிலைகவிகையாக பலவரும்புகளும் விளக்கமாகத்திரைகளே கவரிகளாக, அங்கேசத்திக்கின்ற புள்ளினம் பலவாத்தியமாக, குற்றமற்ற அப்பொய்கையானது அறுமுகத்தொருவனுக்கு வளம்படநடந்ததுபோலும். அழல் ஓங்கியதுபோன்ற தாமரைத் தடாகத்தில்அலைகள்நடுவில் சூழ்போந்துலாவுவன தானையினீர்மையாற் சிறந்த குகப்பெருமான்பொய்கையை வெளியுறாமல் அமரர்களிட்ட ஆலத்திகள்பக்கங்களிலே தென்றற்காற்று எறிதலின் இரட்டுவதுபோலும். அச்சம் விளைக்கும் அரசவன்னங்கள்கோடி நெற்றிமேலொற்றை நாட்டத்திறைவன் பயந்த குமாரக்கடவுளைச்சூழப் பொய்கையினிடத்திலே ஆரவாரித்தல், எம இறைவராகிய பிள்ளையார் பொற்றாமரைமலரி லெழுந்தருளிய நான்முகக் கடவுள்போலச் சிருட்டித்தொழில் செய்புங்காலத்திலே வாகனமாகச்சமைவேன் என்புடையிருவென்று தனித்தனியே யிரத்தல்போலும் விளங்கும். பிள்ளையார் அப்பொய்கையில் இன்னனவாகச் சொல்லும்படி சிறந்ததாமரைமலரொன்றின்கண் சரவசரப் பொருள்களெல்லாங் காக்கும்படி கருணைமலர்ந்த திருவுள்ளத்தால் இளஞ்சிறுகுழவியாக இனிதுவீற்றிருந்தருளினான். இதுநிற்க;

தீர்த்திகையாகக் கங்கையில் விளங்குஞ் சரவணப்பொய்கையில் மூர்த்திகைக்குழவியென்ன முதலிலேசெய்யுந் திருவிளையாடலைநோக்கி ஆர்த்திநீங்காத வுள்ளத்தினராய் திருமால்முதலிய தேவரெல்லாம் கார்த்திகைமுதலிய தெரிவைமாரைவிளித்துப் பரம்பொருள் யாரானும்சொல்லுதற்கரிய சரவணப்பொய்கையின்கண் சண்முகங்கொண்ட ஒருவனாய்வீற்றிருக்கும் விமலனது ஓர்குழந்தையாய்த்தோன்றினன், அப்பெருந்தகைக்கு உங்கள்இருதனப்பாலுங் கொடுத்துவளர்த்துவாருங்கோளென்று கேட்க, அவர்களும் அதற்கியைந்தவராய்அச்சரவணத்தடம் பொய்கையை யணுகிச்சென்று வணங்க, வேண்டுவார்

வேண்டியாங்குபயக்கும் விமலனாதலின்,சண்முகங்கொண்டுநின்றபரமன் ஆறு குழவிகளாகத்திருவுருவங்கொள்ள அவ்வறுவரும்மகிழ்சிறந்து வேறுவேறெடுத்துத் தத்தம்துணைமுலைப்பாலையூட்டப் புன்னகைசெய்தருளி நீங்காப்பெருங்கருணையால்மிகவுமருந்தினான். உண்டபின்னர் அவர்கள்கடப்பமரநீழல் செறிந்த அத்தடம்பொய்கையில் வண்டுகளணையாத கஞ்சத்தடமலர்ப்பள்ளியில் அறிதுயில் அமரச்செய்துவணங்கக் கருணையா லிதுசெய்யலாயினான். அஃதெவ்வாறெனின்,"ஏறுமயிலேறிவிளை யாடுமுகமொன்றே, ஈசருடன்ஞானமொழி பேசுமுகமொன்றே, கூறுமடியார்கள்வினை தீர்க்குமுகமொன்றே, குன்றுருவ வேல்வாங்கி விட்டமுக மொன்றே, மாறுபடுசூரரை வதைத்தமுகமொன்றே, வள்ளியைமணம்புணர வந்தமுகமொன்றே" என்றாற்போலத் துயிலும்படி யோருருவமும், துயின்று திடுக்குற்றெழுந்து மெல்லிய சொற்களைப் பழகிப்பேச வோருருவமும், தாயரது முலைப்பாலைபருந்தவோருருவமும், ஆங்கமரும்படி யோருருவமும், திருவிளையாடல்செய்ய வோருருவமும்,யாவர்க்குமிரங்கி யருள்சுரக்க வோருருவமும், தவழ்ந்துசெல்ல வோருருவமும், நிற்காதொய்யெனவெழுந்துவீழ வோருருவமுமன்றி,ஒருருவம்பொய்கையைச்சூழ, ஒருருவந் தாயின்கண்வைக, ஒருருவமாட, ஒருருவஞ் செங்கையை யறைய, ஒருருவநின்றுபாட, ஒருருவநாடிப்பார்க்க, ஒருருவமோட, ஒருருவமோர்பாலொளிக்க,ஒருருவம் யாண்டுந்தேடத் திருவிளையாடல் செய்தருளினான். இவ்வகை இருமூன்று திருமேனிகொண்டு கணமொன்றில் ஆயிரம்வகையாய்ப் பரமாய்கின்ற குமாரக்கடவுள் எல்லா வுயிர்கடோறும் செய்யும் விளையாடலே போலத்திருவிளையாடல்பலசெய்துவருகையில்,அத்தன்மையைநாடித்தாமரைத்தவிசுகந்தநான்முகனும் மாலும் இந்திரனும் முற்றத்துறந்த முனிவருந் தேவரும்அவரொழிந்தபிறரும் அற்புதமாகியமகிழ்ச்சியெய்தி இன்னவாறுசொல்வாராயினர்.சேயாகிய இவ்வொருவனே பலகுருந்துருக்கொண்டு நம்முன் ஏயெனு மாத்திரைப்போதில் கணக்கிறந்தபேதமாக திருவிளையாடல் செய்கின்றனன்; ஆயின் இவனதுதிருவிளையாடல் அறிதற்கரிதாகும். இவன் எல்லா மாயமுமியற்றவல்ல எல்லையிகந்த பேரறிவாளனென்றே யெண்ணவேண்டும். கையிற்பழகுங் குழந்தையேபோலக் காட்டிய கடவுட்பெருமான் செய்கின்ற இப்பெருமாயைபோல் யாரும்செய்யவறியார்.வேறுசொல்வதினாலென்பயன்! யாமுஞ் செய்யத்தக்கதொன்றில்லை. இவன் உயர்வொப்பில்லாத முழுமுதற் கடவுளென்றே துணியவேண்டும். கார்த்திகைப்பெண்களறுவரும் குமரப்பெருமான் திருவிளையாடலைநோக்கி மிகவற்புத நீர்மையெய்தி இவன் திருவுருக்கொண்டமையைக் குழந்தைகளென்றே கொள்ளாமல் உண்ணடுங்கி வழிபடு கடவுளென்றே சொல்லப்போற்றித்தொழுது வருவாராயினர். இதுவரையுஞ் சண்முகத்தொருவன் திருவவதாரஞ் செய்ததைச்சொன்னோம். இனி எம்பெருமாட்டியார் காற்சிலம்பின்மணிகளினின்றுந் தோன்றிய நவசத்திகளிடத்தும்இலக்கத்தொன்பதின்மரும் தோன்றிக்குமாரசற்குருவுக்குத் தம்பியராயும் படைத்துணைவராயுமாயினமையைச் சொல்வோமென்று சொல்வாராயினார்.

திருவவதாரப்படலம்

முற்றிற்று.

---

## துணைவர்வருபடலம்.

ஆலவிடநுகர்ந்து தேவரைக்காத்த நெற்றிமேலொற்றைநாட்டமுடைய நின்மலக்கொழுந்து தமது நெற்றியிலுள்ள ஒற்றைநாட்டத்தால் தரப்பட்ட வெஞ்சுடர்ப்பொறியின் வெம்மையை யாற்றாளாய் இமயமுதல்வியார் ஓட் டெடுப்பக் காற்சிலம்பொன்றோடொன்று தாக்கலான் நவமணிகள்சிதறின. இத்தருணத்தில் திருமாமகள்கொழுநன்முதலிய தேவர்கள்இறைவனைவணங்கி நின்று ஒருமைந்தனைத் தரவேண்டினால், தமது நெற்றிமேலொற்றைநாட்டத் தாலாய வன்சுடரைநல்கியோர் மைந்தனாக அமர்கவென்றே ஏவினனென்று இறைவிதெரிந்தனளாய், அத்தேவரைநோக்கி அநாதிமலமுத்தனாகிய பரமசிவ னது அருட்டிருமேனி படைத்த மைந்தன் என்னிடமாகத் தோன்றாவண் ணந்தடுத்த இந்திரனே நான்முகனே திருமாலே முதலியதேவர்கள் மனை வியர்கட்கெல்லாம்புத்திரரின்றாகவெனச்சபித்துச்சென்று, 'திருமாலும்பன்றி யாய்ச்சென்று'காண்பதரிதாய்ப்பாதாளமேழினுங் கீழ்சொற்கழிவாய்த்தோன் றும் பாதபுண்டரீகங்களைப்பணிந்து, கண்களாரத்தெரிசித்துத் தேவரனைவருங் குறையிரப்ப நீயுதவுஞ் செங்கனற்றிரளினாற்றலும்வெப்பமும்உணர்ந்து வெம்பி முழுதும்உடலம்பனிப்ப இவணின்றகன்று மீண்டெய்தினேன், எம்பெரும! அவ்வழற்சிகையென்னை நீக்குதலாலென்றுகூற,இறைவன் உமையன்னையைக் கருணையொடும் பார்த்தருளித் தன்னிடத்திலிருக்கவெனக் கட்டளையிட்ட னன். இதுகிடக்க;

இமயமுதல்வியார் ஓடியதனால், அவர் காற்சிலம்பினின்றுஞ் சிதறிய நவமணிகள் இறைவன் சந்நிதானத்தில தோன்றின. அவ்வாறு சிதறிய நவமணிகளில் இறைவியினது திருவுருவம் ஈசானம் தற்புருடம் அகோரம் வாமனம் சத்தியோசாதமென்னும் ஐந்து திருமுகங்களையுடைய அநாதிமல முத்தனாகிய பரமசிவன் சோமசூரியாக்கினியென்னும் முச்சுடர்களினுந் தோ ன்றுமாறுபோலத் தோன்றக்கண்டு,அவ்வருமையான நவமணிகளிற்றோன்றிய உமையின் திருவுருவங்களையெல்லாம் வருகவெனக்கருணைசெய்ய, அம்மணிக ளோவ்வொன்றும் ஒவ்வொரு சத்தியாகத்தோன்றிவந்து, எம்மிறைவன் சந்நி தானத்தையடைந்து மும்முறைவலம்வந்து பணிந்துநின்று இறைவன்மேற்சிந் தைவைத்தலும்,முற்றத்துறந்த முனிவர்பன்னியர்போல்விரைவிற்கருப்பமுறக் கருணைவடிவுடைய இமயமுதல்விகண்டு,அம்மாதர்மேற்சினங்கொண்டுஎமக்கு மாறாகியதிறத்தால் நீவிர்பலகாலும் பொறையொடு பொருந்தும் இக்கருப்பத் துடனிருத்திரெனச்சபிக்க, அவர்கள் அஞ்சியுண்ணடுங்கி மெய்வியர்த்தனர். அவ்வியர்ப்பினின்றும் இறைவனது திருவருளால் இடியுமாறுபடுஞ் சொல்லை யுடையாரும் பொன்னுடையுடையாரும் கையிலேந்தியவாளையும் பலகையு முடையாருமாய் இலக்கத்தவர் தோன்றினர். அவ்வாறம்மாதரார் வியர்ப்பி னிற்றோன்றிய மக்களாகியஇலக்கத்தவரும் இறைவனது திருநாமங்களை யேத் தித் துதிசெய்து, "போற்றுமா னன்முகனுங்காணாத புண்டரீக" பாதங்களைப் போற்றிநிற்ப, அவர்களைநோக்கி இதுகூறுவானாயினன்.

மக்காள்! நீங்கள் யாவரும் உமது பேராற்றலால் இந்திரன்முதலிய தேவர்கட்குப்பகைவராகிய அவுணரோடெதிர்ந்து பொருதுவெல்வதற்கு எமது கந்தப்பெருமானது படைத்துணையாவிரென்றுசொல்லிப் பெருங்கருணைசெய்ய, அக்கட்டளையேற்று இலக்கத்தவரும் இறைவன் திருமுன்பு நீங்காதொழுகினர். இவ்வாறிருக்க நீங்குதலரிதாகிய சினமேற்கொண்டு கொடுஞ்சாபம் வழங்க நவமணி யுருவமாம் சத்திகள் ஒன்பதின்மரும் மனமடங்கித் துதித்து, பின்பு அப்பெருமாட்டி குற்றேவல் செய்பவராய்ப் பலகாலுமொழுகினர். இம்மாதரார் ஒன்பதின்மர்வயிற்றினும் இரண்டாஞ்சம்புவாகியநந்திபெருமான்கணத்தவரோ குழந்தைகளாகச் சென்றணைந்து காளைப்பருவமுடையராய் அவர்கள் கரு வுயிர்க்காமையாலே நன்னெறியிலே யொழுகிய சுகனைப்போலும் கருவிலேயே யிருந்துகொண்டு சிவத்தியானஞ் செய்துகொண்டே யிருந்தனர். அம்மாதர் வயிற்றிற் கருக்கொண்டிருந்த நவவீரர்களும் இறைவனைத் தியானஞ்செய்துகொண்டே யிருந்து யோகுசெய்வதனால் அவர்கள் பாரஞ்சுமக்கலாற்றாமல் பரமசிவனையும் பார்வதியாரையும் வணங்கி நின்று அம்மையையும் அப்பனையுநோக்கி நாங்களிதுவரையுங் கருப்பொறையாற்றனோம்,இனி எங்களாற் சுமப்பதற்கியலாததா யிருக்கின்றது, கருணைசெய்ய வேண்டுமென்று வேண்ட, இறைவனும் ஏலவார்குழ லெம்பெருமாட்டியை நோக்கி நின்காற்சிலம்பிற் சிதறிய நவமணிகளால் வந்தஇம்மாதரார் நீயிட்டசாபத்தாற் பலகாலுஞ் சூலினைச்சுமந்துநொந்துவருந்தினர். இனிஇவர்மக்களைப்பெறக் கருணைசெய்யவேண்டுமென்று கட்டளையிட, இறைவியு மதற்கு நன்று நன்றென்றிசைந்து புன்முறுவல் செய்தருளிப்பின்பு அம்மாதரா ரொன்பதின்மரையும் நோக்கி இனி நவவீரரைப் பெறுதிரென்று சொல்லலும், அவரிடத்திற் பெயராமல் யோகுடனுறையும் நவவீரரும் பிறப்பிறப்பில்லாப் பிஞ்ஞகன் பெருங் கருணை முறைமையை யிறைஞ்சித்தொழுது பிறப்பதற்கு முயன்று பெயருவதற்குத்துணிய நூபுரத்தில் வந்தமாதரார் உமையன்னைசொற்கேட்டுக்கவற்சியகன்று விரைவாக அன்னையார்பாதபுண்டரீகம்பணிந்து விடைபெற்று, அவ்விடமகன்று மக்களை யீன்றனர். அந்நவவீரரும் முன்னைநாளில் இரண்டாஞ் சம்புவாகிய நந்திபெருமான் பூமியின்கண் தோன்றிய வண்ணம் அந் நந்திபெருமான் கணமுதல்வராதலால் மலபந்த மில்லாமலே தோன்றுவாராயினர். அவர்கள் எவ்வாறு தோன்றினரெனில், பெரிய ஆகுவாகனத்தினையுடைய விநாயகப்பிரானுக் கிளையவனாகிய முருகக்கடவுளாற் சூரனாலுண்டாகிய துன்பம் தேவர்கள் பொருந்தாதவண்ணம் துலக்கும்படி அழகும் விரும்பும் இரத்தினவல்லியினிடமாக உலகமெல்லாம் வியக்கும்படி வீரவாகுவும்; நெகிழ்ச்சியையுடைய வல்லியார் தந்திவியன்படையாகிய மிக்கவிருளையகற்றும்படி யெழுந்த வெண்கதிரோபோலத் திரண்ட சுதினையொத்த தனத்தினையுடைய தெய்வத்தன்மையமைந்த தரளவல்லியிடத்து வீரகேசரியும்; மக்களுக்கும் தேவர்களுக்கும் பெருந்துயர் விளைக்கும் வலிய அவுணர் சூழ்கிடந்த வீரமகேந்திரந்தொலைவெய்தச் செந்நிறத்தையுடைய நூபுரமணிந்த பதுமராகவல்லியிடத்துச் சிறப்பான்மிகுந்த வீரமகேந்திரனும்; பரிதியங்கடவு

ளும் வடவைத்தீயும் புதியமதியமும் நாணமுற விளங்கும் கோமேதகவல்லியிடத்துத் தேவர்செய்த நோன்பால் வீரமகேச்சுரனும் ; சுவர்க்கலோக வாசிகளாகிய தேவர்கள் மகிழ்ச்சியடையவும் பகைவராகிய அவுணரெல்லாம் முடியவும் தருமம் தலையெடுக்கவும் ஒளிமிக்க வயிடூரிய வல்லியிடத்து வீரகண்டையணிந்த பாதத்தினையும் பெருமிதமுமுடைய வீரபுரந்தரனும் ; சூரபதுமனது செல்வமும் அவனதுதுணைவராகிய சிங்கமுகன், தாருகன் செல்வமும், அவர்களைச் சூழ்ந்திருக்கும் அவுணர்செல்வமும், தேவர்கள் துன்பமுங்கெடவும், நீண்ட பாம்பணியும் கொன்றைமாலையுமுடித்த சடாமகுடத்தினையுடையபரமசிவனருளால் வச்சிரவல்லியிடத்து வீரராக்கதனும் ; கையால் மேருமலையை வளைத்து ஒருகணத்திலேயே முப்புரம்பொடிபடுத்த கடவுளருளால் கடலிடத்துக் குதிரை முகத்தினையுடைய வடவைத்தீ யெழுதல்போல மரகதவல்லியிடத்து வீரமார்த்தாண்டனும் ; பவளவல்லியிடத்து மதமயக்கத்தையுடைய யானைகளும், தாவிச்செல்லும் குதிரைகளும், அவை பூட்டப்பட்ட மணிமயமான தேர்களும் கொடிய அவுணப்படைகளும் இமையோரையில் அழியத் தன் ஆற்றலாற் பொருதுவெல்லும் வீராந்தகனும் தூணிற்றோன்றிய நரமடங்கலும் அன்று பாற்கடலிற்றோன்றிய ஆலவிடமும், வடவைத்தீயும் மாறுபட நம்மாற்றுதிக்கப்படும் நீலகண்டம்போலும் நிறத்தினையுடைய இந்திரநீலவல்லியிடத்து அவள்செய்த நல்லதவத்தாலே வீரதீரனும் தோன்றினர்.

இவ்வாறு வீரரொன்பதின்மரும் இறைவனருளால் தம்மையீன்ற தாயர் நிறம்போன்று பொற்றுகி லணிந்து பலகால்வளர்ந்த உறுப்பொடும் அம்மாதர் உந்தியின்வழியே, அன்று திருமாமகள்கணவன் உந்தியின்வழியே நான்முகக்கடவுள்தோன்றியவாறு தோன்றி அக்கயிலையின்கண் சிங்கஞ்சுமந்த அணையிலெழுந்தருளியிருக்கும் அம்மையையும் அப்பனையும் மும்முறை வலம்வந்து எட்டுறுப்பும் நிலமுறப்பணிந்தெழ, அதைக்கண்ட சுருதிப்பொருளாகியபண்ணவர்பெருமான் தன்னிடத்திலே இனிது வீற்றிருக்கும் உமையன்னையை அன்பால் நோக்கி, இவரோ மதியிலும் திறலிலும் மிக்கார், மானமே யாபரணமெனப் பூண்டார், நமது மைந்தருமாவார், புதியருமல்லர், நமது நந்திகணத்தவரோயாம் என்று சொல்ல, அதைக்கேட்ட எப்பொருட்குமிறைவி அம்மைந்தர்க்கருள்செய்ய, அவர்கட்கெல்லாம் பரமசிவன் வெவ்வேறாகிய சுடர்வாளுதவி, முன்னைநாளில் அந்நவசத்திமார் வியர்ப்பில்வந்த இலக்கத்தவரோடு நீங்களும் உங்கட் கிறைவனென்னும் சண்முகத் தொருவனாகிய சாட்குணியப்பிரமத்தினை யிறையேனும் நீங்காது, அவன் குற்றேவல்செய் தொழுகுவீரென்று கட்டளையிட, அதைக்கேட்ட நவ வீரரும் அதற்கிசைந்து இலக்கத்தவருடன் தாமும் ஒன்றிப்புல்லி அன்பான் எமது சிவபரஞ்சுடரினாலயத்தை நீங்காது அருகேயேயிருக்க, நீலோற்பல மலர்போலும் விழியையுடையராய் நவமணிகளிற்றோன்றிய நவசத்திகளும் அருட்பெருங் கருணை வல்லியாகிய உமாதேவியாரை நீங்காது அவரிடுங் குற்றேவலைச்செய் தொழுகுபவரா யிருந்தனர்.

துணைவர்வருபடலம்-முற்றிற்று.

# சரவணப்படலம்.

---

இதுவரையும் இலக்கத்தவரும் நவவீரரும் தோன்றியவரலாறு சொல்லி முடித்தோம்; இனிச் சரவணப்பொய்கையில் கார்த்திகைமுதலிய மாதாறுவரு முலைப்பாலளிக்க அதனையுண்டு திருவிளையாடல் செய்யும் சண்முகத்தமலன் திருவிளையாடலைச் சொல்லுவோம். ஆங்கார மிருந்தார் காண்பதற்கரிய வெள்ளிமலையாகிய ஸ்ரீகயிலாயத்தில் இனிதுவீற்றிருக்கும் சிவபெருமான் கருவுயிர்க்காமலே எல்லாவுயிரையுமீன்ற கன்னியாகிய இமயமடந்தையை நோக்கி அவுணரால் வருந்துகின்ற நான்முகன்முதலானோர் துன்பமநீங்க, நமதுவிழிகளிற்றோன்றிச் செம்பதும மலர்பூத்த சரவணப்பொய்கையில் வளர்ந்துவரும் முத்துக்குமாரனாகிய உன் புத்திரசிகாமணியை இக்கயிலைவரையிற் கொணருவோம் வாவென்றுகூற, அதைக்கேட்ட இறைவி அவ்வாறே அன்புடனெழுந்து நாம் போவோம் வாருமென்றனள்.

இவ்வாறு சொல்லக்கேட்ட நெற்றிமே லொற்றைநாட்டமுடையானும் கறைமிடற்றிறைவனுமாகிய நந்தியென்னுந் திருநாமத்தையுடையான் இம்மென விடையூர்ந்து நம்பெருமாட்டியோ டெழுந்தருளலும், தேவர்க ளெல்லாருந்தம் வினையனைத்தும் ஒழிந்தனவென்று நந்திபெருமான் கணத்தொடும் நெருங்கித் துதித்தனர். பின்பு ஆலவிடத்தையடக்கிய கையையுடைய ஆலாலசுந்தரரோ முதலாகிய கணத்தவரும் சிவசாரூபம் பெற்றுரும்வந் திருபுடையுஞ் சூழ்ந்து நின்றனர். நந்திபெருமான் செலுத்தத் தாமரைக்கண்ணனும் நான்முகனும் இந்திரனும் பிறரும் தேன்றுளிக்கும் நறுமலரைக்கையாற்சிந்தி இறைவனது புண்டரீகபதமலரை மும்முறைவலம்வந் தெட்டுறுப்பு நிலமுறப்பணிந்தனர். இவ்வாறுகப்பூதகணங்கள் சல்லரி, ஊதுகொம்பு, துடி, தடாரி, சச்சரி, கல்லென்றிடிக்குங் கரடி, காகளம், மேகம்போலும் ஒலிக்கும் பேரிகை, திமிலைமுதலிய பல வாத்தியங்களும், இருக்கு, எசுர், சாமம், அதர்வணமென்னும் நான்குவேதங்களும், பிரணவமும், மற்றைக்கலைகள்யாவும் பேரொலிமுழக்கின. வித்தியாதரர் கீதம்பாடினர். இறைவன் சடாமகுடத்திலுள்ள பிள்ளை வெண்பிறையைப் படர்ந்து பேரரவங்கொள்ளுமென்பது குறித்து அதைப் போற்றுதல்போல வெண்குடையைச் சூரியர் பன்னிருவருமேந்தவும், சகரரென்னும் அரசர்கள் வழியில்வந்த பகீரதனென்னு மரசர்பெருமான் வேண்டியகாலத்தில் இறைவனது சடாடவியினின்றும் வெளிப்பட்ட வெள்ளத்தொழுக்கேபோலப்பூதர்கள் சாமரைவீசவும், பின்னும் யானை சிங்கம் புலி யாளிமான்கரடிமுதலிய விலங்குகளின் முகங்களைக்கொண்ட சாரதவீரர் நூறுகோடிபேர்விரைந்து சுற்றிக்கொள்ளவும், பலவிடைக்கொடிகள் ஆகாய கங்கையையடைந்து நக்கிச்சிதறுவன இறைவனைத்தொழுதாற்று மெய்யன்பினால் நீரைச்செலுத்தும் காட்சியையொத்திருப்பவும் விளங்கித் தோன்றின. எப்பொருளையுமீன்ற இமய மயிலுடன் அழகிய மழவிடைமேல் ஆரோகணித்தருளி மதியமுடிக்கணிந்த மாசிலாமணியோ தமது திருவாலயத்தை நீங்கிச்சென்று கயிலையையகன்று இமயமலையினையும் புறத்தேவிட்டு அன்னமாடு மகன்ற துறையையுடைய சரவணப் பொய்கையின்கரையை யணுகினன்.

சாவணத்தடத்தில் மூவிருமுகங்கொண்டு வீற்றிருக்கும் முத்துக்குமாரன்உலகமெலாமீன்ற ஒருத்தியையும் இறைவனையுங்கண்டு முகமலர்ந் துள்ளங்களிகூர்ந்தனன். அந்தச்சமயத்தில் இறைவியைநோக்கி எம்பெருமான் நின்மகனைக்கொண்டு வருகவெனச்சொல்லினர். இறைவி அழகியமழவிடையினின்று இழிந்து மனத்திற்கொண்ட பேராதரத்தொடுஞ்சரவணப்பொய்கையிற்சென்று தனது குமாரனாகிய சண்முகத்தமலனது ஆறுதிருவுருவத்தினையும் இருகரங்களால் அன்பொடுமெடுத்துப் புல்லிப் பன்னிருபுயமும் ஆறுதிருமுகங்களுஞ் சேர்ந்த திருவுருவமாகச்செய்தனள். அது எப்படியிருந்ததென்றால் எம்பெருமான்சத்திகளெல்லாம்உயிர்களொடுங்குங்காலிற்கும் பண்டைக்காலத்தொன்றுமுறைமைபோல ஒருருவமேயாகக் கந்தனென்று பேர்புனைந்து மெய்யாறுமொன்றாக மேவுவித்து உச்சிமோந்து புறந்தனை நீவிநிற்கையில் இறைவி தனம் பால்சுரந்தன. இதுவன்றோ தலையளியென்று சொல்லப்படுந் தன்மை. அப்போது இறைவனதுகருணையாய் மலரகிதமாய்ப் பரமபோத நீர்மையாயிருந்த தன்கொங்கையினின்றும் பொழிந்தபாலை அழகிய மணிவள்ளத்திலேற்றுத் தன்னருட் பெருங்குமரனுக் கருத்திக் கைக்கொடு சென்று எங்கள்பெருமானார் சந்நிதானத்தின் முன்ன ரிறைஞ்சுவித்து, இமயமடந்தையார் அக்குமரநாயகனை யெடுத்து மார்போ டணைத்துப் பெருங்கருணையால் இடையேயிருத்தினர். அன்புருவமாயிருக்குங் குமரநாயக னொருபுடை யமர எவ்வுயிரையுமீன்ற ஒருத்தியை யொருகையால் வாங்கித் தன்னிடத்தி லிருத்திய காலத்தில் ஏலவார்குழலிறைவிக்கும் இறைவனுக்கும் பாலனாகியே நடுவே குமரநாயகன் அமர்ந்ததன்மையால் உலகின்கண் இரவுபகலுக்குநடுவே மாலைக்காலந்தோன்றிய தன்மைபோலிருந்தது. இக்கோலத்தையன்றோ சோமாஸ்கந்தமென்பது.

இவ்வாறு உமையொடுவிளங்கிய இறைவன் நடுவிலே ஆறுமுகங்கொண்ட அருட்பெருந்தகை யிருக்கக்கண்ட பிரமன் இந்திரன்முதலிய தேவரும் கற்பாந்தகாலத்தின் கடலொலிபோற் களிப்பினொலித்துப் புடைசூழ்ந்து அவ்விறைவனைப்புகழ்ந்து, அவ்வருட் பெருங்கடலாகிய சண்முகத்தெள்ளமுதை நோக்கி, மன்மதனை விழித்தெரித்த விமலன்விழியின்வந்த விமலனே என்று மொழியாக் குற்றங்களையேசெய்து உயிர்வாழுஞ் சூரபதுமன் முதலானோரால் பஞ்சுபடாப்பாடுபட்டு வருந்தினோம். இனியெங்களுக் கருள்செய்கவென்று பூமாரிபொழிந்து வாழ்த்தினர். அத்தருணத்தே கச்சணிந்த கொங்கையும் மயிலிறகி னடிமுட்போலும் பற்களும் பவளம்போலமைந்த விதழும் முழுமாமதி போலும் முகமுமுடைய கார்த்திகைமுதலிய அறுவரும் இறைவன்முன்வந்து பணிந்து நின்றனர். அவர்களைநோக்கி ஆலாலமுண் டமரரைப்புரந்த அரும்பரமன் பெண்காள்! கந்தனை நீவிர் விரும்பிவளர்த்த பெற்றிமையால் இவனுக்கு உங்கள்மைந்தனென்னும் பொருள்படும் கார்த்திகேய னென்னும் பெயராகுக; அதிக மகிழ்வால் உங்கள் நாளில் இவனது திருவடியைப்போற்றி வணங்கினோர்க்கு அவர்கள்வேண்டிய வேண்டியாங்குதவி யவர்குறையை முடிப்போமென்றுவரங்கொடுத்தருளினன், உலகங் கருவுயிர்க்காமலே யீன்ற கருணை

முதல்வி சண்முகத்தமலனை யன்பாலெடுப்ப பரஞானம், அபரஞானங்களாகிய தனத்தினின்றும் பாலருவிபொழிந்தது. அதுபெருகிக் கங்கையாற்றைப்போற் சரவணப்பொய்கையிற் பாய்தலும் பராசரன் மக்களறுவரும் அம்முனிவன் சாபத்தால்மீனுயிருக்குஞ ரருந்தித் தம்முருநீங்கிப் பழயபடியே முனிவ ருருவ மெய்திப் பொய்கையினின்று மகன்று எமக்குண்மைஞானம் போதிக்கவேண்டு மென்று கருணைநெடுங்கடலை யடைந்தனர், இறைவன் நீவிர்பரங்குன்றடைந்து தவஞ்செய்மின், இவன்வந்து உமக்குச் சிந்தையுமொழியுஞ் செல்லாகிலைமைத் தாயஅந்தமி லின்பத்தழிவில் வீடுபேற்றையுதவும் பரஞானம்போதிப்பனெனத் திருவாய்மலர்ந்தருள அவரும் விடைகொண்டு சென்றனர். இறைவனும் பிரம னுதியரைத் தத்தமிருக்கையிற் செல்ல விடைநல்கி உமையன்னையொடும் குமரநாயகனொடுங் கயிலைபைங்கிரியையடைந்து விடையினின்றுமிழிந்து அரி யணையில் வீற்றிருந்தனன். அக்காலையில் மாணிக்கவல்லிமுதலிய மங்கையர் ஒன்பதின்மர் பெற்ற இலக்கத்தொன்பதின்மரும் திருவடிதொழுது குமரநாய கனை விடாது சூழ்ந்திருந்தனர். இதுநிற்க ;

சரவணப்படலம்

முற்றிற்று.

---

## திருவிளையாட்டுப்படலம்.

---

இறைவியும் இறைவனு மகிழ அவர் நடுவண் எழுந்தருளியிருக்கும் குமர நாயகன் தன்னைத்தொடர்ந்த இளையவரோடும் சில திருவிளையாடல் செய்யக் கருதி காற்சிலம்பு கலீர் கலீரென் றொலிக்க, மிக்க அழகமைந்த அரைஞாண் மணியாகிய கிங்கிணிச் சதங்கையொலிக்க, வட்டமாகச் செய்துள்ள மணிக் குண்டலமும் மதாணிப்பதக்கமும் நெற்றியிற் புனைந்திருக்கும் வீரபட்டிகை யும் விளங்க மன்றுதொறு முலாவியும், மலர்நெருங்கிய தடாகங்கடோறு முலாவியும், சிறு தென்றற்காற்றசையும் பூஞ்சோலைதோறு முலாவியும், யாறு தோறுலாவியும், குன்றுதோ றாடல்செய்தும், குளத்தி லுலாவியும், ஆற்றிடைக் குறையி லுலாவியும், ஆதீண்டு குற்றியி லுலாவியும், அந்தணர் தவச்சாலையி லுலாவியும், இறைவன் எழுந்தருளியிருக்கும் காசி, திருவருணை, சிதம்பரமுத லிய திருத்தலங்களி லுலாவியும், கடம்ப மலர்ச்சோலைதோறு முலாவியும், செந் தமிழ் வடமொழியை யுள்ளவாறுணர்ந்த கழகந்தொறு முலாவியும், கருடர் கந்திருவர் சித்தர் வித்தியாதரர் கிம்புருடர் கின்னரர் முதலிய தேவர் கணத் தவர் உலகங்கடொறு முலாவியும், இந்திரனுலகத்தி லுலாவியும், சத்திய லோகத்தி லுலாவியும், வைகுந்தபதத்தி லுலாவியும், இறைவியினது பதத்தி லுலாவியும், சிவலோகத்தி லுலாவியும், அண்டகிரை முழுது முலாவியும், காற்று, கனல், வெளிமுதலியவிடங்களி லுலாவியும்வருவானாயினன். இதுநிற்க;

குகப்பெருமானே அறுமுகங்கொண்டு சிறுபருவமுடையானுகத் திரிவன், ஒருமாமுகங்கொண்டுலாவருவன், மறையவ ருருக்கொண்டும் முனிவருருக் கொண்டும்திரிவன், நீண்டகணையையுடைய மறவீரனைப்போலுமுருக்கொண்டு திரிவன், காலால்நடந்துசெல்வன், குதிரையிற் செல்வன், யானையேறிச் செல்வன், கடுந்தேரூர்ந்து செல்வன், யாளியூர்ந்து செல்வன், தகரூர்ந்துசெல்வன், விமானமேறிச்செல்வன், விண்ணில் மேகத்திற்செல்வன், ஓசையினிதாகி அசைகின்றமணியை யார்ப்பன், மூங்கிலினலாகிய புள்ளங்குழ லிசைப்பன், கோட்டினைக்குறிப்பான், வீணைவாசிப்பன், சிறு பல்லியமொலிப்பன். இவ்வாறே பலவுருவங்கொண்டு யாண்டுங் குமரநாயகன் நல்ல சேயத்தோடும் செய்துவருங் காலத்து மிகவியந்து உலகீன்றவளாகிய முதல்வி எல்லாமுடைய இறைவனை வணங்கி நமது குமரப்பெருமான் செய்துவரும் அற்புதத் திருவிளையாடலோ சொல்லுவதரிது, அவனைப்போல்வார் ஒருவருமிலர், ஆராயுமிடத்தில் எல்லா வல்லமையினும் நின்னையே யொத்திருக்கின்றனன், அவனது பெருமிதத்தினை யெனக் கியம்பவேண்டுமென்று ஒன்று மறியாதார்போல் வினவ, நெற்றிமேலொற்றைநாட்டமுடைய நின்மலக்கொழுந்து எல்லாவணுக்களு முய்ந்திடக் கேட்டமையால் நாமே சொல்லுகின்றனம். அவன் நமதுகண்ணின் தீப்பொறிகளிற்றோன்றி கங்கையால் தாங்கப்பெற்றமையால் காங்கேயனென்றும், சரவணப்பூந்தொட்டிலில் வளர்ந்தமையால் சரவணபவனென்றும், கார்த்திகை முதலியவரறுவரும் வளர்த்தமையால்காங்கேயனென்றும், அறுவடிவங்கொண்டு விளையாடல் செய்தானை நீசென்று ஒன்றாகச் செய்தமையால் கந்தனென்றும் பெயர்பெற்றனன். நமக்கோ அநாதியே ஆறுமுகமுண்டு ; அவையே அவனுக்கு முகமாயின ; நமது பஞ்சாக்கரத்துடனே தாரகப் பிரமமாகிய குடிலையெழுத்தையுஞ்சேர்த்து உன்மகனது குமரசடாக்கர மந்திரமாயிற்று ; நமது சத்தியே அச்சரவணபவனுகும், அவனுக்கும் நமக்கும் சிறிதேனும் பேதமேயில்லை, நம் போல்யாண்டும் பிரிவறப் பூரணமாய்க் கலந்திருப்பன், பார்ப்பவருக்குச் சிறு குழந்தையேயாகத் தோன்றுவன், எல்லா மொருங்குணரவல்லான், அவனே தன்னை யடைந்தார்க்குப் புத்திமுத்திகளையுங் கொடுப்பன். இனிப் பிரமனை யழைத்து வேதங்களுக்கெல்லா முதலெழுத்தாகிய பிரணவத்தின் பொருளைக் கேட்டு அவன் சொல்லாமையாலே தலையிற்குட்டிச் சிறையிட்டுத் தானே யுலகுயிரைப் படைப்பன். மேலும் தேவர்கள் பொருட்டுத் தாரகனையும் சிங்கமுகனையும் சூரபதுமனையும் மற்றும் அவுணர்களையுங் கொன்று அவர்கள் துன்பந்தவிர்த்தருள்வனென்று சொல்ல உலகன்னையும் நன்று நன்றென்றகமகிழ்ந்து நின்றனள். இதுநிற்க ;

குமரநாயகனே தன் திருவிளையாடலை யிடைவிடாது புரிவானாய் கயிலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி, கந்தமாதனமென்னும் எட்டுக் குலகிரியையும் ஓரிடத்தே கூட்டுவன் ; அவற்றை வெவ்வேறிடங்களிற் றலைகீழாகச் செய்வன் ; உவர் நீர், நன்னீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேனென்னும் எழுகடலையு மொன்றுசேர்ப்பன் ; சக்கரவாளகிரியைப் பிலத்தி லழுத்துவன் ; கங்கைநதியை யடைப்பன் ; நாகலோகத்தில் வாழும்

வாசுகி, அனந்தன், தக்கன், சங்கபாலன், குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடகன் என்னும் அட்டமா நாகங்களையும் மேருமுதலிய மலைகளிற் பூட்டிப் பிணித்து மூவகையணுக்கட்கு மிடையூறில்லாதபடி சிறுதேராகக் கொண்டுருட்டுவன், ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சாருவபூமம், சுப்பிரதீபமென்னு மெண்டிசைக்களிற்றையும் ஒன்றோடொன்று பொரச்செய்வன் ; கங்கையாற்று நீராலே வடவைத்தீயை யவிப்பன் ; கருடனோடு வாசுகியை நெருக்கி யொருவரோடொருவர் போர்புரியப்பண்ணுவன் ; நாகலோகத்திலுள்ள நாகராசரையெல்லாம் பூமியிற் சேர்த்து உலகமுழுதும் புகும்படி பிலத்திற் சேர்ப்பன் ; சூரியனை மதிமண்டலத்திற் செலுத்துவன் ; மதியைச் சூரியமண்டலத்திற் செலுத்துவன் ; இந்திரன்முதலிய இறைவர் எண்மர் பதங்களையும் நிலைபிறழச்செய்வன் ; மேகத்திலிருந்த மின்னற் கூட்டத்துடன் இடியைப்பற்றி வண்டினமடையப் பெருஞ்செம்மலர் மாலையாகத் தரித்துக்கொள்வன் ; தாத்துரு - சக்கரன் - அரியமன்-மித்திரன்-வருணன் - அஞ்சுமான்-இரணியன் - பகன்-திவச்சுவான் - பூடன் - சவித்துரு - துவட்டமென்னும் சூரியர் பன்னிருவரும், சந்திரனும் ஏறிச் செல்லும் தேர்களையும் விமானங்களையும் பிணித்த பாசமுழுதுந் துருவனென்பவன் கையுற்று அவற்றில் வேண்டுங் கயிற்றினை யிடையேயீர்ந்து உலகத்தினிடத்தே செல்ல விடுப்பன். குற்றந்தவிர்ந்த விசும்பின்கண் செல்லும் நீண்ட விற்களிரண்டால் நாண்மீன்களையே யுண்டைகளாகக் கொண்டு தேவர்கள் முடியணிந்த தலைமார்பு தோள் கண்டம் முகம் வருந்த எய்து உண்டைவில் விளையாடுவான். இவ்வாறு உலகின்கண் தேவர்கள் முதலிய யாவரும் நெஞ்சுமுட லு நடுங்கலின்றிச் சிதையாத வகைமையாய் அளவிகந்த திருவிளையாடல் செய்து வருவானாயினன். இதுகண்ட அவுணர்களோ இவ்வரியனசெய்வார் உலகின்கண்யார்வர்! எனக் குமரநாயகனது திருவுருவத்தைப் பெரும்பவத்துழல்பவராதலால் அறியாது மயங்கினர். மண்ணுலகத்தவரோ கொடுங்கோல் செலுத்தும் சூரபதுமனை முதலிய தீயவர் மாய்வது திண்ணம், அதற் கேதுவாகத்தோன்றும் உற்பாதங்கள் இவைகளென்று பயமெய்திக் கிடந்தனர். இந்திரன் முதலிய இறைவரெண்மரும் சூரியரும் சந்திரனும் மற்றைத் தேவரனைவரும் சண்முகங்கொண்ட தாணுவின் அற்புதத் திருவிளையாடல்களைக் கண்டும் அவனது திருவுருவங் காணாதாராய்இதுவோ அவுணரது மாயச்செய்கையுமன்று, இது எவர்செயலா மென்று யாவருங் கூடிப்பேசினர். இவ்வாறு நிகழ்கையில் சில தேவர்கள் சென்று குமரநாயகன் திருவிளையாடல் செய்கின்றனனென்பதனை யுணராதுகலங்கும் இந்திரனை மேருமலையிற்கண்டு மும்முறை வலம்வந்து பணிந்து கடல்சூழ்ந்த நிலவுலகத்தினும் விண்ணினும் பழபமுறைமை மாறுபடுகின்றன,இவ்வாறு செய்பவர் இன்னவரென்றே தெரிந்திலம், அவுணரோ செய்யவாற்றலிலர், இது மிக அதிசயிக்கத்தக்கதேயென்று சொல்லிக்கொள்ள, அதைக்கேட்டுப்பாகசாதனன் யானும் அதனையோர்குகின்றேன்,எனக்கும் சிறிதுந் தோன்றிலதாகையால், நாமனைவருஞ்சென்று சுவணமேனிச் சுருதிநாயகனாகிய பிரமன்பாற்சென்று கேட்போமெனப் போகத்

துணிந்தனன். அத்தருணத்தில் அவர்கள் கட்புலனும் வண்ணம் ஒருமுக முடையானைப் குழந்தைப்படிவங்கொண்டு குமரநாயகன்தோன்றித் தன் செயலை விளக்குவானாய், அப்பொன்னங் குன்றினையசைத்து அம்மலைச் சிகரங்களைப் பூவினிதழைபோலப் பறித்துவிசினன். அதைக்கண்ட தேவரனைவரும் இவ்வா றுலகைத் திரிபுசெய்பவ னிவனேயாமென் றெண்ணிச் சிங்கங்கண்டவாறேபோலச் சொல்லலாயினர். இக்குழந்தையைக்குழந்தையென்றே யெண்ணப் போகாது, இவன் பேராற்றலை யெண்ணுங்காலத்துக் கொடியவராய அவுணரிலும் கொடியனாகவே தோன்றுகின்றனன். இவனே யாருமெய்தாத மாயமெல்லாம் வல்லவனாக விளங்குகின்றனன். இவனைப்போர்செய்து வெல்லினல்லது பிறவகையாற் செயிக்கவல்லதல்லவென் றிந்திரன் சிந்தித்துநின்று முன்னாளில் திருவெண்காட்டில் தந்தங்களெல்லாம் போக அவற்றைச்சிவார்ச்சனைசெய்துபெற்ற ஐராவதத்தை யெண்ணுகையில், அக்களிறுமேருமலையை வந்தடைந்தது. அதைக்கண்டு வயிரப்படை வாள் குந்தம் சிலைமுதலிய படைகொண்டுதீயானது காற்றினாற் சூழப்பட்டவிடத்துப் பருத்திக்குன்றம் பட்டதேபோலச் சூழ்ந்து இந்திரனும் மற்றைத்தேவர்களும் போர்செய்யத் தொடங்கினர். அத்தருணத்தில் வெண்டாமரைமகளையும் செந்தாமரைமகளையும் இரண்டுகண்களாகவுடைய ஆளுடைய பெருமாட்டி திருக்குமரனாகிய குமரப்பெருமான் இவர்போர்செய்ததற் கெழுந்ததை நோக்கிச்சிறிதுமெண்ணாப் முன்போலவே தானும் திருவிளையாடல் செய்வானாயினன். இந்திரன் படைகள் பதினெட்டையும் கொண்டுவிடுத்தும், தெய்வப்பகழிகளால்தூண்டியும், சிறிது மிடையூறில்லாமலிருக்கக்கண்டு, வயிரப்படையைக் குமரநாயகன் மார்பிற்கு இலக்காகவிடவே அப்படை தூளாகப்போனமைகண்ட அவ்வயிராவதம் கோபமேற் கொண்டு குமரநாயகன் திருமுன்னர்ப் போர்பொருதச் சென்றது.

குமரநாயகனே அதைக்கண்டு தன்வில்லைவளைத்து நாணேற்றி அதனெற்றியையிலக்காக விரைந்துஒருபாணத்தைவிட ஆவியைப் புறங்கண்டுபோயிற்று. இந்திரனே ஐராவதம் மரணமெய்தியதைக்கண்டு மின்னல்போலும் விளங்கும் தன்வில்லைவளைத்துப் போர்செய்யக் குமரநாயகனே அவ்விந்திரன்தோளிலக்காக ஒருபாணத்தை விடுத்தான். அதனால் மிகவருந்தித் தன்னாற்றல்முழுதுங் கெட்டு வில்லுமொடிந்து தன்கையிலிருந்த வேலொன்றேவினன். அப்படையோ ஒரு சிறுபுல்லேபோல் வலியொழிந்து நிற்கையில், குமரநாயகனே தன் வில்லிற் கணையொன்று பூட்டி இந்திரன் கிரீடத்தைத்தள்ளி, ஒருகணையால் துவசத்தையும்,ஒருகணையால் மார்பிற்பூண்ட கவசத்தையும் தூளாக்கி,அவன் செயலற்றிருக்க ஏழ்கணைகளைத்தூண்டினான். அதனால் செருக்கின்மிகுந்த இந்திரன் அயர்ந்து வீழ்ந்தனன். சண்முகத்தருமருந்தோ போர்புரிகையில் தன் கையிலிருந்த வில்லைவளைத்து நான்குகணையைத்தூண்டி வருணனைக்கொன்று, ஐந்துபாணங்களால் ஏமனது பேராற்றலையடக்கி, ஓரம்பினால் மதியையும், மூன்றம்பினால் சூரியனையும்,இரண்டம்பினால் காற்றுக் கடவுளையும், மூன்றம்பினால் அக்கினியையும் ஒழித்து நின்றனன். தேவர்கள் அவன்திறத்தை நோக்கி

யாரையும் இவ்வொருவனே கொல்லுவனென்று தெளிந்து, சிம்புளைக்கண்ட சிங்கமேபோல உள்ளங்கலங்கி யுடனடுக்கமுற்றுத் திப்பிரமைகொண் டோடிப் போயினர். சிலதேவர்கள் பொருது தோற்றொழியவும், சிலர் உடைந்தோடவும், தனிவில்லாளியாய் விளங்கிய குமரநாயகனே எல்லாவுலகமுமழித்துத் தனி நின்ற உருத்திரமூர்த்தியையு மொத்திருந்தான். இவ்வாறு தேவர்களெல்லாம் விசாகப்பெருமானோடு பொருது போரிற்புறந்தந்து போனமையை நாரதர் இமையவர் குருவுக்கறிவித்தார். அதைக்கேட்ட வியாழபகவான் உடனே விரைந்தெழுந்துதேவர்கள் வாழ்வுகெட்டொழிந்ததே யென்று சொல்லருந் துயரங்கொண்டு அவர்கள் விழுந்துகிடக்கும் அமர்க்களஞ் சென்றனடந்தான்.

அவர்கள் ஆவிபோய்க்கிடப்பதை இமையவர் குரவன்கண்டு வருந்தி அங்குச்சண்முகங்கொண்ட சதுரப்பெருமான் திருவிளையாடல்செய்வதைப்பார்த்துத் திருவடிதொழுது நின்று இறைவனே! தாரகன், சிங்கமுகன், சூரபதுமனென்னும் தானவர்கள் வருத்துவதனால் வருந்தி இவ்விந்திரன் தன்பதியையும் விட்டு இம்மேருமலையில் வந்தொளித்துக்கொண் டிருந்தனன். அவனே நின்னடியையே தஞ்சமென்றடைந்து நின்னைக்கொண்டே பகைவருரந்தொலைத்துத் தன்னரசுபெற்றிருக்க வெண்ணி யிருந்தானல்லது வேறொன்றினைச் சிந்தையிற் கனவிலு மறியமாட்டான். பலநாளோ அருந்தவஞ்செய்து வாடினன். ஆன்மாக்களுக்கெல்லா மிறைவனே! சரவணத்தடத்தில் திருவவதாரஞ் செய்தருளிய நினது திருவவதாரச் செயலைக்கேட்டுச் சொல்லரிய தன் துயரமெல்லா மொழிந்ததுபோலப் பெருங்களிப்பென்னும் கடலிலாழ்ந்திருந்தனன்.

செங்காந்தளுஞ் செங்கடம்புங் குராமலரும் வெட்சிமலருமணிந்த குமரநாயகனே! நினக்குக் குற்றேவல்செய்ய விரும்பும் இவ்விந்திரனே நீசெய்யும் திருவிளையாடலைச் சிறிதேனு மறியானா யிவ்வாறுசெய்தனன், உனது திருவிளையாடலை யறியுந் தன்மையர் திருமாலே முதலிய பெருந்தேவரால் அறிவரிய வேதப்பொருளாகிய பரமசிவனும் உமையன்னையும் அவர்கள் திருவருள்பெற்ற சிலருமேயல்லது பிறரா லறிதற் கரிதேயாகும். பற்றிய பாசத்தொடர்பையும் உயிரையும் வகுத்தித்தன்மையென்றேயறியோம், யாங்கள் குற்றமுந்தீர்ந்திலம், யாமோ சிற்றறிவுடையோம், யாங்களெல்லாம் உனது திருவிளையாடலை முழுதுமுணரவல்லேமோ? ஆதலால், தேவர்பெருமானாகியஇந்திரனே மிகுதியு மறிவில்லானாய் உனது திருவிளையாடலைக் கொடியதென்றெண்ணிக் கடும்போருழந்தனன். அதன்பொருட்டு நீதிக்கமைந்த தண்டனையே நீயும் செய்தொழித்தனை. ஏனைத்தேவரோ போராடித் தத்தமாவிபோயினர். அவர் அவ்வாறாய தன்மையும் அறியாமையாலாய காரியமேயாகும். இருமுதுகுரவரோ தம்மக்கள் செய்பிழையைப் பொறுப்பர், அவர் தாமே மக்களைக் கோபிப்பாரெனின் எவரோ பெருங்கருணை செய்யுங் கடன்மைபூண்டவராவர்? சிம்புட்பறவையோ உலகின்கண் சிங்கத்தினைப் பொருதுவெல்லத் தேடுமல்லது மின்மினியோடு போருழப்பது அதற்கு வெற்றிகோடலாகுமோ? பகைக்குந் தன்மையையுடைய அவுணரையெல்லாம் வேரோடுங் களையவேண்டியே இத்தேவர்கள்

உனது ஸ்ரீபாதகமலங்களையல்லது வேறொன்றையு மன்புசெய்திலர். அருளாற் கடல் போன்றவனே! இவர்பிழையைப் பொறுத்தருள வேண்டும். மரக்கலம் வைசியரோடு பலபொருளையும் கொண்டுசென்று பாரத்தால் கடலிற்கவிழவே அதிலுள்ளார் ஒருவர்தஞ்சாவதுபோல உன்னருளாற் பெறும் பெருந்திருவ முடையார் போருழந்துபோர்க்களத்தி லவிந்தனர். வழியே வழியே நினக்குத் தொண்டுசெய்யும் நின்னடியார்செய்த பிழையைப் பொறுத்திலை,பெருமானே! இதுகாறும் உள்ளங்குழைந்துவருந்திய இவர் அறிவுபெற்றிவ ணெழுந்திருப்ப வருளவேண்டுமென்று வணங்குகின்றான்.

வியாழபகவான் இவ்வாறு வணங்கிக்கேட்ப முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளாகிய சண்முகப்பெருமான் இந்திரன் முதலிய தேவர்களை ஐராவதத்தொடு மெழுந்திருக்க வருள்செய்ய, அத்தேவரனைவரும் ஐராவதத்துடனெழுந்து சிந்தையின் மெய்யுணர்ச்சிதோன்றி, முன்னே தாங்கள் செய்த அபராதத்தினையெண்ணி உள்ள மழலிடு மெழுகேபோற் குழைந்து வருந்தி முகப்பொலிவிழந்து தம்மை யிகழ்ந்துநின்று கந்தாயநம,பஞ்சானனன் பெற்ற முருகேசநம, உமாசுதாயநம, துவிசட்புயாயநம, கதம்பமாலிகா பரணாயநம,சண்முகாயநம, சோதியேநம, தற்பராயநம, பாலசுப்பிரமணியாயநம, குமராயநம வென்றுதோத்திரம் புகல, அதுகண்ட குமரநாயகன் நீங்கள் வருந்திலிர் வருந்திலிரென அபயமளித்தலும்,துயரும் அச்சமும்நீங்கித்தொழுது உலகின்கண் அமுதத்தொடு நஞ்சினை யளவியுண்பாரை யவ்விடமேயல்லது அமுதோ உயிர்போக்குவது! நாங்கள் பெறலருந் திருவெய்த விருந்தோம், உன்னோடே போருழந்தமையால் நீரே யெம்மைமுடித்திரல்லிர், எம்மை உயிர் போக்கியது யாங்கள்செய்த குற்றமேயாம். முன்னாளில் பரம்பொருளாகிய பரமசிவனை யிகழ்ந்த தக்கன்செய்த அபராதத்தால் அவன்பட்டபா டறியாதார் யார்? யாங்கள்செய்த குற்றத்திற்காக எங்களையுந் தண்டனைசெய்தொழித்தீர். அதுவும் உமது பெருங்கருணையென்றே நினைக்கவேண்டும். இதனாலன்றோ பெரியாரும் 'தெய்வமுளதென்பார் தீய செயப்புகின் - தெய்வமே கண்ணின்று நின்றொறுக்கும் - தெய்வம் - இலதென்பார்க் கில்லைத்தம் மின்புதல்வர்க் கன்றே-பலகாலுஞ் செய்வார் பயன்.' என்றும் பணித்தனர் எனப் பலவாறு கூறினர்.

அதுகேட்ட சண்முகத் தெம்பெருமான் தேவர்களைநோக்கி நம்மை ஒரு குழந்தையாக மதித்துப் போர்செய்தீர், நமது பேராற்றலும் பெருமிதமும் நாமே யறிவிப்போம் பாருமென்று,எண்டிசையும் ஈரேழுலகும் எண்குலகிரியும் எழுகடலும் பெரும்புறக்கடலும் சக்கரவாளகிரியும் பிறவும் வேறுபாடமைந்த வண்ட வடுக்குகளும் அனைத்துமாகிய நிலையில்பொருளும் நிலையியற்பொருளும் அயனும் மாலும் அரனும் பொருந்திய விசுவரூபங் காட்டியருள, அவர்கள் 'பாதம் புவனி சுடர்நய னம்பவ னம்முயிர்ப்போங், கோத முடிக்கை யுயர்வான் முடிவிசும் பேயுடப்பு, வேத முகந்திசை தோள்.' என்றபடியான தோர் பேருருவங்கொள்ள அற்புதமெய்தி இதென்ன நிகழ்ந்தவாறென்று ஆகாயத்தை நோக்கிமெய்வடிவுசிறிதும்உணராராகிமுழந்தாளளவுங்கண்டு புகழ்கின்றார்கள்,

விண்ணுலகம் நலமெய்தவந்தசேணிற்பொலியுஞ் சிற்பர முதல்வனே! அடியேங்கள் கண்முன்னரே பெருநலம்பாமெய்த நீகொண்டதோ ரற்புத வடிவத்தை யாங்கள் காண்பதோவரிது. 'காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக்காலே' என்றபடி நீ காட்டக் காண்பதல்லாமல் யாங்களோ எங்கள் சிற்றறிவினாற் காணுந்தகையதோவென்று சொல்லினர்; சரவணப்பெருமாளும் அத்தேவர்களுக்கு ஞானசட்சுவைத் தந்தருளி ஆயிரங்கோடி இளஞ்சூரியர் உதயமானாற் போன்ற தன் திருமேனியைக் காட்டியருளினர். அவர்கள் அடிமுதல் முடியளவும் அளவிலா வண்டத்தொகுதிகளும், நிலையில்பொருளும், நிலையியற்பொருளும், பிரமன், திருமால், உருத்திரன்முதலிய மும்மைப்பெருந்தேவரும், மற்றையரும் அவன்திருமேனியின் ஓர்கசாரிருக்கக்கண்டு அது நின்னருள் காட்டினல்லது நின்னருள்வடிவங் காணவல்லோமோ? பிரமன் மால் என்னும் இருவரும்தம்பேதைமையாற் பரமம் யாமென்றுகூறிய பதைப்புநீங்க அவர்கணடுவே பேரழலுருவாய்ப்போந்த பெருமான் திருவடிவேபோல நின்பெருமித வடிவமமைந்துகிடந்தது. எந்தாய்! 'அவனருளாலே யவன்றாள்வணங்கி' என்றபடி அவனருள்பெற்றிருப்பரேல் அவர் அடியுமுடியுங் காண்கிற்பர். ஆகையால் எம்பெருமானே! நீ யருவுருவிட்டுநின்ற ஏகநாயகனேயாம், எமது பெருந்தவத்தால் எங்கள் துயரமனைத்துந்தொலைத்து சூரபதுமன் முதலியோரை வெற்றிகொண்டெங்களை விண்குடியேற்ற வெண்ணங்கொண்டே நீ குமரநாயகனாகத் திருவுருக்கொண்டனை? எவ்வுருவிற்கு மோரிடனாய் நின்ற நினது அருளுருவைக்கண்டு சிறந்தோம், அறம்பாவமென்னும் அருங்கயிற்றினையும் துணித்தெறிவோம், வீடுபேறென்றே யடையைப் பெறுவோமென்று இன்னனபலசொல்லியேத்தி வேண்டினர். குமரநாயகன் தன்விசுவரூபங் கரந்து அறுமுகங்கொண்டசாட்குணவடிவாகி நிற்கத் தேவர்கள்கண்டு வணங்கினர். இந்திரன் எல்லாமாயல்லவுமாய எம்பெருமானே! தேவரீர் எங்கள்பொருட்டுச் சூரபதுமனே முதலிய பகைவருயிரை மாற்றி இத்தேவர்களும் யானும் நின்பாங்கர் நின்றே குற்றேவல்செய்யவும் விண்குடியேறவும் செய்தருளவேண்டுமென் றெடுத்துக் கூறினன். அதைநோக்கிக் குமரநாயகன் புன்னகைசெய்தருளி நீ நமக்கு உதவியசிறப்பினை நாமுமக்குதவுவோம், தேவர்களே எமது சேனைகளாக நாமே சேனைத்தலைவனாகி யவுணரை வேரறுத்துவிடுவோம், நீ மனந்தளரவேண்டாமென்றான். இந்திரனும் தேவர்களுடன் அவுணர்களைக் களைந்து தான் விண்குடியேறப் பெற்றான்போல மகிழ்சிறந்து இறைவனைநோக்கி உமது திருவிளையாட்டினால் முறைபிறழ்ந்தனவாகிய உலகுயிர்யாவும் பழையமுறைமைப்படியிருக்கவேண்டுமென வேண்டினன். குமரநாயகன் அவ்வாறே யாகுகவென்று சொல்லவே தேவர்களெல்லாம் விம்மிதமடைந்தனர்.

பின்பு இந்திரன் குமரநாயகனைத் திருவடிதொழுது யான் உமது பாத பூசனைசெய்ய வேண்டுகின்றேன் கருணைபாலியு மென்றனன். குமரநாயகன் அதற்கிணங்கி நின்று அம்மேருமலையை யகன்று கயிலைவரைக் கணுக்கமாயுள்ளதோர் மலையைக் குறுகினன். இந்திரன் தேவர்களுடன் அர்ச்சனை செய்ய முயன்று தெய்வத்தச்சனை யழைத்து நமது அமராவதியினுஞ் சிறந்த

தோர் கோயிலைச் சிருட்டிக்க வேண்டுமென, அவனவ்வாறே செய்துமுடித்து விடைகொண்டு போகவே, தான் சண்முகத்தமலனை அக்கோயிலி லெழுந் தருளச்செய்து தேவர்களைக்கொண்டு புண்ணியநதிப்புனல் தருவித்து மஞ்சன மாட்டிச் செம்பட்டாடையா ளுடுத்தி அருச்சித்து நின்று அமலனை நோக்கி நாங்கள் உமது சேனையாவோம்,தேவரீர் எமக்குச் சேனைத்தலைவராவீரென்று வணங்கி நின்றனன். சண்முகப்பெருமானுந் தன்திருவுருக்கரந்தான். இந்திரன் முதலிய தேவரும் அவ்வரையை யகன்றுபோயினர். பரம்பொருள் மைந்த னகிய குமரநாயகன் தேவர்களால் அர்ச்சனைசெய்யப்பட்ட அவ்வரை கந்த கிரியென்று யாவருஞ்சொல்ல விளங்கும். தேவர்களும் தத்தம் இருக்கை சேர்ந்தனர். இந்திரனும் மனேவதியையடைந்தான்.

திருவிளையாட்டுப்படலம்

முற்றிற்று.

---

## தகரோறுபடலம்.

இவ்வாறு கயிலைவரையில் சூரபதுமன் முதலிய கொடியுரைக் கெடுக்கத் திருவவதரித்த சண்முகப்பெருமா னெழுந்தருளி யிருக்கையில் சிவப்பிரீதி யாக நாரதமுனிவன் வேள்வியொன்றுசெய்தான். அவ்வேள்வித் தீயினின்றும் தகரொன்று தோன்றிற்று. அவ்வாறெழுந்த தகரானது யாகத்தின்கண் நங்க ளினத்தே பலவற்றினையுங் கொலைசெய்கின்றமையால், இவ் வுலகத்தவரை யான் கொல்லச்சமைந்தேனென்றுமேலேயெழுந்த தோற்றமென்னவும், ஊழி காற்றும் ஊழித்தீயும் ஆகாயத்திற்பெயர்ந்து செல்லும் இடியேறும் ஒருருக் கொண்டுவந்த தென்னவும், ஓடித்திரிந்து உயிர்களை வருத்திற்று. இவ்வாறு உலகுயிரை வருத்துவதைக்கண்ட தேவர்களும் நாரதமுனிவரும் மற்றைமுனி வரும் இதன்கொடுமை கூறிச் சரணமடைந்தனர். அதைக்கண்டு குமர நாயகனும் அவரைச்சிறிதும் அஞ்சலீரென்று அபயத்தந்தந்து தன் பரிவாரத் தில் வீரவாகுவை நோக்கி நீ வேள்வித்தீயிற் பிறந்துஉலகுயிரை வருத்தும் தக ரினைவிரைந்து கொணரென்றுகட்டளையிட,அதனையேற்றுக் கயிலையையகன்று கடல்சூழ்ந்த உலகமுழுதுந் தேடிக்காணுமல் கீழேழுலகமுந்தேடித் தேவர் பதங்களிலுங்காணுமே பிரமபதத்தைக் கிட்டிப்போகக்கண்டு அவன்விரைந்து கோட்டைப்பற்றிக்கொண்டு குமரநாயகன் சந்நிதானத்தில்விடுத்து வணங்கி நின்றுன். குமரநாயகனும் தேவர்களையும் முனிவர்களையும்இனி நீவிர் உமது இருக்கையிற்சென்று வேள்விசெய்மினென்று விடைகொடுக்கப் பெற்றுப்போயி னன். இறைவனும் நாம் உய்யும்பொருட்டு அவர்வேண்டுகோளின்படி அத னையே வாகனமாகக்கொண் டேறியருளினுன். விடைபெற்றுச்சென்ற நாரத முனிவன் பூமியில்வந்து வேள்வியை முடித்தனன். அன்றுமுதல் சண்முகப் பெருந்தகை யாட்டையூர்ந்து வருவானுயினுன், இது நிற்க ;

தகரோறுபடலம் - முற்றிற்று.

---

## அயனைச்சிறைபுரிபடலம்.

தகரப்பரியையுடைய சரவணபவன்கயிலைவரையில் எழுந்தருளியிருக்கையில் ஒருநாள், பிரமன்முதலிய தேவர்கள் கயிலைவரையையணுகி என்னது யானென்னலற்றுத் தன்னையுந் தலைவனையுமுணரும் பரிசடைந்தார் முத்திபெற வழங்கும் அனாதிமல முத்தனாகிய பரமசிவனது திருவடிதொழுது அவனது திருவோலக்கங்கண்டு நீங்கிவாசலில்வருஞ்சமயத்தில், இலக்கத்தொன்பதின்மர் அன்பொடுநெருங்கிச்சூழ்ந்து வணங்க நின்ற சண்முகப்பெருமான் இறைவனை வணங்கிப்போதரும் பிரமனைநோக்கி நமது முன்னர்வருகவெனக் கூவ அப்பிரமன் தன்னைவந்து வணங்காதிருக்கக்கண்டு, நீர் இவ்விடத்தி லிருமென்று சொல்லிஉமதுதொழில் யாது சொல்லுமென்று கேட்க, இறைவன் றிருவாணையால் யான்படைத்தற்றொழில் செய்பவனென்றனன். முருகப்பெருமான் அம்மொழிகேட்டுப் புன்னகைசெய்தருளி உலகமுழுதும் படைப்பையாயின் எம்மறைக்கும் ஆதியினின்ற பிரணவத்தின் பொருளை விளக்கவேண்டுமென்று சொல்ல, அதன் பொருளையறியாமல் கண்கள் விழித்துநோக்கி வெட்கமுற்றுத் திகைத்திருந்தான். பிள்ளையார் அது இறைவனுக்குப் பீடமாய்யாவருந்தோற்றுவதற்கிடமாய் எவ்வகை யெழுத்திற்கும் மறைகட்குமுதலாய்க் காசிக்ஷேத்திரத்தில் இறப்பவர்கட் கெமதுகடவுளாகிய பரமசிவன் போதிப்பதாயிருப்பது. நீ அதன்பொருளை யுணராது எப்படி சிருட்டித்தொழில்செய்வதென்று அவன் முடிகள்குலுங்கக்குட்டி அவனைச் சிறையாகக் கந்தகிரியில் இருத்தி ; ஒரு கரத்திற்கண்டிகையும் ஒருகரத்திற் குண்டிகையுந் தரித்து, இரண்டுகைகள் அபயவரதமுமாக ஒரு திருமுகங்கொண்டு தானே சிருஷ்டித்தொழி னடத்திவந்தான். அவனுடன் வந்த தேவர்களெல்லாம் உள்ளநடுங்கி யோட்டெடுப்பாராயினர்.

அயனைச்சிறைபுரிபடலம்

முற்றிற்று.

---

## அயனைச்சிறைநீக்குபடலம்

இவ்வாறு சண்முகப்பெருமான் அநேககாலம் தானே படைத்தற்றொழில் செய்துவருகையில் திருமால் பிரமன்வருத்த நீக்கவெண்ணி மற்றைத்தேவரையெல்லாம் வரும்படி நினைக்கவே, எல்லாத்தேவரும் வந்துசேர்ந்தனர். அதுபொழுது திருமால், அவருடன் கயிலைமலையையடைந்து நந்திதேவர் விடைதரப்பெற்றுச் சென்று இறைவன் சந்நிதானத்தை யடைந்து மும்முறை வலம்வந்து பணிந்து நின்றனன். அதைக்கண்ட இறைவன் இதுவரையிலும் அடையாதவொருதுன்பமடைந்து இங்கேவந்த காரணமென்னவென்று கேட்டருளினன். அதற்கு இறைவனே நினதுகுமாரன் பிரமனை மறைமுதற்பொருள் யாதென்று கேட்க, அதையறியாமல் மயங்கினமையால் சிறையிட்டுத் தானே சிருஷ்டித்தொழில்செய்து வருகின்றான், பிரமனோ வெகுகாலமாய்ச் சிறையில் வருந்துகின்றான், அச்சிறையிலிருந்து மவனை மீட்பிக்க வேண்டுமென்று விண்ணப்பித்தான். இறைவன் சிலாதன் மகனாகிய நந்திபெருமானை யழைத்து பிரமனைநமது குமரன் சிறையிலிட்டிருக்கின்றனனும், நீ விரைந்து சென்று நமதாணையைக்

கூறி அவனைச் சிறையினின்றும் விடுப்பிக்க வேண்டுமென்று கட்டளையிட்டான். அக்கட்டளையை யேற்றுச்சென்று சண்முகத்தனிமுதல் சந்நிதானமடைந்து மும்முறைவலம்வந்து பணிந்து பிரமனைச் சிறைவிடுவிக்க நமது பெருமான் கட்டளையிட்டிருக்கின்றனன், அவனைச் சிறைவிடுவிக்கவேண்டுகின்றேன். அவன் பிரணவப்பொருளை யெடுத்துச்சொல்லுவதற் கெளியதோவென்று சொல்லினன், பிள்ளையார் கடுங்கோபங்கொண்டு பிரமனைச்சிறையினின்றும் நீக்கோம், உன்னையும் பிடித்துச் சிறையிடுவோம் விரைந்துபோவென, வேறொன்றுஞ் சொல்லாமலஞ்சி வணங்கி விடைபெற்றுச் சிவபெருமான் சந்நிதானத்தை யடைந்து நடந்த செய்தியை முழுதுமெடுத்துச்சொல்லப் புன்னகை செய்தருளிச் சிங்காதனத்தை விட்டிழிந்து தன்னாலயம் நீங்கி மழவிடை யிவர்ந்து தன்னை மாலே இந்திரனே முதலிய தேவர்கள் புடைசூழக் கணக்கிறந்த பூதர்கள் நெருங்கிவரக் கந்தவெற்பினை யடைந்து மழவிடை விட்டிழிந்து தமது திருக்குமாரனாகிய குமரநாயக னெழுந்தருளிய கோயிலையணைந்தனன். எமது பெருமா னெழுந்தருளினனென்று நேர்சென்று வணங்கி இரத்தினமயமான சிங்காதனத்திலிருத்தி எவ்வுயிர்க்குமுயிராயிருக்கு மிறைவனே! இவ்விடத்திற் கெழுந்தருளிய காரிய மென்னவென்று குமரநாயகன் விண்ணப்பித்தான்.

இவ்வாறு சண்முகப்பெருமான் கூறிய இன்சொற்கேட்டுவந்து உறுதிப் பொருளாகிய ஓரெழுத்தின் பெருமையை அறிகிலாத அந்தப் பிரமன் உலகைப் படைக்கின்றே னென்று கூறுவது பேதைமையின்பாலதே, அவ்வாறே அவன்மறைகள்வல்லது மற்றது போலுமெனத் துணியக்கடவை. என்மகனே! நின்செயலிருந்தவா றென்னை? நான்முகனைச் சிறைவிடென்று நந்திதேவன் நமது ஆணையால்வந்து சொன்னதும் நாமே வந்து சொன்னதும் கேளாது மறுத்து எதிர்மொழிந்தனையென்று குமரநாயகனைக் கோபிப்பான் போன்று கருணைக்கடல் சொல்ல, அதைக்கேட்ட குமரநாயகன் இறைவனே! நின்கருத்தவனை விடுவிப்பதெனின் விரைவாக அவனைச் சிறையினின்றும் விடுவிக்கின்றேனென்று தன்னருகிருந்தாரை யேவிப் பிரமனை விரைவாக வழைத்துவரக் கட்டளையிட்டான். பூதகணங்களுள் சிலர் சென்று பிரமனைக் குன்றுதோறாடுங் குமரநாயகன்முன் கொணர்ந்து விடுத்தனர். அவ்வாறு கொணரவே அப்பிரமனைச் செங்கரம்பற்றி இறைவன் சந்நிதானத்தில் விடுத்தான். பிரமன் இறைவனைப் பணிந்து நாணங்கொண்டு நின்றான். இறைவன் பிரமனைநோக்கிப் பலகாலுஞ் சிறையிலகப்பட்டு வருந்தினைபோலு மென்ன, பிரமனும் நமது சண்முகப் பெருமான் என்னைச் சிறையிலிட்ட இத்தண்டனை தீங்கு பயந்ததன்று, நல்லறிவுச் சுடர் கொளுத்தி யானெனு மகந்தையை நீக்கிப் புனிதத்தையே செய்ததென்று சொல்லிமுடித்தான்.

பரமசிவனே இன்று முதல் எல்லாவுயிர்த் தொகையையும் படைத்துவரக்கடவை யென்று கட்டளையிட்டு, முருகப் பெருமானைப் பார்த்துப் புன்முறுவல் செய்து வாரியெடுத்து மடிமீதிருத்தி உச்சிமோந்து முத்தமிட்டு செந்தாமரை போன்ற கைகளாற் பரிசித்துப் பிரமனுமறியாது மயங்கிய அப்

பிரணவப்பொருள் உனக்குத் தெரியுமோ சொல்லவேண்டு மென்று சொல்ல, இறைவனே! தேவரீர் உலகமெலா மீன்ற பெருமாட்டிக்கு முன்னே பிறருண ராதபடி பிரணவப்பொருளை இரகசியமாகச் சொன்னதல்லாமல் இவ்வாறு சொல்லப்படுமோவென ; இறைவன் செவிசாய்த்துக் கேட்ப அருளிச்செய் தான். இறைவனும் தன்னிளங் குமரனைத் தலைமை யோடிருப்பவருளித் தன்னை யாவரும் புடைசூழ்ந்துவரக் கயிலைக் கெழுந்தருளிப் பிரமன் மால் முதலிய தேவர்களைத் தத்தமிருக்கைக்குச் செல்ல விடுத்தனன். குமரநாயக னும் இலக்கத் தொன்பதின்மரும் பூதவீரரும் வணங்கக் கந்தகிரியில் எழுந் தருளியிருந்தான். இவ்வா றிருக்கையில் செந்தமிழாசிரியராகிய அகத்தியர் தம்மைவழிபட மறைமுதலெழுத்தின் பொருளும் பதிநூலும் போதித்தான்.

அயனைச்சிறைநீக்குபடலம்

முற்றிற்று.

---

## விடைபெறுபடலம்.

இவ்வாறிருக்க திருமாமகள் கொழுநனளித்த சுந்தரி அமுதவல்லி யென் னும் இரண்டு கன்னியர் பெருவனப்புடையராய் குமரநாயகனது மலைபோன்ற தோளினை யணையவேண்டுமென்னும் அவா மிகுதியால் பெருந்தவஞ்செய்து வந்தனர். அவர் முன்பு எம்மையாளாகவுடைய பிள்ளையார் அவர்கள் தவஞ் செய்வதைக் கருத்திலெண்ணிக் கந்தவரையை நீங்கி இமயமலையையடைந்து அதற்கொருபாலிருக்கும் சரவணத்தடத்திற்கு அவர்கள்காண வெழுந்தருள அதுகண்டு அம்மாதர் இருவரும் பெரிது மறுகி மும்முறை திருவடிதொழுது வணங்க என்னவரம்வேண்டுமென்று கேட்டருளினர். அம்மாதரும் எம்மைத் திருமணஞ்செய்துகொள்ள யாங்கள் தவஞ்செய்தோம் கிருபைசெய்யவேண்டு மென்று வேண்டிக்கொண்டனர். அதற்குப் பிள்ளையார் அவ்விருவருள் அமுத வல்லியை இந்திரன் மகளாகவளரவும் சுந்தரியைப் பூமியில் சிவமுனிமகளாகப் பிறந்து வேடரிடத்தே வளரவும் கட்டளையிட்டு, நீங்கள் அவ்வாறு வளர்ந்து வருகையில் நாமே மன்றலயர்ந்து மருவுகின்றோமென் றருளிச்செய்து தாம் மறைந்தருளினர். அம்மாதரிருவரும் விடைபெற்றுச் செல்கையில் அவருள் அமுதவல்லி இந்திரன்முன்னே தான் ஒரு பெண்குழந்தையாகத் திருவுரு வெய்தி உன்னுடன்பிறந்த உபேந்திரன் மகள் யான், என்னைக்காக்கவேண்டு கின்றேனென்ன, மேருமலையினிடத்திருந்த அவ்விந்திரனும் தன்பட்டத்து யானையாகிய ஐராவதத்தையழைத்து இப்பெண் நமது மகளாகும், இவளை வளர்த்துவருவையேல் நாம்அளவற்ற சிறப்படைவோமென்று சொன்னான். அப்பெண்குழந்தையை அதுதன்கழுத்தடியின்மேல் வைத்துக்கொண்டு மனோ வதி நகரத்திற்குக்கொண்டுசென்று அன்புடன் காத்துவந்தமையால் அப்பெண் தெய்வகுஞ்சரி யென்னும் பெயரடைந்து குமரநாயகனைத் தியானஞ்செய்து

கொண்டிருந்தாள். சுந்தரியோ சண்முகப்பெருமான் கட்டளையின்படி தொண்டைநாட்டைச் சார்ந்த வள்ளிமலைச்சாரலில் தவஞ்செய்திருந்த சிவமுனிவனுக்கு மகளாகவெண்ணிச் சென்றாள். இது நிற்க;

இவ்வண்ணம் அம்மாத ரிருவர்க்கும் வரங்கொடுத்துச்சென்ற சண்முகப்பெருமான் தன்னாதீனத்தினின்று மிழிந்து கந்தவெற்பகன்று கயிலைமலையையடைந்து தன் தாய் தந்தையரைப் பணியச்சென்று அவர்களை வணங்கி யவர் நடுவில் வீற்றிருந்தருளினான். அச்சமயத்தில் இந்திரனும் மற்றைத்தேவர்களும் தங்கள்குறை யின்னும் தீராமையால் பிரமன் மால் என்னும் இருவருடன் கயிலைமலையையடைந்து நந்திதேவர் ஆணைபெற் றுட்புகுந்து இறைவனை மும்முறைவலம்வந்து நின்று சொல்வாராயினர்.

பராபரனே யோடுயிர்க்கருள் சுரக்கும்படி யொன்றிநின்ற முதல்வனே! பலயுகங்களாகச் சூரபதுமன் முதலிய அவுணரால் வருத்தமுற்று வன்மையின்மையால் ஒடுங்கிநின்றனம். அளவில்லாத அரமகளிரும் தேவர்களும் என் மகனாகிய சயந்தனும் அவ்வவுணர்வேந்தனாகிய சூரபதுமன் இட்டசிறையிலகப்பட்டுவருந்துகின்றனர். ஒருகாலத்துமழியாத என்னகரமாகிய அமராவதியோ அச்சூரபதுமன் மகனாகிய பானுகோபனா லழிந்தது. அதைமுற்றுணர்வுடைய உமக்கு யான் சொல்லத்தக்கதோ! யான் தவஞ்செய்த காலத்திலே தேவரீர் எழுந்தருளி நமதுகுமாரனால் அக்கொடியரைக் கொல்வித்து உங்கள்துயரந் தீர்ப்போமென்று மருளிச்செய்தீர். அவ்வாறே குமாரநாயகனு மவதரித்தனன். இதுவரையும் எங்கள் துன்பஞ் சிறிதேனும் நீக்காமலிருக்கின்றனை! தீயரோம் பவப்பயன் றொலைந்த தில்லையோ! சூரபதுமன் வல்லமையைத் தீர்ப்பவர் என்ற பேருடையவரில்லை! நின்னையல்லது பின்னை யாரிடத்தே எம்குறையைச்சொல்லிமுடிப்பேன், யாரைநோவேன், தீமையைத்தவிர்க்கவும் செல்வந்தரவும் தாதையரல்லது மக்கட்குயாருளர். ஆதலால் எங்களை இனிக்காப்பாற்றவேண்டுமென்று இந்திரன் வணங்கிநின்றான்.

இதைச்செவிமடுத்த பரமசிவன் அவர்குறைக்கிரங்கிக் குமரனைநோக்கி உலகுயிரைவருத்தி விண்ணோரைரினை நெருப்பிட்டுக் கொளுத்தி யார்க்குந் தீமையேசெய்து கெடாத ஆற்றலோடுங் கூடியிருக்கின்ற சூரபதுமனை அவுணர்கூட்டத்தோடும் சங்கரித்து இந்திரன்முதலிய தேவர்கள் துயரந்தவிர்த்து மீளவேண்டுமென்று கட்டளையிட்டனர்.

அதைக்கேட்ட குமரநாயகன் அவ்வாறே செய்கின்றேனென்று அப்பணியை யேற்றுக்கொண்டனர். பரமசிவன் பதினொரு உருத்திரரை நினைத்தருளி அவர்கள் பதினொருவரையும் பிள்ளையார்கையில் பதினொருபடைகளாக விருக்கக் கட்டளையிட்டனர். அவர்களும் அவ்வாறே தோமரம் குலிசமுதலிய படைகளாக அமைந்தனர். அதன்பின்னர் இறைவன் ஏவியகாலத்தே பழமையான அண்டத்திலுள்ள ஐம்பெரும் பூதத்தையும் பல்லுயிரையு முடிப்பதும், எவர்மேல்விடுத்த காலத்திலும் அவர்பெற்ற வரத்தையும் உரத்தையு மழிப்பதுமாகிப் படைக்குநாயகமாகிய வேற்படையைப் படைத்துக்கொடுத்த

னன். அண்டவாபரணன், உக்கிரன், சண்டன்முதலிய கணநாதரையழைத்து இரண்டாயிர வெள்ளஞ் சேனைகளைக்கொண்டு நமது குமாரனுக்குச் சேனையாகச் செல்லுங்களென்றும், இலக்கத்தொன்பதின்மராகிய வீரரைநோக்கி யாவர்க்கு முன்னவனாகிய சண்முகத் தமலனுக்குப் படைத்துணையாகச் செல்வீரென்று கட்டளையிட்டு, ஐம்பூதவன்மையும் அவற்றிலிருக்கும் எப்பொருளின் வல்லமையும் பிரமன்முதலிய தேவரது பெருவலியுங்கொண்டதாகி இலட்சங் குதிரைபூண்ட தோர் தேரையுதவி நீ யிதன்மேல் ஏறிப்போய் வாவென்று சொல்லினர். அப்போது குமரநாயகனும் இறைவனையும் இறைவியையும் மும்முறைவலம்வந்து பணிந்துநின்றான். அவனைப் பரமசிவன் உச்சிமோந்துமுத்தமிட்டு உமையன்னைகையிற் கொடுப்ப அவ்வன்னையும் வாரியெடுத்து மார்போடணைத்து உச்சிமோந்து முத்தமிட்டு மகனே! நீ யிலக்கத்தொன்பதின்மருடனும் இரண்டாயிரவெள்ளம் பூதவீரருடனுஞ் சென்று சூரபதுமன் முதலிய அவுணரைக்கொன்று தேவர்கள் குறையை முடித்துவாவென்று கட்டளையிட்டாள். குமரநாயகனும் அவ்விருவரிடத்தும் விடைபெற்றுச்செல்ல, இலக்கத் தொன்பதின்மரும் பூதவீரரும் அவ்வாறே இறைவனிடத்திலும் இறைவியிடத்திலும் விடைபெற்றுக் குமரநாயகனைத் தொடர்ந்தனர். பிரமன் மால் இந்திரன் முதலிய தேவர்கள் இனிக் குறையொழிந்தோமென்றுவணங்கிநிற்க, அவரைநோக்கி இறைவன் நமது குமரனுடன் நீங்களும் செல்வீரென்று கட்டளையிட்டான்.

விடைபெறுபடலம்
முற்றிற்று.

---

## படையெழுபடலம்.

பரமசிவனது திருவருள்பெற்றுப் பிரமன் மால் இந்திரன் முதலிய தேவர்களெல்லாம் குமரநாயகனை விரைந்தடைந்தனர். அவருள் திருமால் அருகே செல்லும் வாயுதேவனை நோக்கி நம்பால் பெருங்கருணைபுரிய எழுந்தருளும் சண்முகப்பெருமான் திருத்தேரிலேறித் தேர்ச்சாரதியாயமர்ந்து அதனைச் செலுத்த வேண்டுகின்றேனென்று சொல்ல, அவனும் மகாபாக்கியமென்றிசைந்து தன்பரிவாரமாகிய நாற்பத்தொன்பான் வகையினரும் புடைவரத் தூண்டித் தேர்செலுத்திப் பிள்ளையாரை அதன்மேல் ஆரோகணித்தருளவேண்டினன். பிள்ளையாரும் அவன்வேண்டுகோட்கிசைந்து எழுந்தருளவே இன்றே சூரபதுமன் மாண்டனனென்று தேவர்களும் இந்திரனும் ஆனந்தக்கூத்தாடினர். அப்போது பூதவெள்ளமும் புடைசூழ்ந்து தமதுதலைவருடன் வந்து பிள்ளையாரைத் திருவடிதொழுது வணங்கி யண்டகடாகம் வெடித்ததென்று சொல்லும்படியாரவாரித்தனர். பூதரிற் பெரியோர் தண்ணுமைதிமிலை படகம் காகளமுதலிய வாத்தியங்கள் முழக்கினர். இவ்வாறு புறப்படுகையில் அவுணர்கள் கலந்துசூழ்ந்தாற்போலத்துகள் எங்கும் படர்ந்தது. அவ்வாறு எழுந்த துகள் எட்டுத்திசையும் படர்ந்து மேலேயோங்கி வானுலகத்து மணு

கிற்று. பெரிய தேகங்களையுடைய பூதவீரர்கள் போங்கோள் போங்கோளென் றதட்டுமோசையும் போகும்பொழு துண்டாகிய புழுதியும், பேரோசையும் மண்ணுலகத்தவர்காதையும் விழியையும் அடைக்கும். பாரிடம்பெயர்வதனால் பாரிடம்பெருமையால் இதென்ன எங்கு மிடமில்லையென்று சொல்லும்படி சிலர் காரிடங்கொண்டிருக்கும் வான்வழியிற் செல்வாராயினர். இதுநிற்க; பூமி யாகாசமெங்கும் புழுதியான் மறைக்கப்பட்டபொழுது குமரநாயகனும் தன்றிருமேனியினொளியால் ஒற்றையுருளைத் தேரையுடைய சூரியன்ஆகாய மார்க்கத்திற் செல்கையில் பனித்துளியைத் தடிவதுபோல நீக்கிச் செல்வா னாயினன்.

படையெழுபடலம்

முற்றிற்று.

---

## தாரகன்வதைபடலம்.

இவ்வாறு தமது படையுடன் பிள்ளையார் விரைந்துசெல்கையில் தாரக னுக் குறையுளாய் தன்னையடைந்தோரை வருத்துகின்ற கிரவுஞ்சகிரியானது தோர்ந்தது. அதைக்கண்டவுடனே தேவர்நெஞ்சந்துளங்கினர், இந்திரனும் மனம் வருந்தினன். அத்தருணத்தில் நாரதமுனிவன் பிள்ளையார் பாததாமரைகளை வணங்கிநின்று நான்மறையறிந்த அந்தணரும் முனிவரும் இச்சுரத்திற்சென்ற வெல்லையில்வழியாகத்தோன்றி வரவரமாய்கைசெய்ய அகத்தியமுனிவர்சாபத் தால் இப்படியே மலையாகக்கிடப்பது இம்மலை; இம்மலையினருகேயுள்ள மாயா புரியில் சூரபதுமனுக்குத் தம்பியாகிய தாரகனென்னும் பெயருள்ளவன், தன் னொடு போர்செய்து திருமால் தனது சக்கரத்தையேவ அது ஆற்றலொழிந்து போக ஆபரணமாகப்பூண்ட சதுரப்பாடுடையவன். இவனை முன்னேபொருது வென்றால் இவனுக்கு முன்னோனாகிய சூரபதுமனைவெல்வ தெளிதாமென்று சொல்ல, அதைச் செவிசாத்தியருளி அவனை யவ்வாறே வெற்றிகொள்வோ மென்றுசொல்லியருள தேவர்களும் அவன் இறந்துபட்டதுபோலக் களிபெரு மகிழ்வுசிறந்தனர். இத்தருணத்தில் சண்முகங்கொண்ட பிள்ளையார் வீரவாகு தேவரைநோக்கி அதோதெரிகின்றமலை கிரவுஞ்சமலையாம், அம்மலை யருகே யுள்ள மாயமாபுரியில் தாரகனென்பவன் தன் அவுணப்படையொடும் வாழ்க் கையாயிருக்கின்றானும், நீயோ நமது இலக்கத்தெண்மருடனும் ஆயிரவெள் ளம் பூதவீரர் புடைசூழ்ந்துவரச்சென்று அவன் நகரத்தை வளைத்துக்கொள், அவன் சேனைசமர்செய்யவருமேல் கொன்று குவித்து வெற்றிகொள், அவனே யும்வரினும் போர்செய்யவேண்டும், உனக்கரிதா யிருக்குமாயின் யாம்பின்னே வந்து அவனைமுடித்து விடுவோம்போவென்று கட்டளையிட்டார், அக்கட் டளையையேற்று வீரவாகு தேவரும் நன்றென்று தலைமேற் கூப்பியகையுடன் எட்டுறுப்பு நிலமுறவணங்கித்துதித்துநின்றார். பிள்ளையார் தன்புடையே நின்ற இலக்கத்தெண்மரையும் ஆயிரவெள்ளம் பூதவீரரையும் நோக்கி நீவிரும் வீர வாகுதேவருக்குத்துணையாகச்சென்று அவுணரோடு போர்செய்மினென்றனர்.

இவ்வாறு கட்டளையிடவே அவர்கள் போர்செய்யத்துணிந்தனர். பிள்ளையார் தம்மருகேநின்ற விச்சுவகர்மாவைநோக்கி நமது வீரவாகு முதலிய துணைவர் போர்செய்வதற்காகப் பலதேர்களைச் சிருட்டித்துதவவேண்டுமென்று சொல்லியருளினர். அதைக்கேட்ட விச்சுவகர்மாவும் அக்கணமே குதிரை சிங்கம் இடபமுதலியன பூண்டதேர்களைப்படைத்தளித்தனன். அவற்றை வீரவாகுமுதலிய நவவீரர்களுக்கும் இலக்கத்தவருக்கும் பூத வீரர்களுக்கும் கொடுத்தனுப்பினர். அவர்கள் தேரின்மேலேறிப் பிள்ளையாரை வணங்கினர். அப்படைகளுக் கெல்லாம் நாயகமாய் வீரவாகுதேவர் செல்லவே சங்கு குழல், துடி தடாரி பேரிகை முதலிய வாத்தியங்கள் எங்கு முழங்கின. அப்படி சென்ற சேனை நடந்ததனாலாகிய புழுதி ஆகாயத்திற்சென்று மூடிக் கொண்டது. இவ்வாறு சென்ற சாரதப்படை அம்மாயமாபுரியை யடைந்து அவுணரோடுமெதிர்ந்து போர்செய்யவந்ததை யுணர்ந்த தூதரோடி தாரகாசுரனையடைந்து நடந்த செய்திமுழுதுஞ் சொல்லலாயினர். இறைவனே! உமது முன்னவராகிய சூரபதுமனர் தேவர்களைச்சிறையிட்டனரன்றோ! அச்சிறையை மீட்கப்பரமசிவனது குமாரனாகிய கந்தனென்பவன் நம்மவரைக் கொல்லவெண்ணியே வந்தனன். இதனை அந்தரவாசிகளாகிய தேவர்கள் சொல்லிக் கொள்வாராயின ரென்றனர். அதைக்கேட்ட தாரகன் வடவைத்தீப்போற்கனன்று சிங்கஞ்சுமந்த அணையினின்று மெழுந்திருந்து தன்னருகே யிருந்த தூதுவரைநோக்கி, பரிசனருடன் இரதங் கொண்டுவரக் கட்டளையிட்டு, தன்படைமுழுதும்வரச்செய்து தேரேறி தன்னமைச்சர் சூழ்ந்துவரவிரைந்து சந்திரவட்டக் குடைநிழற்ற வலம்புரிச்சங்கம் பெரிதுமார்ப்பப் புறப்பட்டுவந்துநிற்கக்கண்டு பூதவீரரும் எதிர்ந்துசெல்லவே இருதிறத்தவரும் கைகலந்து போர்செய்யத் தொடங்கினர். அரக்கருள் பலர்மாண்டனர், பூதவீரருள்ளும் சிலர் மாய்ந்தனர். பூதவீரரால் வீசப்பட்டுகலன்களொடும் ஆகாயத்தினின்றும் விழுகின்ற அரக்கர் மேகம் மின்னலோடும் ஆகாயத்தினின்றும் விழ்வதொத்தனர். இவ்வாறு போர்செய்கையில் வீரவாகுவையுள்ளிட்டவீரர்கள் அர்த்தசந்திரன்போல் வளைந்தவில்லை யேந்திக்கொண்டு சென்றனர். அவருள் வீரகேசரி இளையபிள்ளையார் சேவடியைச்சிந்தித்துக் கையிற்பிடித்தவில்லுடன் நூறுபாணங்களைத்தொடுத்து விடுத்துத் தாரகனுடைய மணிமுடியை விழச்செய்து கடலு காணவாரவாரித்தான். அப்போது தேவர்கள் புட்பமாரி பெய்தனர். தாரகனும் தன்கையிலிருந்த தண்டினை வீரகேசரிமேலெறியத் தண்டம்பட்டு மயங்கிவீழ்ந்தனன். தான் தேரைச்செலுத்திப்போய் வேறொரு மாமுடியைப் புனைந்துவந்தான். அதுகண்டு வீரவாகுதேவர் சினங்கொண்டு தாரகனோடு பொரக்கருதித் தன்கையிலிருந்த வில்லைவளைத்து நாணேற்றிக் குணத்தொனிசெய்துபாணவருஷம் பொழிந்துஅவனது வில்லையொடித்தனர். இனி தாரகன் நீஅழிய ஐயமென்பது எத்துணையேனுமில்லை யென்றுசொல்லித் தானொரு சூலமெடுத்தெறியவே, அதனால்வீரவாகுதேவரும் சிறிதுந்தோன் றாமலிருந்தனர். அத்தருணத்தில் அவருடன் துணையாக வந்த வீரரொழுவரும் போர்செய்வ தொழிந்திலர். அவரைத் தாரகன் வில்லாற்றலுக்குடையும்

படிசெய்து நிற்க, குமரநாயகன் சேவடியே முடியில் வைத்துத் தொழும்பு செய்யும் வீரவாகுதேவர் கண்டு எம்மவர் இவன் ஆற்றலுக்குப் பொர இரிந் தனரென்று துணிந்து தாரகனேடெதிர்க்க வில்லைவளைத்து நாண்வீக்கி நிற்ப அவுணரேங்கியிரிந்தனர். வீரவாகு தேவரும் தாரகனை நோக்கி ஊழித்தீப் போற்கனன்று இது சொல்வாராயினர். கெடாதவலிமை கொண்டெழுந்த பூதவீரரையும் வில்லில் வல்ல வீரரையும் வெற்றிகொண்டனை போலுமெண் ணினை ; உன்னை விரைந்து கொல்கின்றேன் பாரென்று சொல்லியருளினர். தாரகனே என்னொடுபொர வந்த கள்ளமாமாயன் சுதரிசனப் படையை என் மிடற்றில்தன் வலியொழிந்துபோக அணியாகப் பூண்டேன், அதனைச்சிறிது மெண்ணுமலே நீயென்னை வெற்றிகொள்வதாகக் கூறினை ? நீகூறியது அரிமா வேற்றினை நரி வெல்வதொக்கும் செய்தியே யமையும் போலும். என்னொடு பொரமுடியாமே பூதப்படையும்பொன்றின,வீரருந்தொலைந்தனர். நீயுமயர்ந்து நின்றனை, வீரம்புகல்கின்ற நீயோசாதலைமேற்கொள்வதுசரதம் ! என்னுற்றலைச் சிறிது முணர்ந்திலை யென்றுகூறித்தன் வில்லைவளைத்து ஆயிரமாயிரமாகப் பாணப்பிரயோகஞ் செய்ய, வீரவாகுதேவரும் அவ்வவற்றிற் கவ்வப்பகழி களையேவி யவற்றை மாற்றியருளினர். அதைக் கண்ட தாரகன் இவனைத் தெய்வப் படைகளாலே வெல்லவேண்டு மென்று துணிந்து அக்கினியாஸ் திரத்தை விட்டனன், வீரவாகுதேவரும் அதனையக்கணையாலே மாற்றியருளி னர். வருணப் படையைத் தாரகனேவினன், அதற்கு வீரவாகுதேவரும் தாமும் வருணப்படையாலே மாற்றியருளினர். அரக்கன் இரவிப்படையை விடுப்ப வீரவாகுதேவரும் அக்கணை கொண்டேயதனை மாற்றியருள, வாயு வாஸ்திரத்தைத்தீயவன் தொடுக்கக் குமரநாயக னடிமையாகிய வீரவாகு தேவரும் அதனைக் கொண்டே மாற்றியருளினர். இவ்வாறு தெய்வப்படை களால் சமர்செய்யத் தாரகன் இவனைத் தெய்வப்படைகளாலும் வெல்வ தரிது, நம் மாயையினலேதான் வெல்லவேண்டு மென்று தான் தன் மாயை யினல் பலவேறு வடிவங்கொண்டு பல முகமாகப் போர்செய்தான். அதைக் கண்ட தேவர்கள் மனக்கலக்க மெய்தினர். முன்னே அச்சமுற்றுநின்ற பூதவீர ரும் அஞ்சி ஓட்டெடுத்தனர். போர் செய்தயர்ந்த வீரரும் அச்சமேற்கொண் டனர். அவுணரும் புன்முறுவலித்துக் குணலையாட்டயர்ந்தனர்.

இவ்வாறு தாரகனென்னு மவுணர்பெருமானது மாயப்போரும், அதைக் கண்டு யாவரும் அஞ்சும்நேர்மையும், வீரவாகுதேவர் தீயெழநோக்கி வீர பத்திராஸ்திரத்தைக் கையிலெடுத்து நிற்க, தாரகனது மாயையனைத்தும் சூரியன்முன் பனிபோலோடி யொளித்தது. தன்மாயைமுழுது மகன்று தார கன் தமியனுப் பின்னும் மாயையினுட்படுத்தக்கருதி யோட்டெடுத்தான். வீரவாகுதேவரும் ஓட்டெடுத்தான்மேல் தெய்வப்படைவிடுப்பது நீதியன்மை யென்றுதுணிந்து தன்கையிலெடுத்த படையைத் தூணியின்மீட்டு மமைத்து, அவன்பின் விரைந்துசென்று அவனை நாண்கொண்டு புயத்தைப்பிணித்துத் தன்னை வென்றுவாவெனப்பணித்த சண்முகங்கொண்ட சதுரப்பெருமான் சந்நிதியில் விடுப்பேனென்று அப்பரம்பொருளைச்சிந்தித்துநடந்து பெரும்புறக்

கடலேபோல ஆரவாரித்துச்செல்ல, தாரகனும் மாயைக்கிருப்பிடமாகிய கிரவுஞ்சமலையையடைந்து மறைந்தனன். வீரவாகுதேவரும் அவன் சென்றவிடத்தை நாடிப்புக, அவ்விடமெல்லாம் சூரியன் கதிர்புகாவிருட்டறையாகத் தோன்றின. இவ்வாறு இருள்படாத் தாளினெற்றிப்பாந்து தாரகனைக் காணுதயர்ந்து அக்கிரவுஞ்சத்தின் புணர்ப்பான் மீளுநெறிகாணுமல் வெருண்டு இது அவனது மாயையேயாகுமென மதித்து நிற்கையில், கிரவுஞ்சமலையும் மோகம் விளைத்து அவ்வீரவாகுதேவரதுணர்வைச் சூறையாடியது. இயலிசை நாடகமென்னு முத்தமிழையுங்கண்ட தமிழாசிரியராகிய அகத்தியனர்சொல்லிய சாபவலியால் அம்மலை வீரவாகுதேவரைப் பெருமாயை விளைத்தலும் மயக்குற்று சிறையிழந்த பறவையேபோல மெலிந்தனர்.

இங்கே தோற்றேடிச்சென்று தாரகனைத்தொடர்ந்து நமது வீரவாகுதேவர் தொடர்ந்துசென்றனரே இதுகாறுமீளாமையென்? அவனெடுநெருங்கி மலையிற்சென்றுபோர்புரிகின்றனரோ! நாமுஞ்சென்றுதேடுவோமென்றெண்ணி இளையவீரரும் இலக்கத்தவரும் பூதவீரரும் படர்ந்துசென்று வீரவாகுதேவர் சென்றநெறிபற்றிப்படர்ந்தனர். வீரவாகுதேவரைச் செய்தாங்கு அக்கிரவுஞ்சம் அங்குப்படர்ந்தாரையும் தம்மாயையினல் எண்ணிலாமாயைசெய்தலும், வீரவாகுவும்மற்றையரும் மயங்கினரென்பதைக்கண்ட தாரகன்நமது மாயையால் இவரெல்லா மொருங்கே யிறந்துபட்டனரென்று மகிழ்ச்சியெய்தி மலைமேலெழுந்தான். ஆகாயத்தில்இவையனைத்தும் பார்த்திருந்ததேவர்கள் கண்ணிற்றுடு மணற்கேணியிற் றேன்றிய நீர்போல நீர்வார மனங்கலக்கமெய்தி துன்பத்திலழுந்தி பதைபதைத்தோடினர். பூதப்படைகள் தந்தலைவ ரில்லாமையாற்பயந்துநின்றன. மலைமிசையெழுந்த தாரகன் வேறொருதேரிலேறித் தானவர்பலரும் தன்னைப்புடைசூழ்ந்துவர வில்லைக்கையிலேந்திப் பூதப்படைகளை நோக்கிநடந்து புங்கானுபுங்கமாகப் பாணமாரிபொழியத் திசையினும் விண்ணினும்போகலுற்றன. இவ்வாறு நடப்பதையுணர்ந்த இந்திரன் முதலிய தேவரும் நாரதரும் அருட்பெருங்கடலாகிய சண்முகத்தெள்ளமுதை யடைந்து இறைவ! நின்படைவீரர் பெருஞ்சமர்புரிந்து கொடியதானவர் சேனைகளைப் படுத்து அமைச்சர் முதலியோரை யுயிர்துறக்கச்செய்து தாரகனெடும் பொருதனர். வீரவாகுதேவரும் தம்பியரொண்மரும் இலக்கத்தவரும் பாரிடத்தலைவரும் அத்தாரகனெடும் பொருத வேலை அவருடன் போர்செயற்காற்றுது சூழ்ச்சியின்வலியால் கிரவுஞ்சவரையிற் கொடுபோயினன். அக்கிரவுஞ்ச மலையாகிய அவுணன் தன்மாயைவலியால் அவரைமயக்க அவர்கள் பித்தரோயென்றுரைக்க மயக்குற்றனர். இதனையறிந்த தாரகன் எஞ்சிய நமதுபடையைத் தன்கணைமழைசொரிந்து வருத்துகின்றனென அதைத்திருச்செவி சாத்தியருளி நாரதனுள்ளமும் தேவர்கள்நின்றயர்வதும் இந்திரனுள்ளத்தேகொண்ட சோகமும் நான்முகன் மால்முதலான பெருந்தேவர் துயரமும்உயிர்களெமுற்றுமருளியநாயகனறிந்து நாமேபோர்க்களங்குறுகி அத்தாரகனை நமது வேற்படையாற்றடிந்து கிரவுஞ்சமலையைக் கீண்டு வீரரையும்இலக்கத்தவரையும் பாரிடத்

தலைவனையும் மீட்டிடுவோமென்று திருவாய்மலர்ந்தருளினன். எம்பெருமான் இன்னன திருவாய்மலர்ந்தருளக்கேட்டுத் தங்கள் சிந்தையிற் குடிகொண்டிருந்த துயரநீங்கி ஆனந்தக்கூத்தாடி யவனிசையைப்பாடி அவனது பாதமலர்களைக் களிப்பால் வழிபாடுசெய்தனர். சண்முகப்பெருங்கடவுளோ தேரைக் கொணரக் கட்டளையிடப் பாகனாகிய வாயுபகவான் விரைவிற்கொணர அதன் மேல்எழுந்தருளி அதில் தன்னினமாகிய நாற்பானைன்பதின்மர் புடைபோதர முட்கோல்பற்றிப் பரிமாகிரைகளைத்தூண்டி யாரவாரித்தான். இத்தேரின் விசைசகிக்கலாற்ருது அண்டங்களும் வையகமும் குலகிரிகளெட்டும் எழுகடலும் எண்டிசையும் களிறெட்டு நடுக்கமெய்தின. அறுகுணச்செல்வனாகிய அறுமுகப்பெருமானுக்குத் தேர்ப்பாகனாயமைந்த வாயுபகவான் தேரிற்கட்டிய பரியை விண்ணெறிகொண்டு யாவரும் புகழ்ந்துநிற்க இறைவன் அதன்கண் ஆரோகணித்தெழுந்தருளலும் பூதவீரரும் புடைசூழ்ந்து சென்றனர்.

முன்னே தாரகனுடன் பொருதுடைந்துபோந்தபூதவீரரும் இறைவனைத் திருவடிதொழுது ஆற்றலொடு நெருங்கிச்சூழத் தாரகனிருந்த போர்க்களங் குறுகி இருதிறப்படையும் போர்செய்யத் தொடங்கின. அரக்கர்கள் சக்கரம், வளைதடி, மழு, நியைக்காலும் பாணங்கள்முதலிய படைகளால் போர்செய்யத்தொடங்கியபதறிந்து சாரதவீரரும் பெருமலைகள் எழுக்கள் மரங்கள் இவைகளைக்கொண்டுதடுத்து அரக்கரிற் பலரைப் பிணமலைகளாகக் குவித்தனர். அதனால் வலிகெட்டுத் தானவர் பலரோட்டெடுத்தனர். இவ்வாறு தாரகன் தன்படை இரிபல்போகக் கண்தெரியானாகித் தன்வில்லைவளைத்து மின்னலைப்போல வொளிவிட்டெறிக்கும் பலபாணங்களைத்தொடுத்துச் சாரதவீரரை வருத்திச் சராசரங்களையும் கருக்கொள்ளாமலேயீன்ற கருணைமுதல்விபெற்ற கருணையங்கடலைக்குறுகிக் கோபமூண்டு இவனோகான்! நம்பெருந்தகைமைந்தனென்று அயலிலுள்ளாரைவினவ, அவராமென்ன, முழுமதியன்ன முகமூவிரண்டுங் கருணைபொழியுங் கடைக்கணிராறும், வேற்படைமுதலிய படைகளேந்திய பன்னிருகரமும் மணிச்சதங்கையார்க்கு மலர்ப்பதமிரண்டுங்கண்டு செய்தவப்பேற்றால் தெரிசிக்கப்பெற்று அற்புதமெய்திமேலமர்செய வந்தானெனிற் கற்பனைகடந்த கடவுட்பெருமானிவனேவென்று சிந்தித்துப் பின்னர் இறைவன் வரமும் உரமும் சிறுமுழுதுநினைந்து சிறி அருட்பெருங்குகனை நோக்கி எமதிறைவனீன்ற விளஞ்சிங்கமே நாரணன்பிரமன் நாற்கோட்டியானையை நயந்தூரும் இந்திரன் முதலிய சிறுதேவரையேயன்றி எம்பெருமான் பாற் செற்றஞ்சிறிதேனு மில்லேம். எம்பாற் பூசலுக்குநேர்ந்த காரணமென்னவென்று வினவினன். அதைக்கேட்ட கண்ணுதற்பெருமான் கண்ணிற்கருமணிபோன்ற கருணைபங்கடல், அறவினைபுரிந்தேவர்க்கு மருளொடுதண்டஞ்செய்யு மிறைவன், தேவர்களை நீயிர் சிறையிட்டு வருத்திய தன்மையைத் திருவுளங்கொண்டு உமது வெற்றித்திருவைச் சிதைக்க எம்மைவிடுத்ததன்றி வேறன்றென்று திருவாய்மலர்ந்தருளினர்.

வேற்படையேந்திய விறலுடைவிண்ணவன் பேரருணிலைமையாற் பேசியதுணர்ந்து போரினை யிழைக்கப்போந்த புகர்முகத்தாரகன் செந்திருமணாளன்

சிறுபோர்புரிந்துவந்தமையிற்கால மடுபோராற்ற இந்தணிமணிமுடி யிறைவனது அருளானெந்திடச்செய்து அவனேன்மைசாலாழி யென்கந்தாத்தணிந்த கட்டுனை யறியாமல் இதுகாறும் என்னுடன்போர்புரிந்தார் சிறிதுபோதில் பொன்றினாலலது வென்றியுடன் மீண்டுபோயினுரைக் கண்டறியேன். நீர் விடுத்த நவவீரரையும் இலக்கத்தவரையும் பூதவீரரையும்வென்று கிரவுஞ்சத்தினிற்சென்று வருந்தச்செய்தேன், இத்துணையுமறிந்து மறியாதார்போன்று பொரவந்தமை சாலவழகிது. ஆகையால் எம்மோ டடுபோராற்றிச் சோகமெய்தா முன்னரோ சூலங்கைக்கொண்ட சோதிப்பெருமான் சூழலடைதலே நலமென்றனன்.

அதுகேட்டுச்சிற்பரனருளிய சிங்கவேறனையான் அருமறையுணர்ந்ததநீசி முனிவன்மேல் நாரணன்விடுத்த சுதரிசனப்படை தன்கூர்மையிழந்துபோய்க் குலாலனது சக்கரத்தின் றன்மையையடைந்தசெய்தியறியாயோ, புயல்போல் மேனிப்பிரான் பூங்கையேந்திய ஆழிப்படைபோலுமென்றோ படைக்கலங்கட்கெல்லாம் அரசாகியநமதுவைவேற்படையை மதித்தனை, உங்கள்பேராற்றலோ இவ்வுலகமுழுதும் வெற்றிகொண்டன; இங்கே நாமெழுந்தருள அவையனைத்தும் இமைப்பில்கெட்டொழிந்தன; நின்மாயப்பெருவலியையும்நின்னையும்வேற்படையால் வீட்டி என்சேனையை மீட்டுக்கொள்வேனென்று திருவாய் மலர்ந்தருளத் தாரகன் அக்கணமேதன் மலைபோன்ற வில்லைவளைத்து நாணேறிட்டு நிற்கக்கண்டு தேவரனைவருந்திப்பிரமைகொண்டனர். சன்முகத்தருட்பெருங்கடவுள்தன்கையிலிருந்த வில்லைவளைத்து நிற்க எல்லாவுலகங்களும்வருந்தின. அரிப்பிரமாதியரு மயர்ந்தனர். தாரகனே தன் கைவில்லினின்றும் கணைமழைபொழியக் கருணையங்கடலாகிய கதிர்வேற்கடவுள் ஆயிரம்பாணங்களைத் தமதுவில்லினின்றும் விடுத்துஅவனேவிய பாணங்களைச்சிதைத்துவிட்டனன். அதுகண்டு பொறாது ஆயிரங்கணைகளை மீட்டுந்தூண்டவே புரமூன்றும்படுத்த புண்ணியன் புதல்வனாகிய குமரநாயகன் அவற்றையழித்துவிட்டு வில்லையுந் துண்டமாக்கினான். பின்னுமொரு வில்லையெடுத்துப் போர்செய்யக்கண்டு தன்வில்லினின்று மாயிரம்பாணங்களைவிடுத்த செயலைக்கண்டு தாரகனுமோராயிரம்பாணங்களைச் செலுத்தி நீறுபடுத்தினான். இவ்வாறு இருவரும் பெரும்போர்செய்து வருகையில் இளையபிள்ளையார் அவனை இரண்டுபாணத்தாற் கோடுகள்விழச்செய்துகின்றனர். அதனால் தளர்வெய்திய தாரகன், பிள்ளையார் தேரிற்கட்டிய கொடியை ஆயிரம்பாணங்களா லறுத்துத்தள்ளினான். இப்படி கொடியோன்செயலைக் கண்ணுற்றுப் பிள்ளையாரும் அக்கினியாஸ்திர மாயிரந் தூண்டித் தேரிற்கட்டிய குதிரைகளையும் பாகனையும் விழத்தள்ளினர். உடனே அவன் வேறொருதேரிலேறி ஆயிரம்பாணங்களைத் தொடுத்துவிடுத்து, பிள்ளையார் தேரைச்செலுத்தும் பாகனைவருத்தினான். அவன் வருந்துவதைக்கண்ட பிள்ளையாரும் ஆயிரம்பாணங்களைத் தொடுத்து அத்தாரகனது நெற்றியிற் பொருந்தும் வண்ணம் செலுத்தவே, அவன் தன்தேரிற்புலம்பி விழுந்தனன். அவனது நெற்றியினின்று மொழுகியகுருதிவெள்ளம் நீனிறக்கடலில்வடவைத்

நியின்தோற்றம் போன்றிருந்தது. இவ்வாறு தாரகன் மயங்கிவிழ்ந்ததைக் கண்ட அவனது படைவீரர் பொருது சண்முகங்கொண்டருளிய பிள்ளையாரைப் போரைக்குறித்துச் சூழ்ந்துகொண்டு சூலம் சக்கரம் தோமரம் பிண்டிபாலம் வேல் நாஞ்சில்பாணம் தண்டு கணையம் வச்சிரமுதலிய படைக்கலங்களைப் பொழிந்துமூண்டனர். பிள்ளையார் அவர்கள் செயலைக்கண்டு சினங்கொண்டு தன்வில்லைவளைத்து நிறுத்திக் கணைமழைசொரிந்து சிலரை முடியைச்சிதைத்தும், சிலரை மார்பைப்பிளந்தும், சிலரைவாயைப்பிளந்தும், சிலரை கையைத் துண்டித்தும், சிலரைத் தாளைத்தறித்தும் போர்செய்தனர். எங்குங் குருதிவெள்ளம்பரந்து கடல்போலத் தோன்றிற்று. இப்போரிலே பலர் இறந்துபட்டனர். சிலர் அக்குருதிக்கடலின் மிதந் துயிர்கொண்டோடிப்போயினர்.

கார்மேகஞ்சிவந்ததென்று சொல்லும்படி விளங்கிய தாரகன் மையல்விட்டொழிந்தெழுந்து தன்னருகேதொழுது வணங்கிநிற்பாரைக் காணுயைத் துபர்ந்து முறுவலித்துத் தன்னிற் பேசுவானாயினன். இதென்ன இறும்பூதான செய்கை! நம்மொடு போர்செய்யவந்தானும் நமது இறைவனீன்ற சிறுகுருந்து அவனாலே நமது கையுங்கோடுமிழந்தனம்! அன்றியும் நமது சேனையனைத்துமொன்றொழியாமல் மாண்டுபோயின. நாமோ தனித்துநிற்கின்றனம். நமதாண்மையழகிது. நாமோ அளப்பரும் பாணங்களைப்பொழிந்தும் அவனை வெற்றிகோடலரிதாயது. இனிக்காலநீட்டியாமல் தெய்வப்படைவிடுத்துப் பார்ப்போமென்று நாராயணாஸ்திரம், பிரமாஸ்திரமுதலியவற்றைவிட அவையனைத்தும் இறைவன் சந்நிதியையடையவே யொடுங்கிப்போற்றி நின்றன. அவற்றின் செயலைக்கண்ட தாரகன் இதுகாறுங்கொண்டு நின்ற அகந்தையொழிந்து விம்மிதமுற்று இவனை வெல்லுதல் நம்மாலாந்தகையதன்றென்று துணிந்து இனி எஞ்சிநின்றதோ பாசுபதப்படையாதலால் அதனைவிடுவோமென்று மனத்தாலருச்சனைசெய்து விட்டான். அது வில்லினின்றும் புறப்பட்டு ஆலமும் பல தெய்வப்படைகளும் பூதராசிகளும் அங்கதநிரைகளும் சூலங்களும் கனலீட்டமும்விதித்து அலகிலாத உயிரும் அண்டங்களும் உலையாது அலமரும் வண்ணம் கோபித்துச்செல்லப் பிள்ளையார்கண்டு தன்தாதையாகிய பரம்பரனைக் கருத்திற் சிந்தனைசெய்து கொடுத்தவன் வாங்கியதன்மையைக் கடுப்பத் தன் கைப்பற்றினான். அதைக்கண்ட தாரகன் நமதுபெருந்திருவ யின்றோடொழிந்ததென்றேங்கி நாமோ பாசுபதப்படையை விடுத்தும் அதனைத் தன்செங்கையிற் பற்றினான், இவ்வாறுமுகங்கொண்ட அமலப்பிரானுற்றலேலா அழகிது, இதுகாறும் இவன் தருமயுத்தஞ் செய்கின்றானல்லது மாயப்போரைச் செய்தானல்லன்; இனி மாயப்போரால்வெல்வதே கடனென்றுதுணிந்து விரைந்துசென்று கிரவுஞ்சவெற்பினை யணுகி நீகற்றுவல்ல மாயைகளனைத்தும் செய்யவேண்டுமென்றுவேண்டினன்.

அப்போது கிரவுஞ்சமானது மாயைகளைச்செய்ய நினைந்து முப்புரவுருக்கொண்டு நிற்க, தாரகனும் அம்முப்புரத்துள்ள நிருதரென உருக்கொண்டும், அம்மலை பலமேகங்களாகத் தோன்ற இடியேற்றைப்போ லுருக்கொண்டும், கடலுருக்கொண்டு மலைநிற்க அரக்கனும் வடவைத்தீயி னுருக்கொண்டும், சக்

கரவாளகிரிக் கப்புறத்தேயுள்ள இருளுருவாக மலேயிற்க அரக்கன் பாரிடமிரை யாக வுருக்கொண்டும், மலேயோ இந்திரன்முதலிய திக்குப்பாலகருர்திகளாகிய எண்டிசைக்கரிகளாக வுருக்கொள்ள அரக்கனும் அவற்றினருகேயுள்ள குல வரைகளினுருக்கொண்டும,மலே வாயுவினுருக்கொள்ள தேயுவினுருவந்தாங்கி யரக்கனிற்கவும்,மலே தீக்கடைக்கோலினுருக்கொள்ள அரக்கன் ஆயிரங்கோடி சூரியரேபோலத் தோன்றவும், இவ்வாறு அரக்கனு மலேயும் பல்வேறுருக் கொண்டு யாண்டுஞ் செறியக்கண்ட குமாரநாயகன் இவனே யுயிர்குடிப்பதே நலமென்று கடைப்பிடித்து இவ்வரக்கனேயும் கிரவுஞ்சத்தையும் உரம்பிளந்து நமதுவீரர்கள் இலக்கத்தவர் சாரதவீர ரிவர்களேயுமீட் டிவண்வரவேண்டு மென்று வேற்படையையேவினன். அப்படைக்கலவரசு சண்முகத்தெந்தனி முதல்வன் கரத்தினின்றுஞ்சென்று தாரகனேயும் கிரவுஞ்சத்தையும் பிளந்து மாயையினலாகிய உலகனேத்தையும் உயிரையும் நெற்றிமேலொற்றைநாட்ட முடைய பெருமான் விழிபழல்சுடுவதுபோல விரைந்துசென்றுசுட்டது. இது நிற்க; முடிவற்ற மாயையாகிய பரவைவற்றக் குடிக்கும் செவ்வேற்படை யென்னும் கூற்றுவனெய்தலும் மின்னலேப்போலுந் தோன்றும் பற்களேயும் பிளந்தவாயையுமுடைய தாரகன் இப்படையினேப்பற்றி யொடிப்பேனென்று கருடன்மேற்செல்லு மரவேபோ லுருத்துப்படர்கையில் அவனது மார்பென் னும் வயிரக்கல்லின்மேல் வானினின்று மிடியேறுற்றூற்போன்று அவ்வேற் படைசென்றெய்தி யுருவிச்சென்று மீண்டு கிரவுஞ்சவெற்பினேயும் பிளந்து ஆங்கு அவ்வரையான்மயங்கிக்கிடந்த நவவீரரையும் இலக்கத்தவரையும்பாரிட வீரரையு மெழுப்பிச் சுரநதிதோய்ந்து எம்பெருமான் செங்கையில் மீண்டு மெய்தியது.

இக்கொடிய கிரவுஞ்சவரையும் தாரகனும்பட்டுப்பறிந்ததோரோசையைக் கேட்டு அங்கண்மாஞலம் விண்டதென்பார் சிலர், மெருவெடித்ததென்பார் சிலர், அண்டமுடைந்ததென்பார் சிலர், இவ்வாறு உலகத்தவர் உரையா டினர். கூரிய வேற்படை அவன் மார்பை யூடறுத்துச்செல்ல, தடித்திடு கின்ற வடலேயுடைய தாரகன் அனந்தகோடி இடித்தொகைபோன்றூர்த்து இம்மென்றெழுந்து துள்ளிப் பூமியில் விழுந்து பதைபதைத் தாவிமாய்ந்தான். இவன்பட்டமையாலஞ்சி விண்மீன்கலக்குற் றுதிர்ந்தன. சூரியனுமொளித் தான். அவன் பட்டுவீழ்ந்தமையால் கீழுறுபிலமும் பாருமபிளந்தன, மலேக ளெல்லாம் பிதிர்ந்தன. அண்டவடுக்குக ளதிர்ந்தன. திசைக்களிறுகளெல்லாம் உள்ளந்தடுமாறியோலிட்டோடின. அவ்வேற்படை கிரவுஞ்சமலேயைப்பிளந்த காலேயிற் புழுதியிட்டஞ்செறிந்தன, பொறிகளெங்குஞ் சிந்தின, புகைபற்றிப் பரந்தன, அண்டவடுக்குகள் கரந்தன,கடல்களும் கங்கையும்வற்றின. மேலும் அவ்வேற்படையைச் சரவணப்பெருமான் கையிலேந்திய வேல் படுத்தபோது தோன்றிய தீயைத் தீயென்றே சொல்லவல்லேமோ! அறிந்த பெரியோர் சொல்லுமிடத்து அவ்வரையே அரக்கனுருவமாதலால் அவனுடம்பிலுறுங் குருதிதுள்ளி யுகுத்தவாறெக்குமென்பர். அக்கடைத்தொழிலேயுடைய தார கன் உடம்பினின்றும் சோரிவெள்ளம்பரந்து கிரவுஞ்சவரையின் புழுதியை யடித்துக்கொண்டு கடலிற்போய்க் கலந்தது.

எம்பெருமான்விடுத்த வேல்வெற்றிகொண்டு அவ்விறைவன் கையிலே யிருந்தமையும் தாரகனும் கிரவுஞ்சமும் அரக்கரும் பட்டமையுங்கண்டு செந் திருநாயகனாகிய மாலும் கமலமேலுறையு நான்முகனும் சதமகனாகிய இந்திர னும் மற்றை நால்வேறியற்கைப் பதினொருமூலரோ டொன்பதிற்றிரட்டி யுயர் நிலைபெறீஇயதேவரும் முனிவரும் ஆரவாரித்து குடந்தம்பட்டுக் கூத்துமாடி உச்சியிற் கைகூப்பிப் பூமழைபொழிந்து பாடி அவன் திருமுன்னர்ப்பணிந்து ஆனந்தவாரியி லழுந்தினர். இது கிடக்க; அப்பால் கிரவுஞ்சவெற்பால் மயக் கப்பட்டிருந்த வீரவாகுவுள்ளிட்ட வீரரிலக்கத் தொன்பதின்மரும் சாரதவீர ரும் தீங்கமைந்த மையலினின்று முகந்துகதுமென்றடைந்து பிள்ளையார் பூங் கழற் சேவடியை வணங்கிச்சூழ நின்றனர். அவரையெல்லாம் கருணைமுழு தும் திருமுகங்காட்டி தாரகனுக் கரணுயுள்ள கிரவுஞ்சமலையால் மயக்க மெய்தியுணர்வி கந்திருந்தீர் போலுமென, அவர்கள் பிள்ளையாரை வணங்கி நின்று எம்பெருமானே! உம்மைப் புகலிடமாகப் பெற்ற அடியேங்கள் இடை யூறடைவதுண்டோ! மையலானுறங்கு கின்றாரைப்போல் மருவுகின்ற இன்ப மடைந்ததன்றி அக்கொடிய மலையின் மாயத்தாற் சிறிதேனும் மெலிந்தோ மல்லோமென்று சொல்லப் பிள்ளையாரும் பேரருள்புரிந்து நோக்கியருளி வீர வாகுவே! இதனைப்பெற்று வணங்குகவென்று தன்மேற் சூரபதுமனிளவலா கிய தாரகன்விட்ட படைக்கலவரசாகிய பாசுபதப்படையை நல்க அதைப் பெற்றுக்கொண்டனர். பின்னர் தேவர் சேனாபதியாகிய பெருந்தகை தாரகன் போரிற்பட்ட பாரிடத்தவரை யெல்லாமெழுப்பித் தேவரும் பிறரும் தம்மைச் சூழ்ந்து வணங்கப் போர்க்களமகன்று வழிக்கொண்டனன்.

தாரகன்வதைபடலம்.

முற்றிற்று.

---

## தேவகிரிப்படலம்.

பெரியதோர் கவந்தங்கள் கூளிகள் வாய்ப்பறையறையாடும் போர்க்களத் தினைப் பையவகன்று செங்கதிர் வேற்கந்தப் பெருமான் சோகத்திற்கு முடிவு கண்ட தேவர்களுடன் சாரதவீரரும் சூழ்ந்து செல்லவந்து இமயமலையின் எல்லைநீங்கி அருமந்த தேவர் அயன் திருமா லிந்திரன் அமரர் இலக்கத்தொன் பதின்மர் ஏனைப்பாரிடவீரர் யாவரும் போற்றச் செவ்வேற் படையினையுடைய பிள்ளையார்தென்பாலேமுகமாகக்கடந்துசென்று அத்தமனகிரியிற் சூரியனெய் தத்தானும் தேவகிரியை யடைந்தான். இங்கேசூரிய னத்தமனகிரியை யடை ந்த தெத்தன்மை யெனின் உவமைவேறிலாச் சூரபதுமனுக்கிளவலாகிய தார கனை மறைமுதலியோகி யீன்றவள்ளற் பெருமான் வடிவேலாற் பொருது வென்ற தன்மையிப்பாலாரறிவர், அப்பாலாருமறிய யானேபோ யுரைப்பே னென்று தெரிவிப்பான்போல விளங்கிக்கிடந்தது. செக்கர்வானந்தோன்றிய தெதையொத்ததெனின் பரிதிவானவனே பகலெல்லாம் தனக்குரிமையாக் கிக்கொண்டனன். கலைமதியாகியசந்திரனே இரவுக்கரசனாக விளங்குகின்றான்.

நான் இவர்க்கிடையேசென்று பொருந்துவனென்று செந்தீக்கடவுள்வந்து தோன்றினாற்போல விளங்கிக்கிடந்தது. இளஞ்சந்திரன் மணங்கமழும் குமுத மலரணைத்து மலரும் மாலைக்காலத்தே தமது வெம்படைபழகிவிளங்கிய குமார நாயகனுக்கு முன்வந்த கடற்கரசன் முரசமாகத் தோன்றுகின்றமையால் தானும் வெற்றிக்கொம்பாகக் கிடக்க வெண்ணியதுபோலவும், தன்னோடேற் றெதிர்மலைந்து நின்ற பகையையுடைய அவுணர்மேல்காற்றேபோலத் தேரைச் செலுத்திப் பெரும்போர்புரிந்த கொடியவனாகிய தாரகன் செம்பொன்னணி யணிந்த மார்பில்விளங்கும் வச்சிரப்பதக்கம் இற்று மேற்றிசையில் வீழ்ந்தாற் போலவும் விளங்கினான். அவ்விருட்பிழம்போ காட்டிற்றிரியும் பன்றியை யொத்தது. அப்பன்றியின் கொம்பினை யொத்திருந்தது இளம்பிறை. அதை யணிந்த இறைவனையொத்தது இவ்வண்டம். அக்கொம்பினின்றுமுதிர்ந்த முத் தங்களையொத்தன அவ்விரவிற்றோன்றிய நாண்மீன்கள். இரவின்கண் முத்த மாலையென்ன அருவியாறு கல்லென்னுமோசையுடன் சொரியுந் தேவகிரியி னொருபாலடைந்து தாமரைமலரிலிருக்கும் நான்முகனும் திருமாலும் இந்திர னும் தேவர்பலரும் பிள்ளையார்பாதங்களை வணங்கி வன்கண்மையுடைய சூர பதுமனுக்கிளவலாகிய தாரகனால் இதுகாறும் துன்பமுழந்தேம், அவனைமாயப் பொருப்பாகிய கிரவுஞ்சத்தினோடு முடியவென்றனை. உன்னை இம்மலையில் வழிபாடுசெய்யக் கருதியிருக்கின்றேம் இம்மலையி லெழுந்தருளியிருக்க வரந்தர வேண்டுமென்றனம். இவ்வாறு தேவர்கள் தாம்வேண்டியவண்ணம் வரமருளி யதுகண்டு உடல் புளகரும்பிப் பேரானந்தக் கடலிலழுந்தினர். முருகக்கடவுள் ஒலிக்குங்கழலையுடைய சேனையுடன் திருமால் முதலாகிய தேவருடன் தேவ கிரியிலெழுந்தருளித் தம்பக்கத்தே தொழுதிருந்த விச்சுவகர்மாவையழைத்து அருமந்த தேவ ரயன்றிருமா லிந்திரன்முதலியோர் நெருங்கி வதிந்திருக்க நகர மொன்றையிப்பொழுதேவிரைந்துவிதிக்கவேண்டுமென்று கட்டளையிட்டனன்.

மாலையணிந்த குழலையுடைய வேடமாதராடலையும் கழங்கினையு மதித் துக்களிக்கின்ற குகப்பெருமான் இவ்வா றருளிச்செய்ததைக்கேட்டு அவரது சீபாதங்களைவணங்கி மகரதோரணங்கட்டிய கடல்போன்ற வீடுகளும், பல வீதிகளும் மதில்களும் சமைத்து இவைகட்கு நடுவில் இறைவனெழுந்தருளி யிருக்க ஆலயமொன்றுபணித்துப் பொன்மலையில் இரத்தினகிரி தோன்றச் செய்ததொப்பப் பொன்னினாலாய கோட்டத்தினடுவே அழகியமணிகளாற் சமைப்பக்கப்பட்ட சிங்கவணையொன்று சிருட்டித்து வேலேந்திய விண்ணவர் பெருமான் சந்நிதானத்தில் இச்செய்தியை யறிவித்தான். அதைச் செவிசாத்தி யருளிய அருட்பெருங்கடவுள் தன்னைச்சூழ்ந்திருக்கும் வீரரும் இலக்கத்தவ ரும் சாரதவீரரும் புடைபோதரப்போந்தருளி பலகோடி இளஞ்சூரிய ருதய மானாற்போன்று விளங்கும்மணிப்பீடத்தி லமர்ந்தருளினன். அப்போது தாம ரைத்தவிசுகந்த சதுமுகனும் தாமரையாள் கொழுநனும் சதமகனும் மற்றைத் தேவரும் குமரநாயகனைவழிபடக்குறுகி ஆளுடையபெருமான் விழிகளைப் பொத்திய உலகமெலாமீன்ற வொருத்திசெய்கையிற் சிறப்பினாற்றோன்றிய கங்கையை நினைக்கவே கங்கையும்வந்து சேர்ந்தனள். அணிகலனும் பொன்

ளுடையும் மலரும் சாந்தும் புகையும் பூஞ்சுடருமுள்ள அருச்சனைக்குரிய உப கரணங்களைச் சேகரித்து அமுதகுண்டமும் கொணர்ந்து வேதமந்திர பூர்வகமாயெடுத்துக்கொண்டு அச்சண்முகப்பெருந்தகைசந்நிதானமடைந்து அவன் திருநாம மந்திரங்கூறித் திருமஞ்சனமாடிப் பொன்னுடையைநீக்கி வேறொரு பொன்னுடையைப் புனைவித்துநவமணிப்பீடத்திலிருத்தி அருச்சனைசெய்து பூமாலைசாத்திச் சந்தனத்தேய்வையைக் கொட்டிப் பச்சைக்கருப்பூரமப்பி நாவியுநானமும் அன்னமட்டித்துத் திருமேனிமுழுதும் மணிக்கலன் சாத்தித் தூபதீபநிவேதனஞ்செய்து இத்தகைஉபசாரம்பண்ணியபின்பு சித்திசங்கற்பஞ்செய்துமுடித்துப் பத்திமையாற்பணிந்துருகி நிற்கப் பலநாளும் அப்பதியிலமர்ந்து அவர் வழிபாடுகேந்து வீற்றிருந்தருளினன்.

தேவகிரிப்படலம்.

முற்றிற்று.

---

## அசுரேந்திரன் மகேந்திரஞ்செல்படலம்.

இவ்வாறு தேவகிரியில் கண்ணுதற்பெருமான் கண்ணிற்கருமணியென்ன விளங்கும் கருணைநெடுங்கடல் வீற்றிருக்கையில் அப்பெருந்தகை கையிலேந்தியவெற்றிவேற்படையால்தாரகன்பட்டமையைச்சிலதூதர்கள் முந்தியோடிச் சென்று அவன் பட்டமஹிஷியாகிய சவுரியென்பவளுக்கறிவித்தனர். அவளும் அவன் வாழ்க்கைத்துணைவியர் பலரும் ஈண்டிப்பதைத்திரங்கித் துன்புருவமாய்க்கூடலிற்படியும் பசுமயிலேபோல கணவன்மேற்புரண்டு வீழ்ந்து கோவென்றலறிப் புலம்புவாராயினர். இவ்வாறு புலம்புகையில் இதைக்கேட்ட அசுரேந்திரன் என்னும் அவன்மகன் கெடாத வெற்றியடைந்த தன்தந்தை யிறந்திருப்பதுகண்டு தரியாதானாய் உயிர்த்துக் கலுழ்ந்து கரங்குலைத்து அண்டாத சோகத்தழுந்தித் தீயுண்டான்போலத் திகைத்திருந்து தன்றாய் முதலியோரை அப்புறமேபோகவிட்டு வேற்படையாலிறந்துகிடந்த தன்பிதாவை யலங்கரித்து எந்திரத்தேரிலேற்றி யீமத்திற்செலுத்திச் சந்தனப்பூம்பள்ளிமிசையெழுவித்து ஈமக்கடன்முழுதுமியற்றிநிற்கையில் தன்தாயடைந்துசஹகமனமாகஎனக்குத் தீவிதிக்கவேண்டுமென்று வேண்ட அவ்வாறே தீயமைத்துத்தரத் தானும் மற்றைமனைவிபருமாகத் தீயை மும்முறை வலம்வந்து அதனுட்புகுந்தனர். அவர்கள் சஹகமனமான பின்னர் அந்நகரை யக்கணமேநீங்கித் தன்னுறவினர் சிலர்சூழச் சென்று கருங்கடலினடுவணிருக்கும் மகேந்திரநகரை யடைந்து உள்ளந்தளர்ந்து முகமொளியிழந்து மேனிதளர்ந்து வறியன்போல வருந்திச் சென்றனன். அதை அந்நகரமாந்தர்கண்டு கலங்கியேங்கிக் கைவிதிர்த்துக் கண்ணீர்காற்கடையிட்டு நடந்துசெல்லப் பெருங்கடலுடைந்தவாறேபோலப் பேதுற்று மிகவிரங்கி இவனடைந்த தென்னவென்று பின்வருமாறு சொல்லிக் கொள்வாராயினர். இவ்வசுரேந்திரனே வஞ்சமுங் கொலையுஞ்செய்யவறியான், இவன் தாதையாகிய தாரகன் பெருஞ்சினங்கொண்டுபோக விடுத்தானோவென்றும், தனக்குக்களைகணாகிய பிதாவின்கொடுமைகண்டு அஞ்சி யவனை நீத்

தேகி யிங்கேயடைந்தனனேவென்றும்; சிருந் துறக்கமும்நீங்கி இந்திரன் உருவ மாதிப் பாரிலுழன்று திரிந்தானென்று சொல்லிக்கொண்டிருந்தனர். அவன் பெருந்தவஞ்செய்து வரம்பலபெற்றுத் தாரகனைக்கொன்றதனல் இவனின்றிங் குற்றனேவென்றும், ஆகாயமளாவி யோங்கித்தெரியுங் கிரவுஞ்சமலையில் அவ ணைக்காணுமற் புழுதியையே காண்கின்றோமாதலின் அவன்போர்க்களத்தி லிறந்துவிட்டா னென்பதற்கு மேதுவுமுண்டு என்றும்; அராவணைகிடந்த அமலன்கைச் சக்கரப்படையினைப் பொன்னணியாக வணியும் அத்தாரக னேடு போர்செய்யவல்லார் யாவர் அவனேடு போர்செய்யினு மவனிறந்து படானென்பது திண்ணமென்றும்; தன்கையை ஒருவன்வாளால்தடியப் புலம் பிக்கொண்டு நமதிறைவனுகிய சூரபதுமனது தங்கையாகிய அசமுகிவந்து சொல்லக்கேட்டுப் பொருது சயந்தனையுந் தேவரையும் சிறையிட்டமையான் இவனும் துன்பமடைந்து செல்லுகின்றனன், இவனுந் தேவர்களுக்கே யின்னல் புரிவிப்பான்போலுமென்றும்; திருமாலோ இவன்தந்தையுடன் பொருதுடைந் தான், உலகம்படைக்கும் நான்முகத் தொருவனே போனென்னும் பேர்கேட்டு மறியான், பெருஞ்செற்றமேகொண்ட தாரகனேடு போர்செய்ய வல்லார் துடைக்குந் தொழிற்குரிய சோதிப்பெருமானே யல்லது எவராலாமென்றும்; தேவரும்கருடரும் நாகரும் இயக்கரும் கந்தருவரும் கின்னரரும் கிம்புருடரும் சித்தரும் சாரணரும் பிறரும் உமதுகுற்றேவல் கைக்கொண்டு திரிகின்றனர், ஆதலால் நம்மொடுபகையுடன் பொருதுநிற்பாரைக்காணுமல் இதுகாறும் தளர் கின்றோம், இனிப்போர் நமக்கு வாய்க்கும்போலும் அதற் கெத்துணையு மையமில்லையென்றும்; இக்குமரன் அலக்கணுற்றுப் படர்ந்தமையால் அம்மாய மாபுரியி லேதோ தீங்குநடந்ததாகத் தோன்றுகின்றது, அதற்குச்சிறிதேனு மையமில்லை, இதனைநாடி நமதுநாயகனுகிய சூரபதுமன் நம்மைவிடுக்கு முன்னரே நாமேமுற்பட நம்பெருந்தானையோடு மாயமாபுரிவாயினுஞ் சென்று வருதுமென்று மென்றின்னன அங்ககரமாந்தர் கோட்டிகொண்டு நெருங்கி மனத்தி லாருத்துன்பத்துடன் நின்றவிடங்களிலே சொல்லிக் கொண்டுநிற்க, அசுரேந்திரன் விரைந்து படர்ந்து தன்பெரியபிதாவினது மாளி கையிற் சென்றான். அத்தாணிமண்டபத்தில் அளவிறந்த அவுணர்கள்வணங்க அரியணையில்வீற்றிருந்த சூரபதுமனைக்கண்டு அவனிருகாற் கமலங்களைபற்றி வீழ்ந்து ஆற்றலாகாத் துயரத்தோடு புலம்பஅதுகண்ட சூரபதுமன் நடந்த செய்தியனைத்துஞ் சொல்லவேண்டுகின்றேன். புலம்புதலொழியென அசு ரேந்திரன் சொல்வானுயினன்.

ஐயா! உமக்குப்பின்றோன்றலாகிய தாரகனையும் கிரவுஞ்சமலையையும் இந்திரன்புணர்ப்பால் முழுமுதற்கடவுளாகிய பரம்பரன் நுதற்கண்வந்த பன் னிருகைப்பரஞ்சுடர் பூதப்படையுடன் எழுந்தருளி தன்கையிலேந்திய வேற் படையால் தொளைத்துக்கொன்றனன். இதுதான் நடந்தசெய்தியென்று வுள்ள வாறு எடுத்துக்கூற அதைக்கேட்ட சூரபதுமன் விழுமிதென்றுருத்துச் சின ந்து கிரவுஞ்சமலையுடன் என்தம்பியாகிய தாரகனை மறைமுதலியோகி மைந்த னுகிய குமாரனே கொல்வான்; இதுபொய்மையேவாய்மையாவதன்று சொல்

லென அசுரேந்திரனும் எந்தை இறந்துபட்டமையால் அவனுக்கீமக்கடன்மை முழுதுஞ் செய்துமுடித்து பெருந்துயரொடும் இங்கேயடைந்தபடியென்று மீண்டுஞ் சொல்லாநிற்கையில் தன்றுணைவனுகிய தாரகன் இறந்துபட்டா னென்று சொல்லுஞ் சொற்கேட்ட அவன் உள்ளத்திற் கோபத்தீமூண்டெழ, கண்கள் நெருப்பெழ, மூக்கிற்புகையெழ, உடம்பிலுள்ள உரோமங்கள் பொறிசிந்த, புருவமிரண்டு நெரித்துக்கொண்டு நெற்றிமேற்செல்ல, கடித்த பற்களினிதழ்கவ்வி யிதழைச்செறியத் துடிதுடித்து நின்று தாரகன்மேற் றொடருமன்பினுல்பகைவரும் புகழும்சூரபதுமனிடத்தே துயரக்கடல்சூழ்ந்து கொண்டது. அவன்பருவரலென்னும்கடலிற்படிந்து அரியணையினின்றும்தவறி யவனியில்விழ்ந்து இடிபோற்கதறிப் புலம்பக்கண்டு கடலும் அக்கடல்சூழ்ந்த நானிலவரைகளும் நடுக்கமெய்தின. அயலிலிருந்த அவுணர்களெல்லாரு மேங்கி விழுந்திரங்கித் தளர்ந்தனர், அதுபோழ்து அந்நகரமெங்கும் துயரத்தா லழு மோசையே மிக்கது. இவ்வாறு மனம்வருந்தும் சூரபதுமன் ஏவலாளரை நோக்கி என்னிளவலுயிரைக் கைக்கொண்ட கந்தனை இகல்கடந்து வெற்றி கொண்டுவர என்னிரதமும் வெம்படைகளும் கவசமும் கொணருங்கோள் என்று கட்டளையிடச் சென்றனர். அனிகங்களும் புடைசூழ்ந்தன. இதைக் கண்ட சூரபதுமன் அமைச்சருள் அமோகனென்பவன் தன்னரசனை யடி வணங்கி வாய்பொத்தி கைகட்டி நின்றுகொண்டு என்மேற்கோபங்கொள்ளலை யான்சொல்லும் நியாயங்களைக்கேட்டருள வேண்டுமென்று விண்ணப்பிக்க அவன் சொன்னதற்கிசைந்து தான்போர்க்கெழுவேனென்றதுதவிர்ந்து பிள்ளை யார் வலிமையும் அவர்க்குத்துணைவந்தார் வலிமையும் படைவலிமையும் பகன் மாயூரன்முதலிய தூதரையழைத்துப் பார்த்துவரக் கட்டளையிட் டரசுசெய் திருந்தான்,

அசுரேந்திரன் மகேந்திரஞ்செல்படலம்.

முற்றிற்று.

---

## வழிநடைப்படலம்.

இங்கே பிள்ளையார் தேவகிரியினின்றும் வாயுபகவான் தேர்விடுப்ப எழுந் தருளி யாவரையும் பவக்கடல்கடத்தும் புணைபோன்ற காசித்தலத்தைத் தெரி சித்துப் ஸ்ரீபர்ப்பதத்தையடைந்தகன்று வடவேங்கடஞ்சென்று கண்டு காளி யிவ்வுலகமுழுது மழிப்பனென்றபோதவளுடன் ஊர்த்ததாண்டவமாடியபழய ஆலங்காட்டையும் பரிவிலிறைஞ்சி சிலந்தியொடு பாம்பும் யானையும் சிவ கோசரியாரும் கண்ணப்பரும் நக்கீரரும் வழிபடும்பொன்முகிலிக்கரையிலுள்ள தென்கயிலையாகும் சீகாளத்தித் திருவரைகாடிப்பணிந்து சலப்பிரளயத்திலு மழிவில்லாமல் பிரமன் மால் முதலியதேவர்கட் கிருக்கையாய் கயிலைபோல் மகிழ்ந்து இறைவன்வசிக்குமாநிழலையுடைய பெரியகம்பம் நல்லகம்பம் கள்ளக் கம்பம் வெள்ளைக்கம்பம் கச்சிமயானம் ஓணக்காந்தன்றளி முதலிய திருப் பதிகளையுடைய ஸ்ரீகாஞ்சிநகரைப்பணிந்து பின்பு அந்தணனுய் இறைவனே

யோலைகாட்டி நம்பியாரூரனை யாட்கொண்ட திருவெண்ணெய்நல்லூரொடு பழமலையையும்வணங்கி, பதஞ்சலியும் புலிமுனியுங்காணப் பதஞ்சலி 'யாது நடிக்கும் தில்லையம்பலத்தைத்தேடிக் கண்டுகொண்டே சோணாட்டிற் காவிரி வடகரையிலுள்ள திருத்தலங்களையெல்லாந் தெரிசித்துப்போற்றி மண்ணி நதியின் கரையையடைந்தான். அப்போது சூரியன் அஸ்தமாயினன். அத் தருணத்தில் சண்முகப் பெருமானே விச்சுவகர்மாவைக் கூவியழைத்து இவ் விடத்தில் ஒருநகரத்தை யமைக்க வேண்டுமென்றுசொல்ல அவ்வாறேசெய்து முடிக்கப் பிள்ளையாரும் அந்நகரத்தில் இனிதெழுந்தருளியிருந்தனர். அதனால் அஃது சேய்ஞலூ ரென்று சொல்லப்படும், இது நிற்க ;

வழிநடைப்படலம்.

முற்றிற்று.

---

## குமாரபுரிப்படலம்.

அளவில்லாத பூதப்படையுடன் குமாரபுரியி லெழுந்தருளி யிருக்கையில் இருள் தாருகாவனத்தை யொத்தது, நாண்மீன்களின் தோற்றம் பார்ப்பன மடவாரை யொத்தது, செக்கர்வானம் சிவபிரானை யொத்தது. இளம்பிறை யின் தோற்றம் கையிலேந்தியபோனகஞ்செறிந்த கபாலத்தையொத்தது. நிலா வுலாவிய ஆகாயமாகிய நீண்ட பாற்கடலிலுள்ள பொருளையெல்லாங் கொண்டு சென்று உலகத்திற் கொடுப்பமுயலென்னுஞ் சிறுவன் செலுத்தச் செல்லும் தோணிபோன்றது என்று சொல்லக்கிடந்தது சிறு திங்களின் தோற்றம். அப் போது அறுமுகங்கொண்ட அருட்பெருங்கடவுளுடைய ஞானத்திருமேனியிற் சேர்கின்ற வொளி நிலவினோடு இருளையு மாறுபடச்செய்து சூரியனும் விழையு மொளியைச் செய்வதனால் அப்பரம்பொருளாகிய வானநாயகன் கயிலையை யொத்திருந்தது இவ்வுலகம். இவ்வாறு அப்பதியிலிருந்த காலத்தில் இந்திர னிடத்தில்வந்து 'பிரமபுரம் வேணுபுரம் புகலிபெரு வெங்குருநீர்ப் - பொரு விறுத்தோணிபுரம் பூந்தராய் சிரபுரமுன் - வருபுறவஞ் சண்பைநகர் வளர் காழி கொச்சைவயம், பரவுதிருக்கழுமலமாம் பன்னிரண்டு திருப்பெயர்த் தால்' எனத்தொண்டர் சீர்பரவுவார் சொல்லப்பெற்ற சீகாழியிலிருந்து அத் தலத்திலுள்ள தெய்வதம் அவ்விந்திரனது ஆபரணங்களையும் இந்திராணியணி யும் ஆபரணங்களையும் பொதிந்துவைத்த கிழியைக் கொணர்ந்தளித்து எம திறைவ ! முன்னைநாள் நின்னுடைய காதலியொடு சீகாழியிற் பரம்பரனை வழி பட்டுவந்தகாலத்தில் வைத்தவணிகலமிவை கொண்டு தந்தேன்பெறுவென்று சொல்லி விடைபெற்றுச் சென்றது. இந்திரன் அக்கிழியின் தொடர்பினை நீக் கிப்பார்த்தபோது தன்தலைவியினது அணிகலந்தோன்ற அவளைக்கண்டாற் போலுங் காதல்கொண்டு நெய்சொரிந்ததீயேபோலக் காமநோய்மிகுந்து விம்மி வெதும்பி வெய்துயிர்த்து வருந்திப் பிறவணிகளையும் காண்கலனாய்த் தன் னருகேயிருந்தாரைக் கூவியழைத்து இவற்றை முன்போற்சேமித்து வைமி னெனக் கட்டளையிட்டனன். இதுநிற்க ;

சூரியனுதயமாகவே இந்திரன் தன்னை அமரர்கள் புடைசூழச்சென்று பிள்ளையார் சந்நிதானமடைந்து தொழுத கையும் வளைந்த யாக்கையும் சித்திரப் பாவையினத்தகவடங்கிய புலன்களும் புழுதிதோய்ந்த வுறுப்பும் சுருதிப் பொருண்மைமுழுதும் செறிந்த துதியுமுடையானாய் முன்னேநிற்க அவனைக் கருணையொடும் பார்த்தருளி நாம் குணங்குறிகடந்து அருமறை யுச்சியிற் பழுத்த அனாதிமலமுத்தனாகிய சிற்சுகக்கடலை யருச்சிப்பாமென் றுரைத்து அதற்கு வேண்டு முபகரணங்களைக் கொணர்கவெனக் கட்டளையிட அதனை யறிந்த இந்திரன் தன்பரிசனங்களைக்கொண்டு அமைக்க, உயிர்க்குயிராகிய உம்பரானை யுமையொருபாகனைச் சைவாகமவிதியினைநாடி எக்காலத்து நிலைபேறுடைய திருவுருவொன்றி னியற்றி மணிப்பீடத்தி லெழுந்தருளச்செய்து ஆவினைத்தாட்டி அழகிய துகில்சாத்திப்பூமாலைபுனைந்தேத்தி நிவேதனஞ்செய்து எல்லா உபசாரங்களுஞ்செய்து மும்முறை வணங்கிப் போற்றிச் சரவணத் துதித்த சண்முகப்பெருமான்நிற்க ஆளுடையபெருமான் உமாதேவியாருடன் காட்சிதந்தருளினான், அதுகண்ட ஏமவிருமுகத்து முத்துக்குமரப் பெருமான் எட்டுறுப்பு நிலமுறப்பணிந்து சென்னிமேற் கைகுவித்து நின்றனன். வீரவாகு தேவரையுள்ளிட்ட இலக்கத்தொன்பதின்மரும் சாரதவீரரும் அருமந்த தேவரும் அயனும் திருமாலும் இந்திரனும்கயற்கண்ணிபங்கனைக் கண்களாரக்கண்டு மயிர்ப்புறம்பொடிப்ப வணங்கினர். அருவுருவத்தருட்பெருங்கடவுளாகிய பரம்பரன் குமரநாயகனைநோக்கி நீநம்மையடைந்து வழிபட்டதனால் சர்வசங்காரப் படைக்கலமாகிய இப்படைக்கலவரசை யுதவினேம். இதுநம்மிடத்திலே தோன்றியது, பிரமன் மால் முதலிய தேவரும் நம்பாற் பெற்றறியாதது. இப்படையைத் தாங்குபவர் ஒருவருமிலர். சூரபதுமனது மூலப்படையைத் தொலைக்க இதனை யளித்தோம் பெறுகவென்று வாழ்த்தி விடைபெற்றுப் போயினர். இது நிற்க; பிள்ளையார் அத்தலத்தை யரிதினகன்று தம்மை இலக்கத்தொன்பதின்மரும் அயன்மா லிந்திரன் முதலிய தேவரும் சாரதரும் புடைசூழத் தேரிலேறிச்சென்று எண்ணிய எண்ணி யாங்குதவும் காவிரியாற்றின் வடகரையிலுள்ள திருத்தலங்களை யெல்லாந் தரிசித்து திருமயிலாடுதுறை திருவாவடுதுறை திருப்பறியலூர்முதலிய திருப்பதிகளைவணங்கித் திருமகள் முழுதுளவின்பமும் முடிவில்லாத மங்கலமு மெய்தப்பெற்ற கமலாலயமென்னும் திருவாரூரைப்பார்த்து அத்தலத்திலெழுந்தருளிய வீதிவிடங்கப்பெருமானை வணங்கினார்.

குமாரபுரிப்படலம்.

முற்றிற்று.

---

## சுரம்புகுபடலம்.

புற்றிடங்கொண்ட புராதனன் இந்திரனுக் கருள்செய்த திருவாரூரைச் சேர்ந்த திருவாரூர்ப் பரவையுண் மண்டலி முதலியவற்றைக்கண்டு தொழுது செல்கையில் எழுகடலும் பெரும்புறக்கடலும் எட்டுத்திசையும் சூழ்வதனை லழி வின்றிப் பழமைபோலாகிக் கடலிலிருக்கும் வடவைத்தீயையும்பருகி யூழிகா லத்து மிருப்பதாகியபாலை அவாநீங்காதலமரும் ஆருயிர்கட்கரணமாதி யீசனரு ளா லாயவாறுபோலச் சிறிதுநீரின்றித் தழற்படுகானம் ஆகலின் இளையபிள்ளை யார் எழுந்தருள்வதனால் நறுமலர்ப்பொழிலேபோலுந் தோன்றிற்று. இவ்வாறு சுரங்கடந் தெல்லாமுடைய பிள்ளையார் எழுந்தருள்வதனை மலையுருக்கொண்ட வுடல் வாளரக்கர்வெள்ளமும் சூரும்புள்ளியற்பொருப்பு நெடுங்கடற்கிடங்கு மொருங்குயிர் பருகிய மணிவேற்குமரன் முதனிலையாகிய பரங்குன்றி லமர்ந்து தவஞ்செய்யும் பராசரன் மக்களாகிய தத்தன் - அனந்தன் - நந்தி - சதுமுகன் பரிதிப்பாணி - மாலியென்னுமோ ரறுவரும் ஞானநோக்கானறிந்து இறைவ னருளைச் சிந்தித்து மலையினிருக்கை நீங்கி உத்தரதிசையை நோக்கிநடந்து பிள்ளையார் சூரபதுமனை யுள்ளிட்டவரைத் தடிந்து அமரர்குறைநீக்க அனி கஞ்சூழ வருவதனால் அவ்வனிகங்களைக் கடந்து பிள்ளையாரை மும்முறை வலம்வந்து பணிந்து சுருதிப்பொருண்மையால் அவன்திருநாமங்களைத் துதித்து வணங்கி யெமக்கருள்செய்யவேண்டுமென்று குறையிரப்ப அணுக்கத்தேநின்ற இந்திரன் பிள்ளையாரை நோக்கிக் கூறுகின்றான். இறைவனே! இங்கே வந்தோர் அருந்தவத்துப் பராசரமுனிவன் மக்கள். இவர்கள் சிறுவராய் விளை யாட்டயருங்காலத்தே சரவணத்தடத்தின் பாங்கரடைந்து விளையாட்டயர்ந் தனர். அங்ஙனமாக அதனால் நிலைகொள்ளமுடியாது யாரானும் நீந்துதற்கரிய ஆழமுள்ள அச்சரவணத் தடத்திலுள்ள நீர் அலைகொண்டெறிய மீன்கள் மிதந்தன. இவ்வாறுவிளையாட்டயர்கையில் நடுப்பகலிற்செய்யும் கடன்மையை முடிக்கப் பராசரமுனிவன் அத்தடத்தினெய்த,தன்சிறுவரறுவரும் மீன்களைப் பற்றிப் பிடிக்கும் புன்றொழிலைக்கண்டு பொறாது சினமேற்கொண்டு நீவிர் இத் தடத்திலுள்ள மீன்களாவீரென்று சாபமிட்டான். முன்னையூழ்வலியாற் சாப மெய்தப்பெற்ற இவ்வறுவரும் இக்கொடியசாபமகல்வதென்றென்று முனிவனை வணங்க,அம்முனிவனும் கருணைசுரந்து இத்தடத்தில்மேனாளில் ஆறுமாமுகங் கொண்ட அருட்பெருங் கடவுள் இறைவனருளா லெழுந்தருள்வன்; அவனை யழைக்கத் திருவுளங்கொண்டு உலகுடை முதல்வியெழுந்தருளி பரஞானம் அபரஞானமென்னு மிருகலசக் கொங்கைப்பாலை யளிப்பள், அதிற் சிதறிய திவலையையுண்டவிடத்து என்னாலளிக்கப்பட்ட இக்கொடுஞ்சாபநீங்குமென்று பகற்கடன் முடித்துச்சென்றான். இவர்களே பலகாலும் மீனுருக்கொண்டு அத்தடத்திலிருந்தனர். தேவரீர் அத்தடத்தி லமர்ந்திருக்கையில் உலகுடை முதல்வியெழுந்தருளி விரைந்தெடுப்ப அவரது கொங்கையிரண்டும் பால் விம் மிப் பொழிய,அது அத்தடத்தில் விழக்கண்ட இவ்வறுவரும் அதனை நுகர்ந்து முன்னையுருப்பெற்று ஆளுடைய பெருமானைவணங்கிநின்று அவன்திருவருளை யெய்தித் திருப்பரங்குன்ற மெய்தித் தவஞ்செய்திருந்து உமது வருகையைக் கண்டு இங்கே வந்தனரென்று இந்திரன் சொல்லிமுடித்தனன். இது கிடக்க;

சுரம்புகுபடலம் - முற்றிற்று.

---

## திருச்செந்திற்படலம்.

பிள்ளையார் அக்கொடுஞ் சுரங்கடந்து திருச்செங்குன்றூரைத் தெரிசித்துப் பருமணியையும் வயிரத்தையும் முத்தையும் பிற வளங்களையுங் கடற்றிரை யெறிகின்ற சீரலைவாயென்னும் நாமனூரலைவாயென்றும் சந்தனசலமென்றும் செயந்திநகரமென்றுஞ் சொல்லப்படும் திருச்செந்தூரை யடைந்து விச்சுவகர்மாவை நமக்குத் திருக்கோயில் சமைக்கவேண்டுமென்று சொல்ல, அவ்வாறே தேவரும் வசிக்கும் திருநகரங்களு மிதற்கொவ்வாதென்றுசொல்லச் சிறந்துவிளங்குந்திருக்கோவில் செய்துமுடித்தான். பிள்ளையாருந் தேரைவிட்டிழிந்து தன்னைச்சூழ்ந்து சாரதப்படை புடைவர அருமந்த தேவர் அயன் திருமால் இந்திரன் வாழ்த்தெடுப்பவெழுந்தருளி அக்கோயிலுட்புகுந்துபொற்பீடத்திலெழுந்தருளினர். கந்தருவர் பாடினர், தேவர்களும் முனிவர்களும் மலர்மழை பொழிந்தனர். கங்கைமுதலிய நதிகளும் சாமரை யிரட்டினர், தேவர்கள் ஆலவட்டம் வீசினர். வாளையேந்தி வீரவாகுதேவர் அயலில் நிற்க வீரரெண்மரும் இலக்கத்தவரும் கடைவாயிலிலிருந்தனர். இவ்வாறு இவர்கள் புறத்தேநிற்ப அங்கே யெழுந்தருளியிருந்த ஞானக்கொழுந்தாகிய பிள்ளையார் சிறிது மறியாதார்போல அவுணராற் பலகாலமும் வருந்திநிற்கும் இந்திரன் முகத்தைநோக்கி நீதியைத் துரந்துநின்ற சூரபதுமன் முதலானோர் பிறந்த வண்ணமும், அவர்கள் விரும்பித் தவஞ்செய்து வரங்கள்பெற்ற வண்ணமும், பின்னர் சிறந்து அரசுசெய்த வண்ணமும், அக்கொடியவர்களுடைய மாயமும் வெற்றியும் வலியும் மேன்மையும் இதுவரையும் உங்களிடத்தே அவர்களிடர்செய்த துயரத்தையும் முழுதுந்தெரிவிக்க வேண்டுமென்றனர்.

பிள்ளையார் இவ்வாறு இந்திரனைக் கேட்க, இந்திரனும் தனக்கயனின்ற வாக்குவல்லபமுடைய வியாழபகவானைப் பார்த்து நீரே தெரிவிக்கவேண்டுகின்றேனென்று விண்ணப்பிக்கக்கேட்ட அவ்வியாழபகவானும் கடம்பணிதடம்புயத்துக் கடவுளிரண்டு சேவடியையும் உச்சிமேற்கொண்டு நீயோ அறியாப்பொருளொன்றுமிலது, எவ்வுயிருள்ளுமுயிராகச்செறிந்தனை, அடியேங்கள் துன்பமுழுது மொழித்தற் பொருட்டே அறுமுகங்கொண்ட இக்குழந்தையுருக்கொண்டனை, உன் செயலையாரே யரியவல்லவர், எல்லாவுலகங்களும் அவ்வுலகங்களைப் படைத்தளித்தழிக்கும் மூவரும், அப்புவனவாசிகளும் நின்னுருவாகவே தோன்ற விளங்கினை, நீவல்லமாயம் உலகில்யாவரோ வல்லர்! அக்கொடியவருடைய தன்மையை வினவியதன்மை நீயறிந்திடவேயன்று, அடியேங்கள் துயரைக்களைந்து இன்பம்பயக்குந் திருவருளேயாம், ஆகையால் அவ்வவுணருடைய வரலாற்றினை வரலாற்றுமுறைமையால் சொல்வேனென்று சொல்லத் தொடங்கினன்.

திருச்செந்திற்படலம்.

### உற்பத்திகாண்டம் - முற்றுப்பெற்றது.

ஸ்ரீகச்சியப்ப சிவாசாரியர்
திருவடி வாழ்க.

உ

கடவுடுணை.

# அசுரகாண்டம்.

## மாயைப்படலம்.

ஊரி லான்குணங் குறியிலான் செயலிலா னுனைக்கும்
பேரி லானொரு முன்னிலான் பின்னிலான் பிறிதோர்
சாரி லான்வரல் போக்கிலான் மேலிலான் றனக்கு
நேரி லானுயிர்க் கடவுளா யென்னுளே நின்றான்.

பெருமைதங்கிய காசிபமுனிவன் மக்களாயுள்ள வறுபத்தாறு கோடி யவுணருக் கரசன் மங்கல கேசியாம் அரக்கியை மணஞ்செய்து சுரசை யென்னு மகப்பேறு வாய்க்கப் பெற்றான். அம்மடவரல் தன் பருவமெய்திய வழி சுக்கிரபகவான் அவளுக்குக் கொடியமாயைவித்தைக ளனைத்தையுங் கற்பித்து அதிற் சிறந்தாளாக்கி மாயையென்று பெயரிட்டு துன்பத்தால் வருந்தும் அவுணர் சிறுமையையும் இந்திரன் முதலிய தேவர்கள் பெருமையையும் அத்தேவர்கள் அவுணரால் தங்கள் பெருமிதங்கெட்டு வருந்தலையும் நந்தி பெருமானல் இடப்பட்ட சாபத்தையுமாராய்ந்து மேல்வருங் காலத்தை நுண்ணிதிற்கண்டு அவ்வவுணராசன் பெற்ற மடக்கொடியாகிய மாயையை வருதியென்றுவரம்பகன்ற பேரருளாலழைத்து யான்சொல்லு முறுதியைக் கேளென்று பின்வருமாறு சொல்வானுயினன்.

அவுணரோ தாமரையாள் கணவனுகிய திருமாலாலும் இந்திரனுலும் முனிவராலும் தேவர்களாலும் அளவிலர் மாய்ந்தனர். அத்தேவர் பெருமையை யாருமறிவர் ஆகலின் உன் தந்தையாகிய அவுணராசனே தேசிழந்தொடுங்கினன். மேலும் மின்னலால் தாழைமலரும் என்னல் யாமமழையும் பொன்னல் பலபொருளு முண்டாமாறுபோல உன்பொருட்டால் உன் குலத்திற்கு மேன்மையுண்டாகும். இனி நீ தாமரையாளும் வந்தடிபணியும் சொல்லுதற்கரிய பேரழகினை யுடையாளாய்ப் பெயர்ந்து நடந்து காசிபமுனிவனை யடைந்து நினது மாயாவல்லபங்காட்டி அவனுக்காசையீட்டி யிரவில் அவனைக் கலக்கவேண்டும். அப்படி அவனைக்கலந்து அசுரரைப்பெற்று மெல்ல அவர்கட்கு நாமகரணமுஞ்செய்து அளவில்லாத செல்வம்பெற்றிடத்தகுந்தவேள்விகளும் விரதங்களும் அவர்களுக்கு உபதேசிக்கவேண்டும். இப்படிப்பட்ட தன்மையையடைந்தபின்னர் நின்மக்களனைவரும் நலமெய்தவும் அவர்கள் பகைவராகிய தேவர்கள் எல்லாம் சொல்லரிய பழியெய்தவும் அருந்தவஞ் செய்யஅன்னய்! நீபோகவேண்டும் என்று சொல்லவே, ஆசிரியராகிய சுக்கிர, பகவான் சொல்லைக்கேட்டு இவையனைத்தும் எமது மரபு மேம்படுதற்கே

சொல்லிமுடித்தீர். அப்படிப்பட்ட குற்றேவலை யானேசெய்து முடிக்கின்றே னென்று சுக்கிரபகவானை மும்முறைவலம்வந்து பணிந்து தன் தந்தையிடஞ் சென்று அவனிடத்தே இவையனைத்துங் கூறி விடைபெற்று கயிலையின் வண்ணம்போலும் வெள்ளிய நீறுபூசிக் காசிபனிருந்து தவஞ்செய்துகொண் டிருக்கும் தவச்சாலையை நோக்கி நடந்தாள். இவள் பேரழகமைந்த உருக்கொண்டு செல்லுகின்றதைக்கண்டார் தாமரைத்தவிசையுடையதிருமாமகளும் இரதியும் திலோர்த்தமையும் மோகினியாரும் ஒருருக்கொண்டனரென்று சொல்லினர். மண்ணுளோரும் மாதிரத்தோரும் விண்ணிற்செல்வோரு மவளது அழகினைக் கண்ணுற்காண அரிதாகிக் காமபாணத்தால் வருந்தி விளக்கிலகப்பட்டு மாயும் விட்டிற் பறவைபோல் மாண்டனர். சூரியனும் சந்திரனும் சூழ்ந்து வலம் வரும் மேருமலையின் வடபால் காசிபமுனிவன் தவஞ் செய்கின்றமையால் அதையடையக் காலிலணிந்த சிலம்பும் அரையிற்கட்டிய மேகலையும் புலம்பத் தேவர்களெல்லாம் அதிதி செல்கின்றனளென்று சொல்லச்சென்று அவரிருக்கும் இடத்தே தன்மாயையால் பூந்தடமும் பூம்படுக்கையும் மண்டபக்கூட்டமும் விரைந்து சமைத்து நிற்பதை எம்பிரானாகிய நடராசப்பெருமானது குஞ்சிதபாதத்தைக் குழைந்துருகி ஐம்பொறி யடக்கித் தவஞ்செய்யும் அம்முனிவர்பிரான்கண்டு இதென்ன வியப்பென்றெண்ணி இது மாயையின் செயலாமென்றுதுணியாது,இவற்றை யெல்லா மிங்கேயாரமைத்தனரென்று சுற்றுநாடி அங்கியாரையுங் காணாது மெய்த்தவ வுணர்ச்சியை விடுத்து, இறைவனருளல்லது மாயையால் அமைத்தன கண்ணுறாமல் மனத்திற்கொண்ட காதல் வெள்ளத்தால் சித்திரப்பாவையி னத்தகவடங்கி விண்ணுலகே யிழிந்ததோ! இந்திரன் அரசாளும் அமராவதி நகரமே யிறங்கிற்றோ! குபேரன் முதலிய திக்குப்பாலகருலகம் இறங்கினவோ! அல்லது பிரமன் செயலோ! நாரணன் படைப்போ! அவராலு நாடரிய போதபரிபூரணனாகிய பரமசிவன்செயலோ! வேறொருவரால் அமைக்கப்பட்டதோ! புல்லிய வழிகளையுடையகாட்டில்புகுந்த இச்செல்வமானது நன்மையி னியற்கையோ! நன்மையைக் கெடுக்குந் தீவினையினியற்கையோ! வேறென்னெறிக்கிய லுமென்று இன்னன சொல்லிக் கொண்டியாதாயிருக்கினுமாக,நன்மையினியற்கையை முன்னேநன்றாகத்தெரிவிக்கும்உணர்ச்சி இறந்துபட்டது பழுதாமென்று சொல்லிச் சிந்தித்துத்தெளிந்துதேறி, பண்டையப்படி தவஞ்செய்துகொண்டு இங்ஙனங்கொண்டது பழுதெனச்சிந்தித்திருந்தான். அதையறிந்த மாயை அம்மணிவாயில்தமியளாய்த் தோன்றி நிற்க அதைக் காசிபமுனிவர் கண்டு கற்பகத்தைப்படரும் காமவல்லியோ! இன்றுநம்முன்னே தோன்றிய தற்புதமென்று தவஞ்செய்தலைவிட்டு அம்மலையருகிற் சென்று இவர் பெண்ணுருவ மிப்பெற்றித்தாமோ வென்பது கூறி தான் கொண்ட மையலுக் கெல்லை காண்கிலாதானாய் இவர் தாமரையாளோ! தெய்வமகளிரோ! காண்டற்கரிய ரின்னுமொன்றுசிந்தித்து, நமது பிதாவாகிய பிரமதேவனாற் படைக்கப்பெற்றாளெனின் இத்தன்மையதாகிய உருவங்கொண்டிராளென்று தவவலியும் அறிவு மொய்யெனவகன்று மாயையே யுருக்கொண்டதென்று நினைந்து அங்குகின்றேங்கி இவர் எண்ணம்

யாதேயென்று எண்ணிவருந்தினன். அதுபொழுது அவுணனை யளிக்கவந்த திதியன்னமாமகள் பொதுநோக்கொடு புணர்ச்சியை யுணர்த்தும் நோக்கினை விரைந்து காட்டவே முனிவன்கண்டு மனநைந்து, பொதுநோக்கால் பிணியும், சிறப்பு நோக்கான் மருந்துமாயினவெனத் துணிந்து, பின்னும் பூவையன்னர் சிறப்பு நோக்கான் கற்பனைகடந்த கருணையங் கடலாகிய கண்ணுதற்பெருமான் யாவுஞ் சிதைய இறுதிசெய்யும் அற்புதம்போல் பொது நோக்கும் அவனருளேபோல் சிறப்புநோக்குந் தோன்றுகின்றனவேயென்றும், மாயையுங் கொலையுமேமருவி யெஞ்ஞான்று முலகைத் தனியோம்பும் தன்மையால் பாற்கட னடுவட் பள்ளிகொள்ளும் திருமாமகள் கொழுநனை யொப்பதென்றும், இருண்டமேனியாலும் இடியோசையாலும்உலகுயிர்முழுதும்வெருவச்செய்து உடனே பயனையுதவும் புனல்காலும் புயல்போல்கின்றதென்றும், இன்னன பலப்ல வெண்ணி அன்னவர் படிவத்தைக்கண்டு அன்பான் மகிழ்வெய்தி வியந்து அழுங்கு நெஞ்சொடும் வருந்திப் பின்வருமாறு கூறுவானாயினன்.

ஆகாயத்திலுள்ள மேகத்தின்தோற்றமும் அளவிறந்த கங்குலி னிறமும் ஏனைய கருமை யனைத்து மொருங்கே யீண்டி மீன நோக்கினையுடைய இம்மாதரார்பால் பொருந்தியதல்லது கூந்தலி னிலக்கண மென்னவென்று கூறவல்லோமென்றும், இவர் இதற்கொப்புமையாகாது திங்களும் குனிசிலையிரண்டும் தோற்று வெய்தின் வானிற் கரந்து சென்று திரியுமெனின் வேறுவமையு மொப்பித் துரைக்கப்படுமோ வென்றும், மாவடு அம்பு நீலோற்பலம் வாள் வேல் கயல் சேலென் றெண்ணப்பட்ட இவற்றுள் யாதும் ஒப்புமையாகாதெனின் கண்ணிணைக்கொப்பாவது அழகிய பாற்கடலின்கண் எம்மையாளுடைய இறைவன்அயின்ற ஆலவிடமேயொருவாறுக்குமல்லது வேறுவதிலதென்றும், எள்ளென்றும் ஒந்தியென்றும் சண்பக மலரென்றும் குமிழென்றும் சொல்லா நின்றனர் அவற்றை யெடுத்துவமிக்கையில் அவைதெள்ளிதுமன்று செப்பவும் வேறோர் பொருளுமில்லை யெனின் மூக்குக்கெதை ஒப்பிடுவதென்றும், கண்டையங் கண்ணார் இதழுக் கொப்புக் கூறுமிடத்து ஆதொண்டங் கனியென் றுவமிக்கின் அதுவும் விருப்பினோ டுண்பார்க்கு அமுத நல்கிக்கொண் டிருந்திடின் ஒப்பெனப்படும் இல்லையேல் ஒப்பாகாதென்றும்; முல்லை முகையும் மயிலிறகின்நுனியும் குருந்து முத்தமும் உடுக்கண்மு மெய்யெனக் கூறுகையில் பற்களுக் கொவ்வாதாகும், ஆயினும் நகையானது தெரிந்தோர் விரும்ப நன்னலம்புரியு நீர்மையால் ஒப்புவேறொன்றுகாதெனின் சந்திரிகைதான் ஒப்புக்கூறலாந் தன்மையென்றும்; மயிரொறிகருவி வள்ளை தோரணம் அழகிய பொன்னூசல் ஒப்பென்றுரைப்பது பேதைமையேயாம், குற்றமற்ற உலகைப் படைக்கும் நான்முகனென்னும் கொல்லன்செய்த உயிரொறி கருவியென்றே சொல்லலாம் காதுக் கிணையென்றும்; முகத்துக்கொப்பு நீண்மதியெனின் அது தேய்தலும் வளர்தலுமாகிய தன்மையுடைமையான் சிறப்பியல்பாகா, பங்கயமென் றுவமைகூறினும் பழுதுமுண்டு ஆயின் ஒப்பென்றெதை யெடுத்துக் கூறலாமெனின் அதற்கதுவே யொப்பெனப்படுவதன்றிவேறுகாதென்றும்; களத்தினழகைச் சங்கமென்போமெனின் அது

வுங் காந்தொழிந்தன ; கமுகும்அன்னதேயாம் அக்கண்டத்தினை இவ்வாறு
கூறியதினாற்றானே புலவரோர்க்கும் தொழிலரா யிழுக்கமடைந்தன ரென்றும்,
மாயன் வாய்வைத்தூதும் பச்சைப்பசுவேயனையதுதோளெனின் அதுவும்
அவளிணைத்தோள்களைக்கண் டஞ்சி, தோல்வி யடைந்ததெனின் அது அம்
மாயப்பிரான் பெற்ற மாரன் எடுத்த வளையாத வில்லாகிய கரும்பையொக்கு
மொக்குமென்றும் ; கைகளுக்குக் கமலமும் காந்தளும்ஒவ்வாதெனின் மாந்
தளிரைத்தான் ஒப்பென் றுரைக்கப்படுமோஎன்றும், உடலையொப்பிடுங் கால
த்துகிளியின் மூக்கினையேய்ந்து அளவிகந்துகாமரிலைச்சினையை யொக்குமென்
றும், மலையென்றெழுந்து சூதினையெனத் திரண்டுஇளநீரெனத் தண்ணென்ற
வழுதுட்கொண்டு யானைமருப்பேபோல விளங்கி மாரன் மகுடமென வழ
கெய்தி யிருப்பதோர் பொருளுண்டேல் இணைமுலையென்றுரைக்க வொப்பா
மென்றும், உந்தியின்மேற்சென்ற உரோமத்தி னொழுக்கும் அந்த விலக்கு
மிசையொத் தவளைப்படைத்து அவள் முலைக்கண்ணெழுத அழகிய கிண்
ணத்திலிருக்கும் மையைத் தோய்த்தெடுத்தபோது அக்கோலினின்றுமொழு
கிய மையொழுக்குப்போலுமென்றும், உந்தியி னழகை யொப்புமைகூறுகை
யில் பாற்கடற்பரமன் பள்ளிகொள்ளும் ஆலிலைதானொப்பெனின் அதுவும்
ஆகாது அல்லது ஒப்பென்று கூறினும் பழியினை யெய்துமென்றும், மின்
னெனிற்றோன்றி மாயும், கொடியெனின் உருவிலதா யிருக்கவேண்டும் ; துடி
யும் நாகமு மென்போ மெனின் சிறப்பன்று, இவர்க்கு உண்டில்லை யென்
றுரைப்பதே யல்லது வேறொன் றன்றென்றும் ; அல்குற்கும் பாம்பும் ஆல
வட்டமும் அழகிய தேரும் அச்சுறுமெனின் அவாது அல்குலைக் காமன்
விட்டி னுறுப்பென்பரென்றும் ; வாழைத்தண்டு யானைத்துதிக்கை இவைகளை
மகரிகையணிந்த தொடையினுக் கொப்பென்றுரைப்பர் அவையுந் தக்கன
வல்லவென்றும் ; அருமையான புலவர்கள் முழந்தாளை ஞண்டுக்கொப்பாகச்
சொல்லாநிற்பது வழக்கேயல்லாமல் இலக்கணமமைந்ததே கிடையாது, இவர்
தெய்வதவடிவுக்கு இவ்வுலகிலுள்ள இழிபொரு ளொன்றையோ உவமிப்ப
தென்றும் ; பொன்னொத்த புணர்மென்கொங்கையார் கணைக்காலையும் பொன்
றுணியன்ற அழகிய அம்புக்கூடும் ஆராய்கையில் சமமிது ஒப்புமாவதே
யென்று தன்னந்தனியேன் துணிந்து சிந்தையிலே பொருந்த அறிதறேற்று
மல் ஐயமுறுவேனென்றும் ; அரும்பாகிய காலத்து கொங்கைக்குத்தோற்று
முகமோவ்வாது வண்டினங்கள் பொருந்திநிற்ப மலர்ந்த பின்னும் தொலை
வுற்றுக்கைகளுக்குத் தோற்று மீண்டும் பாதங்களுக்கும்பயமெய்திச் சிதைவுற்
றது கமலமலரொன்றாற் பெரும்பயமடைந்து தவஞ்செய்தும் பிழைத்தது
போலுமென்றும் ; மிகவுயர்ந்த வளைந்த யாக்கையுமுடைய ஆமையும் வாசனை
மிக்க குவளைமல ரிதழும் தாக்குகின்ற பந்தும் அசோகந் தளிரும் சார்பாகச்
சொல்லுமிடத்தில் துலாத்தட்டைத் தொடுத்து ஒரு வடிவிலே யாக்கு
வானே யாயின் பெண்ணமுதனையாள் தாளுக் கொப்பாகுமென்றும் ; புகை
யினு மெல்லிய பஞ்சும் அனிச்சமலரும் அன்னத்தின் தூவியும் மிதிக்கிற் சிவ
ந்துகாட்டும் உள்ளடி யென்றால் கத்தூரிமணங் கமழ்கின்ற கூந்தலையுடைய

இப்பெண்ணரசி நடக்க இந்நிலமடந்தையோர் பூவதோ அது பூவல்லதேல் பொன்னடி பொருந்துமோவென்றும்; கயலன்ன கண்ணும்செவ்வாயுமுடைய இக்காரிகையார் சாயலை மயிலேயென்பதல்லது மற்றதற் குவமைமேயசொல்வ தரிதாகத்தோன்றும், இவர் வடிவத்துக்கொப்பாக எப்பொருளைத்தான் உவ மிக்கப்படும், ஒப்பாக வெடுத்துச்சொல்ல ஏதுளது? இவள்போலக் கைபழகி யெழுதிய ஓவியமுமுண்டோஇருந்தால் இதுதான்ஒப்பாகும்போலுமென்றும்; பிரமனுக்கு முக நான்காக்கியதிலோத்தமையினு மாயிரமடங் கழகுபெற்ற பெண்ணினல்லாளை நான்முகத்தொரு நம்பிவிடுத்தானே அவன் அவ்வாறு அமைத்திருப்பானேயாயின் தலைகள் பலதாங்கி இந்நிலாநகை மாதராளைத் தொடர்ந்து பின்னேதிரிந்துகொண்டே யிருப்பனென்றும் ; குற்றமற்ற இப்பூமி யின்கண் சிறடிபொருந்த மாதரசி காலிலுள்ள குறிகளெல்லாம் வானநாட்டிற் பழமையான பெருஞ்செல்வத்திலிருக்கின்ற இந்திரனதுமனைவியாகிய சசியின் தலையிலுமில்லையெனின் இவரிடத்தேயுள்ள குறிகளை யெவ்வா றுவமிப்ப தென்றும்சொல்லிக்கொண்டே; அப்பெண்ணினல்லாள் முன்னேசென்று திரு வினு நல்லாளே! உன்னுடைய நல்வரவு நன்று நன்று! என்று சொல்லி உன் குலமெது? உன்பதி யாது? உன்பெய ரென்னை உன்னைப் பெற்றோர் யாவர்? சொல்லுமெனக் காதன்மிகுந்து கேட்க,அதைக்கேட்ட மாயை அவற்றையெல் லாம் எம்மை நீர்வினவுவதிற் பயனில்லையே! என்னிடத்தே தன்னந்தனிய ராயு மடைந்தீரோ இவ்வகைச் சிறுதொழில் தவஞ்செய்வார்க்குச் சாலவுந் தகுமோ, குற்றமற்ற பெருந்தவஞ்செய்வ தொழிந்து சிறிதும் மெய்யுணர்ச்சி யில்லாதார் மம்மர்கொண்டு பேசுவதேபோலப்பேசி என்னையடைவது நீதியே யன்று, நினக்குரிய கடமையைச் செய்கவென்று சொல்லக் காசிபமுனிவன் சொல்லுகின்றான். பெண்கள் நாயகமே! அளவிலாக்காலம் அங்கமெல்லாம் வெம்ப மனமெலியச் சங்கையென்பது சிறிதேனுமில்லாமல் அருந்தவம் பல செய்து முடித்தது இங்குவேண்டிய தெய்தப் பெறுவதற்கன்றோ? இந்திரன் பொன்னை வேண்டியோ பொன்னகர் வேண்டியோ பொன்னையனைய இந் திராணியை வேண்டியோ அல்லது வேறு மற்றெது பெறவேண்டியோ தவஞ் செய்தான். அழகிய மேனிவருந்த யான் தவஞ்செய்தது உம்மைக் கலவி செய்தற் பொருட்டன்றோ, ஆகையால் நீரொளிவந்தடைந்தீர்! யான் தவஞ் செய்ததற்குப் பயனே அடைந்தேவிட்டது இனித் தவஞ்செய்யவேண்டுமோ, மேலும் பேரும் ஊரும் பிறவும் கேட்டேன்அதற்கொன்றுஞ் சொன்னீரல்லீர், உம்மைச்சேரவே அவற்றைத்தெரிந்து கொள்வேன். காமநோயோ என்னை வருத்தா நின்றது, அதற்காக என்மேற் கடைக்கண் வைக்கவேண்டுமென்று வேண்டிக்கொண்டான்.

இவ்வாறு காசிபன் சொன்னசொற்கேட்டு வறிதுநகைசெய்து நீரிங்கே யருந்தவஞ் செய்தது ஆராயுமிடத்து என்னை யடையும்பொருட்டோ அதல லவே, தூயகுணத்துத் தொன்மையீர் வஞ்சமொழி சொல்வதும் வழக்க மாமோவென்று சொல்ல, அவள் சூழ்ச்சியை முழுதுமறிந்து எல்லாக்கலை களையுமறிந்த காசிபன் சொல்வதாயினன். நானே பொய்ம்மொழி யாதுஞ்

சொல்லேன் நான்முகன்பெற்ற மகனென்றறியீர். இம்மையிலே நலமனைத்துந் தரும் உன்னிடத்தே ஆறுக்காதலால் உள்ளதுள்ளவாறு சொன்னேன், பல காலும் அருந்தவஞ்செய்து நினைத்திருந்தது முத்திபெற்றுய்வதற்கே அம்முத்திப்பேற்றை எனக்கு உதவவந்தீர்; அதாவது உம்மைப்பொருந்துவதே முத்திப்பேறுவது, இதுவே யல்லது எனக்குப் பேறென்பதொன்றுமில்லையே ஆதலால் உம்மையே புகலிடமாக வடைந்தேனென்றுசொல்ல மாயையும் காசிபனை நோக்கிச் சொல்லுகின்றாள்.

நானேமங்கலமியைந்த வடதிசையில் வசிப்பேன்,மேருமலைக்கருகே சேர்ந்ததொருபாகத்தில் கங்கைக்கரையை யடைந்து அங்கே யெய்தப்பெறும் பயனனைத்தும்பெற நினைந்து விரைந்து போகின்றேன். பெருந்தவமுடையாரே இங்கே நில்லுமென்று சொல்லிப் படரக் கமல நான்முகன் மகனாகிய காசிப முனிவன் விரைவாக இதைக்கேளுமென்று சொல்லுகின்றான். கங்கை நதி முதலிய தெய்வநதிகளேழும், இடமகன்ற உலகிலுள்ள சிவத்தலங்களும் விஷ்ணு க்ஷேத்திரங்களும் பிறவும் இவ்விடத்திலேவர வெண்ணினும் இமைப்பொழுதில் வரச்செய்வேன்,மேலும் பொன்னுலகமும் வித்தியாதர ருலகமும் ஏனையோ ருலகமும் திசைப்பாலகர் வாழுமுலகமும் அங்கே யிருக்குந் தேவருடனே பெருந்திருவம் இப்பொழுதேவேண்டினாலும் இங்கேவரச்செய்வேன். மூன்று பெருந்தேவரையும் மூவுலகிலுள்ளார் யாவரையும் நீர்பார்க்க மனங் கொண்டாலும் நீர்வேண்டினால் இங்கே பெறச்செய்வேன், அல்லது அமுதம் பெற விழைந்தாலும் தருவேன் எப்பொருளை வேண்டினாலும் இமையோரையில் அப்பொருள்யாவையும் இங்குள்ளனவாக யாவையுமளிப்பேன்; புதல்வரைவேண்டினாலும் நானேபடைத்துத்தருவேன் அவரைஇவர்க்கொப்புக்கூற வரிதென்று சொல்லவுஞ் செய்யவல்லேன், அழகமைந்த மேனகை அரம்பை முதலிய மாதர்கள் வந்து உனக்குக் குற்றேவல்செய்ய விரைந்து செய்விப்பேன், சிந்தையின் மயக்கங்கொண்டு திரியும் என்னுவி யுய்யும்வண்ணம் விரைவாகநினைத்தல் வேண்டுமென்ன மாயையும் பெருநகை நகைத்து தனியே யிருக்கின்றேனென்றார். மாயை காசிபனைநோக்கி நீரோஇவ்வாறு பேசுகின்றீர் நீரினி விட்டு விடும், இவ்வகையான காரியம் மேலோர்க்கிசையுமோ, யானும் முன்னே நினைத்தவிடஞ் செல்வேன், நீர் இவ்விடத்திலேதா னிருமென்று கங்கைக்கரையை நோக்கிச் செல்பவள்போற் செல்ல அவள் படரலும் அருந்தவனாகிய காசிபமுனிவன் தொடர்ந்து செல்ல மாயையும் அருவமாய் மாயையிற் கரந்தனள்; அதனால்அவளைக் காணாது துயரமெய்தி வருந்துவானாயினன்.

மாயைப்படலம்

முற்றிற்று.

---

## காசிபன்புலம்புறுபடலம்.

வில்லைப்போலும் நெற்றியையுடையாள் வெற்றிபெறும் மாயையாகிய வலையை வீசி யென் ஆருயிரைக் கவர்ந்தனள் கலைகளே! இதைக்கண்டீரோ, நிலையாதவண்ணம் வெருண்டு நெடிதோடுகின்றீ ரென்றும், களிறே மிக்க காதலையுடையையாய்ப் பிடியைநாடிச் செல்கின்றனையாகி யான் நெடிதுவரு ந்து நீர்மை செய்தொழிந்தனை, அக்கொடிபோல்வாளைக் கொணர் ரென்றும்; வண்டே! நீ யன்புடைமையாற் பெரியர்யாரும் உன்னை யளியென்னும் பெயரி னழைக்கின்றனர் அவர் கூறியசொற் பிழைபடச்செய்வதாமோ என்னுயிர் தரிக்கச் செய்யவெண்ணியோ திரிதருகின்றனை யென்றும், தடாகத்திலுள்ள குவளைமலரோ! என்னை யடைந்து பிரிந்த அப்பெண்ணமுத மனையார் விழி போல் வருத்துகின்றனை, என்னுயிர்க்குறவாய பொருளுமில்லை, மன்மதனுகிய பாவிக்கும் வாளியாக வமைந்துகிடக்கின்றனை, என்னையும் இன்னும் வருத்து வையோவென்றும், சந்தனமரமே! செந்தாமரைமலர்மேற் றிருமாமகளென்று சொல்லும்படி என் கட்புலன் காணவந்தவர் எனக்குத் தணியாதமயல் செய்தொழிந்தனர், அந்தோ நீயவரைக் கொணரச் சந்தாகச் செல்லாயோ வென்றும்; பொன்னிற் பொலியும் பூங்கமலத்தில் துணையொடு தழுவி நீங் காத அன்னப்பேடைகளே! என்னைத் தனிவிட் டவர் சென்றமை உமக் கறமாமோ வென்றும், யான் றணியாவண்ணம்மாயை வலைதந்து துணிந்துசென் ருர், படர்ந்த வழியை யாராய்ந்து சொல்லெனினும் கணித்துரையாய் இது தானேகணி யென்னுமியற்பெயரையுடைய வேங்கையே யுனக்கியல்பென்றும், மன்மதனுக் கம்பாகியும் பாற்கரனுக்குத் தோழமையாயு மிருக்கும் தாமரை மலரோ! மாதராருக்கு முகமாயு மதிக்குப் பகையாயு மிருக்கின்றனை வடம் போலுங் கண்ணையுடைய மெல்லியல் நின்பால் வருவர் அவரிடத்தே யென் னிரப்புரை ஒளியா துரையென்றும், செய்குன்றுகளே! நீர்நிற்கின்றீர் மிகவும் நெடியீர் பெருமிதமுமுடையீர் இன்றென்பாலன்பணுவு மில்லாது என்னைவிட் டொழிந்தனர் முன் சென்றீர், அவர் செல்லும் செலவையு மறிவீர், உமக் கேதெனினும் குறைசெய்தேனே என் குறையெடுத்துச் சொல்லீரென்றும்; மயிலனையசாயலாரோ மாயைத் தொழில் கைதேர்ந்தவர், அவரியலை யே தென் றறிவேன் இங்கே நின்றனரோ பயின்றதைச் சிறிது சொல்லவேண்டு கிறேனென்றும்; குயிலே என்னுருயிரைக் கவரத் துணிந்தனையோ வென்றும்; உன்னிடமேவர நினைவாகப்பேசினர் என் பாலிராது இவ்வழியே விரைந்து சென்றனர், மெல்லிய வசந்தக்காற்றெனச் செல்கின்றனை! தென்றிசையினின் றும்வருகின்றனை! என் செயலை யுரைக்கவேண்டுமென்றும்; முத்துகளை யெறி யும் தடாகமே! அருள்வாய்ந்த நீரையுடையாய் உன்னை உள்ளீரமுடையை யென்று எவருங் கூறுகின்றனர், உன்னை நெருங்கியவழிச் சுடுந்தொழில்மேற் கொண்டனை, நீ தளரவேண்டாமென்று சோர்ந்து வருந்தும் என்துயரத்தைத் தீர்க்காயோ வென்றும்; களிப்பையுடைய மயிலே! முருக்கமலர்போலும் வாயையுடைய கிளியே! குயிலே! உமது கிளையயென்றோ! எனக்கிரங்காத வண்ணம் தகுதியாமோ சிறிது மொழியாத சிறியேனுக் கரணுவீரென்றும்; முற்றுந் துயர்செய்து என்னை யணுகாம னீங்கித் துறவறவொழுக்கமாகவே

தொடர்ந்து சென்றவருடைய தொடர்புத் தொடர்பாகுமோ, புறவே! எனக் குறவே யாவிர், அவர் படர்ந்துசென்ற நெறியைத் தமியேனடையச்சொல்ல வேண்டுமென்றுமின் னின்னன பல மொழிகளையு மனமயல்கொண்டு காசிப முனிவன்சொல்ல அதனை வினவி மகிழ்ந்து தன் சிறந்த வடிவைமறைத்து அன்னமனைய மாயையு மங்கே யடைந்தனள். இது கிடக்க;

மெய்யுணர்வினையுடைய காசிபமுனிவனிடத்தே நொய்தென மாயை யெய்தித் தீர்க்கலாகாத மையலுண்டாக்கிச் செம்மையாகிய தவத்தைக்கெடுத்தனள், ஐயோ! நானதனைப்பார்க்கேனென்று வருந்தி யகன்றான்போலவும், தன்தந்தையாகிய காசிபமுனிவனிடத்தே சேரவெண்ணி வந்தவள் தாயேயா மன்றோ, இவர்கள் உள்ளமகிழ்ந்துகூடும் கலவியைக் கண்ணுறக் காண்டல் முறையோ புதல்வர்க்கென்று மனத்தே யெண்ணிச் சென்றான்போலவும், அளவில்லாத அரக்கரொன்னும் அளவைகடந்த நள்ளிரவினிருள் இப்போதே வருமென்று விரைந்து மதித்து சுவர்க்கலோகத்துக்கு அரசனாகிய இந்திரனுடைய ஆணையைக் காக்கும் மிக்க வொளியுள்ள ஆழியங்கடவுள் கடலி லொளிப்பது போன்றும் சூரியன் அத்தமான மலையை யடைந்தான். இவ்வாறு சூரியன் அஸ்தானமலை குறுகவே, விண்ணவரெல்லாம் கொண்ட சிறந்த திருவும் சிறப்பும் ஆற்றலுமகலும்படி மாயையினிடத்தே அவுணர் சேனையாகிய வெள்ளம் பரவியதென்று சொல்ல மாலைப்போதும் இருளின் சூழ்வும் விரைந்து வந்து படர்ந்தன. ஆகாயத்தில் ஓங்கிய செவ்வானமாகிய மாலையம்போது வறுமையுற்று ஈயென்று உபாசிக்கு நீர்மையுடையார்க் கிம்மியளவேனும் அன்பால் வழங்காத நீதியையுடைய பகைவனொருவன் செல்வம்போ மாறுபோலச் சும்மாப்பொள்ளெனப் போயிற்று.

தேவர்கள் பஞ்சதருக்களினின்று சிந்தும் அழகிய மலர்போலவும் மேகத்திற் றோன்று முத்தேபோலவும் தாரகைகள் தோன்றின. உலகமுழுதும் படர்ந்த பேரிருளாகிய ஆலவிடத்தைச் சந்திரிகையாகிய கையால் வாரியுண்டு தேவர்கள் புகழ நீலநிறத்தைத் தன்பாற்காட்டும் கண்ணுதற் பெருமானேபோலவும், பாற்கடலைத் தேவர்கள் கடைந்தகாலத்தில் செழுமையான துளிகள் மணிகளொடுந் தெறித்தாற்போலத் தாரகைகள் தோன்றவும் அசுராகிய காரிருள் தொலையவும் அங்கேதோன்றிய அமுதமேபோலவும்,சந்திரன் கடலினுதயஞ்செய்தான். தாரகைகளோ ஆகாயமென்னுந் தடாகத்திற் பூத்து மலர்ந்த குவளைமலர் ஆம்பல் மலர்போலவும், சந்திரன் வெண்டாமரை மலர் போலவும், அதன்கண் தோன்றும் மாசுதோய் களங்கம் அம்மலரினுள்ள தேனைப் பருகும் வண்டினம்போலவும் விளங்கின. மேலும் கடலென்னுந் தடத்தில் சந்திரிகை யென்னும் வலைபோட்டுச் சந்திரனாகிய வலையன் ஈர்த்துப் பலநிறங்கொண்ட மீன்களைப் பலமுறை கவர்ந்து வானிற் புலரவிரித்தாற் போலத் தாரகைகள் விளங்கின. உவர்நீர்க்கடலைத் தன்கையகப்படுத்துண்டு மேகங்கள் வானிற்சென் றுதவுவதுகண்டு சந்திரனாகிய கடவுள் பாற்கடல்பருகி யெங்கும் பொழியும் அமுதம்போலப் புது நிலா வெங்கும் பரந்தது. சந்திரனுதயமாகவே சந்திரிகைகள் எங்கும் பரந்தன; யாவருங் களிமகிழ்சிறந்தனர்.

குமுதமுதலிய மலர்கள் மலர்ந்தன, சோலைகள் தளிர்த்தன, தாமரை மலர் புலர்ந்தன, தலைவனைப் பிரிந்தோர் நெஞ்சம் புகைந்தன. பாவமே செய்யா ரேனும்அறிவினிற் பெரியாரேனும் யார்க்கும் நண்புடையராக இனியவையே சொல்லவேண்டு மென்றே பல்லுயிருக்கு மின்பஞ்செய்யும் மதியைக்கண் டன்றோ கமலமலரெல்லாம் பொலிவழிந்தன. சந்திரனால் மலர்ந்த கைரவ மெல்லாம் எமதிறைவன் துன்பமடைந்தார்பால் அடையான். தாமரை என் தன் செவ்விகுறைந்ததென்று தங்களிற் சொல்லுதல் போலாம் சந்திரனுக்கது சாலவுண்மையென்பதுபோல் இசையைப்பாடும் வண்டுகள்பொதிந்த தாமரை மலர் இராக்காலமாகவே காவலையுடைய வீட்டின் கதவினைப்பூட்டித் திரு மாலையணைந்து திருமகளிருந்தாற்போலத் தாமரை மலர்களிலெல்லாம் இசை பாடிப் பொய்கைக ளெங்கும் பொதிந்தன.

இச்சமையத்தில் தேவரையும் தானவரையுந் தந்த காசிபமுனிவன் வானிற்றோன்றும் சந்திரனது நிலாக்கதிர் தன்மேற் பாயலும் வெதும்பி உள ளங்குலைந்து ஆற்றலொழிந்தமைந்து நெட்டுயிர்ப்பெறிந்துமெய்யுணர்வுசோர்ந்து புலர்ந்தொடுங்கிப் புலம்புற்று அவ்வானி லெழுதரு மதியை நோக்கி காலையிற் றோன்றும் செங்கதிரவன் மாலைக்காலத்தில் மறைந்து கீழ்த்திசைக்கடலில் மீண்டும் வந்தான் இது புதுமையே யென்றும், சூரியனே யன்றெனின் நடு வாகிய பரந்த பெருங்கடலில் பயின்று தோன்றுதலால் ஏயென உலகையழிப் பக் கருதி யாண்டும் பொருந்திய தீயெனுங் கடவுளோ, அல்லது திங்களன் றிதுவென்றும், சந்திரனென்று உலகமெல்லாஞ்சொல்லும் செந்தழற்கடவுள் இத்திசையிற் செல்கையில் வந்ததோர் சோதியோ ! அந்தியென்னுஞ் செக்கர் வானமோ ! இங்கடைந்ததென்றும், காணத்தகும் சந்திரனென் றெடுத்துச் சொல்லும் செந்தழலால் மூண்டபுகையோ ! முன்னே வானும் மண்ணுலகமும் திசையெங்குமாய் நீண்டதாகிய விருள் என்று நிமிர்ந்ததென்றும், தெள்ளிய திரைகளையுடைய கடலிற் பிறந்த திங்களாகிய செந்தழல்கொண்டது வாலி தாகிய கோலம் மேகத்திற் கண்டனன். இவ்வகை களையற்ற புகைகள் பெற்றதாகு மிவ்வுருவமே யென்றும், கேடில்லாத செவ்வானமாகத்தோன் றிப் பின்னர் வெண்ணிறமுள்ள சந்திரன் அத்தீக்கொடுப்ப நிறைந்த பொறி களே யல்லது தாரகாகணமெனப்படுவது வேறுண்டோவென்றும், கடலிட த்தேதோன்றிய தன்மையாலும், இவையனைத்தும் அன்று கடலின்கண்ண தாகிய வடவைக்கனலையும் விடத்தையும் ஆர்ந்தெழுந்து மங்குலிற்சிதறவானிற் புகுந்தனன், சந்திரனேயா மிவன், இதுமெய்யென்றும் இன்னன பலமொழிகள் மருண்டு கூறிய காசிபமுனிவன்முன்னே மாயையைக் கருதினவனாய் மிக்க காதலால் அம்மாயையை நினைந்து புலம்புவானாயினன்.

வாசனையுள்ள மலர்மாலையணிந்த குழலையுடையாரே ! கொடியேன்முன் எங்கெங்குங் காணுகிற்கின்றீர் மின்னின் மிக்க சோதிபோல் எதிரணையும்படி நிற்கீர் வலிய நெஞ்சம் படைத்தீர் நான் மாயுகிலேயிலோ வெம்மைச் சேருவீ ரென்றும் முன்னே காதலை யுண்டாக்கினீர் என்னருந்தவத்தை முழுதுஞ்

ளைத்தீர் மன்மதனையு மேவிக் குற்றம்படச் செய்தீரொன்றும், நல்லுணர் வனைத்துங் குறையாடினீர், எனக்கின்னஞ் செய்யும் பெற்றியுமுண்டோ சொல்லுங்கள் அழகாக நின்ற செய்குன்ற முதலிய வருவித்தீர் இங்கே யேகு கின்றீர் என்னைவிட்டுப் பிரிந்து செல்லாநின்றீர் விரைந்து மீண்டும் எங்கு மாகாநின்றீர் உமது செயலை யாரோயறிய வல்லவரொன்றும் நும்பாற் பற்றுடை யேனுயினேன் முன்னம் பயின்ற அருந்தவச்செய லனைத்து மொழிந்தேன் மிகுதியு மன்மதனல் நொந்தேன் அஃதாகியு முற்றேனல்லேன் உம்மோ டின்னு முழலாநிற்கின்றேன் சும்மா மாய்ந்தேனென்னும் பிழைபெற்றேனுனே னென்றும், எம்பால் நேயங்கொண்டீர்போல் வந்தடைந்தீர் ஒருவழியினில்லா மாயங்கைக்கொண்டீர் வலிய திறலைகொண்டீர் யாரையு மயல்பூட்டும் வடிவங் கொண்டீர் தனிவந்த நீர் என்னுருயிர் நிற்கக் கருதீரோ யாமாயின் நமனேடுந் தாயபாகங் கொண்டீர்போலும், என்றும் வேறுமொருமாதரை நெஞ்சில் விழையேன் நும்மிடத்தே மோகங்கொண்டேன் உம்மை மாயையில் வல்லவ ரென்று முண்மையை யறிந்தேன், இங்கே சென்றீர்போல் மறைந்தீரோ எம் பால் வந்திலிரேல் மாண்டேனுவேன் இப்போதே என்னுருயிர் நிற்கவருவீரோ யென்றும், ஒன்றேயாகிய மாயத்தால் நீருலகமெல்லாம் வென்றெய்துவீர் என் னுயிர்கொள்ள விரும்புவீரேல் யானே மிக்கநேயமாய்த் தருவேன் என்னை மயல்தீரச் சேர வேண்டுகின்றேனென்றும் இவ்வாறு சொல்லி இடர்க்கடலி லாழ்ந்து வருந்துகையில் குற்றந்தீர்ந்த மின்போல்நின்ற மாயை அம்முனிவன் கட்புலனுகத் தோன்றினுள்.

காசிபன் புலம்புறுபடலம்

முற்றிற்று.

---

## அசுரர் தோற்றுபடலம்.

இவ்வாறு தோன்றிநிற்க அதைக்கண்ட காசிபமுனிவன் அவள்செய்கை கண்டு மனமகிழ்வெய்தி யானுய்ந்தே னுய்ந்தே னென்று மின்கண்டலரும் தாழை மலர்போல்நின்ற நகையுடையாளோடுங் குலவி ஆடிக் குப்புற்றுப் பாடி உடலில் மயிர்க்குச்செறிந்து சென்று தன்னைவிட்டு நீங்க நின்ற உயிரைக்காக் கும் விதியை மேற்கொண்டான். யான் என்னசெய்யவேண்டுமோ அவற்றை யிசைத்தால் முன்னமே செய்துவிடுவேன் என்னைக் கோபிப்பது தவிர்ந்து மிக விரைந்து என்னை யாளவேண்டுமென்று பொன்போன்ற அவள் சிறடியைத் தாழ்ந்து வணங்கலும் அம்மாயையோ நீர் அஞ்சவேண்டாம் யான்கொண்ட அழகிய திருவுருவங்கொண்டு அடைவீரேல் உம்மைக் கலப்பேனென இதைக் கேட்ட காசிபமுனிவன் முன்னே காமக்கடலிற் படிந்திருந்தாலும் களிப்பென் னுங் கடலி லாழ்ந்தவனுய் இது நல்லதென்று மதித்து இரப்போனுக்குச் சேம நிதிவாய்க்கப் பெற்ருற்போல மகிழ்ந்து இவர்க்குக் குற்றேவலன்ருே செய்யச் சமைவேனென்று தான் செய்தவத்தின் மேன்மையால் அனங்கனும் நாணங் கொள்ளும் அழகிய வடிவங்கொண்டு நின்ருன். அதைக்கண்ட மாயையும்

அக்காசிபனை வியந்து உன்னியற்கை நன்றாயிருக்கின்றதென்று நகைத்து அவன் கரம்பற்றித் தான் பொன்மலைபோல் விளங்கும் ஓர் மண்டபத்திற் சென்று கற்பனையில்லாமல் விரைந்து முற்படுகின்ற அற்புதமண்டபத்தில் அழகிய சேக்கையில் இரவின் முதல்யாமத்திற் கூடினர். அவ்வாறு கூடவே திருமாலும் அயனும் இந்திரன்முதலிய இமையவர் யாவரும் முனிவரனைவரும் தத்தஞ் சிந்தைவெருவ மாயையின்பால் சூரபதுமன் தோன்றினான். இச்சூரபதுமன் தோன்றவே அவ்விருவ ருடம்பினின்று முண்டாகிய வியர்ப்பினால் யாவரினும் வலிபடைத்த முப்பதினாயிர வெள்ளம் தானவர் தோன்றினர். இவர்கள் வரவைக்கண்ட மாயை அவர்களைச் சூரபதுமனோடு நிறுத்திவிட்டு அவ்விடமகன்று காசிபமுனிவனோடு வேறொரு மண்டபமடைந்து முன்னேகொண்ட வடிவமாற்றிப் பெண்சிங்கத்தின் வடிவத்தைக் கொள்ளலும் விரைந்து தானும் ஓர் வலிய ஆண்சிங்க வடிவங்கொண்டு அவ்விரவி னிரண்டாம் யாமத்திற் புணர இரண்டாயிரங் கையும் ஆயிரமுகமுங்கொண்ட சிங்கமுகாசுரன் திசைகளெல்லாம் நடுங்கத்தோன்றினான். இவ்வா றிருவரும் புணர்ந்திடும்போது இருவ ருடம்பினின்றும் பொழியும் வியர்ப்பினால் சிங்கமுகங் கொண்டாராய்ப் பதினாலாயிர வெள்ளம் தானவர் யமனது உயிரையும் பருக வல்லவர் தோன்றினர். அவரைக்கண்டு சாலமகிழ்சிறந்து அவரைச் சிங்கமுகாசுரனோடு மங்ஙனேயிருக்க அமைத்துவேறோரிடத்தில் விரைந்து போந்து பிடியானையுருக்கொண்டு அவ்விரவின் மூன்றாம் யாமத்தினின்றாள். காசிபமுனிவனோ அதைக்கண்டு தானும் களிற்றியானை யுருவங்கொண்டு அவளொடு புணர்ந்தான். நான்கு தந்தங்களையுடைய யானைமுகம் படைத்த தாரகனென்னு மசுரன் அவுணர் தழைக்கத் தோன்றினன். இவ்விருவ ருடம்பின் வியர்ப்பினால் நாற்பதினாயிர வெள்ளம் யானைமுகம் படைத்த அசுரர் தோன்றினர். ஆங்கவரையும் தாரகாசுரனையும் அங்கே நின்மினென்று கட்டளையிட்டு நான்காம் யாமத்துப் பெட்டைத் தகரினுருக்கொண்டு நின்றாள். காசிபமுனிவனோ தகரேற்றி னுருக்கொண்டு அம்மாயையைப் புணர்ந்தான். அவ்வாறு புணரவே அசமுகிதோன்றினன். உலகுக்குத் துன்பம் விளைவிப்பவராய்த் தகர்முகங்கொண்ட அசுரர் அவ்விருவ ருடம்பின் வியர்ப்பினின்றும் தேவர் உள்ளமெல்லாங் கலங்க முப்பதினாயிர வெள்ளம் தோன்றினர். அவ்வசமுகியுடன் மற்றையாரையு மங்ஙனே யிருத்தி வேறு வேறு மண்டபங்க ளெங்கும் போந்து யாளி, புலி, குதிரை, நரி, கரடி, பன்றி, இடபம் முதலிய வடிவங்கொண்டு மாயையனுகக் காசிபமுனிவனும் வைகறைப்போ தாகும்வரையும் அவளொடு அறுபதினாயிர வெள்ளம் அவுணரைப் பெற்றனன். இவ்வாறு இருநூறாயிர வெள்ளம் அவுணரையும் சூரபதுமன் முதலியோரையும் ஓரிராப்பொழுதிலே பெற்றாளென்பததிசயமாமோ! உலகமுழுதுஞ் செய்யவல்ல மாயையுடையாட்குச் செய்தலரிதாமோவென்று சொல்லும்படி யிருந்தது. அச்சமையத்தில் ஆயிரத்தெட்டண்டங்களினும் தீய உற்பாதங்கள் தோன்றின; இத்தன்மைகண்டு எவரும் இனிஇவ்வுற்பாதங்களினால் யாது நேரிடுமோவென்று மனங்கலங்கினர். இராக்காலமொழியவே மாயை தன் பழைய வுருக்கொண்டு நிற்க,காசிபமுனிவனும்

தான் பழையவுருக்கொண்டு நின்றான். இரவியும் உதயமாயினன். பற்பலகால மருந்தவஞ்செய்த தூயவனாகிய காசிபமுனிவனும் மாயையும் தம்மக்கள் தொகைகண்டு மனமகிழ்சிறந்து நிற்பதை யறிந்த சூரபதுமன் நமது இருமுது குரவரோ இங்குற்றனர், அவர்கள் பாதங்களை வணங்கி யாஞ்செய்யத்தக்கவை களை முறையாகத் தெரிந்துகொள்வோமென்று சிங்கமுகனுக்கும் தாரகனுக் கும் அறியச்சொல்ல, அவர்களும் அதுவே யுறுதிபயக்குங் கருமமெனத்துணி ந்து தம்மொடு தொடர்ந்த சேனைவெள்ளத்தை நிறுத்திச்சூழ, அவ்விருவ ருடன் இருமுதுகுரவரிடஞ் சென்றான்.

அசுரர் தோற்றுபடலம்
முற்றிற்று.

## காசிபனுபதேசித்தபடலம்.

சேனைகளை நீங்கிய சூரபதுமன் நெறிமுறையாகச்சென்று ஆங்கவரடி மலரைவணங்கிநின்று மேலோரே! யாங்கள் செய்யக்கடவதென்னென்று விண் ணப்பிக்க காசிபமுனிவன் கூறுகின்றான். உறுதியொன்றினை யுணர்த்துகின்ற னன். வீரகண்டையணிந்த பாதங்களையுடையமைந்தரே அருமையானமாதவ நெறியில் முயன்றுநிற்கவேண்டும். அதன்முறைமையுஞ் சொல்லுகின்றேன். மேலோராய்ந்திடத்தக்கவாய பொருள் மறைகளெல்லா மொழிவனமூன்று. அவை பதி பசு பாசம் யெனப்படும் திரிபதார்த்த வியல்பேயாம். படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தனையும் மெல்லாமுடை யான்றொழிலென் றெண்ணித்துணி, நீலமார்களத்து நின்மலப்பொருளேபதிப் பொருளெனப்படும். பற்று மிகவு மில்லாததாகிய இறைவன் தன்மையை இத் தன்மையதென்று உரைப்பது எவர்க்கும் அரிதாகும். அவற்றை நன்கெடுத் தியம்புமறைகளும் துணியமாட்டா, அவன் தன்மை பிறரானு மறிவதரிது. மூவகையாகிய பாசசம்பந்தப்பட் டுள்ளன ஆன்மாக்களே அவை அளவில்லன அநாதியே யுள்ளன, நல்வினை தீவினையென்னு மிருவினைப் பகுதியான் அவை பிறந்துழலா நிற்கும்; அவை பாரிலுதிக்கும், நீரிலுதிக்கும், நெருப்பிற்சேரும், வாயுவிற்சேரும், ஆகாயத்திற் சேரும், அவற்றுக்கோ ரிடமில்லெனச் சொலற் பாலதோ, மக்கட்பிறவி யெடுக்கும்; விலங்குமாம், பறவையாம், புல்லு மாம், அதில் மிக்க தாவர வருக்கமுமாம், மலைகளுமாம் திசையனைத்து மிறைமை நடத்தும் தேவுமாம் யாவுமாகும். சில பிறப்பதற்கு முன்செலும், சில பிறந்த பின்னர் மெய்துறக்கும், சில சில பகவிருந்துமாயும், சில சிறந்த காளைப்பருவத்தே யழியும், மூப்பினிற் சில இறக்கும், அதன்தன்மையுரைக்க வல்லோ மல்லேம், துவாரத்தின் வழியிற்றோன்றுஞ் சூரியகிரணத்திற் புலப்படு கின்றதுகளினும் பேதைமைப் பாலதாம், வெற்றியுடையதோர் யமன் கைக் கொள்ளஇறந்தனவும் பிறந்தனவு மெண்ணிலிசைக்க வமைந்தனவோ! கலை ஞானவுணர்ச்சியும் கற்பும் வீரத்தன்மையும் மலைபடு செல்வமும் வலிமையும் பிறவும் அற்புதத்தன்மையாகும். அவை இயங்கியற்பொருளென நினைக்கும்

பகுதியதோ. தருமமென்றொருபொருளுண்டு அது இம்மை மறுமை யின்பங் களையுமெளிதிற்பயக்கும்,அருமையாகவரும் பொருளாமதுவும்ஒருமையாளர்க் கல்லதுணர்த்தற்கொக்குமோ. தருமமே போற்றுவானுயின் அன்புசாரச்செய் யும்அருளென்னும் குழவியும்வந்து சேரும் ; அவைவந்துழி தவமென்னு மாட் சிமைவந்தடையும். மேல் தெருளுற்ற அவ்வுயிர் சிவபெருமானைச் சேரும். அது சேர்ந்தவழி பிறவியுந் தொலையும். தொன்றுதொட்டெய்தும் பாசமூன் றும் பாறும். பெறலரியதோர் பேரின்பமெய்தும். அதன் பரிசின்னதென வுரைக்க வமையுமோ. மாதவ மாற்றலேயல்லது, அஃதல்லது வேறுமொன் றுளதென வியம்பப் படுவதோ, சிவகதி பயக்குமாதலின் பெறவேண்டுதியேல் அதனையே போற்றவேண்டும், அவ்வகையான தவம் பிறவியை வேரறுத்து மேம்பட்ட முத்தியையளித்து முதன்மையாக்கும். இவ்வளவு மல்லாமல் இம் மை யின்பத்தையும் நெஞ்சிலுன்னுந் தன்மையைத்தரும். ஆகையால் பல காலமு மருமையாகச்செய்த மாதவம் இம்மையு மறுமையுந் தருவதற்கேது வாகும். இவ்விருமைப்பேறு மடைவது அனுதிமல முத்தனுகிய சிவபெருமா னது பேரருளே யாகும். மனமொடுங்கி மாதவஞ் செய்து கடைமுறை வீடு பேறடைந்தவர் சிலரோ. இருமையின்பத்தினையு நுகர்பவரோசிலர். இருமையை யும் ஒருவரோ யடைந்தவர் சிலர். ஆற்றலால் தம்முடல் வருந்த நோற்றவரல் லரோ மேலேதோன்றும் பத முத்திகளைப் பெற்றவரெல்லாம், அவைகளையு மெடுத்துச்சொல்லவேண்டுமோ ! நீங்களும்அறிந்தவரோயாகும்,பத்தியை நெறி முறையாகப்பெற்று மாதவஞ்செய்து முத்தியைப்பெற்று அரன் சீபாதங்களை யடைந்தவரை இவ்வளவென்று உரைப்பதருமை இருமையும்பெற்ற மெய்மை யானதவஞ்செய்தார் திருமாலும்பிரமனுமுதலானோர் பல்லுயிரையுங்கொன்று உலகிற்கு அல்லல்செய்து அருந்தவஞ் செய்திலார்க்கு இருமையுமில்லையாகும் அவர் பல பிறவியெடுத்துத் துன்பமெய்துவர். இவற்றைஅறிந்து யெடுத்துச் சொல்லினும் மக்கட்பிறவி பெற்றவர்மறமும் கொலையும் களவும் மயக்கமுநீங்கா தொழிவர், துன்பந் துறந்தவரல்லர், பிறந்திறந்தொழிவர், முத்தியையு மடை யார். தவத்தினு மிக்கதொன்று, இல்லை சிறியரோ தவநோர்வது சிறந்தது தவத்தினு மரியதொன்று மில்லை தவத்தினுக்கொப்பாவது தவமேயாம். ஆத லால் 'தவமுந் தவமுடையார்க் காகும்' என்றார் பெரியாரும். ஆகையால் மக் களே அறத்தைச்செய்மின், தீமைவிட்டொழிமின், சிவனையே சிந்தித்துத் தவஞ்செய்மின், அதுவன்றி செயத்தக்கது வேறொன்றேது. உடம்பினை வெறுத்து நோற்பவர்உலகமெல்லாம் வியக்கும்படி வாழ்வெய்துவர், தம்மை யடைந்தாரைக்காப்பர், அடையாதார்க் கிழிவுசெய்வர். நெடும்பொருள் கைக் கொள்வர், என்றும்மழியாமல் வாழ்வுபெறுவர், இது திடமெய்தும்படி ஓர் இதிகாசஞ் சொல்கின்றேனென்று சொல்வானுயினன்.

காசிபனுபதேசப்படலம்

முற்றிற்று.

---

## மார்க்கண்டேயப்படலம்.

அமுதம்போன்ற மாதர்கண்ணாகிய வைவேல்தைத்து உள்ளம் மயக்க மடையாத தவமேன்மை யுடையானும் இவ்வுலகம் புகழு மிருபிறப்பாளர் பெருமானுமாகிய குச்சனென்பவன் கடகநகரில் வாழ்ந்துவந்தான். அவனுக்கு அருமறை நன்குதேர்ந்த கவுச்சிக னென்பவன் புத்திரனாகப்பிறந்தான். அவன் கனாவொரு சிறிதுங் காண்பதற்கரிய பிறவிக்கடலைக் கடக்குமாறு பரம் பொருளை வணங்கித் தவத்தைச்செய்யத் தடாகமொன்றைச் சார்ந்தான். ஆங்குச்சார்ந்து ஆதீண்டு குற்றியையொத்து அசைவற வுயிர்ப்பின்றி உலக மெல்லாம் பித்தெனச் சிந்தித்து அழியாப் பேரின்ப வெள்ளத்திற் றிளைத்து அநாதிமலமுத்தனாகிய இறைவனது திருவஞ்செழுத்தும் சிவோகபாவனையும் விடாது பயின்று நோற்றான். சித்திரப்பாவை யினத்தகவடங்கி யூணுறக்க மொழிந்து நோற்றுவருகையில் மான் கடம்பை முதலிய விலங்குகள் யாவும் அவ்வழியே செல்லும்போது அவனது உடம்பை யுரைத்துச்செல்லும். இவ் வகை நடந்தபோதும் ஒன்றுமுணரானாய் ஒப்பின்றி நோற்றுவருகையில் விரைந்ததை நாடிமுப்புரமழிய மேனாள் சினந்த பரம்பரன் திருவருளிதென்று சொல்லிப் பல தேவர்கள் சூழத் திருமால் அதிசயமடைந்து அக் குச்சக முனிவன் அருந்தவத்தைப் புகழ்ந்து முன்சென்றெய்தி அவன் உடம்பைக் கையாற்பரிசித்து முனிவனே! உன்பெயர் மிருககண்டுயேனென்று சொல்ல, அதைக்கண்ட குச்சகன் வணங்கி நின்றான்; இவ்வாறு வணங்கிநின்ற முனி வனைப்பார்த்து சோமசேகர கிருபாலுவின் பெருங்கருணை நின்பாலாகுக, முன்னே செய்திருந்த தீவினை யனைத்துஞ் சிதைகவென் றருள்புரிந்து திரு மால் பல தேவர்கணம் புடைசூழச் சென்றான்.

போனபிறகு, குச்சகன் முப்புரமெரித்த முதல்வனருளால் விரைந்து சென்று தந்தைமுன்சென்று அவனடிகளை முறைமையாக வணங்க, அவன் உள்ளமகிழ்ந்து கண்டெடுத்துத் தழுவிக்கொண்டு தவத்தி னடந்தமை சொல் லென, குச்சகனுந் தன் தந்தைக்கு நடந்தவகை யனைத்துமெடுத்துச் சொல்லக் கேட்டு உன் குலத்தவருள் உன்போ லெவர் தவஞ்செய்தார், யாது நினைக்க அரிதாகுமெனப் புகழ்ந்து இவன் வழியில் ஒருவன் நமனை வெற்றிகொள்ளு மெனற்கே இறைவனருளால் வேறொரு நினைவுவரலும் கவுச்சிகமுனிவன் மிருககண்டுயேனுக்குச் சொல்வானாயினன்.

மகனே நான் சொல்வதைக் கேட்டுத்தெளி; அதாவது வேதம் நான்கு மளந்து சொன்னதை யாவராலும் தடுத்துப்பேசுதற்கரிது, நாற்குலத்தின் மேற்குலமாகிய அந்தணர் குலத்துட்பிறந்தோன், நான்காச்சிரம வொழுக்கம் மேற்கொண்டொழுகவேண்டும். அந் நான்காச்சிரமமாவன பிரமசரியம், கிரு கஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசமாம். அந் நான்கொழுக்கத்தும் பிரமசரிய மாகிய முதலொழுக்கினின்றனை, இனி இல்லொழுக்க மிகவாம னடத்த வேண்டுமென, அதைக்கேட்ட மிருககண்டுயே னென்னுங் குச்சகனெழுந்து

வணங்கி எந்தையார் எனக்குச் சாலச்சிறந்த வுறுதிநிலையையே சொல்லின ரெனப் புன்முறுவல்செய்து, தேவரீர் இவ்வாறு கூறுதல் மரபாமோ பேதை படுக்கும் பிறவிக் கடல்கடத்து மறிவின்றிறத்தை யுடையோனாகையால் பாச க்ஷயம் பண்ணவெண்ணித் தவஞ்செய்த யான் பின்னுமொரு பாசம்பிணிக்க வுடம்படுவனேயாயின் தன்னிகரில்லாத் தலைவனை யெவ்வாறு அடையப் பெறுவேன், யானோ துன்பக்கடலிற் றுரும்பெனவலைவது சாலுமே, வலியிலா னாகிய முடவனொருவன் கைகளிரண்டும் ஊன்றித் தவழ்ந்துசெல்வன், அக் கைகளுக்கும் அரும்பிணி வந்தடையின் உய்யும் வகைசிறிதும்பெறான், யானு மவன்போல் வருந்துவது உமக்கு நீதியாமோ! நெருக்கமுறற்கு முயலுந் தவத் தினாலல்லது பொய்யாகிய இல்லற நெறிமேற்கொண்டுவினைபோக்க நினைப்பது உடம்பிலுள்ள அழுக்கை மிகுந்த நீரிருக்கவிட்டுச் செய்யற் சின்னீ ரிடத்துத் தீர்க்குஞ் செயலையொக்கும். மண்ணுலகத்திலுள்ள எல்லையில்லாத பெரும் பாவத்தைப் பெண்ணுருவமாகப் பிரமன் படைத்தானன்றி வேறன்று. இறை வனே அதனை யாராய்தி! அவரை நினையாமையா லெழுபிறவியு நீக்க வசு மாமோ ஆசைமேற்கொண்டே வருந்திய ஐம்புலத்தாளுகிய பூதவகையிழுக் கப் புலம்பிய புன்மையேன் மாதர்களென்னும் பசாசும்வந் தென்னைப்பிடித் தால் ஏதுசெய்வேன்ஐயோ எனக்காஇதுவரும். பலநாளும் பூமியில்துன்பத்தி னல் வருத்தும், பிற்காலத்தில் நரகபிலத்திற் செலுத்தும், எந்தக்காலத்தில் ஆண்டகையோர்க் கின்பந்தருமோ,பெண்களை விரும்பியடைந்தவாசையாலே துன்பமனுபவிக்கும் வினைத்தொடர்புடையார் இன்ப மனுபவிப்பார்போற் பெண்ணாசை வலைப்படார், தனதுடல்மிகநடுங்க நாய்தசையேயிலாத வெலும் பைக் கடிக்குமாயின் இனியசுவையும் பெறுமோ, பெண்கள் மையுண்டகண் வலைப்பட்ட பேராசை நெஞ்சிற்புகுந்தால் ஒருவர் நீங்கு நிலைமைதருமோ, உயிரையறவே கொல்லும்,அதைப்பார்க்கிலும் விடமே நல்லதுஏழ்காலத்தினும் அழியாது. கள்ளொழுகுங் கூந்தலையும் கனத்த குழையையுமுடைய மாதர் கருத்திற் கொள்ளப்படு மெண்ணத்தினை மதிக்குந்தன்மையுடையதோ. தள்ளு வதற்கரிதாகித் தம்மொடு பலநாட்பயின்று உள்ளத்திலமர்ந்த கடவுட்பெருமா னும் அறிதற்கரியதன்றோவென்றும், சொல்லொன்றும் மனமொன்றும் செய லொன்று மாகிய பேதைமை நிலைமைவாய்ந்து பெரும்பவத்துட்படுத்தும் மாதர் வலையிலகப்பட்டு மயக்கமடைந்தவரன்றோ பிறப்பிறப்பிற் றடுமாறு கின்றவரென்றும், ஆயினும் உலகின்கண் அருமையான கற்பினைவாய்ந்த மாத ரிலரோவென்று வகுப்பீராயின் இறைவனெனத் தன் கணவனைக்கொண்டு அவன் சொல்வழுவாத தேன்மொழியார் சிலருண்டென்றும், காற்றிற் சிறுதீப் பொறிமுட்டிய விடத்தில் கற்றைவிடு சுடர்மிகுதியுங்கான்று மிக்க கனலெய் திப் பற்றுதல்செல்லாத பலவிடத்திற்சென்று பற்றும் அத்தன்மையென்று சொல்லுந் தகைமையுடையது மாதர்பால்வைத்த நேயமென்றும்,சந்திரனுக்கு நேருவமைபடைத்த திருமுகத்தையும் பசும்பொன் வளையணிந்த கையையு முடைய மாதரார் பலரும் புடைசூழ்தர வாள்போலுங் கண்ணை யுடைய கோதமமுனிவன் மனைவியாகிய அகலிகையால் இந்திரனுக்கு என்று நீங்குத

வில்லாத பழியெய்தியதென்றும், கூனியமுகத்தையுடைய சந்திரன்போலும் நெற்றியை யுடைய மாதர்கூட்டத்துக்கெல்லாம் தான் முதன்மையாகிய இறைவியாகத் தன்னாற்படைக்கப்பட்ட மான்முகநோக்கியை முன்னேயோர் மலரயன் மையலடைந்து நான்முகனாயினனென்றுகூறுவரது நாமறியாததோ வென்றும், மற்றுள்ள முனிவர்களும் தேவர்களும் மயலாகிய காமத்தாலடைந்த செயலையுரைப்பினும் அழிவுபாடெய்திலது, அத்தன்மையெல்லா நிற்க யான் அவ்வணங்கன்னார் கூட்டம்பெறு மொழுக்கத்தை விரும்பேன் பிறவியை வேரறுக்கத் துணிந்தேனென்றும், மலையன்ன தோளையுடைய இந்திரன் முதலானோர் சிறப்பும் வேண்டேன் இல்வாழ்க்கை யென்னும் கொடுஞ்சிறையின் வீழேன் மயக்கமகன்று தவமெனப்படும் பெருஞ்செல்வமடைந்து இன்பமெய்தி யிருப்பேனென்று கூறினன்.

இவ்வாறு கவுச்சிகன்சொல்லக் குச்சகனும் புலத்தியன்போலு மேலாந் தன்மையுடையானே! ஒருவன் பொற்றாலிபூட்டித் திருமணஞ்செய்து ஒரு கன்னிகையைக் கலந்து குலத்தியல் மரபினாற்காக்க மக்களைப்பெற்றேயன்றோ தவத்தைச்செய்து பொருந்துத லருமையான கதியினையடைதல். நிலவுலகம் போல மாலுறுமல் நீ காமவேட்கை யயர்தற்கேயோ சொன்னேன், பிதுர்க்கள் துன்பமும் நரகமெய்தலுமொழிப்பதும் பழமையை நோக்கியன்பை விளைவிப்பதுமாகிய புத்திரப்பேற்றைவிரும்பி யடைவதற்காக மனைவாழ்க்கையிலிருக்கவேண்டுகின்றேன். ஒருவன் தம்மக்களைப்புத்திரனென்று சொல்லும்சொற்பொருளறியாமல் அயர்வெய்துகின்றனை. இவ்விதமாக அதை யாராய்ந்து இல்லறநெறிபூண்டுநிற்றல் உத்தம நெறியென்றே சொல்லப்படும். தவவொழுக்கமு மதுவேயாகும். நீ மகப்பேறு கருதியே மனைவாழ்க்கையை மேற்கொள்ள வேண்டுமென்று வற்புறுத்திச்சொல்லிப் பின்னுஞ் சொல்லுகின்றனன். இந்நிலையை மேலைநாளே யெண்ணுமலொழிந்தனை இதுவரையும் முற்பட்டுச்செய்யும் பிரமசரிய வொழுக்கமெய்திச் சிறந்தனை! தேவர்கட்கு அவிமுதலிய பொருள்களை வெறுப்பக்கொடுத்து வரவேண்டும். இப்போதே தவஞ்செயக் கருதுமெண்ணம் விட்டொழிக, இந்திரனும் புகழும் பழமையான சிறப்பினை வாய்ந்த இல்லறவழி யொழுகுவோர்க்குத் தத்தமொழுக்கத்திற் றவறுநேரிடினும் அதற்குத் தீர்வுண்டாம். மலையினுச்சியினின்றுந் தவறிப்பிழையான் போலத் துறவறவொழுக்கத்தினின்றும் பிழைத்தாலும் கூடாது. பிறவிப் பெருங்கடல் வாய்ப்பட்டுத் துயர்ந்து வருந்தினும் நாளானன்றிவிரைந்து துறவெய்துதல் கூடுமோ, உன்முன்னோர் நடந்த செயலேபோல நீயும் நடந்துவர வேண்டும். தேவர்களும் முனிவர்களும் திருமாலும் நான்முகனும் மற்றையோரும் தத்த மடந்தைமாருடன் இல்லறநெறியி லொழுகவேண்டுமென்றே இதனாலல்லவோ சிவபெருமான் உமையுடன் கலந்து அண்டசராசரங்களையெல்லாம் படைத்ததன்றியும் பிரம விட்டுணு விந்திராதி தேவர்கள் முனிவர்கள் மற்றெல்லோர்க்கும் அவரவர்கள் பத்தினிகளோடுகூடி இல்லறத்தில் கண்ணுறுகு நிலைமையைப் பணித்தானல்லவா என்று சொல்லிமுடித்தான்.

இனிப்பழைய முறைமைகளைநன்குணர்ந்த தூய்மையோய் சிவபிரானேற்படுத்திய வரம்பைக்கடவாதை, நீ யொருமார்க்கததைவிரும்பி நான்சொல்லுங் கூற்றைவெறுக்காதை,உலகத்தவர்கள் செய்கையை விலக்காதை,பிறர்கோபிக்கும்படி பேசாதை,எம்மைவிட்டு இப்போதே துறக்காதை,வசிட்டமுனிவர் பேரழகுடைய அருந்ததியை மணந்து இல்லறத்திருந்தும் தவத்தை விசேடமாகவே செய்தன ரன்றி இவ்வுலகிற் பழியாதேனு மடைந்ததுண்டோ, அநாதியாகவே தொடக்குண்ட பவத்திற் றொடர்ச்சியையற்ற பெரியோர் நண்புடனே பெண்களோடு முயங்கினாலும், பெரியதவத்தைச் செய்தாலும் வியக்கத்தக்க அவரது மனத்துணர்வு வேறுபடுமோ, பெருந்தன்மையால் ஓர் பெண்ணை மணந்தால் பல தருமங்களும்நிகழும், அரிதாகிய தவமுங்கைகூடும், இம்மைமறுமைப்பயன்களுங் கிடைக்கும் தீமையென்பது ஒருக்காலு மெய்தாது. அவர்களுக்கு அரிதாகியகாரியம்யாதொன்றுமில்லை. காண்டற்கரிய தங்கணவர்களைக் கடவுளைப்போலவே நினைக்கும் கற்புடையாரது மெய்யுரையில் 'தெய்வந் தொழாள் கொழுநற் றொழுதெழுவாள் பெய்யெனப் பெய்யுமழை.' என்றபடி தெய்வங்களும் மேகமும் நிலைநிற்குமென்றால் ஆண்மையுடைய புருஷர்களும் அவருக்கு நிகரல்லவே. பெண்ணொடுகலந்து இன்படையும் அறத்தை முதலிலேசெய்வாய், தவமார்க்கத்தைத்தொடங்குவாயானால் அக்காலத்துமாயை மிகுந்தகாமமாகிய விடம்வந்து அணுகின் பிரமனுடைய சகாயத்தாலேனும் அதைவிலக்கக்கூடுமோ, துறந்தபெரியோர்களுக்கு வேண்டிய வுதவிகளைச் செய்து இறந்த பிதுர்க்கள் விரும்பும் நீர்க்கடனையாற்றி மற்றத்தருமங்களையுஞ் செய்து விருந்தினர்களை உபசரிக்கும் பேறல்லது உலகத்திற்பிறந்த தன்மையால் அடையும்பேறு யாதுள்ளது. ஆடவரும் பெண்களும் மனஞ் சம்மதிக்கத் தீதுடன் நன்மையைச்செய்தல் ஊழின்படியேயாம். அஃதெங்ஙனமெனின் உழவர்கள் நட்ட வித்தின் பயனன்றி வேறுபயனடையாததுபோல நல்ல தவமாகிய இல்லறத்தைநடத்திப்பின்னே குற்றமறநீங்குந்துறவே துறவாகும்; அவ்வாறுஇயற்றுவதினா லுனக்குக்குற்றமாகியசொல் ஒருபோதும் வரமாட்டாதே. இனி நீ என்னுரையை மறுக்கவேவேண்டாம் என்றுகூறினர். இவ்வாறு பல வகைகளை முனிவரெடுத்துரைக்க வோர்ந்து இவர் இல்லறமானது வேதங்களெடுத்துக்கூறிய துணிபென்றதன்றிச் சர்ப்பாபரணராகிய பரமசிவன் பணியென்றுஞ் சொல்லினரோ. இனி நாமென்ன சொல்வதென்று எண்ணி வருந்தி நின்று, நம்மைப்பெற்ற தாய்தந்தைகள்உன்னுடைய வளங்களைநீத்துகடலிலே அழிந்துவிடு என்றுரைப்பார்களேனும் அந்தச் செய்கையை மக்கள் அன்புடன்செய்யவேண்டுங் கடமையாகும். இது புதுமையல்ல, இனி யானும் இவ்விடையத்தை மறுக்காமல் ஒப்புக்கொள்ளுவதேமுறைமை,தந்தைதாயுடைய வார்த்தையைத்தடுக்கின்றவர்களும் ஆசிரியரதுஆணையைமீறினவர்களும் நாம் வணங்கத்தக்க வேதமார்க்கத்தைத் தவறினவர்களும் ஒருக்காலும் மாறாத அக்கினி சுவாலிக்கின்ற நரகத்திற்சேர்வார்கள். ஆதலால் தந்தை வசனத்தைத் தடுத்தல் முறையல்லவென்று மனத்துட்கொண்டு குற்றமற்ற குச்சகரது திருவடியில் விழுந்திறைஞ்சி தேவரீர் கோபிக்கவேண்டாம், பணித்தபணியில் நிற்பேன், ஆயினும் தேவரீருக்கு நான்சொல்லவேண்டிய தொன்றிருக்கின்றதெனச் சொல்லத்தொடங்கினர்.

புருஷன் சொல்லைக்கடந்து நடக்கின்ற மனைவியோடுங்கூடிவாழ்வதைப் பார்க்கிலும் கொடியநரகத்தின்கண்வீழ்ந்து துக்கிப்பதே மிகவும்நன்று. அந்த மனைவியோடுகலந்து இல்லில்வாழும் ஆடவருக்கு வேறோர் பிணியும் யமனும் வேண்டுமோ, ஆதலால் நான் சொல்லப்போகின்ற இலக்கணங்களி லொன் றுங்குறைவில்லாமல், ஒருபெண்ணிருப்பின் அப்பெண்ணை அக்கினிசாட்சியாக மணப்பேன் என்று கூறிய வார்த்தையைக் கேட்டு பிதா கூறத்தொடங்கினர். என்னருமைக்குழந்தாய் நீ இப்போது கூறியசொல்லால் யானுங் கடைத்தேறி விட்டேன். என்னுடைய உறவினரும் நின்னாற்சிறப்பெய்தினர். பிதுர்க் களும் அதிதிகளும் தேவர்களும் உய்ந்தனர். நீவிரும்பியபடியே குற்றமின்றி சகல விலக்கணங்களும் நற்குண நற்செய்கையு மமைந்த ஓர்பெண்ணைத்தேடி நினக்கு மணப்பிப்பேன். அவ்வாறுசெய்யாதொழியின் நாளுக்குநாள் குறைந்து விடுகின்ற சந்திரனது கிரணத்தைப்போல என்தவம் குறைந்துபோகக்கடவ தென்று குச்சகர் சொன்னவுடன் மிருகண்டுமுனிவர் அவர்திருவடியில் வீழ்ந்து சேவித்துக்கொண்டு தவத்தில்மேம்பட்டவெம்மையனே! அடியேன்பொருட் டாலன்றோ இவ்வாறு விளம்பினீர், தேவரீருக்குக் கிடைத்தற் கரிதாகிய வொருபொருள் சொர்க்க மத்திய பாதாலத்திலுமுளதோ ; ஆயினும் யான் சொல்லவேண்டிய தொன்றிருக்கின்றது, அதாவது தன்னை வருந்தியீன்றாளை யிழந்த பெண்ணும், தமக்கை தங்கையில்லாத பெண்ணும், அவர்கள்கூடப்பிறந் தும்அவர்களையிழந்த பெண்ணும் பெரியசுற்றமில்லாததும் தரித்திரமுற்றதும் நல்லகுடியிற்பிறவாததும் மிக்கநோயுடைய தாய்தந்தையரிடத்திற் றோன்றின தும்சிவபெருமான் முதலிய தேவர்கள் நாமத்தைப்பெறாது மனிதர் பைசாசு மிவைகளின் நாமத்தைப்பெற்றதும், புல்லியசமயத்தி லுழல்கின்றதும் வியாதி யுள்ளதும் ஊமையும் அவயவங் குறைவுபட்டதும் செவிடும் அன்னியகிருகங் களுக்குச் செல்கின்றதும் வேசிகளைப்போல விழிப்பதும் வாலிபர்களைப்பார்த் துப்பலதரமும்வாயற்படியில்நிற்கின்றதும் மிக்க அலங்காரத்தைவிரும்பியதும் அதிக வுண்டியுடையதும் மிக்கதுயிலுடையதும் தன்னைப்பார்க்கிலும் அதிக மூப்புடையதும் மிக்க வுயர்ச்சியுடையதும் மிகவுங்குறுகியதும் பெருத்த சரீர முடையதும் மெலிந்ததேகமுடையதும் கருத்தசரீரமுடையதும், பொன்போ லும் மேனியுடையதும் தேகத்திற் பசலையுடையதும் வெளுப்புடையதும் இரத்தநிறமுடையதும் நாணமில்லாததும் புணர்ச்சியி லதிகவிருப்பமுடைய தும் சிரிக்கின்றதும் அழகில்லாததும் பெருங்குரலுடையதும் தாய்தந்தைக ளுடைய ஆணையைமீறி நடக்கின்றதும் மிகுந்த கோபமுடையதும் பகை கொள்கின்றதும் உயிர்களைக் கொல்லத் துணிந்ததும் வேடிக்கைகளைக் காண முயல்கின்றதும் காமவிகாரமுற்றதும் சிவனிடத்து அன்பில்லாததும் பெரி யோர்களை யிகழ்கின்றதும் சிவகாருண்ணியமில்லாததும்தங்குலவாழ்க்கையின் கண் கட்டுப்பட்டில்லாததும் மாசுபடிந்த வுள்ளமுடையதும் கற்பில்லாததும் மனக்காவலில்லாததும் ஆசாரியனைக் கேவலமனிதனைப்போற்பாவிக்கின்றதும் தெய்வங்களைக் கல்லென்பதும் பத்து வயதுக்குமூத்ததும் ருதுவாகுந்தருணத் தே அச்சமில்லாத மனமுடையதும் கடுஞ்சொல்லுடையதும் தாய் தந்தை

கள் சம்மதித்துக் கொடுப்பதன்முன்னே ஒருவனை யிச்சித்ததும் பெருமிதங்களுடையதும் மடமை பயிர்ப்பில்லாததும் பிறவிக்குருடானதும் பிறந்தபின் கண்ணிழந்ததும் குற்றஞ்செறிந்த கண்ணுடையதும் உருண்டவிழியுடையதும் அரைப்பார்வை யுடையதும் கருடப்பார்வை யுடையதும் பூனைக்கண்ணுடையதும் சுழலுங்கண்ணை யுடையதும் செடித்தலையுடையதும் நரைமயிருடையதும் விரிந்தகூந்தலுடையதும் சிவந்தமயிருள்ளதும் நிலத்திற்றோயும் அளகத்தையும் மிருககர்ச்சனை போலும் உரத்த குரலுமுடையதும் சிறிய கண்ணுடையதும் நீண்ட நாசியுடையதும் இரண்டு புருவஞ் சேரப்பெற்றதும் சிறிய காதுடையதும் நீண்டுயர்ந்த பற்களுடையதும், கோணியகண்டமுடையதும் குற்றஞ்செறிந்த முகமுடையதும் தேமல் படராத தனங்களுடையதும் பெரிய வயிறுள்ளதும் அளவுகடந்த அல்குலுடையதும், வாயும் உள்ளங்கையும் நகமும் உள்ளங்காலும் சிவக்கப்பெறாததும் மயிருள்ள பாதமுடையதும் அன்னத்தைப்போல மிருதுவாகிய நடையில்லாததும் கால் விரல்கள் நிலத்திற் றோயப்பெறாததும் கலியாணஞ் செய்து கொடுக்க நிச்சயிக்காததும் ஆகிய இத்தன்மையில்லாப் பெண்ணிருக்குமாயின் கலியாணஞ் செய்துகொள்ளுவேன். ஆதலால் தேவரீர் மேற்சொல்லியபடியே மரபிற்றேடிக்கொண்டு வரவேண்டுமென்று சொல்ல பிதா மிகவுஞ்சந்தோஷித்து அப்படியே ஓர் பெண்ணைத்தேடி உனக்கு விவாகஞ் செய்துவைக்கிறேன், நீ சந்தேகங் கொள்ளவேண்டாமென்று தன் குமாரனை அவ்விடத்திலிருத்தித் தான்புறப்பட்டு,செம்பொன்னாற்செய்த ஒரு ஆபரணத்தின்நடுவில் நல்ல இரத்தின மமைக்கத் தேடுவார்போல ஓர் கன்னியைத் தேடத்தொடங்கினர். அவர்முன் சில முனிவர்கள்வந்தணுகலும் அவரோடு வினவிச் சோழதேசத்தில் அநாமயமென்னும் ஓர்வனத்தில் உசத்திய முனிவரிடத்தில் ஒரு கன்னிகை யிருப்பதைக் கேள்வியுற்று அவரிடத்திற்போய்ச் சேர்ந்தனர். அவர் கண்டு உபசாரத்துட னழைத்துச்சென்று ஆசனமிட்டு அர்க்கியபாத்திய முதலிய உபசாரஞ்செய்து தன்மனைவியும் பெண்ணும் தானுமாக விழுந்து சேவித்துக்கொண்டு அறுசுவை யுண்டியளித்துத்தேவரீருக் கென்னிடத்தில் வேண்டுங்காரியம் யாதென்றுவினவ,நீர் பெற்றஅருமையாகிய பெண்ணை என் குமாரனுக்குப்பேசும்படிவந்தேனென்றுகூறஅதைக்கேட்ட உசத்தியமுனிவர் மிகவுமகிழ்ந்து என் மகளைத்தேவரீர் குமாரனுக்குக் கலியாணஞ்செய்துகொடுப்பதற்கு யான் முன்னே யாதுதவஞ் செய்தேனோவென்று கூறி அவரைச் சிலநாள் அவ்விடத்திற்றானே யிருக்கச்செய்தனர். அவ்வாறேயிருக்க ஒருநாள் உசத்திய முனிவர் தேவியாகிய மங்கலையி னிடத்தில் உத்தரவு பெற்றுக் கொண்டு அவர்பெண் தனது தோழிப்பெண்கள் தன்னைச் சூழ்ந்துவரும்படி நீராடச்சென்று நல்லதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து அங்குள்ள நந்தவனத்திற் பூக்கொய்து மாலை தொடுத்து அளகத்திற்சூடிக்கொண்டு அங்கு நின்றுந் திரும்புஞ் சமயத்தில் ஓர் மதயானையானது மிகவும் கோபங்கொண்டு கர்ச்சனைசெய்து வேகமாய் வருவதைக்கண்டு தன்னொடுகூடவிருந்த தோழிப் பெண்களெல்லாம் ஓடிப்போய்விட, விருத்தையென்கின்ற அந்தப் பெண்

மணி துன்புற்று நடுக்கங்கொண்டு ஓடுங்காலையில் அவ்வழியில் புதர்களால் மூடி மறைந்திருந்த வோர் கிணற்றிற் றவறிவிழுந்திறந்தனள். அங்குவந்த யானையானது அக்காட்டைநோக்கிச் சென்றது. அது சென்றதன் பின்னர் தோழிப்பெண்கள் சற்றே பயந்தெளிந்து ஒருவரோடொருவர்கூடி விருத்தை யைத்தேடி யெங்குங்காணுமல் சோர்ந்து துன்புற்று பெண்கள் நாயகமே பேரழகுக்கோருருவே! தாமரையில் வசிக்கு மிலக்குமியே! இவ்வுலகத்தி லுள்ள தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்தாயே! ஆகாச கங்கையிலு மாடவேண்டு மென்று எண்ணித் தானே எங்களைவிட்டுச் சென்றாய்! என் னருமைமகளை அழைத்துபோய் நீராட்டிக்கொண்டு வாருமென்றனுப்பிய அன்னைக்கு என் சொல்லுவோம்? கொடிய யானையின் முன்னம் உன்னைத் தனியாகவிட்டு எங் கள் உயிரைப் பாதுகாத்துச் சென்றோமே, உன் தந்தையாகிய உசத்தியரும் தாயாகிய மங்கலையும் மாமனாராகிய குச்சகரும் துன்பசாகரத்தில் மூழ்க நீ யொளித்தாயே! உன்னுடைய அழகிய முகத்தையும் நகையையும் இன்ன மொருக்கால் காட்டாயோ என்று பலவாறு புலம்பி, அப்பெண்ணினது தாயா கியமங்கலையினிடத்திற்சொல்லித் துக்கித்தார்கள். அதைக்கேட்ட தாயானவள் வயற்றைப்பிசைந்து தீயிற்காய்ச்சிய மெழுகுபோலுருகி நடுக்குற்றுத்தன் கண வனுடைய தாளில் வீழ்ந்து நடந்தபடி யறிவித்தாள். அதைக்கேட்ட உசத் தியர் மிக்கமனக்கவலைகொண்டு துயருற்று அத்தோழிப்பெண்களைப் பார்த்து அந்தச் சினக்களிறு கொன்றுவிட்டதா? அதையாவது அஞ்சாமற் கூறுங்கள் என்று கேட்க, அவர்கள் நாங்கள் நீராடித் திரும்பும்போது மதயானையைப் பார்த்து பயந்து ஒருவர்போனவழி யொருவருக்குத் தெரியாமற் போய்விட் டோம், அந்த யானை சென்ற பின்னர் நாங்கள் ஒன்றாய்ச்சேர்ந்து உம்முடைய மகளைத் தேடிப்பார்த்துக் காணுமல் திரும்பிவந்தோ மென்றார்கள். அதைக் கேட்டு அவ்விடத்திற்சென்று தேடிக்காணுமல் மயங்கிநின்று தன்மகளுடைய ஆபரணங்கள் சிந்திக் கிடக்கக்கண்டு, இவ்வழியிலேதான் போயிருக்கவேண்டு மென்று அவ்வழியே சென்று அவ்வழியிற் பாழுங் கிணறொன்றிருக்க அதிற் றேடித் தன்மகளைக்கண்டு வருந்தி அக்கிணற்றினின்று மெடுத்துக் கரையிற் போட அதைக்கண்ட தோழிப்பெண்க ளெல்லாம் வருத்தமுற் றழுதனர். தாயோ மகளைக்கண்டு துயரடைந்து வயறதுக்கி அவள் தேகத்தின்மேல் விழு ந்து புலம்புகின்ற காலத்தில் அப்பெண்ணைக் கேட்கவந்திருக்கும் குச்சகமுனி வர் அவ்விடத்திற்குவந்துபார்த்து நும்மகளோ மீண்டும்வருவாள், நீங்கள் அஞ்ச வேண்டாம்! அந்தச் சரீரத்தை தயிலத்தோணியில், வைத்திருங்கள் நான் தவத்தைச்செய்து அவ்வுயிரை மீட்டுத்தருவேன் என்றதைக்கேட்டு தந்தை யார் ஒரு தயிலத்தோணியிற் சரீரத்தைப் பக்குவப்படுத்தி வைத்திருக்க குச் சகர் ஒருபொய்கையின் மூழ்கித் தவஞ்செய்துகொண்டிருந்தார். இது நிற்க;

இப்படிச் சிலநாள் தவத்திலிருக்குக்கும்பொழுது முன்னம் அந்த பெண் ணைத்துரத்திய மதயானை மயங்கிவந்து பொய்கையிற்சென்று துதிக்கையாற் கலக்கி அவ்விடத்தில் தவஞ்செய்துகொண்டிருந்த குச்சகரையெடுத்துப் பிடர் மீது எற்றிக்கொண்டு வெகுதூரஞ் சென்றது. அவ்வாறு எடுத்துச்செல்லும்

யானையினுடைய ஊழைத் தன் ஞானதிருஷ்டியாற் பார்க்கத்தொடங்கினர். அந்த யானையின் விஷயமாவது கலிங்க நாட்டில் அரிபுரமென்கிற நகரில் தேவதத்தன் என்கின்ற ஒரு வணிகனிருந்தான். அவன் தவஞ்செய்துபெற்ற தருமதத்தன் என்கின்ற சிறுவன், மிகுந்த செல்வத்துட னிருந்தான். அவனுடைய தந்தைதாய ரிறந்த பின்பு மனம் வருந்தி மயக்கமடைந் திருக்கும்பொழுது மனத்தை மயக்கத்தக்க ஓர் வாதி வந்தனன். அவன் முண்டிதமாயும், காதில் குண்டல மணிந்தும், பூணூல் தரித்தும், கண்டிகை விபூதிப்பையைத் தாங்கியு மிருந்த அரியகோலத்தைக் கண்டு சிவபெருமானைக் கண்டாற்போலப் பாவித்து அன்புகொண்டு அவர் திருவடியில் விழுந்து சேவித்துக்கொண்டு வேண்டிய உபசார வார்த்தைகளைப்பேசி வீட்டிற்குள் அழைத்துச்சென்று அறுசுவையுடன் கூடிய உண்டியையூட்டிப் பெருமானே! தேவரீர் என்னை யொருபொருளாகக் கருதிவந்தகாரணம் யாதென்று வினவ, அதற்கவன் சிவபெருமான் கொடுத்த வித்தையொன்று என்னிடத்திலிருக்கின்றது. அது குருவிசுவாச முடையவருக்குச் சொல்லவேண்டியது, நீ மிகவும் விசுவாச முடையவனா யிருக்கின்றபடியால் உனக்கு யான்சொல்கின்றேன், அதாவது இரசவாதஞ் செய்வது,இரசத்தைப் பொன்னாகச்செய்வதாகிய இதுபோலும் அரியவித்தைகள் அனேக முண்டு. இரும்பையும் நாகத்திற் காட்டுவேன், இரும்பைச்செம்பாக்குவேன்,கயிலாயகிரியையும் உனக்குக்காட்டிவைப்பேன், இந்த வித்தைகளை யெல்லாம் வஞ்சமனமுடையவர்களுக் கெடுத்துச்சொல்ல மாட்டேன். இன்னம் என்னிடத்திலுள்ள வித்தைகளை யெல்லாம் எடுத்துச் சொல்லவேண்டுமானல் சிலவருடங்கள் செல்லும். மேலும் ஒரு பொன்னை கோடிபொன்னாகச் செய்வேன், கோடிபொன் இருக்குமானல் அதை யொரு மலைபாகக் குவியும்படி செய்வேன். உன்னிடத்திலுள்ள பொருளை யெல்லாம் கொடுத்தால் உன் பெரியமாளிகையில் நிதிவைப்பதற்கிடமில்லை என்று சொல்லும்படி செய்வேன் என்று இவ்வாறுகூறிய கள்ளனை உண்மையாய் வணங்கி, கணப்பொழுதிற் றன்னிடத்திலுள்ள திரவியங்கள் ஆபரணங்கள் எல்லாவற்றையும் கொண்டுவந்து முன்னேவைத்தான். அந்தத் திரவியத்தைப் பார்த்து உன் தகப்பன்வைத்தது இதுதானோ வென்று கைகொட்டி நகைத்து இந்தப்பொருள் நம்முடைய வித்தையில், உருக்கும் பாத்திரத்தில் வழுவிச் சிந்துகின்றது காணாதே! நீ என்பின்னே திரிவையாயின் அளவிறந்த பொருளைக் கொடுப்பேன், இப்பொருள்களை வைத்துவிடுவாய் என்று கூற அதைக் கேட்ட வணிகன் எம்பெருமானே! தேவரீர் கோபிக்கவேண்டாம், தாங்கள் வேண்டிய பெருநிதியைத்தேடிக்கொண்டு வருவேனென்று, மணிகள் ஆடைகள் நிலங்கள் வீடுகள் முதலிய எல்லாவற்றையும் விலைமாறிப் பொருளாக்கிக் கொண்டுவந்து அக்கள்ளன்முன் வைத்து நிற்க அவன் மகிழ்ந்து அவைகளையெல்லாம் தீயில்வைத்து உருக்கத்தொடங்கினன். அவ்வாறு உருக்கிய பொன்னை ஒரு பாத்திரத்தில் வைத்து அதற் கிரட்டியாகிய இரசத்தை ஒரு பாத்திரத்திலிட்டுச் சீலைசெய்து தீயிலிட்டுச் சீக்கிரமாகத்தானே நூற்றெட்டுப் புடம் வைத்துப்பார்த்து மாற்றேறிவிட்டது,வராகியின் கிருபையாற்பழுக்கும்.

காற்றுவாராத ஓர் அறையைக்காட்டவா வென்றனன், அவன் அப்படியே ஒரு அறையைக்காட்ட அவ்விடத்தில்கட்டைகளைப்பரப்பி அதின்மீதுசுடுகோட்டித் தியைக்கொண்டு ஓமஞ்செய்து அவனெதிரே அந்த நெருப்பைத் தள்ளிவிட்டு அந்த பாத்திரத்தால்பூசித்தபோது வணிகன் ஆனந்தபரவசமாய்இரண்டு கண்களிலும் ஆனந்தபாஷ்பம்பெருக தேகத்தில் மயிர்க்குச்செறியநின்ற அக்காலத்தில் அப்பொற்குகையை தனது ஆடையில் மறைத்து அக்குகைபோலவே வேறொருகுகையை அந்நெருப்பில்வைத்து புகையையவித்து அவைகளைமூடிவிட்டு நீ விரதமாக அன்னம் புசிக்காமலும், ஒருவரோடும் பேசாமலும்,பெண்ணுடன் கூடாமலும்,மற்றொருவரையும் பாராமலும்,உன்கருத்தில் என்னையே நினைத்துக்கொண்டு ஆறுநா ளிருக்கவேண்டும், நான் நீவிக்கு முன்னேசென்று ஓர் யாகஞ்செய்து நாலாம் நாளில் இவ்விடத்திற்கு வருவேன் என்றான். அவ்வாறு கூறிய அக்கள்ளனை மூன்றுதரம் வணங்கிக்கொண்டு அப்படியே செய்வீரென்று உத்தரவு கொடுத்தான். உடனே அவன் அங்குநின்றும் நீங்கி மிக்க விரைவில் வெகுதூரஞ்சென்றான். இதுநிற்க ;

மாயவேடம்பூண்ட வாதி அவன் சொல்லிய கட்டளையின்படி வணிகன் வைகினன். அவ்வாறு நான்குநா ளிருந்தும் அவன் வாராமையால் வணிகன் மனக்கவலையுற்றுச் சொல்லிய வார்த்தையைத் தவறுவானோ வருவானோவென்று தளர்வுற்று நீவியின் கோயிலையடைந்து தேடிக்காணமல் சிந்தைமயங்கி தன் மாளிகையில் வந்து முன்வைத்திருந்த குகைகளை எடுத்துப்பார்க்க அவைகளெல்லாம் இரும்பாயிருக்கக்கண்டு இது மாயைபோலு மிருக்கின்றதே யென்று சோர்ந்திருந்தான். அவ்வாறு தனக்குள்ள திரவியமெல்லாம் போய்விட்டபடியால் பயித்தியம் பிடித்துச் சிலநாள் உழன்று பிறகு யமலோகத்தை யடைந்து, தருமங்களை யெல்லாமிழந்த செய்கையாலே ஒரு மயக்கம்பூண்ட யானையாகிப் பிறந்தான். முன்னடந்த விஷயங்களெல்லாம் மறந்தானென்று யானையின்மீ தேறியிருந்த குச்சகர் ஞானதிருஷ்டியா லறிந்து இப்பாவத்தை நொடியினுள்ளே மாற்றிவிடவேண்டுமென்று தான் செய்த தவத்தில் ஓர் நாள்பலன் அந்த யானைக்கு ஆகட்டுமெனக்கூறினவுடனே அவ்வானையுருவை நீக்கிக்கொண்டு யாவராலுந் துதிக்கத்தக்க தெய்வ வுருவடைந்து புஷ்பவிமானத்திலேறி இந்திரனைப்போல அரமகளிர் சாமரை யிரட்டவும், நடிக்கவும் தேவர்கள்பல்லாண்டுகூறவுங் கண்ட அவன் குச்சகனதுதிருவடியை வணங்கி விண்ணுல கடைந்தான். பின்பு குச்சகமுனிவன் முன்பு போல் நெடுந்தவஞ் செய்ய அவனெண்ணியவாறு தென்திசைக் காவற் கடவுளாகிய இயமன் வந்து என்னை நினைந்தமை யாது காரணமென்று வேண்ட, உசத்திய முனிவன் மகளை என்மகன் மணஞ் செய்ய நேர்ந்தனன், அவள் இறந்துபட்டனள், அவளை முன்போற்றர வேண்டுமென்று வேண்ட, அவ்வாறே தந்தேனென்று விடை பெற்றுச் சென்றான். அங்கே உசத்திய முனிவன் மகளதுயாக்கையில் அவளாவிபுகவே நித்திரைசெய்தார்போல மீண்டும் எழுந்திருந்தாள். அவளுயிர் பெற்றெழலும் தாய் நடந்த பரிசனைத்துங் கேட்டனள். தந்தை முனிவனை நோக்கி என்னுயிரும் என் சுற்றத்தாருயிரும் தன்

மனைவி யுயிரும் நண்பினருயிரும் நிலைபெற்றிருக்க என் மகளுயிரைத் தந்தனை யாகையால் இவ்வுலக முழுதுங் காத்தளிக்கு மிறைவ னீயேயாமென மதிக் கின்றேன். இனி உமதுமகனாகியகவுச்சிகனுக்கு இத்திசைநாடி விருத்தையென் பாளைக் கொள்ளவந்தீரோ! அல்லது என் மகளுயிரைக் கொடுக்க வந்தீரோ வென்று புகழ்ந்தான். அக்குச்சக முனிவன் சிலநாள் அங்குத் தங்கி யிருந்து விருத்தை யென்பவளைத் தன் மகனாகிய மிருகண்டேயருக்கு மணஞ்செய்வித் துப் போயினுள். கவுச்சிக னென்பவன் தன்மனைவியாகிய விருத்தையோடு இல்லற நடாத்திவருகையில் புத்திரப் பேறின்றி வருந்தி மிருகண்டு வென்னும் புத்திரனைப்பெற்றான். ஆறுண்டாகவே உபநயனஞ் செய்வித்துத் தன் தந்தை போல் தவஞ் செய்யச்சென்றான். அவன் போனபின்பு முற்கல முனிவன் பெற்ற மருத்துவதி யென்பவளை மணந்து அநாமய மென்னும் காட்டில் அவ ளொடு வசித்துப் புத்திரப் பேறின்றிக் காசி க்ஷேத்திரத்தை யடைந்து கங் கையினீராடிப் பலமுனிவர்கள் வசிக்கும் வீதிவழியே சென்று மணிகர்ணிகை யென்னு மாலயத்திற் புகுந்து விச்சுவ நாதனை வணங்கி அவ்வாலயத்திற் கணித்தாக மகப்பேறு குறித்து ஓராண்டு தவஞ்செய்தான். அவ்வாறுதவஞ் செய்ய இறைவன் வெளிப்பட்டு நீ வேண்டியது கேள் அளிப்போ மென்று சொல்ல அதற்கம் முனிவன் நான் 'மக்கட்பேற்றிற் பெறும்பேறில்லை' என்ற படி மகனை நோக்கித் தவஞ் செய்தேன்,அருள வேண்டுமென்று வணங்கி நின் றான். அதற்கு இறைவன் புன் முறுவல் செய்து தீங்காய குணமே யமைந்து மெய்யுணர்ச்சியின்றி மூங்கையும் செவிடு முடமு முடையனாய் விழியற்ற வோர் மகனுவாய்த் தீர்க்காயுளாய் நூறு வயதுடையனாயிருக்கப் பிணியில் வருந்தும் ஒருவன் வேண்டுமோ, அல்லது வடிவழகும் மெய்யுணர்ச்சியு முடையனாய்ப் பிணி முதலியன வின்றி யெம்பாலன்பு மிகுந்தோனாகப் பதி னாறுண்டுடையனாயுள்ள வொருவன் வேண்டுமோ யார் வேண்டு மென்ன, மிருகண்டு ஆண்டிற் குறைபாடுடையனாயினும் இறைவனே யுன்னிடத்திற் மெய்ப்பத்தியுடைய மகனையே வேண்டுகின்றேனென்று வேண்டவே, அவ் வாறே தந்தேனென்று சொல்ல, மகிழ்வடைந்து தன்மனைவியோடு வசித்துக் கொண்டிருந்தான். இவ்வாறு வாசஞ்செய்துவருகையில் உலகத்தின் துன்ப மொழியவும், தருமமெல்லாம் நிறைந்தோங்கவும்,மாதவஞ்செய்யுமுனிவருய்தி பெறவும், வைதிக சைவம் வாழவும், இறைவனருளால் இயமன் மாளவும் அவ னது மனைவி வயிற்றிற் கருக்கொண்டாள். அவ்வாறு கருக்கொண்டதறிந்து மாதந்தோறும் செய்யவேண்டுங் கடன்மைகளை யெல்லாஞ் செய்து முடித்துச் சிவனடியார்களுக்கு வேண்டுவன வுபசரித்துவரப் பத்து மாதம் நிறைந்த வுடனே மீனலக்கினமும்,இரேவதியும் பொருந்த,மிதுனம் செல்ல, சுக்கிரனும் வியாழமும் உச்சக்கிரகங்களாக நிற்க, சூரியன் முதலானோர் தத்தமக்குரிய இடங்களிலே நிற்கத் தோன்றினன். இவ்வாறு தோன்றவே தேவதுந்திபி முழங்கின, காத்தளித்தழிக்கு முத்தேவரும் ஏனையரும் ஆசிர்வதித்தனர். நடப்பதின்னதென் றறியாது அக்காசி நகரமே யன்றி உலகமுழுதுங் களிப் பொடு மகிழ்ச்சியடைந்தனர். தந்தையும் அப்புத்திரோற்சவங்கேட்டுக் கங்

கையினிராடி அந்தணர்கள் முதலானோர்க்குச் சுவர்ணதான முதலியவைக ளைச்செய்து நிற்க,பிரம னங்கடைந்துஇக்குழந்தைக்குமார்க்கண்டேயனென்று நாமகரணஞ் செய்யவேண்டுமென்றான். அவ்வாறே பூரணசந்திரன்போல் வளர்ந்து வருகையில் உபநிட்டானம் அன்னப்பிராசனம் முதலியவற்றைச் செய்து ஓராண்டில் சவுளஞ்செய்வித்து இரண்டா மாண்டில் செவிபூடண கரு மஞ்செய்து ஐந்தாமாண்டில் உபநயனஞ் செய்வித்து வேதமுதலிய ஆப்த கலைகளையுணர்த்த அவற்றின் பொருளை யுள்ளவாறறிந்து சிவனே பரம்பொரு ளென்று துணிந்து அவனடியாரை அச்சிவமாகவே பாவித்துத் தன் குரவனை வணங்கிக் காமம், வெகுளி, மயக்கம் என்னும் முக்குற்ற மகன்ற முனிவனைப் பரவி வழிபாடுசெய்து தன்னைப்பெற்ற மாதாபிதாக்களை வணங்கிநின்று பிரம ஞானம்பெற்று விளங்கினான்.

இவ்வாறு நடந்துவருகையில் பதினாறுண்டாகவே மகனை நோக்கி, தாயுந் தந்தையாரு மிகவும் வருந்தித் துன்பக்கடலி லழுந்தினர். அதை நோக்கிய மார்க்கண்டேயர் நீங்கள் வருந்தியவா றென்ன! உள்ளபடி சொல்லுங்கோ ளென்ன,உன்னையருமையானமகனைப்பெற்றும் வேறொருதுயரத்தால்வருந்து கின்றோம், அது நீலகண்டத்து நின்மலன் வரந்தருகையில் பதினாறுண்டில் உனக்கு இறுதியென்று சொல்லினன், அதனால் வருந்துகின்றோமென்றனர். மார்க்கண்டேயரோ அவர்களை நோக்கி நீங்களொன்றுக்கு மஞ்சவேண்டாம், உயிர்க்குயிராகிய உம்பர்பெருமானை யர்ச்சனை கடைப்பிடித்துச்செய்து யம னைப் புறங்காண்கின்றேனென்று சொல்லினன். பெற்றோரும் தன் மகனது மழலைச்சொற் கேட்டு மகிழ்சிறந்தனர். மார்க்கண்டேயர் அவர்களுக்கு வேண்டியவற்றை யெல்லா மெடுத்துச்சொல்லி அவர்களை நிறுத்திவிட்டு அவர்களிடத்தே விடைபெற்று இறைவன்பால் அன்பும் அவனருளும் துணை யாய் நிற்ப,விரைந்து சென்று மணிகர்ணிகை யென்னு மாலயத்தை யடைந்து என்புநெக்குருக இருகண்ணினின்றும் ஆனந்தபாஷ்பம் பொழிய இறைவ னாகிய விச்சுவேசனை வணங்கி அர்ச்சனையைக் கடைப்பாடாகச் செய்யலாயி னார். அவ்வாறுசெய்ப இறைவன் வெளிப்பட்டுத்தோன்றி எம்மை இடையறு வன்பால் வழிப்பட்டமையால் நீ எமனுக் கஞ்சவேண்டுவதில்லை,நாம் நீ வேண் டியவாறுவெளிப்பட்டுக் காலனைச்செயங்கொள்ளச்செய்கின்றோ மென்றனன். இவ்வாறு சிவார்ச்சனை செய்கையில் எமதூதனெதிர்ப்பட்டு மார்க்கண்டேயர் செய்யும் சிவார்ச்சனையி னுறுதியால் அவரருகே வருவதற்கஞ்சி,தென்றிசைக் கிழவனாகிய எமனை யடைந்து காசியில் மார்க்கண்டனென்னும் பிராமணச் சிறுவன் சிவார்ச்சனை செய்கின்றான். அவனை யடுத்துச்செல்வதற்கோ எங் களாலாகாத காரியமா யிருக்கின்றது ; என்செய்வதென்று வணங்கிக்கேட்க, அதைக்கேட்டு எமனே தன் கணக்கராகிய சித்திரகுத்த னொன்று சொல்லு வோரை யழைப்பித்து அவனதுகாலவெல்லையை யெடுத்துச்சொல்லுங்கோள் என்ன, அவர்களும் முதிர்ந்த தவமே செல்வமாகவுடைய முனிவரோயாயினும் தங் காலவெல்லையைக் கடப்பதரிது, மதியினராயினும் வலியினராயினும் விதி யைக்கடப்பா ரெவருமில்லை ; இவனே இந்திரலோக மடையத்தக்கான்,

இவனுக்கு யமவாதனை சிறிதுங் கிடையாதென்றனன். அதைக்கேட்ட இய மன் தன் மந்திரியாகிய காலனைக்கூவிக் காசிக்ஷேத்திரத்தை யடைந்து பிரா மணச் சிறுவனாகிய மார்க்கண்டேயனை விரைவிலாவி கவரவேண்டுகின்றேன் போவென்று சொல்லியனுப்ப, அவனும் காசியைக்குறுகி மார்க்கண்டேயரை யடைந்து அவர் செய்யும் சிவார்ச்சனையி னுறுதியுங் குறிப்பு மறிந்து எவ்வா றிவர்வருவதென் றிளைத்தேங்கி அவர் கண்ணுக்குத் தோன்ற, மார்க்கண் டேயர்கண்டு வணங்கி,யார் சொல்லவேண்டுமென்ன ; யான் உலகின்கண் எவ்வுயிரையுங் கொண்டு செல்லும் எமனது அடிமை காலனென்று என்னைச் சொல்வர் என்று சொல்லவே, இங்கே யாதுகாரியமாக வந்தனை சொல்லென, காலனும் இறைவன் உமக்குவரையறுத்த வாயுளோ டேற்றே சென்றது நீர் தென்புலஞ் சேரவேண்டும்,விதியையோ சதுமகனாலுந்தடுப்பதரிது,நீர்சிவார்ச் சனை செய்துவருவதனால் மனமகிழ்ந்து உம்மைக் காணவெண்ணியே ஆசை மேற்கொண்டு தருமன்தான் காத்திருக்கின்றனன். அடுதற்செயல் செய்கையி னால் அவனைக் கொடியனென்பர் கொடியார், அவன் ஆருயிரை முறைபுரியுந் தன்மையால் நடுவனென்று மேலோரெல்லாங் கூறுவர். நீர் ஒன்றுஞ் சிந்தி யாது யமபுரத்தை யடைந்தீராயின் தருமனெதிர்ப்பட்டு வணங்கி உமக்கு இந்திரபதந் தருவான் வாருமென்றான். அதைக்கேட்ட மார்க்கண்டேயரும் யான்சிவபிரா னடியார்க்கடியவனாகையால்எமபுரத்தையுங்கண்டுதெரிசியேன், பிரமன் மாலென் றிருவோர் பெரும்பதமும் விரும்பேன், விரைந்து நீ வந்த வழியே நாடிச்செல்லென,காலனும் விரைந்து சென்று தருமனுக்கறிவித்தான். அவனே உளம்பதைத்து உடல்வெயர்ப்பக் கண்ணிற் றீயெழப் புருவக்கடை நிமிர ஆலவிடம்போற் கொதித்து எருமைக்கடாவிலேறி குடையுங் கொடியு நிழற்றத் தூதர்கள் புடைசூழவந்து காசிக்ஷேத்திரத்தை யடைந்து கையிற் பாசங்கொண்டு தண்டமுஞ் சூலமு மேந்தி யெதிர்ந்து தோன்ற,இனித்தருமன் வந்துவிட்டானென் றறிந்து சிறிதுமஞ்சாமல்சிவார்ச்சனை யுறைப்பிலிருந்தான். அதைக்கண்ட தருமன் என்ன நினைந்து என்செய்தாய் ! முன்னைவிதிப்பயனை யும் இறைவனாணையையும் ஒருவன் கடக்கக்கூடுமோ ! ஊழின் முறைமை சிறி தும் அறியாய்போலும் ! உலகத்தில் பிறப்பிறப்பென்பன யாவருமடைவதுசக சமே ! எப்படிப்பட்ட பெருந்தவமுடையராயினும் இதனைக்கடப்பதரிது, இது மறுக்கப்படா சத்தியம், ஆகையால் பெரியாரும் 'விதிப்பயனை வெல்லுதற்கு வேதமுதலா - மனைத்தாய நூலகத்துமில்லை.' என்று சொல்லி யிருக்கின்றார் கள். மேலும் நீ கடைப்பிடித்த சிவார்ச்சனை உன்பிறவித் தொடர்பாகிய பாசத்தைச் சிதைப்பதல்லது என்னால் பிணிக்கப்படும் பாசத்தைச் சிதைக்க வல்லதோ ! இந்திரரொத்தனையோ பெயர் என்னாலே மாண்டனரோ, அவர்க ளெண்ணிக்கை ஆகாயத்திலிருக்கும்நட்சத்திரக்கூட்டங்களையும் கடலிலுள்ள நுண்ணிய மணலையுமெண்ணினும் எண்ணி யுறையிடப்போகா, இந்திரரோ அவ் வாறாயின் தேவர்களை யெண்ணிக்கை சொல்லப்படுமோ ! அவர்கள் அமுதா சனரென்றும், அமரரென்றும் சொல்லப்பட்டும் இறந்துபட்டனர். இவ்வாறு தேவர்கள் செய்யலாமெனின் மானிடர்முதலானோரை யென்னசொல்லலாம் !

மரணமென்பது பிரமன் மால் முதலான பெருந்தேவரையும் விட்டதில்லையே, உன்னைமாத்திரம்விட்டுவிடுமோ! எம்மிறைவனுகியபரமசிவனை வழிபடுகையில் என்னரசியலை நடாத்தப் பாசமும் சூலமும் தண்டமும் மழுவு மளித்துள்ளார். தேவரோ காக்கினும் படைத்தளித்தழிக்கு மூவரோ காக்கினும் அல்லதேவரோ காக்கினும் நின்னுவிகொண்டல்லது மீள்வேனே! துன்பமென்பது கொள்ள வேண்டாம், இறைவனது மெய்யன்பரோ யாயினும் இறுதிவந்தெய்தின் தென் புலத்திற் சேர்ப்பது மெய்மையானசெய்தி யாதலால் நீ வாவென்று சொல்ல, மார்க்கண்டேயர் எம்மிறைவன் மெய்யடியவர் ஸ்ரீகயிலாயவரையை யடைவ தல்லது தென்புலஞ்சேர்வ ரென்பது சொல்லப்படுவதோ! அவர் மாதவஞ் செய்பவராயினும், மனையின் வாழ்க்கை யுடையராயினும் வினையினீங்கியவீட் டின்பமெய்துவர். அவர்களோ உன்னையும் மற்றைத் தேவரையும் இந்திரனையும் பிரமனையும் மாலையும் உருத்திரனையும்ஒருபொருளாகமதிக்கவேமாட்டார்கள்; அவர்களுக்கு இறைவனல்லது பற்றுக்கோடென்பது வேறுகிடையாதே! எல்லாமுடைய பெருமானையும் அவன் திருவடியைப் பற்றுக்கோடாகவுடைய மெய்யன்பரையும் பேதமாக நினைப்பது பேதைமைத் தன்மையாமென்று வேத முதலிய ஆப்தகலைகள் கூறுவதறிந்திலைபோலும்; நலந் தீங்கென்பன வொழிந்து ஓடும் பொன்னும் ஒன்றாகவெண்ணும் பெருந்தன்மையுடையார் பெருமிதத்தை இப்படியென்று சொல்லலாமோ! அவர்கள் பெருமையைச் சிறிது மறியாமற் சாதாரண மனிதர்போல் மதித்து என் உயிர்க்குந் தீங்கு நினைத்தாய்! இது உன்னுயிர்க்கும் உன் னரசியலுக்கும் இறுதியைத் தரு மன்றோ! அறியாமை யுடையானே! நீகொண்ட கருத்தை விடுத்துப்போ வென்றனன். அதைக்கேட்ட தருமன் இனிப்பாணிப்பது தகுதியன்றென்று நினைத்துத் தன் கையிலிருந்த பாசத்தை விட்டெறிந்து நின்றான். அவ்வாறு செய்ய மார்க்கண்டேயரோ சிறிது மஞ்சாது தான் செய்யும் சிவார்ச்சனையி லுறைப்பாவிருந்தனர். தேவர்களும் இம்மார்க்கண்டேய ரிறந்துபட்டனரோ வென்று மயங்கினர். உமையொருபாகத் தும்பர்பிரானுர்நீசிறிதும் அஞ்சவேண் டாம்! நாமே யுன்னைக் காக்கின்றோமென்று வெளிப்பட்டுத் தோன்றி, தமது வாமத்திருவடியால் அத்தருமனை யுதைக்கவே விண்ணின்றும் விழுகின்ற மேகம்போல மண்மேற் குப்புறவிழுந்தான். பிரமன் முதலிய தேவர்கள் காமினி வாழ்வதெப்படி யென்று கலங்கினர். பாரும்விண்ணும் மாழ்கின்றன. தூதுவர் முதலானோர் பூமியின்மேல் வீழ்ந்தனர். அத்தருணத்தே என்னு ருயிரைக்காக்க இறைவனிருக்கையில் என்னைக் கொல்லவந்த தருமனார் என் செயத்தக்கார் என்ன வடமொழியிற் சந்தப்பாவினம்பாடி மார்க்கண்டேயர்து திக்க,இறைவனும் கழிமகிழ்சிறந்து நம்மை யன்பொடு வழிபட்டுநின்றமையால் பாட்டிற்கின்புறும் நாம் அளவில்லாத ஆயுள்உதவிநின்றோம்! என்று சொல்லி மறைந்தருள,மார்க்கண்டேயரும் மணிகர்ணிகை யென்னும் ஆலயத்தி லெழுந் தருளிய சிவபிரானை வணங்கிக் கண்ணீர் கம்பலையுமாய் வழிபட்டு இறைஞ்சி நின்று அங்குநின்றும் அப்பெருமானெழுந்தருளிய ஏனைய ஆலயங்களையுந் தரிசிக்கவெண்ணிக் காசியைவிட் டகன்று போயினர். இது நிற்க;

இந்திரன் பிரமன் மால் முதலிய தேவர்களிடத்தே நிலமகளடைந்து தருமனில்லாமையால் நிலத்திலுள்ள உயிர்களெல்லாம் இறப்பென்பதின்றிப் பெருகுகின்றதன்றிப் பூபார மிகுகின்றதேயென்று தன் வருத்தத்தை யெடுத்துக்கூறி வேண்டினன். அதைக்கேட்ட அத்தேவர்க ளொருங்குசென்று கயிலையையடைந்து இறைவனது சிபாதங்களை மும்முறை வலம்வந்துபணிந்து துதித்து தாங்கள் வந்தசெய்தியை யறிவித்தனர்; அவருள் திருமால் தேவரீர் கிருபைசெய்தவாறு எனக் களித்த பதத்தைப்பெற்றுக் காத்தற்றொழில்செய்கின்றேன், அதற் கிக்காலத்தே ஒருகுறை நேர்ந்தது, அதுவோ நின்றிருவருட் பெருமையைச் சிந்தியாக் கேட்டினால் தென்புலத் திறைவனாகியதருமன்கெட்டொழிந்தனனென்பதே, மன்னுயிரோ பெருகியதனால் நிலமகள் பாரஞ்சுமக்கலாற்றாமல் வருந்துவாளாயினள். அவ்வாறாயின் என் காத்தற்றொழிலாலென்ன பயனென்று சொல்லி மீட்டும் தருமனை யெழுப்பித் தரவேண்டுமென்று வேண்ட, இறைவன் அத்தருமனை வருகவென்று சிந்தித்த மாத்திரத்தில் வந்து வணங்கிநின்றான். அவனைநோக்கிப் பரமசிவன் இனி எக்காலத்தும் சிவசாதன மணிந்த மெய்யடியவரிடத்தே யணுகாதிருக்கவேண்டும். நம்மடியவர் மண்ணுலகத்தி லிருப்பவரோ யெனினும் அவர்கள் மண்ணுலகத்தவர் தாமேயென் றசட்டைசெய்யவேண்டாம். அவர்களை நமது வடிவமென்றேயெண்ணி வழிபடவேண்டும். அவர்க்கு மனமொழி மெய்களால் தீயவை பயில்கின்றவரை நரகிலெய்தச் செய்யவேண்டும். நன்மைசெய்வாரைத் துறக்கமடையச் செய்ய வேண்டும். இவ்வாறு நீ செய்துவருவதே நமதாணையென்று கட்டளையிட்டு அவனுடைய பரிவாரத்துட னனுப்பிவிட, அவன் தன்னுலகஞ்சென்று தன்றொழிலைச் செய்துவருவானாயினன். மாலே அயனே இந்திரனே முதலிய தேவர்கள் பரமசிவனை வணங்கி விடைபெற்றுப் போயினர். அன்றுமுதல் தருமன் சிவனடியாரைக்கண்டு மிக நடுக்கங்கொண்டு அஞ்சி மார்க்கண்டேயரைப்போன்று மதித்து என்ன கேடுவருமோவென்று நினைத்து நடந்தான். இது நிற்க; குச்சகன் தன் னருமையான தவத்தினால் விருத்தை யென்னும் பெண்ணுயிரை யளித்தான். தன் தவத்தால் பின்னும் யானையினது சாபநீக்கித் தெய்வவுருத்தந்து துறக்கமளித்தான்; மிருககண்டயேன் மூவரின்முதன்மை பெற்றான்; அவன் மகனாகிய மிருகண்டு ஒப்பில்லாத தவத்தினால் மார்க்கண்டேயரைப் பெற்றான், அவர் விதியைக்கடந்து தருமனைப் புறங்கண்டு என்றும் நிலைபேறுடைய ஆயுளைப்பெற்றனர்.

மார்க்கண்டேயப்படலம்.

முற்றிற்று.

---

## மாயை யுபதேசப்படலம்.

இச்செய்தி யனைத்தும் உண்மையாதலால் நன்ருகத் தவஞ்செய்யுங்கோ ளென்று காசிபர் சொல்லினர். அதைக்கேட்ட மாயையும் நகைத்து இத் தவஞ்செய்யும் பேறு முற்றத்துறந்த முனிவருக் கல்லது நான் பெற்ற இச் சிறுவருக் கமைந்திலது ; இவர்களுக்குப் பெருஞ்செல்வமும் வெற்றியும் இன்ப மும் கெடாதவாயுளும் கீர்த்தியும் கெடாதவாழ்வும் நம்பாலன்புசெய்ய இவ ரடையத்தக்கது ; ஆதலால் இவர்கள் பெறவருள வேண்டுமென்று சொல்ல, காசிபமுனிவரும் இவற்றையோ இவர்க ளடையத்தக்கது, இவர்கட்கு நன் ருகத் தெரிவிக்கவேண்டுமென்று காசிபமுனிவர் சொல்ல, மாயையும் தன் மக்களை யழைத்தேந்தி முத்தமிட்டுமெய்யுணர்ச்சியையுடைய உமது தந்தை யெடுத்துச் சொன்னதெல்லாம் மெய்யே! அவையெல்லா முங்களுக் காவ தன்று, நீங்களடையத்தக்க உறுதி சொல்கின்றேன். உலகத்திலோ 'கல்வி யுடைமை பொருளுடைமை யென்றிரண்டு செல்வமும் செல்வமெனப்படும்.' என்றபடி இவ்விரண்டிலொன் றடையாவிட்டால் ஒருவன் பிறப்பெடுத்தும் பயனில்லை. மேலும் அவ்விரு செல்வத்தினும் பொருட்செல்வமே சிறந்தது, கல்வியுடையனேனும் பொருளுடையான் கடைவாயிலிலேதா னிரக்கவேண் டும். செல்வத்திலே தான் சகல வித்தைகளையுமே யன்றி மேன்மையும் தரும மும் கீர்த்தியும் வெற்றியும்பிறவும் யாவருக்குமுண்டாகின்றன. ஆதலால் செல் வத்தினும் சிறந்த தொன்றுமில்லை. செல்வமொருவரா லணுகவேண்டுமானல் 'ஊக்கமதுகைவிடேல்.' என்றபடி, ஊக்கமாகிய முயற்சிகைவந்தால் அச் செல்வமுடனே சித்திக்கும், அச்செல்வமோ பலவகைப்படும், அவ்வகைப் பட்ட செல்வத்தை யொருவரும் பெற்றிலர். அவ்வகைப்பட்ட செல்வத்தை நீங்களடைய முயலவேண்டும். நேற்றிரவில் எங்களிடத்தில் தோன்றினமை யால்நிருதரானீர்கள். உங்களுக்குத்தேவர்களோபகைவராயினர். தங்கள்முயற் சியினல் அவர்கள் தலைமைவாய்க்தனர். நீங்கள் அவர்கள் போன்று முயல்வீ ராயின் செல்வமடைவீர்கள். அப்படிப்பட்ட முயற்சியை நீங்கள் மூவருமுயல வேண்டும். நீங்கள் மூவரும் கேட்க நான் உபதேசிக்கின்றேன் கேளுங்கள்! இத்திசையோ வாலக்தீவென்று சொல்லப்படும், இப்பூமிக்கு நேராகப் போவீ ரானல் உத்தரபூமியில் தானவர்கள் தவஞ்செய்யத் தக்கவிடமுண்டு. அப்பூமி யில் இப்பரிசனத்துடன் சென்று யாககுண்டஞ்சமைத்து வேள்விசெய்ய வேண்டும். கருங்காலியையிட்டுத்தியிட்டு இரத்தமாமிசங்களைச் சிந்திக்கொடிய யாகஞ் செய்யவேண்டும். அதைப்பிரமன் மால் முதலிய தேவர்கள் யாவரும் எங்களிறைவனென்றுசொல்லப்பட்ட கங்கைவார்சடைக் குழகனைத் துதித் துச்செய்யுங்கள். அவ்வியாகத்தைச் செய்தீராயின் அருட்சத்தியுடன் எம்மை யாளும் இறைவன் எழுந்தருளுவான், அவன் உங்களுக்குரிய எல்லாச் செல்வ முந்தருவான். அதை விரைந்துசெய்யப் போங்கள், அதற்கு வேண்டியவற்றை யுதவுகிறேனென்று அதற்குவேண்டிய வகைகளையுங் கற்பித்து, மந்திரோப தேசஞ் செய்வித்து இந்திர திருவராக்கவெண்ணி யனுப்பினள். அதைப்

பெற்று அம்மூவரும் மாயையையும் காசிபனையும் வணங்கிநின்றனர், காசிபனும் அவர்களிடத்தே விடைபெற்றுச் செல்கையில் மாயை யான் மக்கட்பாது காப்பிற் கருத்தைச் செலுத்தவேண்டும், கவலவேண்டா மென்று அன் பொடுஞ் சொல்லியனுப்பினள்.

மாயை யுபதேசித்தபடலம்.

முற்றிற்று.

---

## மாயை நீங்குபடலம்.

மாயை இவ்வாறு தன்னைவிட்டு நீங்கக் காசிபனுக்கு மாயையின் பின் சென்று அன்னியனைபோல வென்னைவிடுத்துச் செல்லாநின்றனையே, இது நீதியாகுமோ வென்றுசொல்ல, மாயையும் யான் மக்கட்பேற்றி னிமித்தம் கூடியதன்றி வேறன்று, இதை யறியாமற் சிந்திப்பதிற் காரியமென்னவென்று மறைந்தாள். உடனே அவள் மாயையாற்படைத்த பொருள்களுங்கொடுங்கோ லரசனை நீங்கிய செல்வமேபோல மறைந்தன. காசிபனோ அவள் உருவங் காணுமற் சிறிதுமெய்யுணர்ச்சியின்றி யழுதுபுலம்பி யேங்கி நைந்து உயிர்நீங்கிய உடம்பேபோல நின்றான். அதை யறிந்த நான்முகக்கடவுள் ஞானதிருட்டியா லறிந்து காசிபனிருக்கையை யணுகக் காசிபனு மெதிர்சென்று வணங்கினன். அவனுக்குப் பல வாசிகள்வழங்கி அவனது உள்ளத்தைத்தேற்றி அறிவில் லாத மனிதரோபோல வொரு பெண்ணைநாடி மயங்குதல்தகுதியோ ! உலகத் திற் பெரியோரும் ‘ உள்ளக் களித்தலுங் காணமகிழ்தலுங்-கள்ளுக்கில் காமத் திற்குண்டு.’ என் றெடுத்துச் சொல்லினர். அது நினைக்கவுஞ் சுடும். மெய் யுணர்ச்சியையும் வருத்தும், காமமோ எவ்விதமாகவுஞ் சுடும். ஆதலாற் காமத் திற் கொடியதில்லை, யாவருந் தேடிக்கொண்ட பிறவியும் வினைகளுக்கு ஆதி காரணமுங் காட்டியது காமமே யாதலால் வீடு பேறுகுறித்து நாடுவோர் அக் காமநோயை விட்டவரல்லரோ, மெய்யுணர்ச்சியுடையார் தம்மைப் பிறவிக்கட லிற் செலுத்துவதனல் அதனை நெஞ்சினு நினையார்கள், நஞ்சினுங் கொடியது காமமேயாகும், ஆதலால் நீ காமத்தால் வருந்தவேண்டாம். நீ கருதி விழை ந்த பெண்ணோ மாயையே யாகும், நீ தீயகாரியத்தையே விரும்பிச்செய்தனை, முன்செய்வதுபோல் மாதவஞ்செய் துய்தியென்று தேற்ற, அதைக்கேட்ட காசிபமுனிவனும் காமநெறி யொழுகுங் கருத்தைவிடுத்து மாதொரு பாகத்து மாமணியை யெண்ணி வினைப்பிறவி யொழியத் தவஞ்செய்வானயினன். அங்கே காசிபனை நீங்கிய மாயையும் தன்மக்கள் கொடியவேள்வி செய்யச் சமைந்தமையால் அவர்களுக்கு வேண்டியவற்றையுதவ மணிகண்டத் தெள் ளமுதைநினைந்துதவஞ் செய்யத்தொடங்கினள். இதுவரையும் காசிபன்மாயை யைக் கலந்ததும், அவளிடமாக மக்களைப்பெற்றதும் சொல்லிமுடித்தேன், இனி அவர்கள் பெற்றவரங்களையு மிறைவனருளாற் சொல்லத்தொடங்குவேன்.

மாயை நீங்குபடலம்.

முற்றிற்று.

---

## அசுரயாகப்படலம்.

'தாய்சொற்றுறந்தால் வாசகமில்லை' என்றபடி, தாயினேவலால் யாகஞ் செய்பக்கருதிச் சென்ற சூரபதுமன் தன் தம்பியர்முகத்தைப்பாாத்து நாம் வேள்விசெய்யக் கருதி நமது சேனையுடன் வடதிசையினை நோக்கிச் செல்கையில், நெற்றியி லொருவனும் கடையி லொருவனுமாக நிற்கவேண்டுமென்ன, அவ்வாறே செய்கின்றேமென்று தாருகன் அத்தானையின் கடையினும் சிங்கமுகன் அதன் நெற்றியினும் நெறிப்போடுங் காவல்பூண்டனர். சேனையும் அவர்கள் கட்டளையின்படி படர்ந்து சென்றது. இவ்வாறு அவுணவெள்ளம் பூமியிற் படர்ந்து செல்ல நிலமகள் ளாற்றளாகி வருந்தினள். ஆதிசேடனும் எட்டு நாகராசரும் தம்மால் தாங்கமுடியாமல் மனமுளைந்தனர். மேருமலையுஞ் சலித்தது. ஏனை யட்டகுல பருவதங்களுஞ் சலித்தன. இவ்வவுணவெள்ளம் அடிபெயர்ந்து செல்வதனுலாகிய புழுதியான துசத்தியலோகஞ்சென்று தாவிவிண்ணிற்செல்வது நான் இவ்வனிக வெள்ளத்தினைத் தாங்கி நிற்கும் ஆற்றலில்லாமல் வருந்துகின்றேனென்று கொண்டனிறத்துக் கோமகனேடு முறையிடல் போலத்தோன்றியது, மேலும் அவுணவெள்ளத்தின் காற்சிலம்பினெலி நம்முன்னம் கடலுநோாக வொலிக்குமோவென்று சினங்கொண்டாற்போல அவருடைய காலினுலாகிய புழுதிசென்று கடலின் வாயினைப்பொத்தியது. அவர்கள் பெயர்ந்து செல்வதனல் மரங்கள் துகளாயின, மேருமலையையொத்த மலைகள் துகளாயின, எல்லாப்பாரம் தன்னுடையதென்றே தாங்கும் அனந்தனது வலியும் துகள்பட்டது, முன்னைநாளிற் றிரிபுரஞ் சிவபிரானல் சென்று துகள்பட்டாற்போலவே உயிர்களும் புவியுந் துகள்பட்டன. இவ்வவுணவெள்ளத்தின்ஒலியும் அவர்பெயர்ந்து செல்வதனுலாகிய புழுதியும் வெளிப்பட வருதலாற்கண்ட தேவர்கள்உள்ளத்தினிளைந்து பயந்து பிரமகற்ப்முடிந்ததோ, இனி வெள்ள மாகாயத்தினை முற்றுமூடிக்கொள்ளுமோவென்று நினைந்தார்கள். குற்றமற்ற திருவினு மிக்க பேரழகினையுடைய மாயை முன்னே காசிபமுனிவனைக் கூடிப்பெற்ற அவுணப்படை திசைமுற்றுஞ் சூழ்ந்து பதினுயிரம் யோசனை யெல்லையாகப் படர்ந்து பூமியினும் வானினுமாகப் பரந்துசென்றது. இதைக் கண்ட இந்திரனே அஞ்சி நடுங்கினன். அக்கினியோ தன்வலி குறைந்தான். யமனே மனநைந்தான். நிருதி மனமயர்ந்தான். வருணனும் வாயுவும் மனத்தளர்ச்சியெய்தினர். குபேரனும் மனத்தளர்ச்சி யடைந்தனன். ஈசானனும் நெஞ்சழிந்து வருந்தினன். இதனல் திக்குப்பாலகர் பட்டபாடு சொல்லிமுடியாது. இவ்வாறு அவ்வவுணப்படை யணிவகுத்துச் செல்ல, சிங்கமுகன் அப்படையின் முன்னணியினும், சூரபதுமன் நடுவினும், தாருகன் கடையினுமாகச் சூரபதுமன் அச்சேனை வெள்ளத்தினை நடத்திச்சென்றனன்.

இவ்வாறு செல்கையில் அவர்களைப்பார்க்க வெண்ணி அசுரரால் வணங்கப்படும் ஆசிரியனுகிய சுக்கிரபகவான் விமானத்தில் எழுந்தருளி அச்சேனை வெள்ளங்கண்டு நின்று அவர்கள் வேகமும் வலியும் உள்ளத்திற்கொண்ட வயிரமும் தைரியமும் பராக்கிரமும் முயற்சியு மனைத்துந்தெரிந் துள்ளந்துளங்கி

இவரைப்போற் பல அசுரவெள்ளத்தைப் பார்த்திருப்பேன்; ஆயினும் அவர் களுக்கு இவ்வளவு பேராற்றலில்லை, இது சிவனருள் தலைக்கூடியே யான தல்லது வேறன்று, இவர்களுக்கு ஒப்பாவார் உலகத்தில் யாரிருக்கின்றனர். இவர்களுக்குத் தேவரோடும் மாலுடனும் மற்றையோருடனும் போர்செய்து வெல்லக்கருதுவது ஒரு பொருளேயாமோ இவர்களோ தம்மை எதிர்த்தவரை யூனு முயிரு மொருங்குண்பார்கள். இன்னோர் வன்மைக் கிறுதியில்லாவிட்டா லும் இவர்கள் முன்னிருந்தாரைப்போலத் தவவலியும் வரங்களும் உரங்களும் படைவலியும் பெறுதிருக்கின்றனர்; ஐயோ இவர்களுங் குறையுடையராயிருக் கின்றனர். தண்டத்திறைவனாகிய யமனைக்கடந்த தனியாற்றலையுடைய மார்க் கண்டேய ரொருவருக்கே குறைகண்டேமில்லை. ஏனைத் தேவர்களுக்கும் மற் றவர்களுக்கும் ஒவ்வொரு குறைவுண்டு, அதனை யாருமறிவார்கள். ஆதலால் இவரிடத்தே யுண்டாகிய வறுமையும் சிலகாலம் தவஞ்செய்வாராயின் நீங்கப் பெறும், இது நிலைபெறுடைத்தன்று, 'தாழ்ந்தோ ருயர்வரொன்று மிகவுயர்ந் தோர் தாழ்வரொன்றுமறஞ், சூழ்ந்தோருரைக்கு முரைகண்டாம்.' என்றபடி, இழிந்தவர் இழிந்தே யிருந்திலர், உயர்ந்தேவிடுவர், இதற்கு விசுவாமித்திரன் சான்றன்றோவென்று பலபல வுள்ளத்தே யெண்ணித் தானவர் மன்னவனாக வாழ்வெய்தப்போகின்ற சூரபதுமன் முன்னே யடைந்து முகமன்கூறி நிற்க வெண்ணி இவனெதிர்சென் றுறவுசொல்லி யடையவுமரிதாயிருக்கின்றதெனத் துணிந்து மாயைவிஞ்சை செய்யத்துணிந்து மண்ணின்கண் உயிர்களை வசி கரிக்கு மந்திரமொன்று உச்சரித்து அச்சேனைசமுத்திர மத்தியிற்சென்று சூர பதுமன் எதிரேசென்றான். அவ்வவுணவெள்ளத்தி னுள்ளமாகிய விரும்புந் தீயிடுமெழுகேபோல வுருகின்று அன்போடு சுக்கிரபகவானை கைதொழுதது, தாருகனுக்கும் சிங்கமுகனுக்கு முன்பிறந்த தோன்றலாகிய சூரபதுமனை ஆசிர் வதித்து குதிரைகட்டியதேரைப் பூண்ட இந்திரனுக்கு மேலாகிய செல்வம் பெற்று வாழக்கடவை. தானவர்கள் கொடிய துன்பமாகிய நோயைநீக்கத் திரிகடுகம்போலவும் ஏலாதிபோலவுமாகிய நன்மருந்தென்ன விளங்கக்கடவை யென்று வாழ்த்தினன். அதைக்கண்ட சூரபதுமன் சுக்கிரபகவானை நோக்கி நீர் மேகவாகனனாகிய இந்திரனுலகத்திருப்பவரோ! அதற்குமேலாகிய சத்திய லோகத்திருப்பவரோ! மண்ணுலகத் திருப்பவரோ! பாதலத் திருப்பவரோ! எந்த வுலகத்தவர்? எமக்குத் தெரிவிக்கவேண்டும். அதன்றியும் உம்மிடத்தே என்னெஞ்சமுருகாநிற்கின்றது! என்றனுடல் நெக்குருகா நிற்கின்றது. என்னை யறியாமலே யன்புபெருகுகின்றது. அருந்தவஞ்செய்ய வனத்திற்செல்ல எனக் குக்காலெழவில்லை. என்பால் அன்போ டெழுந்தருளினீர்! உயிரை யெல்லாம் தாய்போற் கருணைசுரக்குந் தானுவோ அல்லது முன்னைப் பிறவியிற்செய்த முதுதவமோ, இப்போது எங்கள் கண்முன் எதிர்ப்பட்ட டென்று சொல்லி நின்றான். அவ்வாறுசொல்லிய சூரபதுமனைநோக்கி நான் ஆகாயத்தில் வசிக் கும் நவக்கிரகங்களி லொருவனாகிய பெரும்பதம் பெற்றுள்ளவன்; உங்கள் வமிசகுரு, என்னைச் சுக்கிரபகவானென்று சொல்லுவார்கள். உன்னிடத்தில் அன்பாய் உனக்குறுதி யொன்று சொல்லவந்தேன், நீ தவஞ்செய்துகொண்

டிருப்பாயாயின் உன்னைக் கேடுசூழத் தேவர்களாகிய பகைவர் குறுகாவண்ணம் மிருத்தியஞ்சயமந்திர முபதேசிக்கின்றேன், முறையாகப் பெறக்கடவையென் றுபதேசித்ததன்றி;எப்போதும் மறவாமற்சிந்தித்து ஐம்புலனையு மடக்கி பொய் கொலைகளவு கட் காமமாகிய ஐம்பாவங்களையும் வெறுத்துத் தவஞ் செய்யென்றுமுறுதிமொழிபுகன்று நிற்க,அவனைவணங்கி நீயிட்ட குற்றேவலைச் செய்வேனென்று விடைபெற்றுத் தன்சேனைசூழ வடபுலநோக்கிச்சென்றான்.

சூரபதுமன் வடபுலநோக்கிச் சென்று ஆலவனத்தி லாங்கு ஒருபாங்கரிற்சென்று குறுகி பதினாயிரம் யோசனைக்கு மதிலிருக்க நினைந்து தன் சேனையைக்கொண்டு மலைகளைப் பிடுங்கிவரக் கட்டளையிட்டு மதிலாக்கி அதைச் சூழ்ந்துநிற்கத் தன் சேனைகளுக்குக் கட்டளையிட்டு யாவரும் போக்கு வரவுபுரிய வாயிலுண்டாக்கி ஆகாய மளாவச்செய்து வாயில்கடோறுங் காக்க விசையை நிறுவிமலைகளாலும் படைகளாலுஞ் செய்த நீண்டவாரிமுன்னே மந்திரத்தாற்கூவிக் காளிகள் முதலானோரும் கூளிமுதலியவு மிருக்கச்செய்து தன் வேள்வியைக் காக்க வயிரவகணத்தை நிறுத்தினான். இது நிற்க;

ஆதிபம்பகவானாகிய பரமசிவனை நோக்கி அனல்வேள்வி செய்யத்துணிந்து ஆயிரமாயிரம் யோசனை கொள்வதாகிய ஆழமும் நீளமுமாகிய வேள்விக் குண்டஞ் சமைத்து நிற்கக்கண்ட நிலமகள் என்னை இப்பாதகர் வருத்துகின்றனரோ வென்று பெயர்தலில்லாதவளென்று சொல்லும் பொருளுக்கேற்பப் பேதுற்று வருந்தினள். இவ்வாறு ஆயிரமாயிரம் யோசனை அளவாக அகழ்ந்தமையறிந்த அனந்தனும் அவனுட னுறையும் நாகராசரும் அவ்வுலக வாசிகளும் இனிக் கீழுலகமும் நாடி வருவனென்று உண்ணடுக்குற்று முன்னிருந்த இருக்கையை யகன்று மிகக்கீழுள்ளபுவனநாடிச்சென்றனர். வேள்விக்குண்டம் ஆழமாகவிருக்க ஓமகுண்டம் நீத்தவெள்ளம் பாதளங் கீழேழினும்போய்ப் பரவ, அங்குள்ளார் இதென்ன வியப்பென்று தீங்கை யெய்தினராய் மயக்குற்றனர். ஆழமானதாக வேதியமைத்ததன்றி நூற்றெட்டென்னும் வேதியும் அதைச்சூழ ஆயிரத்தெட்டு வேதியும் அமைத்து இவ்வாறு மூவகை வேதியுமமைத்தபின்பு வேள்விசெய்யத்தொடங்கி வேள்விக்குரிய பல பொருளையும் வேண்டித் தாயைநினைக்க, அவள் பரிவொடும் வந்து எப்பொருட்கு முரிய சிவனருளால் சிங்கம்புலி கரடி யானை குதிரை யாளிமுதலாகிய பல விலங்குகளையுந் தொகுப்பித்து அவற்றின் குருதிவெள்ளத்தையும் நிரப்பிப் பழிப்பினைத்தரு மெண்ணெயும் கடலாகக் கொண்டுவந்தமைத்து வேள்விக்குரிய எல்லாப்பொருளையும் உதவினள். இதுவுமன்றி மேலேயுயர்ந்த வடிவுடைத் தாகித் திருமால் யோகநித்திரை செய்வதேபோல யூபத்தம்பமொன்று நட்டுச் செந்நெலரிசிச் சோறு அமைத்து மற்றும் பல பொருளையுந் தந்து விடைபெற்றுப்போக, சூரபதுமனோ அவ்யூபத்தம்பம் நட்டு அம்மவிதி நால்வாயிலிலும் வீரமடந்தையைக் காக்க நினைத் தருச்சித்து ஆட்டேன் பலிகொடுத்து மதிலின் மத்தியிலிருக்கும் பூதகணங்கட்கும் பேய்க்கணங்கட்கும் சோர்வின்றி மாமிச பலிகொடுத்துக் காளிகளுக்கும் வயிரவ கணங்களுக்கும் அவ்வாறே பலி கொடுத்து நின்றான்.

இவ்வாறு ஆயிரத்தெட்டு வேள்விக்குண்டத்திலும் நஞ்சோ டமைந்த விறகுகளையிட்டுத் தீமூட்டித் தானே யாகஞ்செய்யத்தொடங்கி இறைவன் திருநாமத்தைச்சொல்லி அவன்பால்செல்லும்படி அன்புசெலுத்திப் பின் தாரகனை நோக்கி இம்மகஞ் செய்ய வல்லோனொன் றுன்னி இவ்வேதிகடோறுஞ் சிறிதுந் தாழாமல் ஊக்கங்கொண்டே சென்றாய் ஆகையால், யாகத்தைப் பூரணமாய் செய்யவல்லவன் நீயேயாம், அதனை விரைவாகப் போற்றென்று கட்டளையிட்டு நூற்றெட்டு வேதியையும் தப்பாமல் யாகஞ் செய்யத்தொடங்கிச் சிங்கமுகனைப்பார்த்து இவ்யாகம் நீயே செய்துவரவேண்டுமென்றான். இதுகிடக்க;

இவ்வாறு சூரபதுமன் அச்சிங்கமுகனுக்குத் தெரியச்சொல்லிச் சிங்கமுகனை யங்கே நிறுத்திவிட்டு நடுவேயிருந்த பெரியவேதியையடைந்து மந்திர விதியால் அர்ச்சனைசெய்து சிறிதும் குறைவறநடத்தி மாதொரு பாகனாகிய பரம்பரனை மனத்தினிறுத்தி ஆவின்கொம்பாலாகிய தீக்கடைக் கோலாக்கிய கொழுந்தழல்விட்டொளிசெய்ய நெய்யென்னுமழையை மந்திரத்தோடுபொழிந்து மாமிசத்தொகுதியைமிகுதியும் நெருப்பிற்பெய்து செந்நிறமான உதிரக் கடலைச்சிதறிச் செந்நெற்சோறு தூர்த்துநெய்யும் எண்ணெயும் உதிரமுஞ்சொரிந்து பாலுந் தயிரும்விடுத்து வெண்பொரிசிதறி வானுலாவிய கடலாமெனத் தேனுமானெய்யும் தீயிற்சிந்திக்கடன்மையெல்லாம் செய்து நிறைவேற்றினான்.

இவ்வாறு பரமசிவனை நோக்கிச் சூரபதுமன் யாகஞ்செய்கையில் அவ்வக்கினி விரைவில் யாருமஞ்ச மண்ணுலகத்தைவிழுங்கி வானுலகமுழுதுமுண்ண வெழும் புகையேபோல மேலே மூடிக்கொண்ட தன்றி, எட்டுத்திசையும் பிரமலோகத்தையும் அளாவி எல்லாவுலகமும்பரந்தது. பலகாலமும் வருந்தித் தவஞ்செய்யும் காசிபமுனிவர்பெற்ற சூரபதுமன் ஒரு யாகஞ்செய்ததனால் அவ்வக்கினிசென்று எல்லாவுலகத்தையும் வருத்தியதென்றால் இனி அவன் செய்யும்விதத்தை யார்தானெடுத்துச் சொல்லவல்லவர். அவ்யாகத்தாலுண்டாகிய புகைப்படலம் அவ்வாறே எல்லா வுலகங்களையு மூடிக்கொண்டன. இவ்வாறே மற்றைவேதிகளும் எரிந்தன; இவற்றால் உகாந்த காலத் தீயினையொத்திருந்தது. இவன்செய்யும் யாகத்தைக் கேட்டறிந்த இந்திரன் அதற்குக் கேடுசூழவெண்ணி அது முடிப்பதே யரிதென்றுதெரிந்து பெருந்துயர்க்கடலின்மூழ்கினான். இந்திரன் இவ்வாறாகவிருக்கப்பிரமனுமாலும் மற்ற தேவரும் பிறரும் இச்சூரபதுமன் செய்கையையெண்ணி, இத்தன்மையாக யார்தான்யாகஞ்செய்யவல்லவர். இப்பாதகனாகிய சூரபதுமன் மேன்மை பெறவே முயன்றானல்லவாவென்று பயந்தார்கள். இவ்விதமாகப் பதினாயிரம் வருஷம் சூரபதுமன் தன்தம்பிமாருடன் அவ்வருமையான யாகத்தைச்செய்துகொண்டிருந்தும் செவ்வானம்போன்ற சடையையுடைய பரமசிவன் அவனுக்கிரங்கி யருள்செய்ய வாராததுகண்டு இனிநாம் செய்வதற்குக் கிருபைசெய்வானோவென்று ஆகாயமார்க்கத்திலெழும்பித் தன்கையில் வாள்கொண்டுதன் தேகத்திலுள்ள மாமிசத்தையெல்லாஞ் சிதைத்துத் தீயி லாகுதியாகப்பெய்து தன் உதிரத்தையும் நெய்யாகச் சொரிந்தான். இவ்வாறு வீரமாமகஞ்செய்து

தன் உடம்பிலுள்ள மாமிசங்களை யெல்லாந் துண்டந் துண்டமாக நெருப்பி லிட்டுவர அவையெல்லாம் முன்னையினும் அதிகப்படவே அதுகண்டு சூரபது மன் மிக்க மகிழ்ச்சியடைந்தான். அப்போதும் பரம்பரனாகிய பரமசிவன் வர வில்லை, இன்னும் வரவில்லையே இமையோர் முதல்வனாகிய இமையாமுக்க ணிறைவனென்று மனங்கலங்கி இனி மாண்டுபோவதே நலமெனத் துணிந்து யாககுண்டத்திலுள்ள வச்சிரகம்பத்திற் குதித்தான். அதைக்கண்ட சிங்க முகன்நான் எந்நாள்காண்பேன்! இனியாதுசெய்வேன்! என்றுபலவாறுபுலம்பி நின்றான். தாரகனும் அவ்வாறே புலம்பக்கண்டு அவுணர்களும் பெருங்கடல் போல இனைத்துப் புலம்பினார்கள். இவ்வாறு அவர்களெல்லாம் இனைக்குஞ் செய்திகேட்ட இந்திரனும் பாற்கடலிற் பிறந்த வமுதமுண்டதுபோல மகிழ் ச்சி யடைந்திருந்தான். சிங்கமுகனோ என்னுயிர்போன்ற தமையனைப் பிரிந் துந் தரிப்பேனோவென்று மனத்திலெண்ணி யெழுந்து தன்தமையன் செய்து வந்தாற்போல அவ்வீரமாமகத்தை நடத்தத்தொடங்கித் தன்னுயிர முடிகளை யும் ஒவ்வொன்றாக அவ்யாகத் தீயிலிட்டு யாகஞ்செய்யத் தாரகனும் அவ் வாறே தன் தலையை வாளாலரிந்து அந்த யாகத்திலிட அத்தலைபோல வேறொன்று முளைத்தெழுந்தது; அதைக்கண்ட அவுணரிற் சிலர் தங்கள் தலை களையும் அரிந்து அந்த யாகத்தீயிலிட்டும் அத்தீயில் வீழ்ந்தும் யாகஞ்செய்து வர, சூரபதுமன்போலச் சிங்கமுகனும் அத்தீயில் வீழ்ந்திறக்கத்துணிந்தான்.

அசுரர்யாகப்படலம்.

முற்றிற்று.

---

## வரம்பெறுபடலம்.

அதைக்கண்ட பரமபிதாவாகியபரமசிவன் ஆளுடைய நம்பிகளாகிய சுந் தரமூர்த்திசுவாமிகளைத் திருவெண்ணெய் நல்லூரில் அரிப்பிரமாதி தேவர் கள் அதிசயிக்க முன்னே கொண்டருளிய கிழப்பிராமண வடிவங்கொண்டு தன்பொருகையிலூன்றி நடந்து அந்த யாகசாலையைக் குறுகிச் சிங்கமுகா சூரனைப்பார்த்து இங்கே நீங்களெல்லா மேன் வருந்துகின்றீர்கள்! உங்கள் கருத்தைத் தெரிவிக்கவேண்டுமென்று கேட்டருளத் தந்தை போல்வாரா கிய இவர் நமது துயரங்கண்டு வருந்துகின்றார், இவரோ கிருபைதங்கிய மன முடையவரென்று சிங்கமுகாசூர னெண்ணி அவரது பாதங்களில் தன் முடி கள்பலவும் பொருந்த வணங்கித் தங்கள் வரலாற்றை யெல்லா மெடுத்துச் சொல்லித் தன் தமைய னிறந்தமையால் தான் யாககுண்டத்தி லிறக்கத் துணிந்ததாகச்சொல்ல, அதைக்கேட்ட பரமசிவன் உங்கள் தமையன்போல மாளவேண்டாம்; அவனை இத் தீயினின்றும் எழுவித் தருள்செய்கின்றோ மென்று முன்னாளில் ஆளுடைய பிராட்டியாகிய உமாதேவியார் விரல்களி னின்று முண்டான கங்கையிற் பொன்னாட்டிலிருக்கும் கங்கையைநினைக்க, அது செருக்குற்ற விஷ்ணுவினுடைய முதுகெலும்பைப் பிடுங்கித் தண்டமாக வூன்றிய பரமசிவன் திருமுன்னர் தேவர்களெல்லாம் பயப்படத் திசைகளு

மஞ்சும்படி விண்ணுலகங்களையெல்லாந் தாண்டிவந்து அந்த யாககுண்டத்தின் நடுக்குண்டத்தில்வந்து தோன்றவே, ஆலகாலவிஷம் பாற்கடலினின்றுந் தோன்றியதுபோலச் சூரபதுமனும் அக்குண்டத்தினின்றும் வெளிப்பட்டான். முன்போற் சூரபதுமன் அந்த யாககுண்டத்தினின்றும் வந்ததை யறிந்த சிங்கமுகாசூரன் தாரகன் முதலிய தம்பிமாரும் அவுணருங் கண்டு, கடல் சந்திரன்வரவுகண்டு ஆரவாரிப்பதுபோல ஆரவாரித்துக் களிப்படைந்தார்கள். அதைக்கண்ட இந்திரன் முதலிய தேவர்களெல்லாம் மேகத்தைக் கண்ட குயிலினம்போலத் தம்மனத்திற் பயங்கொண்டு தம்மூரை யடைந்தார்கள்.

துன்பநீங்கிய தம்பியரிருவரும்அவுணசேனையும் பரந்து வாழ்த்தெடுப்பச் சூரபதும னிருக்கையில், கங்கையை வருவித்து கிழப்பிராமண வடிவங் கொண்டு நின்ற பரமசிவன் அவ்வுருவத்தை மறைத்து உமையொருபாகமும் இமையா நாட்டமாகிய மூன்று கண்களும்,நான்கு தோள்களுமாகி இடபவாகனத்தி லேறிக்கொண்டு அவர்கள் கட்புலனகத் தோன்றக்கண்டு, சூரபதுமனும் தன் தம்பியருடனும் ஆராத பெருங்களிப்பாற் பலமுறையும் தொழுது வாழ்த்தி வணங்கிநின்றான். பரமசிவனே சூரபதுமனைப் பார்த்து நீ வெகு காலம் வீரமாமகஞ்செய்து வருந்தினாய்! நீ வேண்டுவ தென்ன! சொல்ல வேண்டுமென்று கேட்க, சூரபதுமன் இப்பூமி முதலாக அண்டகோடிகள் பலவற்றிற்கும் அரசனாகவேண்டும், அவற்றையெல்லாம் பொதுக்கடிந்தாளும் ஆக்ஞைச் சக்கரமுந் தரவேண்டும். நினைப்பதற்கு முன்னே அவற்றையெல்லாம் போய்ப் பார்த்துவரும் வாகனங்களுந் தரவேண்டும், நானெப்போதும் வச்சிர தேகமுடையவனாக விருக்கவேண்டும், இதுதான் நான் வேண்டும் வரமெனக் கேட்டு நிற்க, பரமசிவன் கிருபையோடும் பார்த்தருளி மண்ணுலகத்திற்காயிரகோடி யண்டங்களுண்டு, அவற்றுள் ஆயிரத்தெட் டண்டங்களை நூற்றெட்டு யுகங்கள்வரையிலும் அரசாள்வாய்; அவ்வண்டங்களை யெல்லாம் போய்ப்பார்த்துவர இந்திரஞாலத் தேரையுங்கொடுத்தோம். இவ்வண்டங்களையெல்லாம் என்றுங்காக்கத் திருமால்கையிலிருக்கின்ற சுதரிசனமென்னும் சக்கரத்தினும் பெருவலிகொண்ட ஆக்ஞைசக்கரமுஞ் சிங்கவாகனமுங்கொடுத்தோம், யாவருக்கும் இன்றுமுதல் தலைவனாகிய தன்மையும் தேவர் தானவர் முதலிய யாவரையும் வெற்றிகொள்ளும் வல்லமையும் பாசுபதமுதலிய படைகளும், என்று மழியாத வச்சிரதேகமும் பெருங்கடல்போல் ஒரு பதினாயிரம் வெள்ளம் யானை தேர் குதிரை அவுணர் என்னும் நால்வகைப் படையும் கொடுத்தோமென்றுஞ் சொல்லி யளித்துநிற்க, சிங்கமுகாசூரனும் தாரகனும் வந்துவணங்க அவர்களைப் பார்த்து நீங்களும் சூரபதுமன்போலவே தேவர்கள் முதலிய யாவரையும் போரில்வென்று புறங்காட்டியோடச்செய்து தேவர்களால் தொழப்படும் மூவர்போல விளங்குவீர்கள்; உங்களை எமது அழியாத சத்தியொன்றாலல்லாமல் வேறொன்றால் வெல்லப்படமாட்டீர்களென்று அவர்களுக்கும் அழியாத தேர்களும் பாசுபதாஸ்திர முதலிய தெய்வப்படைகளுங் கொடுத்து வேறுவேறாக அனுக்கிரகஞ்செய்து தன் உருக்கரந்தான்.

வரம்பெறுபடலம்

முற்றிற்று.

---

## சுக்கிர னுபதேசப்படலம்.

அத்தருணத்தில் முன்னே ரரணம்போலச் சுற்றிக்கொண் டிருக்கும் தானவர் தம் தலைவன் கெடாத சிறப்பனைத்தையும் பெற்ற தன்மையை நினைத்து மிக்க வலியுள்ளாரெல்லாம் விரைந் தாரவாரிக்க மகிழ்ச்சியடைந்து ஊழிகாலத்தில் பிரமன் நித்திரைசெய்கையில் உலகத்தைச் சூழ்ந்துகிடக்கும் சத்தசாகரங்களும் தத்த மெல்லைகடந்து மேருமலையைச் சுற்றிகொண்டாற்போல நெருங்கிச் சூழ்ந்துகொண்டு ஆரவாரித்து அவன் காலில்வீழ்ந்து கள்ளுண்டாற்போலக் களித்துக் கைதொழுது குப்புற்றுநின்று அடங்காப் பெருமகிழ்வடைந்தனர். தன் முன்னேவந்தவரை யெல்லாம் முகநோக்கிப்பார்த்து இதுவரையிலும் க்ஷேமமா யிருக்கின்றீர்களோ வென்று அவர்களைக்கேட்டுபசரிக்க, அவர்கள் பரமசிவனும் நீருமிருக்க எங்களுக் கென்ன குறையுண்டு நாங்கள் பெருஞ்செல்வம் பெற்றோரானோம்! எல்லாத் துன்பமு நீங்கினோம்; தாயிருந்தால் மக்களுக் கென்னகுறையுண் டென்று சொல்லிக்கொள்ள அத்தானவர்களுக் கெல்லாம் அரசனாக விருந்தான். அதைக்கண்ட இந்திரன் முதலிய தேவர்களும் ஆவிநீங்கினோர்போ லஞ்சி யொடுங்கினர். பல அரக்கர் தன்னைப் புடைசூழ்ந்துவர விருப்பத்தோடும் பார்த்து இந்திரனோடும் தாங்களும் விமானத்திலேறி சோனைமழைபோல பூமழைபொழிந்து சூரபதுமன் வாழி யென்று கூறி யாடிப் பாடிப் பெருமகிழ்ச்சி யடைந்து இந்திரனது மனத்துயரையுங் கண்டார்கள். சூரபதுமனே அந்த யாககுண்டத்தினின்றும் வந்த அளவில்லாத சேனைகட்கெல்லாம் கணக்கில்லாதபேரைத் தலைவராக நியமித்துத் தன்னைப் பலரும் சூழ்ந்து வணங்கி எல்லாத் திசைகளுஞ் சுற்றிச்செல்ல, தம்பியரோடும் அந்த யாகசாலையைவிட்டுத் தன் தந்தையாகிய காசிபமுனிவரிருந்த ஆச்சிரமத்தை யடைந்து வணங்கித் தான் பரமசிவனிடத்தே பெற்ற வரத்தையும் உரத்தையுஞ்சொல்ல அதைக்கேட்ட காசிபமுனிவர் இந்திரனுடைய வாழ்விற்கு முடிவுவந்ததோ! வேதவொழுக்கந் தவறுவதற் கேதுவாயிற்றே! இதுவும் பரமசிவனது செயலோ! என்று வருத்தப்பட்டுத் தன்னைவணங்கிநின்ற சூரபதுமன் சிங்கமுகாசூரன் தாரகனென்னு மக்களையும்பார்த்து உங்கள் குலகுரு வென்னப்படும் பார்க்கவனாகிய சுக்கிரனை யடைந்து உங்களுக்குச் செல்வம் இடையிலே நீங்காதவிதமாக வேண்டிய காரியங்களை யெல்லாந் தேடிக்கொள்ளுங்கோ ளென்று விடைகொடுத் தனுப்பினர்.

காசிபரிடத்தே விடைபெற்றுப்போன சூரபதுமன் சிங்கமுகாசூரன் தாரகன் என்னு மூவரும் தம்மை யவுணவெள்ளம் புடைசூழச்சென்று சுக்கிரபகவா னிருக்குமிடநாடி யடைந்தனர். இவர்கள் வரவையறிந்த சுக்கிரபகவான் மனவாட்டநீங்கிச் சந்தோஷமென்னும் மதுவுண்டு களித்து தன் சீடர்கள் கூட்டமாகத் திரண்டு மொய்க்கப்போய் அச்சூரபதுமன் முதலானோரை யெதிர்கொண்டான். அதைக்கண்ட சூரபதுமன் விரைவாகச்சென்று தம்பியரோடும் தானும் தன்னை யன்போடெதிர்ந்த ஆசிரியனாகிய சுக்கிரபகவானை மும்முறை வலம்வந்து பணிந்து நின்றான். சுக்கிரபகவான் சூரபதுமன்

முதலானோர் எங்களரு நன்ருக வாழ்கவென்று வாழ்த்துதல்கூறிச் சூரபது மனைத் தன் னிருகைகளாலும் தழுவியெடுத்துத் தன்னிருக்கைக் கழைத்துக்கொண்டு போகவெண்ண, சூரபதுமனே தன் சேனைகளைத் தாரகன் காத்திருக்கக் கட்டளையிட்டுத் தான் தம்பியாகிய சிங்கமுகாசூரனோடு சுக்கிர பகவா னிருக்கையை யடைந்தான். சுக்கிரபகவானும் சூரபதுமனுக் காசனங் கொடுத்துத் தன் மனத்திலன்பு அதிகப்படச்செய்யத் தக்கமுறைமைகளை அறிந்து நீர் நம்மை நாடிவந்த காரணமென்னவென்று கேட்க, அதற்குச் சூர பதுமனும் தான் வீரமாமகஞ் செய்ததும், அதற்கிமையா முக்கணிறைவ னுகிய பரமசிவன் இடபவாகனத்தி லெழுந்தருளிவந்து பலவரங்களையும் செல் வங்களையும் கொடுத்தருளினமையுங்கண்டு அந்த யாகசாலையையகன்று காசிப முனிவராகிய தன் தந்தையிடம் வந்ததும் அவர் நீ உன்குலகுருவாகிய சுக் கிரபகவானிடஞ் சென்று அவரால் உபதேசிக்கப்பட்ட நீதிகளைக்கேட்டு அரசபாரம் பொறுக்கவேண்டு மென்றதுவுஞ்சொல்லி, எனக்கு நீதிமுதலிய வற்றை நன்ருக உபதேசிக்கவேண்டுமென்று வணங்கிக்கேட்டான். அதைக் கேட்ட சுக்கிரபகவான் நீ நல்வழியில் நடக்கவேண்டி எம்மைக் கேட்டமை யால் உனக்குச் சொல்லவேண்டிய நீதிகள் பலவிருக்கின்றன. அவற்றைச் சொல்லுகின்றேன். சித்தசமாதானமாகக் கேள்! உலகத்தில் பாசமென்றும் பசுவென்றும் பதியென்றுஞ் சொல்லுவார்கள். பந்தமென்றுஞ் சொல்லிக் கொள்வதோ மித்தையேயாம், ஆவியுஞ் சிவமொன்றேயாம். வேறில்லை ; தீமை நன்மை யென்னும் வினைகளிரண்டெனச் சொல்லிக்கொள்வதே யல்லாமல் அவற்றினல் பிறப்பென்ப துண்டாகும், இன்பத் துன்பங்க ளுண்டாகுமென் றுஞ் சொல்லிக்கொள்வார்கள். உயிர்க ளனைத்தும் ஒருமையே யல்லாமல் ஊழின்முறையை விரவிஇருமையு மடையுமென்று சொல்லிக்கொள்வார்கள். அவ்வெல்லையி லருமையாகிய வினைகளைச் செய்வாராயின் அவ் வுயிர்கள் தோன்றுமென்பார்கள். இருவினைகளைத் தேடிச்செய்வதனலே மீட்டு மீட் டும் உயிர்கள் தோன்ருநிற்கும். அவற்றையறிந்து வினைக்கீடாக விருந்து இறைவன் போகந் துய்ப்பிப்பானென்றுஞ் சொல்லிக்கொள்வார்கள். ஆதியந்த மில்லாமல் அனதிமல முத்தனுயிருக்கின்ற பரமசிவன் திருவிளையாடலாற் காதலாகித் தன் மாயையால் பூதம்யாவும் பிறவுஞ் செய்வான்.

மாயையால் சரீரங்களாயின யாவையுந்தந்து அவற்றினடுவே கடாகாசம் போலக் கலந்து அச்சரீரநீக்கத்தின் முன்போல் அப்பிரமமேயாய்விடுவான். இவ்வகையாக எப்போதும் அவ்விறைவன் சங்கற்பமாத்திரத்தில் யாவும்செய் வான். எல்லாத்தொழில்களும் மித்தையேயாம். மோக்ஷமொன்றுண்டென்ப தும் அதற்கு முயல்வது மித்தையேயாம். ஐம்பொறியும் ஐம்புலனும் மித்தை யென்றே சொல்லப்படுமானல் அவற்றாற் காணப்பட்ட சிறந்தபொருள்களு மித்தையாம். புத்தியும் வடிவமும் செய்யகின்ற செய்கைகளும் அவ்வாறே மித்தையேயாகும். அச்செய்கைகளே மித்தையேயாகுமானல் அவற்றாலாகிய இன்பத்துன்ப வேறுபாடுகளு மித்தையாகவே முடியும் ; மித்தையையே மெய் யெனக்கொண்டாலும் அவ்வின்பத்துன்ப வேறுபாடுகளையும் நித்தியனுகிய

இறைவனையடையுமோ? அவைகளு மித்தையாகவே முடியும். ஆவதும்அழிவதும் இசைந்துசெய்யத்தக்க வினையாவதும் இறைவனுக்கென்பது அல்ல, சரீரத்திற்கென்றேதுணிந்துகொள். மேலும் போவதும்வருவதும் ஆவதும் அழிவதுமாகிய செய்வினையாவும் அளவிறந்த கடங்களிலே பரிணமித்திருக்கும் ஆகாயத்திற் கென்பதுண்டோ; அவற்றைப்போலவே எங்கும் பரமாத்துமாவேவானைப்போல எங்குமொன்ருகி இவ்வாறு பொருந்தியிருக்கும். வேறுபாடென்பது எவ்வளவு மில்லாத தன்மையை யுடையது, அப்படி நிலைபெற்றிருப்பதுவும் சத்தியமென்று தெரிந்துகொள்ளவேண்டும். நமக்கு நன்மையை யுதவுமென்றே யெண்ணிப் புண்ணியஞ்செய்வதும், பாவங்கெட்டதென அஞ்சிநடப்பதும்ஆகிய அவையெல்லாமறியாமையின் தன்மையென்றே சொல்லப்படும். எது எது நமது கண்ணுக்கெதிரே தோன்றினவோ அவற்றை நன்று தீதெனப் பகுத்துப்பாராமல், அவைகளெல்லாம் மாயாகாரியமென்றே ஆய்ந்தறிந் தவற்றைச்செய்வது நீதிமார்க்கமென்றே சொல்லப்படுமோ! உலகத்திலே பாவஞ்செய்யற்கவென்று சொல்வதும், புண்ணியத்தைச் செய்கவென்று சொல்வதும் அறிவில்லாதவர் செய்கைகளாம். அப்பாவபுண்ணியங்களை யார்செய்தாலும் மேல்வருவதொன்றுமேயில்லை; மாயையே மித்தையென்று சொல்லப்படுமோனுல் அதுமெய்யாகுமோ. கனவில் ஒருவன் விரும்புவதும் அங்கே தோன்றுவதும் ஏனையகாரியங்களும் கனவில் நாம் கண்டதுண்டோ; அவ்வாறே கனவிற் செய்வனமுதலாயினவும் முடிவுபெறும். ஒருவன் இம்மையிற் செய்யப்படுங்காரியங்களும் மறுமையில்வந் துதவப்பட்டாலன்றோ அவை யடையப்படும். அவைகளே மித்தையானுல் மித்தையிற்றோன்றுவனபோல விளங்குவனவும் நித்தியமாகிய பிரமப்பொருளாகுமோ? நெறியில்வந்த இத்தன்மைகளை யெல்லாம் பிறரறிவாரோயானுல் அப்போதே யாம் அடையத்தக்க தன்மையெல்லாம் பெறுவர், அவை உறுதியைப்பயக்குமென்றால் அவை யுண்மையாகவே முடியுமோ? சிலரைச் சிறியவரென்றும் சிலரை மேலான நெறியினடப்பவரொன்றும் நினைப்பதுந் தகுதியோ! எல்லா வுயிருமொன்றேயென் றறியவேண்டும். அதுதான் உண்மையென்று சொல்லப்படும். இப்போது சொல்லிவந்தவை யனைத்தும் பிரமஞான நன்றுயறிந்தவர்கள் கோட்பாடுகளாம். இனிமேல் உங்களுக்காகிய வன்மையும் பழையவழக்கங்களும் மற்றையவும் உறுதியாகச்சொல்லுகின்றேன். தேவர்களைப்பார்க்கிலும், விஷ்ணுமுதலிய கிருத்திய கர்த்தாக்களைப்பார்க்கிலும் மேலாகிய அரசச்செல்வமும் பராக்கிரமங்களும் ஆணையும் நீங்காத பெருஞ்செல்வமும் உன்னிடத்திலே வந்துநெருங்கின; இப்படிவந்து பொருந்திய மேன்மையையெண்ணி யுன்னை நீ பிரமமேயென் றெண்ணித் தெளியவேண்டும், மற்ற பிரமன்முதலிய தேவர்களை மேலானவர்களென்று கொள்ளவும்வேண்டாம். பணியவும்வேண்டாம், தேவர்களென்று சொல்லப்படுவோர் உங்களுக் கியற்கையாகவே சத்துருக்களாக முடிந்தார்கள். அவர்கள் செல்வத்தை யெல்லா மழித்து அவர்களை யெல்லாம் வருத்துவதே தகுதி; இந்திரனென்று சொல்லப்படுவோன் தேவர்களுக்கெல்லாந் தலைவனுவான், அவனே நேற்று அசுரர்களென்று சொல்

லப்படுவோர் உயிரையெல்லாங் கொள்ளைகொண்டான். அவன் பிழைத்துப் போகாவண்ணம் விரைந்துபோய்ப்பற்றி அவன் காலுக்கு விலங்கிட்டுச் சிறையிடவேண்டும். அவனைச் சிறையிட்டபிறகு தீயனவாகிய பலகாரியங்களையுஞ் செய்து வேதவித்துக்களாகிய இருடிகளையும் மற்றத் திக்குபாலகரையும் எப்போதும் உனக்குக் குற்றேவல்செய்யும்படி செய்துகொள்ளவேண்டும், அப்படி நீ செய்துகொண்ட பிறகு அவைகளை யெல்லாம் உன்னை யடுத்திருக்கும் அவுணர்களுக்குக் கொடுத்துவிடவே வேண்டும். கொலை களவு காமம் வஞ்சனை முதலிய காரியங்களை நிலையாகச் செய்துவரவேண்டும், அவைகளால் உனக்கு நேர்ந்துவரும் பொல்லாங் கொன்றுமேயில்லை. அப்படி நீ செய்துகொள்ளாவிட்டால் உனக்கொரு காரியமுஞ் சித்தியாகமாட்டா, உலகத்திலே உனக்கார்தான் பயப்படுவார்கள். நீ பரமசிவன் கொடுத்த ஆயிரத்தெட் டண்டங்களையும் உன் சேனைகளுடன் வென்று திக்குவிசயம்பண்ணிப் பார்த்துப் பார்த்து அங்கே நீ செய்யவேண்டிய கடமையாகிய ஆணையைச் செலுத்தியெட்டுத்திசையும்புகழும்படிமீண்டு இவ்வுலகத்தினையே ஆண்டுவரவேண்டும்.

சுக்கிரனுபதேசப்படலம்.
முற்றிற்று.

---

## அண்டகோசப்படலம்.

இவ்வாறு பொல்லாங்கான சொற்களையே நீதியென்று சுக்கிரபகவான் சொல்ல, 'மூத்தோர்சொல் வார்த்தையமிர்தம்.' என்றபடி, நல்லதென்றே மனத்திற்கொண்டு சூரபதுமன், தனக்குப் பரமசிவன்கொடுத்த ஆயிரத்தெட் டண்டங்களின் நிலைமையெல்லாஞ் சொல்லவேண்டுமென்றுகேட்கச் சுக்கிராசாரிசொல்வானுயினன். மேலிருக்கும் பொருளும் அதனால் விளைவதுமிருக்கட்டும்,இப்பால்மூலப்பகுதியினின்றும் புத்திதோன்றும்,புத்தியினின்றும்ஆங்காரந் தோன்றும்,அவ்வாங்காரத்தினின்றும் ஐம்புலன்கள் தோன்றும்,அங்குநின்றும் ஆகாயத்தில் பிருதுவிவரையிலுமுள்ள மகாபூதங்களுண்டாம், அப்பிருதுவித்தானே ஆயிரங்கோடி யண்டங்களுண்டு அவைகளொன்றுக்கு ஒன்முக மேலாகச்சொல்லு நிலைமையல்ல, அவற்றைச் சொல்லுமிடத்தில் அவைகள் பரந்திருக்கும், அவற்றினிறமோ செம்பொ னிறமாம். அப்படிப்பட்ட ஆயிரகோடியண்டங்களில் நீபெற்றவையெல்லாம் ஆயிரத்தெட்டண்டங்களாம், அவற்றில் ஒன்றினியற்கையை அங்கை நெல்லிக்கனிபோலச் சொல்லுகின்றேன். சூரியனுடையகிரணங்களிலுண்டாகின்ற துகள் மூன்றுசேர்ந்தால்மயிர்நுனியென்று சொல்லப்படும், அது எட்டுக்கொண்டது ஈர், அது எட்டுக்கொண்டது பேன், அது எட்டுக்கொண்டது கோதுமை,அது எட்டுக்கொண்டது அங்குலம், அது இருபத்துநான்கு கொண்டது முழம்,அது நான்குகொண்டது விற்கிடை,அது இரண்டுகொண்டது தண்டம், அது ஆயிரங்கொண்டது குரோசம், அது நான்குகொண்டது ஒருயோசனை,அந்தயோசனை நூறுகோடிகொண்டது இவ்

வண்டத்தின் அகலமும் நீளமுமாகும்; மற்ற அண்டங்கட்கும் இவ்வாறே யள வென்று நினைத்துக்கொள். பூமிக்குக்கீழ் ஐம்பதுகோடி யோசனையும், மேல் ஐம்பதுகோடி யோசனையுமுண்டு. பூமிக்கு நடுவேயுள்ள மேருவுக் கெட்டுத் திசையும் ஐம்பதுகோடி யோசனையாம், அண்டகடாகம் ஐம்பதுகோடி யோசனையாம். அண்டகடாகமோர் கோடியோசனைக்குமேல் காலாக்கினியுரு த்திரர் கோயிலுண்டு. அது ஒருகோடி யோசனைதூரம். அவரது திருமேனி அக்கினிச்சுவாலை பதினுயிரம் யோசனை வீசும். அவர் பலகை வாள் வில் பாணமென்னும் இவற்றை யணிந்திருப்பார். அக்காலாக்கினி யுருத்திரனைப் போன்றவர் அவரைப் பதின்மர் சூழ்வர்; அவரைச்சூழ்ந்து குற்றேவல்செய்யும் பரிசனம் ஒருபதுகோடி; அக்கடவுளது பாதங்களைத் துதித்து ஆதிகூர்மம் அப்புவனத்தில் வாசஞ்செய்யும். அந்தப்புவனத்தின்மேல் யாவரும் நடுங்கத் தக்க இருபத்தெட்டுக்கோடி நரகங்களுண்டு; அதன் நீளம் கோடியே இருபத் தொன்பது யோசனை தூரம், அதன்பரப்பு பன்னிரண்டு லட்சம் யோசனையாம். அந்நரக புவனத்தின்மேல் ஒன்றேழிந்த நூறுலட்சம்யோசனையுயரத்தில் ஒரு புவனமுண்டு; அது கீழே மண்ணும் மத்தியில் இரும்பும் கிழக்கே பசும்பொற் சோதியு முள்ளதாயிருக்கும், அதன் மேற்பாகத்தில் கூர்மாண்டர் வாசஞ்செய் வார், அவர்கருமையான முகமுடையவராய் மழுவாயுதமேந்தியகையும், ஊழித் தீயொத்த மேனியும், சுழல்கின்ற கண்ணும் பெற்றுப் பொற்பீடத்தி லெழுந் தருளியிருப்பார். அவரைச் சூழ்ந்திருக்கும் உருத்திரகணங்களின் கணக்கோ அளவில்லை. அந்தப் புவனத்திற்குமேல் இடைவெளி யொன்பதிலட்சம் யோசனையென்று சொல்லுவார்கள். அதற்குமேல் பாதாளங்க ளிருக்கின்றன, மேலேயிருக்கும் கனிட்டபாதாளம் எட்டிலட்சம்யோசனை; அப்பாதாளத்தி னகலம் வெவ்வேறு பதினுயிரம் யோசனையாம், அவற்றின் மூன்றுபாகத்துள் கீழ்ப்பாகத்தில் அவுணர்களும், மத்தியில் அரக்கரும், மேற்பாகத்தில் ஒளி யுள்ள பற்களையுடைய நாகரும், வாசஞ்செய்வார்கள். இதற்குமேல் ஒன்ப திலட்சம் யோசனை தூரம் ஆடகேசுரர் புவனமாம். இதன்மேல் இடை வெளி யொருகோடியே இருபதுலட்சம் யோசனையாம், இதற்குமேல் எட்டுத் திசையானைகளும், அட்டமா நாகங்களும் ஆதிசேஷனுடன் தாங்கிக்கொண் டிருக்கும். இப்பாதாளங்கட் கெல்லாம் தலைவராகப் பாதுகாப்பவர்கள் ஆட கேசுரர்களேயாம். இவர்களைச் சேவித்துக்கொண்டிருப்பவர் நாகரும் அரக்க ரும் அவுணர்களுமாம். அண்டகடாகமுதற் பூமிவரையிலும் ஐம்பதுகோடி யோசனையளவாம். இதை நீயேயறிந்துகொள். பலவகையான பாதாளங்கட் கெல்லாம் மேலானதாயிருக்கும் இந்தப்பூமியின் விரிவையுஞ் சொல்லுகின் றேன். அவைநாவலந்தீவு, இறலித்தீவு, குசைத்தீவு, கிரவுஞ்சத்தீவு, புட்கரத்தீவு, தெங்குத்தீவு, கமுகந்தீவென்னு மேழுதீவுகளாம். இவ்வுலகத்தைச் சூழ்ந்து ஏழு சமுத்திரமிருக்கும். அவை உவர்க்கடல், பாற்கடல், தயிர்க்கடல், நெய்க் கடல், கருப்பஞ்சாற்றுக்கடல், தேன்கடல், நன்னீர்க்கடல்களாம். இவ்வுல கத்திற்கப்பால் சொர்ணபூமியுண்டு, அதைச் சக்கரவாளகிரி சூழ்ந்திருக்கும். அதற்கப்பால் சமுத்திரங்களுக்கெல்லாம் பெரிய சமுத்திரமாகிய பெரும்புறக்

கடலுண்டு; அதற்கப்பால் இருள்சூழ்ந்தவிடமுண்டு. இவ்வண்டத்துடனேயும் இப்பொருள்கள்சூழ்ந்திருக்கும். எல்லையகன்ற முதல்தீவினளவு ஓரிலட்சம் யோசனையாம். அவ்வுப்புக்கடலும் அப்படியே யோரிலட்சம்யோசனை யளவுண்டு. ஏனையதீவுகளும் அதற்கிரட்டியாகச் சொல்லுவார்கள். அப்படிகண்டதொகை இரண்டுகோடியே ஐம்பத்துநான்கிலட்சம் யோசனையாம். சொர்ணபூமி பத்துக்கோடி யோசனையாம். அதைச்சூழ்ந்த சக்கரவாளகிரி பதினாயிரம் யோசனையாம். அச்சக்கரவாளகிரியைச்சார்ந்த புறத்திலுள்ள பூமி கோடியே இருபத்தேழிலட்சம் யோசனையாம். இனி இருள்சேர்ந்த வுலகத்தினெல்லையைச்சொல்வேன். அந்த இருளுலகம் முப்பத்தஞ்சுகோடியே பத்தொன்பதுநூற்று நாற்பதினாயிர யோசனையளவாம். இருள்சேர்ந்த அண்டப்பித்திகைக் கனம் கோடியோசனையாம், அதனகலம் இருபத்தஞ்சுகோடி யோசனையாம். பழமையான நூலிற்சொல்லியபடி ஒவ்வொருதிசையும் நூறுயோசனையளவாம். தாமரைப்பூவிலெழுந்த பிரம்தேவனது வலத்தோளில்வந்த சுவாயம்புமனுவின்மகனாகிய வேலையேந்திய அன்புடைவிரதனென்பவன் உலகமுழுதும் தனிச்செங்கோல் செலுத்தி யரசாண்டான். அவன் புத்திரர்களாகிய அங்கிதீரன், மேதாதி, வபுட்டி, சோதிட்டு, துதிமான், அவ்வியன், கேமிக்கவசன் என்னு மெழுவரும் அச்சுவாயம்புமனுவின் மகனாகிய தம்முடைய தந்தையாண்ட உலகமுழுதும்பிரித்துச் சத்ததீவுகளென்று சொல்ல அரசாண்டு வந்தார்கள்.

முன்னேசொன்ன சத்ததீவுகளில் சம்புத்தீவாகிய நாவலந்தீவையாண்ட வங்கிதிரனென்பவனுக்கு ஒன்பது பிள்ளைகளுண்டு; அவர்களுக்கு அவர்கள் பேராலேயே நவகண்டங்களாகப் பிரித்துக்கொடுத்தான். அவர்கள் பாரதன், கிம்புருஷன், அரி, கேதுமாலன், பத்திராசுவன், இளாவிருதன், இரமியன், ஏமன், குரு என்னப்படுவோர்; அவர்கள் நவகண்டமாகப் பிரித்த சம்புத்தீவைத் தனித்தனியேயாண்டுவந்தார்கள். அந்தச்சம்புத்தீவின் நடுவிலேதான் மகா மேருமலையிருக்கின்றது. அது செந்தாமரைப் பொகுட்டைப்போல விளங்கியிருக்கும். அதனுயரம் எண்பத்து நாலாயிரம் யோசனை யுயரமாம். அந்த மேருமலையினுச்சியில் பிரமனுக்குரிய சத்தியலோகமிருக்கும். பிரமன் எல்லாவுயிரையும் படைக்கும் மனோவதி நகரமிருக்கின்றது. அம்மலைக்கு மேற்குத்திசையில் விஷ்ணு வசிக்கும் வைகுந்தமிருக்கின்றது; அம்மலையின் வடகிழக்குத்திசையில் இறைவன் வீற்றிருக்கும் கயிலையிருக்கின்றது. அம்மலையில் எட்டுத்திசையிலும் இந்திரன் முதலிய எண்மரும் அமராவதிமுதலிய நகரங்களைக்கட்டி யாண்டுவருகின்றார்கள். அதற்குத் தெற்குமுதல் வடக்களவும் மத்தியில் அழகிய வோர் தேசமிருக்கின்றது. அதற்கப்பால் ஒரு துவாரமொன்று போகாநிற்கும். அந்த மலையின்கிழக்கே மந்தரமலையிருக்கின்றது. அதுவோ வெண்மை நிறமுள்ளது, அதற்குத் தெற்கிற் கந்தமாதனமலையிருக்கின்றது. அதனிறம் பொன்னிறம்; மேற்றிசையில் அழகிய நீலமலையிருக்கின்றது. வடதிசையில் சுபார்சுவமலையிருக்கின்றது, அதனிறம் மாதுளம்பூவினிறமாம். அம்மலை நான்கிற்கும் அடியகலம் எண்ணாயிரம்யோசனையாம், பதி

னுயிரம் யோசனை நீளமுமாம். அம்மலைகளினுச்சிகளில் கடம்பு,நாவல், அரசு, ஆல் என்னும் தருக்களிருக்கும், அவற்றில் நாவல்மரம் இரண்டாயிரம்யோசனை யுயரமுள்ளதாயிருக்கும். கடம்பு, அரசு, ஆல் ஒவ்வொன்றும் ஆயிரம் யோசனை யுயரமாயிருக்கும். அந்தமந்தரமலையின் அடிவாரத்தில் அருணமென்னும் தடாகமிருக்கின்றது. மேற்புறத்தில் அசிதோதமென்னும் தடாகமும், தென்றிசையில் மாசையென்னும் தடாகமுமுண்டு. வடக்கிற் சயித்திரமென்னுஞ் சோலையும், தெற்கில் விசித்திரை யென்னும் சோலையும், மேற்கில் வைப்பிரசை யென்னும் சோலையும்,வடக்கில் திருதாக்கியமென்னுஞ்சோலையுமிருக்கின்றன. அம்மலையடிவாரத்திலுள்ள நாவல்மரத்தின் சாறொழுகிவரும் பூமியாகையால் பாரதன் ஆண்டுவந்த அந்தக்கண்டத்தினை நாவலந்தீவென்று சொல்லுகிறார்கள். அப்பழத்தின்சாறு ஆறாகப் பெருகியோடி மேருமலை முழுதுஞ்சூழ்ந்து வடபாற்சென்று சாம்புநதமென்னும்பெயர்கொண்டுலாவும், அந்த நீரையுண்டவர்களுடைய உடம்புமுழுதும் பொன்மயமாம். அவர்கள் பதின்மூவாயிரவருஷம் சீவித்திருப்பார்கள். அம்மலையைச்சூழ்ந்து அட்டகுலாசலமுண்டு. அவை நீலகிரி, சுவேதகிரி, சிருங்ககிரி,நிசதகிரி,கந்தமாதனகிரி,மாலியவான், ஏமகூடம், இமயகிரி என்பனவாம்.

இனி நவகண்டங்களின் அளவைச் சொல்லுகின்றேன், வடகடல் முதலாகச் சிருங்ககிரிவரையும் குருவருஷம், சிருங்ககிரிமுதல் சுவேதம்வரையும் இரணியவருஷம், சுவேதத்திற்கும் நீலமலைக்கும் நடுவே இரமிய வருஷம், மேருமலையைச் சூழ்ந்தவருஷம் இளாவிருத மென்று சொல்லப்படும். கந்தமாதன மலைமுதல் மேற்கடலுக்கு மத்தியிலுள்ளது கேதுமாலவருஷம், மாலியவான் மலைமுதல் கிழக்குக்கடல்வரையிலு முள்ளது பத்திரவருஷ மெனப்படும். நிசதமுதல் ஏமகூடம்வரையிலும் அரிவருஷமாம். ஏமகூடமுதல்இமயமலைவரையிலுமுள்ளது கிம்புருஷவருஷமாம். தென்கடற்கும் இமயகிரிக்கும் நடுவேயுள்ளது பாரதவருஷமாம். கேதுமாலவருஷமுதல் பத்திரம்வரையிலும் முப்பத்து நாலாயிரம் யோசனையாம்,பாரதவருஷம் ஒன்பதினாயிரம் யோசனை விரிவுள்ளது. குருவருஷத்தில் வசிப்பவர் ஒருபோது தாயிடத்தே ஆண் பெண்ணாகப் பிறந்து தாங்க ளன்பாகவே கலந்து சுகித்திருப்பர். அவர்களுக் குணவு தெய்வத்தருக்க ளளிக்கும் காய் கனிகளேயாம். அவர்கள் நிறமோ பச்சைநிறம், அவர்கள் ஆயுள் பதின்மூவாயிரம் வருஷமாம். அதற்குள் வடபாகத்தில் முனிவர்களும் சாரணரும் சித்தரும் வசிப்பார்கள். அவர்களுக்கு ஆயுள்பதின்மூவாயிரவருஷமாம்அவர்கள்நிறம்படிகநிறம்.பத்திராசுவவருஷத்திலிருப்பவர் காய்கனியருந்துவார்கள். அவர்களுக்கு மாயுள் பதின்மூவாயிரவருஷம். இரமியவருஷத்தில் வசிப்பவர் பழவருக்கம் புசிப்பார்கள் ; அவர்கள் நிறம் சந்திரனதுநிறமாம். அவர்கள் இரண்டாயிரத் தைஞ்ஞூ றயுதம் வசிப்பார்கள். இரணியவருஷத்தி லிருப்போர் ஆலமரக்கனிகளைப் புசிப்பார்கள் ; குவளைப்பூவி னிறமுடையவர், அவர்களுக் காயுள் பன்னீராயிர மென்றே சொல்லுவார்கள். இளாவிருதவருஷத்தி லிருப்பவர்கள் வெள்ளைநிறமுள்ளவர்கள். கருப்பஞ்சாற்றைச் சாப்பிடுவார்கள், பன்னீராயிரயுகம் வசிப்பார்கள்

வருஷத்திலிருப்பவர்கள் பசுங்குவளைப் பூவினிறமுடையவர்கள், கண்டகியின் பழத்தைப் புசிப்பார்கள் ; அவர்களுக் காயுள் பன்னிரண்டாயிரமாம். அரிகண்டத்தில் வசிப்பவர் பதினாயிரம் வருஷஞ் சீவிப்பர், அவர்கள் காய்கனியைப் புசித்து வாழ்வார்கள். அவர்களும் சந்திரனைப்போலும் நிறம்பெற்றிருப்பார்கள். கிம்புருஷவருஷத்தில் வசிப்பவர் இறலியின்பழம் புசிப்பார்கள் ; அவர்கள் நிறம் பொன்னிறம், அவர்கள் பதினாயிரம்வருஷம் சீவித்திருப்பார்கள். ஏமகூடமலைக்குத் தெற்கில் இமயகிரிக்கு வடக்கில் பெருமைபொருந்திய கயிலாசமலை யிருக்கின்றது ; அதில் சிகண்டபரமசிவனார் எழுந்தருளி யிருப்பர் ; அம்மலை எக்காலத்திலும் அழிவில்லாம லிருக்கும். மேற்சொன்ன எட்டுக் கண்டத்திலும் வசிப்பவர்கள் துன்பம் பிணி நரை திரை மூப்புகளைச் சிறிதேனு மடையார்கள். அவர்கள் கிருதயுகம்போலவே மற்ற யுகங்களிலும் வலிமைகுன்றாத வடிவு, தேகபலம், தேகமுயற்சி முதலியவற்றைப் பெற்றிருப்பார்கள். அவர்கள் பாரதத்தில் வந்துபிறந்து செய்துகொண்டநல்வினைப் பயன்களை மேற்சொன்ன எட்டுக் கண்டங்களிலும் போய்ப் பிறந்தனுபவிப்பார்கள். அங்கே மழையென்பதே பொழியமாட்டா. இதுகிடக்க ;

பாரதவருஷத்தில் வசிப்பவர் பூமியிற் பிறந்தபிறகு பல தொழிலுஞ் செய்து அறம் பாவமென்னு மிரண்டையுஞ்செய்ததனால் ஆதிதெய்விகம் ஆதிபௌதிகம் ஆதியாத்மிக மென்னு மூன்றினாலாகிய பயனையடைவார்கள். அவர்களுக்கும் பெருமை வலிமை ஆயுள் உருவம் உணவு செய்கைகள்யுகங்கள்தோறும்பேதப்பட்டிருக்கும். அவ்விடத்தில்தோரை முதலிய பல தானியங்களுமுண்டாகும்,பரிசுத்தமான காய் கனி முதலியவற்றையும் புசிப்பார்கள் ; இனி இப்பாரதமொழிந்த மற்றஎட்டுக்கண்டத்தி லிருப்பவர்களாகிய தேவரும் நரகவாசிகளும்அவ்விடத்திற் பொருந்தியநல்வினை தீவினைகளைச்செய்து அவற்றின் பயனை யனுபவிப்பார்களென்றால் தீவினை நல்வினையென்னும் செய்கைகளுக்கெல்லா மூலகாரணமாயிருப்பது அப்பாரதவருஷமேயாகும், தங்களுக்கொரு குறைநேரிட்டால் தேவர்களும் முனிவர்களும் தவமும்பூசையும் இப்பரதகண்டத்தில்வந்து செய்தே முற்றுப்பெறுவார்கள். புலவர்கள் புகழும்பரதனும், இந்திரன், கசேருகன், தாமிரபன்னன், கபத்தி,நாகன், சருமியன், கந்தருவன், வருணன் என்னும் புத்திரனையும் குமரி யென்னும் பெண்ணையும்பெற்று அவர்களால் நவகண்டமாகப் பிரித்தான் ; அப்பாரதவருஷத்தில் கங்கை, கவுதமி, யமுனை, கவுரி, சரஸ்வதி, காவிரி, நருமதை, பாலி, கம்பை, பம்பை, துங்கபத்திரை, குசை, கோமதி, பாஞ்சாலி முதலிய புண்ணிய நதிகளிருக்கின்றன. மகேந்திரம், மலயம், கையம், சத்தி, மாகிருடம், பாரியாத்திரம், விந்த மென்னும் ஏழுகிரிகளும் ; காஞ்சி,காசி, அயோத்தி, மதுரை, மாயை, அவந்தி, துவாரகை என்னுஞ் சத்தபுரிகளும் இவையல்லாமல் ஆயிரத்தெட்டுச் சிவாலயங்களும் ; அந்தணர் முதலியோர் வசிக்கும் பல தேசங்களு மிருக்கின்றன. இதுதான் மெய்ந்நெறிக் கிருப்பிடமாயிருப்பது ; இதைக் குமரிகண்ட மென்றுஞ் சொல்லுவார்கள். ஏனைய எட்டுக்கண்டங்களும் மிலேச்சருங்கிருப்பிடமெனப்படும் ; அவைகளோ வியந்து சொல்லப்படாதவை. இது நிற்க ;

பாற்கடல்சூழ்ந்த சாகத்தீவி னெல்லையினையாண்ட அரசனாகிய மேதாதி என்பவன் சாந்தவயன், சிசிரன், கோதயன், ஆனந்தன், சிவன், கெமகன், துருவன் என்னும் புத்திரரைப்பெற்று அவர்களாலே சத்தவருஷங்களை யுண்டாக்கி யாண்டுவந்தான். அத்தீவின்கடவுள் வாயு ; ஆரியர், விந்தகர், குகரர் அங்கே வசிப்பவர்கள். சோமகம், சுமனம், சந்திரம், துந்துபி, வப்பிராசனம், நாரதீயம், கோமதமென்னும் சத்தகிரிகளும் ; சிவை, விபாவை, அமிர்தை, சுகிர்தை, மனுதத்தை, சித்தி,கிரமை யென்னும் சத்தநதிகளு முண்டு ; தயிர்க் கடல் சூழநின்ற குசத்தீவினையாண்ட வபுட்டு என்னு மரசனுக்கும் சுப்பிரதனு, ரோகிதன், தீரன், மூகன், சுவேதகன், சித்தியன், வயித்திதன் என்னு மேழுபுத்திருண்டு, அவன்இவர்கள் பேரால் சத்தவருஷ மாக்கியவர்களுக்குக் கொடுத்தான். அதில் உன்னதம், குமுதம், குமாரம்,மேகம், சந்தகம், மகிடம், துரோணம் என்னும் ஏழுமலைகளும் ; சோனை, வெள்ளி, மதி, தோமை, நேத்திரை, விமோசனை, விருத்தியென்னு மேழு நதிகளு மிருக்கின்றன. தர்ப்பகர், கபிலர், சாரணர், நீலத்தர், தண்டர், விதண்டகரென்பவரே அவ்விடத்தில் வசிக்கும் சனங்களாம். அப்பால் நெய்க்கடல்சூழக் கிரவுஞ்ச மென்னுந் தீவுண்டு. அதைச்சோதிட்டாவென்பவன் அரசாண்டு வந்தான். அவனுக்குச் சாரணன், கபிலன், கிருதி, கீர்த்தி, வேணுமான், இலம்பகன், உற்பிதனென்னும் ஏழுபுத்திருண்டு ; அவர்களால் ஏழு வருஷமாக்கி அவர்களுக்குப் பிரித்துக் கொடுத்தான். அவர்களு மரசாண்டுவந்தார்கள். அப்பால் கருப்பஞ்சாற்றுக் கடல்வளைந்த தீபம் சான்மலித்தீப மென்பார்கள். அதைத் துதிமானனென்பவன் அரசாண்டுவந்தான் ; அவனுக்குக் குசகன்,வெய்யன், தேவன், முனி, அந்தகாரன், மனோரதன், துந்துபி யென்னு மேழுபுத்திரர் உண்டாயினர் ; அவர்களால் ஏழுகண்டங்களாகப் பிரித்துக்கொடுக்க,அவர்க ளரசாண்டு வந்தார்கள். திமிரம், சுரபி, வாமனம், விருத்தம், துந்துபி, சம்மியத்தடம், புண்டரீகமென்னுஞ் சத்தகிரிகளும்; குமுதம், கவரி, ஆதி, ஆமை, புண்டரீகை, மனோபமை, சந்தியை என்னு மேழுநதிகளுமுண்டு ; இதில் புட்கலாதர்,புட்கரர்,தனியர், சிசிரரென்பவர் வசிப்பார்கள். இதற்குக் கடவுள் ஈசன் ; இதற்கப்பால் மதுக்கடலிருக்கின்றது. அதைச்சூழ்ந்த தீபம் கோமேதகதீபம்; அவ்வியனென்பவன் அத்தீவுக்கரசன். அவ்வரசனுக்கு ஏழுபுத்திருண்டு ; அவர்கள் விமோசனன், மோகன், சகலன், சோமன், சுகுமாரன், குமாரன், மரீசகன் என்று சொல்லப்படுவோர் ; அவனும் தன் மக்களால் ஏழுகண்டங்களாகப் பிரித்துக்கொடுத்தான். அதில் சிங்கம்,அத்தம், உதயம்,சலகம், கிரவுஞ்சம்,ஆம்பி,கேயம்,இரமியம் என்னுமேழுமலைகளும்;அபாதி,தேனு,கபத்தி,சுகுமாரி, குமாரி,இட்சு,மாயை என்னுஞ் சத்தநதிகளுமுண்டு ; அந்தகர்,ஆமங்கர், மாகதர், மானசர் இவர்களே அங்குவசிக்கும் சனங்கள் ; சந்திரனே அவர்கள் தெய்வம். அதற்கப்பாலிருக்கும் சுத்தோதக சமுத்திரத்திலுள்ள தீபம் புட்பகரத்திபமென்பார்கள் ; அதற்கரசன் சவனன். அவன்தன்மக்களாகிய தாதகி, மாபிதனென்னு மிருவருக்கும் அதை இருகூறாக்கிக் கொடுத்தான். இடபம், மகேந்திரம்,வருணம்,வராகம், நீலம், இந்திரம், மந்திரியம் என்னும் ஏழுகிரிக

ளும் ; குடிலை, சிவை, உமை, தாணி, சுமனை, சிங்கை, குமரி என்னு மேழு நதிகளுமுண்டு ; நாகர் அதில் வசிக்கும் சனங்களாம் ; அவருக்குச் சூரியனே கடவுள். புட்பகரதீபத்தின் முடிவி லைம்பதினுயிரம் யோசனை தூரத்தில் மான சோத்தரமென்று சொல்லப்படும் ஒருமலையுண்டு ; அது சகடக்கால்போல வட்டணையாயிருக்கும். அதில் இந்திரன் முதலிய இறைவரெண்மரும் வாசஞ் செய்யும்பதங்களிருக்கின்றன.

ஒவ்வொருசமுத்திரத்தின் முடிவிலும் சூழ்ந்து ஒவ்வொருமலையிருக்கும், இங்கே சாகமுதலிய தீவிலிருப்பவர்களுக்கு நரை திரை மூப்பிவைகள் சுத்த மாகவேயில்லை,அவர்கள் கலியுகத்திலும் கிம்புருடர் தன்மையைப்பெற்றிருப் பார்கள். அதற்கப்பால் சுவர்ணபூமியிருக்கின்றது. அதைச்சூழ்ந்துசக்கரவாள கிரி யிருக்கின்றது. சக்கரவாளகிரிக்கப்பால்தான் பிரகாசமுள்ளதாயிருக்கும். அப்பாலிருக்கும் பூமியிருண்டேயிருக்கும். அதில் வசிப்பவர் இயக்கர், இராக் கதர்,பேய்கள் வசிப்பார்கள். திசைக்கடவுளரும் தாமிருக்கும் திசைகளில் மேருமலையில் தங்குவதுபோல அங்கே தங்குவர். அதற்கப்பால் அண்ட மிருண்டிருக்கும். ஊழினல் தத்தம்உயிரைத் தாமே யொழித்தவர்களும் தெளிந்தவறிவில்லாதவரும் அந்தச்சக்கரவாளகிரியின்புறத்திற்சூழ்ந்திருப்பார் கள். அப்பாலிருக்கும் இருளிடத்தில் அனுதியீசர் தங்கியிருக்கும் ஒருபெருங் கயிலை யிருக்கின்றது. அந்த அண்டத்தின்பக்கத்தில் கணங்கள் வாசஞ்செய் வர். சம்புத்தீபமுதல் அண்டச்சுவர் வரையிலும் பூமியுண்டென்றே சிலர் சொல்லுவார்கள். இப்பூமியின் மேல்கணங்களி னுலகமுண்டு; அதற்குமேல் குப்யகலோகமுண்டு, அதற்குமேல் தசவாயுக்கள் வசிக்கும் மண்டலமுண்டு, அதற்கப்பால் சத்தமேகங்கள் வசிக்கு மண்டலமுண்டு ; அதற்குமேல் கிம் புருடர், கருடர், சித்தர், வித்தியாதரர், இயக்கர் வசிக்கும் உலகங்களுண்டு; இதற்குமேல் தெய்வகங்கை செல்லுமிடமுண்டு ; அதற்கப்பால் சூரியமண்ட லம் பூமிக்கு இலட்சம்யோசனையில் இருக்கின்றது. அம்மண்டலத்தில் முங் கோடிதேவர்கள்சூரியனோடுவழிக்கொண்டு செல்வார்கள்.அதற்குமேல் சந்திர மண்டலமுண்டு ; அதற்கு லட்சம்யோசனையில் நட்சத்திர மண்டலமுண்டு; அதற்குமேல் இரண்டிலட்சம் யோசனையில் புதனுலகமுண்டு ; அதற்குமேல் சுக்கிரனுலகம் இரண்டுலட்சம் யோசனை தூரத்திலிருக்கின்றது. அதற்கு இர ண்டுலட்சம்யோசனையில் அங்காரகனுலகமுண்டு, அதற்குமேல் இரண்டுலட் சம் யோசனை தூரத்தில் பிருகஸ்பதி உலகமுண்டு ; அதற்குமேல்சனியுலகம் இரண்டுலட்சம் யோசனை தூரத்திலிருக்கின்றது. அதற்குமேல் இரண்டுலட் சம்யோசனையில் சத்தருஷிகள் தங்குமிடம் இருக்கின்றன. அதற்கப்பால் துருவமண்டல மிருக்கின்றது. இப்படி சொல்லிய புவர்லோகத்தினெல்லை பதினைந்திலட்சம் யோசனையாம். இந்த வுலகத்துக்கு மேலுள்ளதேசம் சத்த மருத்துக்கள் வசிக்கு மெல்லையாம். இப்பதத்தின்மேல் சுவர்க்கலோகம் எண் பத்தஞ்சிலட்சம் யோசனையாம். அங்கே தேவர்களும் பிறரும் தன்னைத்துதி க்க இந்திரன் அரசு வீற்றிருப்பான். அப்பால் மகலோகம் இருகோடி யள வினதாகும், அதில் மார்க்கண்டர் முதலிய பல முனிவர்கள் வாழ்ந்திருப்பார்

கள். இகலோகமும் அப்பாற் சனலோகமுமிருக்கும், அங்கே பிதிர்த்தேவர்கள் வாசஞ்செய்துகொண் டிருப்பார்கள். தவலோகத்தின் உயரம் பன்னிரண்டுகோடி யோசனையாம், அங்கே சனகர் முதலிய ருஷிகள் வாசஞ்செய்துகொண்டிருப்பர். அதற்குமேல்சத்தியலோகம் பதினறுகோடியோசனையாம், மூன்றுகோடி யோசனைக்கப்பால் பிரமன் வசிக்குமிடம், அதற்கப்பால் முக்கோடி யோசனைக்குமேல் நாராயணனுலகமுண்டு; அதற்கப்பால் நாற்கோடியோசனை தூரத்தில் சிவலோகமாம். அதற்கப்பால் கோடியோசனை தூரத்தில் அண்டகோளகை யிருக்கின்றது. வேதாகமங்களும் அவற்றின் சார்பானஸ்மிருதிகளும் புராணங்களும் வெவ்வேருக வெடுத்துச்சொல்லும் அண்டங்களினியற்கைமலேவென்பேமென்ருல் உண்மைதெரியும்போதுபடைப்பின் வகை பல பேதப்பட்டிருப்பதென்பதை அவற்றின் வேறுபா டாராய்ந்து உனக்குத் தெரிவித்தேன், இவ்வண்டத்தில் நூற்றெட்டுப்புவனங்களிருக்கின்றன. அவைகள் உருத்திரர்கட் கிருப்பிடமாயிருக்கும். இந்த அண்டத்தினியற்கையும் உனக்கிறைவன் கொடுத்துதவிய ஆயிரத்தெட்டண்டங்களின்றன்மையும் இவ்வாறேயாம், நீயேபோய்ப் பார்த்து யான்சொன்னதைத் தெரிந்து கொள்ளென்று சுக்கிரபகவான் சொல்லச் சூரபதுமன் கேட்டதிகசந்தோஷமடைந்தான்.

அண்டகோசப்படலம்.
முற்றிற்று.

---

## திக்குவிசயப்படலம்.

இவ்வாறு தனக்கண்டவகையின் இயல்பைச்சொல்லக்கேட்ட சூரபதுமன்தன்னுசிரியனுகிய சுக்கிராசாரியனை வணங்கிச்சிங்கமுகாசூரனேடு விடைபெற்றுக்கொண்டு தம்பியாகிய தாரகனிருந்த இடத்தையடைந்தான். சேனையின் முன்னணியில் தமையன் வருவதைக்கண்ட தாரகன் அவனை யெதிர்சென்றுவணங்கிச் சுக்கிராசாரி சொல்லியவற்றை யெல்லாங் கேட்டு அகமகிழ்ந்து அதுவே தகுதியான காரியமென்று சொல்லிக்கொண் டிருக்கையில்,தன் மக்கள் செக்கர்வான் சடைச் சிவபெருமானிடத்தே வரம்பெற்றதை யுள்ளத்தே யுணர்ந்த மாயையாகிய தாய் வரக்கண்டு அவர்கள் அவளை மும்முறை வலம் வந்துபணிந்துநின்ருர்கள். அவளைப்பெற்ற நாளினும் பெரிதகமகிழ்ந்து வாரியெடுத் துச்சிமோந்து முத்தமிட்டு ஆசிர்வதிக்க அவர்கள் தாங்கள் வேள்வி செய்ததுமுதலாகிய வெல்லாச் செய்திகளையுஞ்சொல்லினர். அதற்கவள் உங்களைக் காணவந்தேன்,நீங்கள்உங்களுக்குப் பகைவராயுள்ள இந்திரன் முதலிய தேவர்களையெல்லாம் வெல்லுவதே தகுதியென்றும், வென்றபின்னே எல்லாவுலகங்களையுங்காத்து இப்பூமியிலே பலகாலம் வாழ்ந்துவரவேண்டு மென்றும், உங்களுக்கென்ன மாயாபலங்கள் வேண்டுமோ அப்போது என்னையன்பாய் நினைத்தால் வந்து தருகின்றே னென்றும், உம்மைவிட் டெப்போதும் பிரியேனென்றும், ஒருவரோடொருவர் பிரியாதிருக்க வேண்டுகின்றே னென்றும் சொல்லிவிட்டுப் போய்விட்டாள்.

பிறகு சூரபதுமன் கோடிதேருடன் அவுணரை யழைத்து நாம் குபேரனது அளகாபுரிக்குப் படையெடுத்துப்போக வெற்றிமுரசறைய வேண்டுமென்று சொல்லக்கேட்டு அவர்கள் பிரமதேவன் உறங்கும் ஊழிகாலத்தில் எல்லாக் கடல்களும் ஒன்ருகக் கலந்து போவனபோற் போக, சூரபதுமனும் தம்பிய ரிருவரும் ஆலவிடமெழுந்ததுபோற் போயினர். இவ்வாறு தம்பியரும் சேனைகளும் புடைசூழச்சென்று இருநிதிக்கிழவனுகிய குபேரனது அளகாபுரியை யடைந்து தன் வரவைத் தூதுவரால் தெரிவிக்க, அத்தூதுவர் இனி சும்மாவிருப்பதே நல்லதல்ல, அவனே நமது அளகையை வளைந்து கொண்டான் நமது சேனையோடு போர்க்கெழுவதே நல்லதென்றுசொல்ல, அதைக்கேட்ட குபேரன் அச்சூரபதுமன் முதலானேர் நமதருட் பெருங் கடலாகிய பரமசிவனிடத்தே வரம்பெற்றிருப்பவர்கள், நாம் போர்செய்வதே யுத்தமல்லவென்று தன் சேனையொடும் சூரபதுமனையடைந்து வணங்கி ஆசிர் வதித்து நானுமக் கடியவனென்று சொல்லிநிற்க, சூரபதுமன் தன் தம்பியரோடும் மிகவுமகிழ்வடைந்து நின்ருன் ; அவுணர்களோ அளகையுட்புகுந்துநிதிகளையும்,மணிகளையும்,விமானங்களையும், படைகளையும், குதிரைகளையும், தேர்களையும், யானைகளையுங் கவர்ந்து போயினர்கள். அந்நகரமானது அவுணர்கள் வலிந்தடைந்து கொள்ளைகொண்டு போயினமையால் பெருவனம் யாவும் கழிந்துபோகத் திருநீங்கியகைம்பெண்ணினதுகோலமடைந்திருந்தது. தன்னை யடைந்திருந்த அளகேசனுகிய குபேரனைப்பார்த்து நமக்கிவன் அடித்தொண்டனுகவிருக்க எண்ணங்கொண்டே வந்தான். இவனை நீங்கிப் போகவேண்டுமென்று சூரபதுமன் தம்பியரும் சேனுசமுத்திரமுந் தன்னைச்சூழஅளகையை நீங்கி ஈசான திசையை யடைந்து நீலகண்டத்து நின்மல னெழுந்தருளியிருக்கும் இடமீதென மதித்து அந்த நகரைவிடுத்து இந்திரன் வசிக்குங்கீழ்த் திசையை நாடிச்சென்ருன். குபேரனே சூரபதுமன் போனபிறகு தன்னுள்ள நாணி ஆறலைப்பார்போல அவுணராற் பொலிவிழந்த அவ்வளகாபுரியை மீண்டு மடைந்தான். இந்திரன் தன்னகருக்குச் சூரபதுமன் வருவதைக்கேட்டுப் பயந்து விண்ணிற்சென்ருன். சூரபதுமனே அவ்விந்திரனகரை அக்கினிக்கிரையாகக்கொடுத்துவிட்டுத் தன் சேனைகள் புடைசூழ்ந்துவர அக்கினிதேவனிருக்கும் தென்கீழ்த்திசையை யடைந்தான். அதைக்கண்ட அக்கினிதேவன் பெருங்கோபமடைந்து இலட்சம்போர்வீரர் தன்னைச்சூழப்போர்செய்யும்படி சூரபதுமனை யெதிர்ந்தான். சூரபதுமனேடுவந்த அவுணர்சேனைகளால் அக்கினிதேவனேடுவந்தசேனைகள் சின்னபின்னமாகச் சிதைந்தழிந்தன. அதைக் கண்ட அவ்வக்கினிதேவன் இச்சூரபதுமன் சேனைகளையெல்லாம் நாசமாக்குகின்றேனென்று கோபித்தெழுந்து உலகங்களையெல்லாம் அழிக்கும் பேருருக் கொண்டு அவ்வவுணர் சேனைமுழுவதும் நெருங்கிவளைந்து சட சடவென்னு மொலியுடன் புகுந்து நாசப்படுத்துவதைக்கண்ட தாரகன் கோபங்கொண்டு தன்கையிலிருக்கும் வில்லைவளைத்து நாணேற்றி அவ்வக்கினிதேவனையும் அவனுக்குத் துணையாகவந்ததேவர்களையும் இக்கணத்திலே யழிக்கின்றேனென்று பாசுபதத்தை யெடுத்து அருச்சித்து வணங்கிவிடத் துணிந்தான். அதைக்

கண்ட அக்கினிதேவன் நெஞ்சங்கலங்கி நெட்டுயிர்ப்பெறிந்து இப்படைக்கல வரசு உலகத்தை யெல்லாம் படைக்கும் பிரமனையும் அழிக்குமே! என்னையும் சுடுமே! என்செய்வேனென்று ஒன்றுந்தோன்றாமற் பயந்து தன் பேருரு வொடுங்கி நின்று நடுநடுங்கித் தாரகனை யெதிர்ந்தடைந்து இரண்டுகைகளை யுஞ் சிரத்தின்மேற் கூப்பிக்கொண்டு உலகையாக்கி யளித்தழிக்கும் எமது பெருமானாகிய நீலகண்டத்து நின்மலனது பாசுபதப்படையை என்மேல் விடுக்க எண்ணினாயே! எந்த வுலகத்திலுள்ளவர் உயிரும் வல்லமைகளு மிப் படைக்கலத்தின்முன்னிற்குமோ! இது என்னைமாத்திரங் கெடுப்பதல்லாமல் உலகத்தையெல்லா முடித்துவிடுமே! இவ்வுலகத்தைச்சிருட்டிக்கின்றேனென் றுசொல்லுகின்ற பிரமன் முதலானோரையும் அழித்துவிடுமே! இப்படைக் கலமோ மிகச்சிறந்ததேயன்றோ! உலகத்தை யெல்லாம் அழித்துவிடுவதனால் அப்படைக்கல வரசும்பழியெய்துமே! என்சிறுபிழை பொறுத்தருளவேண்டு மென்று வணங்கிநின்றான். அதைக்கண்ட தாரகன் தன்னைச்சரணமடைந்த அக்கினிதேவன்மேல் அப்பாசுபதத்தை விடாமற் கோபந்தணிந்து நின்றான். அவுணர்களோ அக்கினிதேவனைச் சூழ்ந்துவந்து இவனை யெறியுங்கோள்! கொல்லுங்கோள்! குத்துங்கோள்! என்று சுற்றிக்கொள்ள, அவர்களை யெல் லாம் விலக்கி அக்கினிதேவனைப்பார்த்து நீ நம்முடைய ஏவலில் நிற்கவேண்டு கின்றேன், உனக்குப் பிராணபிக்ஷைகொடுத்தேன், உன்னுடைய நகரத்துக் குப்போவென்று அவனை யனுப்ப, அவன் சேர்வதற்கு முன்னமே அவுணர்கள் அவ்வக்கினிதேவனுடைய நகரத்துட்சென்று அங்குள்ள செல்வங்களை யெல் லாங் கடல்மீனைப்பிடிக்கும் வலையைப்போல வாரிக்கொண்டு மீண்டார்கள். அக்கினிதேவனும் தன்னகருக்குச் சென்றான். சூரபதுமன் தன் தேர்ப்பாகனா கிய பலிங்கனென்பவனை யழைத்து நமதுசேனை இனித் தென்றிசைக் கடவு ளாகிய நமனுடைய நகரத்திற்போகச் செலுத்தவேண்டுமென்று சொல்ல, அவனுஞ்சூரியனுடைய ஒற்றையாழியந்தேரும் நாணங்கொள்ள அச்சூரபதும னது சேனை நடத்திச்சென்றான். அதைக்கண்ட சேனைகள் தாமும் ஆரவா ரித்தன, முரசவாத்தியங்களுமெங்கு மாரவாரித்தன. யானை, தேர், குதிரை முதலிய வெல்லாம் வழிக்கொண்டு சென்றன, புழுதி யெங்கு மூடிக்கொண்ட ன, துவசமெல்லாம் வானத்தைச் சூழ்ந்துகொண்டன. நமது காவலையுடைய நகரத்தின்கண் காசிபமுனிவருக்கு மாயையின்பாற் பிறந்த சூரபதுமன், சிங்க முகாசுரன், தாரகனென்போரும் அவர்களைச் சூழ்ந்த அவுணர் வெள்ளமும் படையெடுத்து வந்தமையால் நாமென்செய்வது! முன்னே குபேரனும் அக் கினிதேவனும் அச்சூரபதுமன் முதலானோருடைய பெரிய வல்லமையைக் கண்டே பயந்து அவர்களைச் சரணமடைந்து பிழைத்துப் போனார்களே! நாமும் அவ்வாறேசெய்வது நலமென்று சொல்லிஅந்தத் தருமராசனும் தான் எருமைக்கடாவிலேறி தன் சேனைகள் புடைசூழவந்து சூரபதுமன் முதலா னோரை யடைந்து வணங்கிநிற்க, அவனைச் சூரபதுமன்கண்டு உன் பரிவாரத் துடன் உனக்குரிய பணிகளைச் செய்துகொண்டிருவென்று கட்டளையிட்டுப் போனான்.

பின்பு அவுணர்கள் அக்காலனூரை யடைந்து அங்குள்ள பொருள்களை யெல்லாங் கவர்ந்து போனார்கள். சூரபதுமனோ கூற்றுவன் தன் பெருவலி குன்றித் தன்னைச் சரண்புகுந்ததும், அவன் வணங்கிப் போனதுங்கண்டுமகிழ்ந்து தன் நால்வகைப் படையுஞ் சூழ்ந்துவர நிருதிமேற்செல்ல வெண்ணங் கொண்டு போர்க்கெழ, நிருதியும் இதை யறிந்து இவர்களோடு போர்செய்வதோ முடியாத காரியம்! போர்செய்தாலும் வசையுண்டாகுமே யல்லது புகழுண்டாகாதே! அவர்களோடு சிநேகங் கொள்வதே முறையாமென்று துணிந்து தன் சேனையோடு மவர்களை யெதிர்கொண்டுபோய் சூரபதுமனைச் சேவடி தொழுது வணங்கிப் பின்பு தாரகனையடைந்து உன்னுறவாவோன் யானென்று சொல்ல, அந்நிருதியை விட்டுவிட்டு வருணனும் வாயுவும் வாசஞ்செய்யும் திசைகளுக்குச்சென்று அவர்களுடையநகரத்தை யெல்லாஞ்சூறையாடி யழித்துச் சத்தபாதளங்களினுஞ் சென்று தானவர் முதலானோர் தன்னை வணங்க, அவர்களுக்கு அருள்செய்து நாகராசனுலகத்தை யடைந்து அவன் கோபித்துத் தன்னொடு போர்செய்யும்படித்துணியக்கண்டு தன்சேனையால் அந்நாகராசன்சேனையை யெதிர்த்துவென்று, அவனுலகத்தில் ஒருநாள் வசித்து அவ்விடத்தே நாகராசன் தேவர்கள் கொண்டுவந்து வைத்திருந்த அமுதத்தை வலிந்துவாங்கித் தன் தம்பிமாரோடு மேன்மையாகத் தானும் புசித்து அந்நாகலோகத்தைநீங்கி ஏனயபிலங்களுக்குஞ்சென்று அங்கு தனக்குநேர்ந்த விருந்தினை விருப்பத்தோடு மேற்று, தன் போர்வீரரோடும் தன் தம்பியரோடும் நால்வகைச்சேனை தன்னைச் சூழ்ந்துவரச் சென்ற திசைகளி லெல்லாம் வெற்றியே கொண்டு புகழை நிறுத்தி விரைந்து மீண்டுந் தான் மண்ணுலகத்தை நாடிவந்தான்.

சூரபதுமன் தன் சேனாசமுத்திரஞ்சூழப் பாற்கடலடைந்து திருமாலை வளைந்துகொண்டான். இவ்வகையாக அச் சூரபதுமனது சேனை சூழ்ந்து கொண்டதை யறிந்ததிருமகளும் நிலமகளும் பயந்து தம்மிறைவனை மார்போடுறத்தழுவிக்கொண்டதைப் பார்த்து நீங்க ளஞ்சவேண்டாமென்று அபயமளித்துத் தான் யோகநித்திரையை விட்டெழுந்து ஆலவிடம்போற் கோபித்து நம்மையும் கொடியவராகிய அவுணர்கள் பகைக்க நடந்தனரோயென்று தோளோடுதோள்தட்டி யாரவாரித்துக் கருடன்மேலேறி சங்குசக்கர முதலிய பஞ்சாயுதங்களையுக்தரித்து அவுணர்கள் முன்சென்று சார்ங்கமென்னும் வில்லைவளைத்து நாணோசையால் அவர்கள் மனங்கலங்கச்செய்து பல பாணங்களையுந்தொடுத்துக் கார்காலத்து மேகம்போற் பொழியவே,பகைவராகிய அவுணர்கள் தேரும் யானையும் குதிரைகளு மிழந்ததன்றிப் போரில் முயற்சியும் படையும் ஒழிந்தனர். அவர்களில் சிலர் தலையும் தோளும் காலும் கைகளும் இழந்து வருந்தினர். உதிரக்கடல் பெருக்கெடுத்துப் பூமியின்மேல் பிணங்கள் மலைபோற் குவிந்தன. இவ்வாறு திருமால் அவுணரோடு போர்செய்யக்கண்டு பொறாது, தாரகன் தன் சேனைகளை யஞ்சவேண்டாமென்று மேருமலையை யொத்த தன் பெரியவில்லையெடுத்துத் தேரிலேறி அவர்மேல் அநேக பாணங்களைத் தொடுத்துப் புங்கானுபுங்கமாகச் சோனைமாரிபோற் சொரிந்தான். விஷ்

னுவும் அத் தாரகன்மேல் தானும் சலியாமல் கூர்மையான வேலைப்போன்ற
கொடிய பாணங்களை விடுக்கத் தாரகனும் அவர்மேல பலவகையான பாணங்
களைச் சொரிந்ததன்றி, அவரேறியிருந்த கருடன்மேலும் அநேக மாயிரம்
பாணங்களைச் சொரிந்தான். அக்கருடனை அப்பாணங்களோ தன்னைப் பாம்பு
கள் சூழ்ந்துகொள்வதுபோற் சூழ்ந்துகொண்டன. இவ்வாறு போர்செய்வது
கண்டு அத்திருமாலும் மாயாவுருவம் பலகொண்டு அத்தாரகனோடு போர்
செய்யத் தாரகனும் தன் தாய்தந்தமந்திரத்தை மனத்திலுன்னி அவ்வாறு பல
வுருக்கொண்டு பன்னிருநாள் விடாமற்போர் செய்துவரவே, திருமாலும் கைம்
மிஞ்சி அவனேறிய தேரும் குதிரையும் அத் தேரைச்செலுத்தும் பாகனும்
கைபிடித்த வில்லும் கெட்டொழியப் பல பாணங்களைத் தொடுத்தெய்து
நாசப்படுத்தத் தாரகன் கையிலொரு தண்டெடுத்து தேவர்க ளஞ்சவும் அண்
டங்கள் குலுங்கவும் ஆரவாரித்து அவ்விஷ்ணுவை யெதிர்ந்துசெல்ல அதனை
யறிந்த அவ்விஷ்ணுவும் அநேக மாயிரம்பாணங்களைச்சொரிந்து அவற்றையெல்
லாம் தான் பிடித்திருந்த கதையால் விலக்கியும் முனைந்துவருவதுகண்டு சுதரி
சன மென்னும் திருவாழியை அத்தாரகன் நாசமுறும்படி அவ்விஷ்ணுமூர்த்தி
விடுக்க, அச் சக்கரப்படையும் பரமசிவனது வரத்தினாற்சென்று அத் தாரகன்
கழுத்தில் மாலைபோல் சூழ்ந்து விளங்கியது. அதைக்கண்ட திருமாலும் அத்
தாரகனெதிரேவந்து உனக்கொப்பாவார் பிறரில்லாமல் விளங்கினாய்! என்
கையிலிருந்துவந்த சக்கரப்படையே உனக்கு ஆரமாயிற் றென்றால் யான்செய்
யும் போருமினியுண்டோ! உன் வல்லமையே இவ்வளவானால் உனக்கு முன்
பிறந்த மற்ற இருவரையும்பற்றிச் சொல்லவேண்டுவதுண்டோ! நீங்கள் பரம
சிவனைக் குறித்துப் பலநாள் மாதவஞ்செய்து உங்களைப்போலும் வலிபெற்ற
வர் உலகத்தி லொருவருமில்லை; நீங்கள் என்தோழரே யென்றுசொல்லி
ஆசிர்வதித்துச் சென்றான். இதைக்கண்ட அவுணர்கள் எல்லாம் சந்தோஷ
மிகுதியால் ஆரவாரித்தனர். தேவர்கள் அஞ்சி யகன்றோடிப்போயினர். இவ்
வாறு திருமால் விடைபெற்றுச் சென்றபிறகு தாரகன் வேறொரு தேரிலேறிக்
கொண்டு வாகைமாலைசூடித் தன் தமையனெதிரேசெல்ல, அவனுநடந்த
செய்தி யனைத்துமறிந்து அவனை மார்பொடு பொருந்தத்தழுவித் தன் சேனா
சமுத்திரம் பின்றொடர்ந்துசெல்ல அதைக்கடந்து சக்கரவாளகிரிவரையிலும்
போய் ஆகாயமார்க்கமாய்வந்து சூரியன்முதலிய தேவர்கள் ஆசிர்வதிக்கத் துற
க்கோட்டையடைய, அதைத்தூதுவர் தேவலோகத்திலேசென்று இந்திரனுக்
குத்தெரிவிக்க அக்கடவுளஞ்சி யறிவுகெட்டு நம்மை யெதிர்க்கவந்த இவனோடு
போர்செய்வேனாயின் இவ்வுயிருக் கிறுதியுண்டாகும், போர்செய்யாதிருப்பே
னாயின் துன்பக்கடலில் முழுகநேரிடும், அற்பமாகிய செய்கையினால் நேர்ந்த
செய்கை யென் செய்கையால் வருமியற்கையே யல்லாமல் வேறுசெய்கை
யொன்றுமில்லை, பிறர் செய்வதுந் தன் செய்கையேயென்று கல்வியறிவுடைய
பெரியோர்களும் எடுத்துச்சொல்வார்கள். செல்வம் வருங்காலத்தில் களித்தும்
அச்செல்வ நீங்கியகாலத்தில் துன்பமடைந்தும் பாசபந்தத்தில் அருமையா
யுணர்ந்த கேள்விச் செல்வமடைந்தோர் வருந்துவார்களோ 'வருகுவதுதானே

வரும்' என்றபடி வருவதை நாம் தடுக்கலாமோ, தடுக்கமுடியாதாகையால் போர்செய்து ஆவி நீங்கேன் மயங்கி நில்லேன் பகைவரால் செய்யப்படும் நாணமும் நகையுங் கொள்ளேன், நான் சூரபதும னெதிரிற் சென்றால் அவ னென்னைச் சிறையிடத் துணிந்து விலங்கிவிடுவானே யென் றாலோசித்து குயிலுருக் கொண்டுபோய்விட்டான். இப்படி இந்திரன் குயிலுருக்கொண்டு மறைந்துபோக அவுணர்கள் இந்திரனைக் காணாமல் வருந்தித் தேவர்க ளெல் லாரையும் வருத்தி அவர்களைத் தங்களரசனிடம் அழைத்துக்கொண்டுவந்து விட அத்தேவர்கள் சூரபதுமனைப் பார்த்து நீ அவுணரிற்றோன்றி அருந்தவம் செய்து பரம்பொருளாகிய சிவபெருமா னருள்பெற்றுத் திக்குப்பாலகர் யாவ ரையும் வெற்றிகொண்டுமீண்டாயென்றால் எங்களை இவ்வாறு வருத்துதற்கிடங் கொடுப்ப துனக்குத் தகுதியோ! நீகோபங்கொள்வையே யானால் உலகத்தின் கண் யமனுமிருப்பானோ! மற்றைத்திசைப் பாலகரும் தேவர்களும் பிழைப் பார்களோ! உலகமு மழியாதோ; இன்றுமுதல் நாங்கள் விரும்பும் கடவுளுநீ, அரசனுநீ, எங்களுக்குப் பற்றுக்கோடாயிருக்கும் உறவுநீ, உன்னுடைய குற் றேவல்செய் துயிர்வாழ்கின்றோமென்று விண்ணப்பிக்க, அதைக்கண்ட சூர பதுமன் உங்கள்செய்கை நன்றாயிருக்கின்றதென்று நகைத்து அவர்களை விலங்கினின்றும் விடுவித்து இனி நமது குற்றேவல்செய்து வாருங்கோ ளென்று கட்டளையிட்டு இந்திரனது செல்வத்தையெல்லாம் தன் சேனைகளைக் கவரக் கட்டளையிட்டு அவர்களுடன் மகலோகமுதலியவற்றிற் சென்றான். அவை மார்க்கண்டேயர் முதலானோர் வாசஞ்செய்யும் பதங்களாகையால் அவை களைக் கடந்து பிரமலோகஞ் சென்றான். அதைக்கேட்ட பிரமதேவனும் நெஞ்சங் கலக்கமடைந்தான்.

அவன்வர கலக்கமடைந்த பிரமன், மெய்யுணர்ச்சியை யுடையார் பலர் நான்குவேதங்களையு மோதிக்கொண்டு தன்னைச்சூழ்ந்துவர அசுரசேனையை யடைந்து சூரனைநோக்கி நீ யிங்கேவர நானென்னதவஞ் செய்தேனோ! அறி யேனென்று பலவுபசாரவார்த்தைகளைச் சொல்லி யாசீர்வதித்து நீயோகத்தை வார்சடைக் கண்ணுதற் பெருமானருளால் சகல பாக்கியங்களையும் பெற்றுச் சிறந்தாய்,மேலும்நீ உனக் கிளையவனுகிய தாரகனைக்கொண்டே திருமால் முத லிய தேவர்களையெல்லாம் போரில்வென்று வெற்றிசிறந்தாய்,நானோ உன்னைப் பெற்ற காசிபனுக்குத் தந்தையாகையால் உனக்கு மூதாதையாகின்றேன். நானுனக் கன்னியனல்லே னென்றுசொல்லி அவன் தம்பியருக்கு வேண்டிய வில்லும் பாணங்களும் தேர்களு முதவி விடைபெற்றுநிற்க, அவன் பிரமனைப் போகவிடுத்துப்பின்புவைகுந்தபதஞ்சென்று அப்பதத்திலிருக்கும் திருமாலால் உபசரிக்கப்பட்டு அவரையங்கே நிறுத்திவிட்டுப் பரம்பர னெழுந்தருளிய சிவ லோகத்தை யடைந்து, தன் சேனைகளை யெல்லாம் நிறுத்திவிட்டுத் தன் தம் பியரோடுந்தரிசித்து, நந்திதேவர்கட்டளைபெற்றுட்சென்றுமலையரையன்மகளை யோர் பாகத்திலுடைய மணிகண்டத் தெள்ளமுதை வணங்கிநிற்க, இறைவ னும் ஏனையண்டங்களை யெல்லாம்சென்று வென்று அரசாண்டிருவென்று கட் டளையிட, அக்கட்டளையையேற்றுப் புறத்தேயிருந்த தன் சேனையைச் சூழ்ந்து

அண்டகோளகையை யடைந்து அங்குள்ள வயிரவர் முதலிய உருத்திரகணங் களை யெல்லாந் தரிசிக்க, அவர்கள் அப்புறத்தண்டத்திற்குச் செல்லும் வாயி லைக்காட்டி விடுக்கச்சென்று இவ்வண்டத்தைப்போல் அங்குள்ளாரையும்வெற்றி கொண்டு சிறந்து அங்குள்ள செல்வங்களையெல்லாம் பெற்றுத் தன்னிடத் திருந்த அவுணர்கள் பலரையும் அங்கங்கே யரசுசெய்துவர நிறுத்தித் தன் தம்பியருடன் நாற்படைகளும் சூழ்ந்துவர அண்டப் பித்திகையிற் சென்று தேவலோகமடைந்தான்.

திக்குவிசயப்படலம்
முற்றிற்று.

---

## எதிர்கோள்படலம்.

சூரபதுமன் தேவலோகமார்க்கமாய் வருவதை மாயையாகிய அவனது தாயைப்பெற்ற அவுணர்க் கரசன்கேட்டு, தன் சேனையோடு களிப்படைந்து தன் குலகுருவாகிய சுக்கிராசிரியனைக்கண்டு தன்வருகையைச் சூரபதுமனுக் கறிவிக்கும்படி வேண்டிக்கொள்ள, அவனும் சூரபதுமனையடைந்து அவனா லும் அவன் தம்பியராலும் வழிபாடுசெய்யப்பட்டு அவர்களைநோக்கிக் குச லம்வினவி ஆசிர்வதித்து யான் சொல்லவேண்டியதொன் றுள்ளதென்று சொல்வானாயினன். உன் தாயாகிய மாயையைப்பெற்ற அவுணர்க் கரசன் மிகக் கல்விகேள்விகளில் வல்லவன், அசுரரையெல்லாம் காப்பாற்றுகின்றவன், எங் களுக் கெல்லாம் ஒரு துணையானவன், இந்திரனோடு பலமுறை போர்செய்து புழுங்கி மாரிகாலத்தில் மாளுங்கதிரைப்போல மனம்வருந்திக் கிடந்தவன், அப்படிப்பட்டவன் நாற்றைப் பூமியிலிட்டு விளைவுகாணாமல் வருந்திய வறிய வனைபோலத் தன் சிறுமைநீங்க உன்னையே யென்றும் பார்த்துக்கொண்டிருப் பான். நீ பரம்பரனாகிய பரமசிவனைநோக்கி யாகஞ்செய்ததும் அவனருளிய வரங்களைப் பெற்றதும், கேட்டு மகிழ்ந்து துன்பந்தவிர்ந்து தோள்கள்பூரித்து உன்னைக் காணும்படியே அதோ வருகின்றானென்று காட்டக்கண்டு, சூரபது மன் மகிழ்ந்து மாதாமகனைவணங்கி நயவார்த்தைகளைப்பேசி விடைபெற்றுப் பூலோகமே வந்துசேர்ந்தான். அதைக்கண்ட பிரமனும் இந்திரனும் மற்ற தேவரும் முனிவரும் திருமால் யோகநித்திரைசெய்யும் திருப்பாற்கடலை யடைந்து, தாம் சூரபதுமனால் வருந்துவதை யெடுத்துச்சொல்லி இனி யென் செய்வதென்ன, அதைக்கேட்ட திருமாலும் இது அற்பத்தன்மையுடைய தக் கன்செய்த யாகத்தின் பிரயோசனமே யல்லாமல் வேறல்ல, இதை யார்தான் தடுக்கவல்லவர், அச்சூரனோ முப்புரம்பொடித்த சேவகப்பெருமான் திரு வருள் பெற்றிருக்கின்றான். சகல அண்டங்களையும் வெற்றிகொண்டு சிறந் திருக்கின்றான், நம்மால் வெற்றிகொள்ளப் படுபவனல்லன். அவனை நாமெல் லாம் கண்டுகொள்வதே நலமென்று அப்பிரமன்முதலிய தேவர்களுடன் விரை ந்து சூரபதுமனையடைந்து ஆசிர்வதித் துபசரித்துநிற்க, அவருள் பதினொரு கோடி யுருத்திரரைக்கண்டு இவர்கள் யார்? எனக்கு விளங்கச்சொல்லவேண்டு மென்று கேட்க, துளவமாலை யணிந்த திருமாலோ சொல்வதாயினன்.

எதிர்கோள்படலம் முற்றிற்று.

---

# உருத்திரர்கேள்விப்படலம்.

நான்முகங்கொண்ட பிரமன் முன்னொரு கற்பத்தில் சொர்க்க மத்திய பாதாளமென்னும் மூவுலகத்தினைப் படைத்தும் எல்லா வுயிர்வருக்கங்களை யும் படைத்துவிட்டோ மென்று அகங்காரங்கொண்டு நின்று எப்பொருளு க்கு மூலகாரணாகிய பரமசிவனது திருவிளையாட் டென்பதனைச் சிறிது மறியாமல் மதிமயங்கி யிருந்தான். இறைவன் திருவடித்தியானத்தை யொழிந்து பிரமன் அகந்தைகொண்டதனால் அவன் படைத்த அவ்வளவாகவேயிருந்ததல் லாமல் சராசரங்களாகிய உயிர்கள் பெருகாதிருக்கவருந்தி யாது குறைசெய்து விட்டோம்; சிருட்டி திதி சங்காரம் திரோபவம் அனுக்கிரக மென்னும் ஐந் தொழிலையும் திருவிளையாட்டாகவே கொண்டு இரணியமன்றில் ஆனந்தத் தாண்டவஞ்செய்யும் பரமசிவனது திருவடித்தியானத்தைமறந்துவிட்டோமே, இனி அவனருள் பெற்றாலன்றிச் சிருட்டித்தொழில் கைவராதே யென்று முக் கட்பெருமானாகிய பரமசிவனைநோக்கி யருந்தவஞ் செய்தான், அப்படி அருந் தவஞ்செய்தும் எம்பெருமான் வரப்பெருமையால் என்னிடத்தே இச்செய்தி யனைத்தும் வெளிப்படுத்தினான். பிரமனும் நானுமாகச் சிந்தைவருந்துகையில் எங்களிருவராலு மெட்டப்படாத இமையவர் பெருமான் பிரமன் கனவின் கண் வெளிப்பட்டு வருந்தவேண்டாம், எம்மை மறந்தமையால் உனக்குப் படைப்புத்தொழில் கைகூடாமற் போய்விட்டது, நமது பதத்திலிருக்கும் உருத்திரகணங்களை உம்மிடத்தில் அனுப்புகிறோம், அவர்கள் துணைவலியால் நீ முன்போலும் சிருட்டித்தொழில் நடத்திவருவை எழுந்திருவென்று கட் டளையிட, பிரமனும் விழித்தெழுந்து சிவத்தியானத்துட னிருக்கையில் அவ னது நெற்றியின்வழியாகப் பதினொரு உருத்திரர்கள் சாரூபம் பெற்றவர்களாய் அடைந்தார்கள். நீங்கள் வந்தகாரண மென்னவென்று அவர்களைக் கேட்க, நீ சிருட்டித்தொழிலை மறந்து வருந்தியதை யுணர்ந்து எம்பெருமானாகிய பரம சிவன்உனக்குப்படைப்புத்தொழில் கைகூட எங்களையனுப்பினானென்றார்கள். உயிர்களைப் படைக்கும் வகையைக்காட்டுங்கோ ளென்றுசொல்ல, அதைக் கேட்ட அப்பதினொருவரும் தம் முருவம்போலவே பதினொருகோடி உருத்திர ரைப் படைத்துக்காட்டி விடைபெற்றுத் தமது பதங்களைப்போ யடைந்தார் கள். அவர்களாற் படைக்கப்பட்ட பதினொருகோடி உருத்திரரும் தேவர் களோ டெண்ணப்பட்டு வாழ்ந்திருக்கின்றனர். இவர்களே பவர் முதலாகிய உருத்திரராவாரென்று சொல்லிநிற்கச் சூரபதுமன் இதுதானோ இவர்கள் வரலாறென்று கேட்டு மகிழ்ந்திருந்தான்.

உருத்திரர்கேள்விப்படலம்

முற்றிற்று.

## நகர்செய்படலம்.

சூரபதுமன் அங்கேயிருந்த விசுவகர்மாவை நோக்கி நாம் வசிக்கத்தக்க நகரமொன்று சிருட்டிக்க வேண்டுகின்றேனென்ன, அதைக்கேட்ட அவ்விசுவகர்மாவும் நீர்வசிப்பதற்குரியவிடங் காட்டினுல் படைக்கின்றேனென்று சொல்ல, அருகே கேட்டிருந்த சுக்கிராசாரி அந்த நகரங்களுக் கெல்லையையெடுத்துச் சொல்லக்கேட்டுத் தென் சமுத்திரக் கரையை யடைந்து கடலின் நடுவில் ஒரு நகரத்தைப் படைத்து விரமகேந்திரபுரமெனப் பெயரிட்டு அந்நகரத்தின் நடுவில் சூரபதுமனுக்கு ஒரு இராசமாளிகையுண்டாக்கி அந்நகரைச்சூழ ஏமபுரம், இமையபுரம், இலங்காபுரம், நீலபுரம், சுவேதபுரம், அவுணர்புரம், வாமபுரம், பதுமபுரமென்னும் எட்டு நகரங்களையும் படைத்துக்கொடுத்துச் சிங்கமுகாசூரனுக்கு ஆசுரபுரமென்ெருரு நகரத்தை நிருமித்து மற்ற சமுத்திரங்களிலுள்ள திவுகளிலெல்லாம் அச்சூரபதுமனது சேனுவீரர்கள்வசிக்க நகரங்களைப்படைத்து மேருமலேக்குத் தெற்கே தாரகனுக்கு மாயாபுரமென்ெருரு நகரத்தையுண்டாக்கி அச்சூரபதுமனை யடைந்து தான் சிருட்டித்து முடித்துவிட்டதாகத் தெரிவிக்க அதைக்கேட்டுச் சூரபதுமன் தன் சேனையுடன் மகேந்திர நகரமடைந்து இராசமாளிகைக்குட் பிரவேசித்தான்.

இவ்வாறு சூரபதுமன் இராசமாளிகையை யடையக்கண்டு பட்டாபிஷேகஞ் செய்யக்கருதி அதற்கு வேண்டிய பொருள்களை யெல்லாம் சேகரித்துக்கொண்டுவந்து அவனைப் பாற்கடலின் நீரினுல் மஞ்சன மாட்ட, அவனும் அம்மஞ்சன நீராடிப் பீதாம்பரமுடுத்து நவரத்ன கசிதமான பொன்னுபரணம் பூண்டு தம்பியிருவரும் புடைசூழ்ந்துவரச் சிங்காதனத்தில் வீற்றிருந்து நிருதர்களும் சுக்கிராசாரியும் முனிவர்களும் புகழவும், தேவர்கள் துதிக்கவும், இந்திரனுக்கு மனந்தளரவும், திருமாலுக்குச்சூட்டத்தக்க செல்வத் திருமுடியென்றுசொல்லத்தக்க மணிமுடியைப் பிரமன் சூட்ட அவுணர்களெல்லாம் அச்சூரபதுமனுடைய பாதங்களில் விழ்ந்து வணங்கினர்கள். சில முனிவரும் தேவரும் பொன்னுலாகிய மலர்மழை பெய்தனர். அப்போது சூரபதுமன் தம்பியரையும் பிரமன் மாலென்னும் இருவரையும் அருகேயிருக்கக் கட்டளையிட, அவ்வாறே யவர்கள் அவன் பக்கத்திலிருந்த ஆசனத்தி லிருந்தார்கள். குபேரன் களாஞ்சி யெடுத்துத்தாங்கியும், வாயு கவரிவீசிக்கொண்டும், நிருதர்பெருமான் உடைவாளேந்தியும், சூரியனும் சந்திரனும் வெண்கொற்றக் குடைபிடித்துக்கொண்டும், வருணனும் அவன்மக்களும் சிற்றாலவட்ட மேந்தியும், வீணையில்வல்ல கருடர் கந்தருவர் சித்தர் தேவகானம் பாடிக்கொண்டும், யமனும் அக்கினிதேவனும் பொற்பிரம்பேந்திச் சந்தடி விலக்கியும், நிருதி கோடிகமேந்தியும், பிருகஸ்பதியும் சுக்கிராசாரியும் மற்ற முனிவரும் மங்கல நீரைப் புரோக்ஷித்துக் கொண்டும், அரம்பை, மேனகை, திலோத்தமை, ஊர்வசி முதலாகிய அரம்பாஸ்திரீகள் தேசிகம் வடுகு சிங்களமென்னும் நடன விசேடஞ் செய்துகொண்டும், அச்சபையில் இருந்தனர். இவ்வாறு சூரபதுமன் கொலுவிற்றிருந்தான். அப்படிக் கொலுவீற்றிருந்த சமையத்தில் சூரபது

மன் திருமாலை நோக்கி நீ யென் பிதாமகனு யிருத்தலால் நான் அழைக்குந் தோறும் வந்து போகவேண்டு மென்றும், பிரமனை நோக்கி நீ தினந்தோறும் காலையில் திதி வார நக்ஷத்திரம் கரண யோகங்களை வருத்துப் பஞ்சாங்கஞ் சொல்லிப்போக வேண்டுமென்றும், சூரியனை நோக்கி நீ இளங் கதிர்பரப்பி, கிழக்குமேற்காக நிற்குங் கோபுரத்தின் வழியாகச் சென்று திரிய வேண்டுமென்றும், சந்திரனைப்பார்த்து வளர்ச்சியும் குறைவுமில்லாமல் என்றும் பூரணகலையோடுகூடி நமது நகரத்திற் பிரவேசிக்கவேண்டுமென்றும், அக்கினிதேவனைப் பார்த்து நமது நகரத்தில் யார் நினைத்தபோதிலும் அவர்களுக்குக் குற்றேவல்செய்து போகவேண்டுமென்றும், யமனைப்பார்த்து நீகனவிலும் நமது யானை குதிரை தேர் காலாள் என்னு நாற்படைகளையும் பிறவுயிர்களைக் கவருதல்போற் செய்யக்கூடாதென்றும், வாயுதேவனைநோக்கி நமது நகரத்தில் வசிப்பவர் யாவரும் அணிந்து நீக்கிய மலர்மாலை, ஆபரணம், ஆடைகள் முதலியவற்றை விரைந்து மாற்றவேண்டுமென்றும்,வருணனைப்பார்த்து சுகந்த வஸ்துக்களைப் பனிநீரிற்கூட்டி நமது நகரத்தில் தூவவேண்டுமென்றும், இந்திரனைப்பார்த்து திருமகள் கணவனேடும் மற்ற தேவர்களோடும் திக்குப் பாலகரோடும் நமது கட்டளைதவறுமல் வந்து குற்றேவல்செய்து போக வேண்டுமென்றும் கட்டளையிட அவர்களும் அவ்வாறே செய்துவருவோமென்று விடைபெற்றுப்போக அரசுசெய்துகொண்டுவந்து ஒருநாள் தான் திருக்கலியாணஞ் செய்துகொள்ளநினைத்துத் தெய்வத்தச்சன்மகளாகிய பதும கோமளையென்பவளைச் சுக்கிராசாரியாரால் மணம்பேசிமுடிப்பித்துப் பிரமன் முதலிய தேவர்களும் போற்றும்படித் திருமண நேர்ந்துபின்புதேவர்கள் அசுரர், கந்தருவர், சித்தர், கின்னரர், இயக்கர், நாகர், கிம்புருடர் முதலியோர் அருமையாகப்பெற்ற புத்திரிகளைக் கலியாணஞ் செய்துகொண்டு இன்பமடைந் திருந்தான். இவ்வாறிருக்கையில் தன் தம்பிமாராகிய சிங்கமுகாசூரனுக்கு யமனுடையமகளாகிய விபுதை யென்பவளையும், யானைமுகங்கொண்ட தாரக னுக்குநிருதிமகளாகிய சவுரியென்பவளையும் திருமணஞ்செய்வித்துஅவர்களைப் பார்த்து உங்களுக்காகப் படைக்கப்பட்டிருக்கும் ஆசுரபுரத்தையும் மாயா புரத்தையும் அடைந்து ஒவ்வொருவரும் இரண்டுகோடி வெள்ளம் சேனுசமுத்திரம் சூழ்ந்துவர அரசாண்டு வாருங்கோளென்று கட்டளையிட்டு, பின்பு தன் சேனைத்தலைவர் பலரைப்பார்த்து நீங்கள் இரண்டுகோடி வெள்ளம் சேனைகளுடன் தீவுகளிடத்திலும் சமுத்திரங்களிடத்திலும் கட்டப்பட்டிருக்கும் பட்டணங்களிற்சென்று நமதாணையைச் செலுத்திவரவேண்டு மென்றும், ஆறு கோடிவெள்ளஞ் சேனையுடன் எட்டுத்திக்கிலும் வானுலகேழிலும் இப்பாலுள்ள பாதலங்களிலும் சென்று தன்னுணையை நடத்திவரச் சில சேனைத் தலைவரை யனுப்பிவிட்டு, எங்குந் தன் னுக்கினுசக்கரமே செல்லத் தானரசு செய்யும் மகேந்திரபுரத்தில் இலட்சம்வெள்ளம் சேனைகளை யிருத்திப் பின்பு தன் இராசதானிக் கருகே எண்டிசையிலுமுள்ள நகரங்களுக்குத் தலைவராக யானை குதிரை யாளி கரடி புலி பன்றி சிங்கம் மான் என்னும் எட்டு மிருக முகங்களையுடைய அவுணவீரரை நியமித்துத் தன் கோட்டைவாயிலிலும் மதில்களிலும் நகர் நடுவிலும் இராசமாளிகைகளிலும் அநேகம்பேரைக் காவலாக நிறுத்தித் துர்க்குணன், தருமகோபன், துன்முகன், சங்கபாலன், வக்கிர பாலன், மகிடாசூரன் முதலியோரைத் தனக்கு மந்திரிகளாக அமைத்துக்கொண்டு அரசுபுரிந்துவந்தான்.

நகர்செய்படலம் முற்றிற்று.

---

## தேவரா யேவல்கொள்படலம்.

இவ்வாறு சூரபதுமன் அரசுசெய்துவருகையில் இந்திரன் முதலிய தேவர்களும் முனிவர்களும் அவன் வசிக்கும் மகேந்திரபுரத்திலும் அவன் தம்பியர் வசிக்கும் ஆசுரபுரம் மாயாபுரமென்னு நகரங்களிலும்சென்று தங்களுக்கு அவர்களா லிடப்பட்ட குற்றேவல் செய்துவருகையில் ஒருநாள் சூரபதுமன் அத்தேவர்களையும் இந்திரனையும் வலிந்தழைத்து நீங்கள் தானவர்களுக்குத் தம்பிய ரல்லவா! அவர்களுக்குச் செய்யவேண்டிய பணிவிடைகள் உங்களுக் குரிமை யாதலால் நீங்களினிமேற் கடலிலுள்ள மீனை வலைவீசிப்பிடித்துக் கொண்டுவந்து கொடுக்கவேண்டுகிறே னென்றுசொல்ல, அச்சொல்லைக்கேட்டு மனநடுங்கி நம்மைத் தனக்கு மீன்வலைவீசிப் பிடித்துக்கொண்டு வரும்படி கட்டளையிட்டுவிட்டானே,நாமென்னசெய்வது? இப்படியும் பிரமனும் நமது தலையிலெழுதி மயிரான் மறைத்துவிட்டானே யென்று அவனிட்ட கட்டளைக்கஞ்சிக் கடற்கரையணுகி வருணனை யழைத்து நீ கடலரசனாதலால் உன்னைப் பார்க்கிலும் வலிமையுடையார் பிறருண்டோ! திமிங்கில முதலிய மீன்களை இக்கரையிற் படுத்துவையேயானல் எங்களைத் துன்பக்கடலினின்றுங் கரையேற்றினவனாவை யென்றுசொல்ல அவ்வருணனும் அதற்கிசைந்து கடலிற் புகுந்து தன்பெருங்கைகளால்வாரிக் கடற்கரையிலே மலைபோலுங் குவிக்கஇந்திரனும் தேவர்களைப்பார்த்து இவற்றையெல்லாம் எடுத்துக்கொண்டுபோவது உங்கள் கடமை யென்றுசொல்ல, அதைக்கேட்ட தேவர்களும் நடுக்கத்துடன் உள்ளம்பதைக்கக் கண்ணீர்சொரிந்து கைகுலைந்து நாணங்கொண்டு தலைமேல் மீன்சுமந்து யாவரும் நகைக்க அவுணர் செய்வதைப் பார்க்கிலும் இறந்து போவதே மிக்கநலமன்றோவென்று புலம்பியழுதுகொண்டே சூரபதுமன் அரசாளும் வீரமகேந்திரபுரத்திற்கு எட்டுத்திக்குபாலகருடன் வந்துநிற்க அவர்களைப்பார்த்துஅவுணர்கள்பரிகாசஞ்செய்யக்கண்டுஅவனதுமாளிகையையணுகி வாயிலாளரால் உத்திரவுபெற்று அவன் வீட்டிற் செலுத்திவிட அதைக்கண்ட சூரபதுமன் இன்றுமுதல் இவ்வாறே நல்லனவாகிய மீன்களைக் கொண்டுவர வேண்டுமென்று பின்னுங் கட்டளையிடத் தேவர்களும் தங்களுக் குரிய வேதவொழுக்கந்துறந்து மீன்பிடித்துக்கொண்டுவரும் வேலையாகிய துன்பக்கடலில் முழுகியிருந்தார்கள். இது கிடக்க;

தேவரா யேவல்கொள்படலம்

முற்றிற்று.

---

## புதல்வனைப் பெறுபடலம்.

அப்போது சூரபதுமன் செய்த தவத்தின் சிறப்பால் பதுமகோமளை வயிறுவாய்த்து இளஞ்சந்திரனைப்போல யமனுக்கும் யமனென்று சொல்ல ஒரு குழந்தையைப்பெறவே, சூரபதுமன் தேவர்களெல்லாரும் துன்பமடைய அவுணர்களுக் கெல்லாம் வேண்டிய பெருஞ்செல்வமெல்லாங் கொடுத்துதவினன். அவன் அக்குழந்தையைத் தொட்டிலிட்டு வளர்த்துவருங் காலத்தில்

ஒருநாள் சூரியன் கதிர் தன்மேல்படப் பொறாமல் அவனைத் தன் கையாற் பிடித்துக்கொண்டு அரவம் பிடிப்பதுபோற்கொண்டு ஒரு க்ஷணப்பொழுதில் மீண்டுதான் விளையாடிக்கொண்டிருந்த தொட்டிலின்காலிற் கட்டிவிட்டு முன் போற்படுத்துக்கொண்டிருந்தது. அதைக்கண்டதேவர்களும் மனம்வருந்திக் கலக்கமடைந்தார்கள். சூரியனோ ஆகாயமார்க்கமாகப் போகாமைகண்டு பிரம தேவனிடம்சென்று இந்திரன்முதலிய தேவர்கள் முறையிட,அவர்களையழைத் துக்கொண்டுதான்சூரபதுமன் கொலுவையடைந்து அவனுக்கு அவன் மகன் சூரியனைப்பிடித்துச் சிறையிட்ட செய்தியைத்தெரிவித்து அவனைச் சிறையி னின்றும் விடுவிக்கவேண்டுமென்று வேண்டிக்கொண்டான். அதைக்கேட்ட சூரபதுமனோ என்மகன்சூரியனைப் பிடித்துக்கொண்டுவந்து சிறையிலிட்டதை இதுவரையிலு மறியமாட்டேன், அவன் செய்யநேர்ந்த குறையாது தெரிவிக்க வேண்டுமென்றுகேட்க, உன் மகன் கட்டிலிலிருக்கையில் சூரியனுடைய கதிர் அவன் முகத்தின்மேற்பட்டது, அதைப்பொறுக்காமல் அவனைப் பற்றிக்கொ ண்டுவந்துதன்தொட்டிற் காலிற்பிணித்துச் சிறையில் வைத்திருக்கிறான். இது தான்நடந்தசெய்தி யென்றுசொல்லச் சூரபதுமனும் அப்படியானால் அவனிட த்திலேயேபோய் அவனைச்சிறைவிடும்படி கேளுங்கோ ளென்றுசொல்ல,பிரம தேவனும் அப்படியே நல்லதென்று அவனிடத்தில் விடைபெற்றுச்சென்று தேவலோகத்திலுள்ள மேனகை, அரம்பை, திலோத்தமை, ஊர்வசி முதலிய நாடகமாதரை வருவித்து அவர்கள் பாடலின் சிறப்பால் அத்தொட்டிலிலிருக் கும்அக்குழந்தையை மகிழ்வுண்டாக்கிஅவனைநோக்கிச் சூரியனைச்சிறைவிடும் படிகேட்க, அவன் பிரமனைப்பார்த்து உமது பெயர்கொண்டு விளங்கும் அத் திரத்தை யெனக்குக்கொடுத்தால் விடுப்பேனென்று சொல்ல, அவ்வாறே பிரமனும் அவனுக்குப் பிரமாத்திரங் கொடுத்துச் சூரியனைச் சிறையினின்றும் நீக்கினான். அதுமுதல் அவனுக்குப் பானுகோபனென்று பெயருண்டாயிற்று. பிறகு அவன் இளமைப்பருவமடைந்து மான்போன்ற கண்களையுடைய பெண் களெல்லாம் இவன் மன்மதனே யென்று மயங்க அழகுபடைத்து திருமகள் கணவனாகிய திருமாலோடும் போர்செய்து வெற்றிகொண்டான். சிலகாலத் தின் பின் இவனைப்பெற்ற தாயாகிய பதுமகோமளை இவனுக்குப் பின்பு அக் கினிமுகன் இரணியன் வச்சிரவாகு என்னு மக்களை வயிறுவாய்த்துப்பெற, சூரபதுமன் மகிழ்ச்சியடைந்திருந்தது மல்லாமல் மற்றதேவிமாரால் மூவா யிரம் பிள்ளைகளைப்பெற்றான். இப்படி சூரபதுமன் புத்திரச் செல்வத்தினாற் சிறப்படைந்திருக்கையில் சிங்கமுகாசுரன் அதிசூரனென்ற பிள்ளை பிறக்கக் கண்டு மகிழ்ந்தது மல்லாமல் வேறு நூறு பிள்ளைகளையும் பெற்றான். அவர் கள் வல்லமையை யெடுத் தொருவராலும் சொல்லவேமுடியாது. இதன் பின்பு அவனுக் கிளையவனாகிய யானைமுகமுள்ள தாரகனுக்கு ஒரு பிள்ளை முன்செய்த தவப்பயனாலேயே இளங்கதிரோபோலத் தோன்றினான். இவனுக்கு அசுரேந்திரனென்று பெயரிடவேண்டுமென்று சுக்கிராசாரிசொல்ல, அவ்வா றே அப்பெயரிட்டு மன்மதனு நாணும்படி வளர்த்துவந்தான். இவன் முன்னே யாரேனும் தங்கள் வீரத்தை யெடுத்துச்சொல்லிப் பகைத்துப் போரிட்டால் அவர்களை வெற்றிகொள்வதே தனக்குத் தொழிலாகவுடையவனா யிருந்தான். இவ்வாறு தன்பால் கள்ளிவயிற்றில் அகிற்கட்டை தோன்றினாற்போல அசுரே ந்திரன் பிறக்க மாயாபுரத்தைத் தாரகன் ஆண்டுவந்தான்.

புதல்வரைப் பெறுபடலம்
முற்றிற்று.

---

## வில்வலன் வாதாவிப்படலம்.

இச் சூரபதுமன் முதலானோருடன் தோன்றிய அசமுகியென்பவள் ஒருவன் மனைவியென்று சொல்லப்படாமல் கற்புடைமையில்லாமல் முனிவர்கள் செய்யும் யாகங்களையெல்லாங் கெடுத்துக்கொண்டுகட்டழகுடைய காளையரை வலிதிற்புணர்ந்து திரிகின்றவள், இவ்வாறு கொடுஞ்செய்கையளாய்த் திரிந்துகொண்டு துருவாசமுனிவர் எதிர்ப்பட அவரால்மக்களைப்பெறவேண்டும் கருத்துடையவளாய் அவர் மறுக்கவும் வலிதிற் புணர்ந்து வில்வலன்வாதாவியென்னும் பிள்ளைகளைப் பெற்றாள். அப்பிள்ளைகள் தோன்றியவுடன் தம்பிதாவாகிய துருவாசமுனிவரைப் பணிந்துநிற்க, அவர் நீங்கள் வேண்டியபொருள் யாதென்றுகேட்க, அவர்கள் நீர்செய்த அருந்தவமெல்லாம் எங்களுக்குத் தரவேண்டுமென்று வேண்ட அவர் தவமொழிந்த வேறுபொருள் வேண்டினால் தருவோமென்று சொல்ல அவர்க ளதற் குடன்படாது அம் முனிவரைக் கொல்லத்துணியக் கோபங்கொண்டு நீங்கள் முனிவர்களுக்கே தீராவிடும்பை செய்துவருவீர்கள், இவ்வாறிருக்கையில் அகத்தியமுனிவரோ உங்களாவியை வாங்குவரென்று சபித்துத்தாம்அவர்கள் கண்ணுக்குப்புலப்படாவண்ணம் தம்முருக்கரந்தார். அச்சிறுவரும் தந்தையைக் காணாமல் தாயினிடத்தே விடைபெற்று வேறொரு வனமடைந்து முனிவர்களைக் கொல்லவே யெண்ணங்கொண்டு பிரமனைநோக்கிப்பஞ்சாக்கினி மத்தியினின்றும் அருந்தவஞ்செய்தார்கள். அவ்வாறு செய்யவும்பிரமன் வாராமைகண்டு வில்வலன் தன்தம்பியாகிய வாதாவியைத் தன்னுடையவாளால் வெட்டியெறிந்து அவனுதிரத்தையு மாமிசத்தையும் நெய்யுமவியுமாகக்கொண்டு நெருப்பிலிட்டுப் பிரமனது மூலமந்திரத்தைச் சபித்து வேள்வியோடு தவமுஞ்செய்துவர அப்போது அப்பிரமன் பிரசன்னமாகவந்து நீவேண்டிய தியாதென்றுகேட்க, வில்வலன் என் தம்பியை வரவேண்டுகின்றேனென்றுவேண்ட; அவ்வாறே அவ்வாதாவியை யெழுப்பித்தர, அதற் கதிசயமுடையானாய்ப் புல்லைத்தின்னும் ஆடேபோற் றோன்றும் வாதாவியை இனி யுடல்துணிபடுவானாயின் நானழைக்க மீண்டு முயிர்த்துவர வேண்டுகின்றேன். இவ் வரந்தரவேண்டுமென்று வேண்ட, அப்படியே யாகுக வென்றுவரங்கொடுத்துச் சத்தியலோகஞ்சென்றான். அவ்வரம்பெற்றுத் தம்பியாகியவாதாவியுடன் வில்வலன் சூரபதுமனிடஞ்சென்றுநாங்களிருவரும் அசமுகியாகிய உமது தங்கைமக்க ளென்றதன்றி முனிவர்களைக் கொல்ல வரம் பெற்றமை யனைத்துஞ்சொல்லிச் சிலநாளங்கிருந்து விடைபெற்று மேற்றிசையில்வந்து நாற்சந்திகூடு மோரிடத்தைத் தங்களுக் கிருப்பிடமாகக்கொண்டு ஆச்சிரமங்கட்டிக்கொண்டு எவ்வெவரும் விரும்பு மெல்லாப்பொருளும் அதிலமைத்து முனிவர்கள் உயிர்வாங்கவெண்ணிஇளையவன் ஆட்டுருவங்கொண்டு நிற்க; வில்வலன் முனிவருருவங்கொண்டு அவ் வழியேவரும் முனிவர்களை யெதிர்ந் துபசரித்தழைத்துக் கொண்டுவந்து நல் விருந்துண்டு போகவேண்டுமென்று பலவகையுணவுகளைச் சமைத்து ஆட்டுருவமாகிய தம்பியைக் கறி

சமைத்து அவர்களுக்குப் படைத்து அவர்களுண்டபிறகு தம்பியைக்கூவி யழைக்க, அவன் அம் முனிவர் வயிற்றைப் பிளந்துகொண்டு வர இருவரும் அம்முனிவரையுண்டு பசிதீர்ந்து முன்போல் இளையவன் ஆட்டுருவமாகத் திரிந்துகொண்டிருப்பான்.

வில்வலன் வாதாவிப்படலம்
முற்றிற்று.

## இந்திரன் கரந்துறைபடலம்.

இப்படி அவர்கள் முனிவர்களைக் கொல்வதே நியமமாகக்கொண்டு நடந்துவரச் சூரபதுமனே ஆயிரத்தெட் டண்டங்களையும் அரசாண்டுவந்தான். ஒருநாள் அவன் ஒன்பதுகோடி அவுணரையு மாதரையுமழைத்து இந்திராணியைப்பற்றிப் பிடித்துக்கொண்டு வாருங்கோளென்றுசொல்ல அவர்கள் வருவதையறிந்த தூதர்கள் அவுணர்களும் அவுணமாதர்களுமாக ஆயுதங்களுடன் வருகின்றார்கள். அவர்கள் கருத்தின்னதென்றுந் தெரியவில்லை யென்று சொல்ல, இந்திரனும் தன் மனைவியாகிய இந்திராணியுடன் மறைந்து நிலவுலகிற்சென்றான். இவ்வாறு போய்விடச் சூரபதுமனால் அனுப்பப்பட்ட வீரர்களும் மாதர்களும் இந்திரனையும் இந்திராணியையும் காணாமல் கவலைகொண்டு முழுதுந்தேடி இந்திரன் எங்கே? அவன் மனைவி இந்திராணி எங்கே! உள்ளபடி சொல்லுங்கோளென்று தேவர்களை யெல்லாம் வருத்த, நாங்களறியோமென்றுசொல்ல, அவர்கள் மீண்டுபோய்ச் சூரபதுமனுக்கு அறிவிக்கக்கோபங் கொண்டு பின்னும் தூதரையனுப்பி இந்திரனையும் இந்திராணியையும் எந்தவுலகத்திலிருந்தாலுந் தேடிக்கொண்டு வாருங்கோளென்று கட்டளையிட, அவர்கள் அச்சூரபதுமனிடத்தில் விடைபெற்று, சொர்க்க முதலிய மூவுலகத்திலும்போய்த் தேடித்திரிந்துகொண்டிருந்தார்கள். இது கிடக்க;

இந்திரன் போய்விடவே பொன்னகரம் பொலிவிழந்திருந்தது. தேவர்களும் துன்பத்தால் மனங்கலங்கி வருந்தியிருந்தார்கள். இவ்வாறு சுவர்க்கலோகங் கலங்கிக்கொண்டிருப்பதற்கு முன் இந்திரனுக் கிளையவனாகிய உபேந்திரன் சுவர்க்கநீங்கி வைகுண்ட மடைந்திருந்தான். அச் சிறிய பிதாவைக் காணவெண்ணிச் சயந்தன் பெருமையுடன் அவ் வைகுண்டத்தில் சிறிது நாள் வசித்துக்கொண்டிருந்தான். இவ்வாறிருக்கையில் அவன் தன் தந்தை தாயிருவரும் சுவர்க்கலோக மகன்று தம் முருவமறைத்துப் பூமியிற்போய்விட்டதையும், அவுணர்கள் அவர்களைத் தேடிமீண்டதையும் தேவர்கள் துன்பப்படுவதையு மறிந்து, தந்தை மெலிந்த காலத்தில் தங் குடித்தலைமையாவும் மக்களாவார் தாங்குவது மரபாதலாலும், அதுவே யறமாதலாலும் என் தந்தை யில்லாமையால் நான்போய்ச் சுவர்க்கலோகத்தைக் காப்பது முறையென்று துணிந்து சுவர்க்கலோகத்திற்குவந்து வருந்துகின்ற தேவர்களைப் பார்த்துத் தந்தை தாயராகிய இருமுது குரவரையும் காணாமல் துன்பக்கடலிலழுந்தியிருக்க, அச்சமயத்தில் நாரதமுனிவர் வந்தார். அவரைக்கண்டு என்

தந்தை தாயிருவரும் எங்கேயோ போய்விட்டார்கள், அவர்கள் போன விட மறியேன், எங்களுக்கு இப்படிப்பட்ட துன்பமெப்போது நீங்குமென்று வேண்டிக்கேட்க, ஒருவருக்கு நன்மையுந் தீமையும் தத்தங் கருமத்தால் வருவன வல்லாமல் வேறுவகையாலன்று, உலகத்தில் விஷத்திற்கும் அமுதத்திற்கும் சுவையின் பேதங் கற்பித்தவரொவர்! பெரியோர் இன்பம்வந்தபோது சந்தோஷமடைவதும் துன்பம்வந்தபோது வருந்துவதுமா யிராமல் சுகதுக்கங்கள் உடலுக் கியற்கையென்றே யெண்ணி முன்செய்த வினையையெண்ணி நாடிக்கொண்டிருப்பார்கள். உலகத்தில் வறுமையுடையவர் செல்வராவதும் செல்வமுடையவர் வறியவராவதும் தாழ்ந்தோ ருயர்வதும் உயர்ந்தோர் தாழ்வதும் முறைமுறையாக நடக்கும். இது முன்னைப் பிறவியிற் செய்ததனாலன்றே நடந்துவருவது, உலகவியற்கையும் இதுவே யன்றோ! செல்வமும் வறுமையும் துன்பமும் மகிழ்ச்சியும் உயிர்களுக்கு நிலையென்றுகொள்ள வழக்கோ, வானிற்செல்லும் சந்திரனுமன்றோ தேய்ந்து வளர்ந்துவரும் தன்மையடைந்திருக்கின்றான். ஆகையால் நீங்கள்தாழ்வடைந்திருப்பதும்அவுணர்கள் உயர்வடைந்திருப்பதும் ஒருவந்தமாக நில்லாது, இதுவே மெய்யென்றுதுணி, இந் நகரைவிட்டுப்போன உன் தாய்தந்தைய ரிருவரும் பூமியிற்போய்மறைந்து வாசஞ்செய்கின்றனர்போலும். சயந்தனே தோல்வியடைந்து முன்னே தேவர்களுக்குத் துன்பஞ்செய்துவந்த கயமுகாசுரன் இறக்கும்படி முன்னாளில் முயன்றாற்போல இச் சூரபதுமன் மாளவே முயன்றுவருவானென்று சொல்லிவிட்டு இனிச் சிலநாளில் இச் சூரபதுமனும் இறந்துபோவான், நீங்களும் துயர நீங்குவீர்கள், இது மெய்யென்று அச் சயந்தனைத் தேற்றிப்போகச் சயந்தனும் தெளிந்திருந்தான். பின்பு சயந்தனும் தேவர்களுக்குந் தேறுதல்சொல்லிச் சூரபதுமன்சொல்லிய குற்றேவலைச் செய்துவரக் கட்டளையிட்டுச் சுவர்க்கலோகத்தி லிருந்தான்.

இந்திரனோ சுவர்க்கலோக நீங்கிப் பூமியை நாடி சோணாடடைந்து 'பிரமபுரம் வேணுபுரம் புகலிபெரு வெங்குருநீர்ப், பொருவிறிருத் தோணிபுரம் பூந்தராய் சிரபுரமுன், வருபுறவஞ் சண்பைநகர் வளர்காழி கொச்சைவயம், பரவுதிருக் கழுமலமாம் பன்னிரண்டு திருப்பெயர்த்தால்.' என்றபடி பிரமபுரம் வேணுபுரம் புகலி வெங்குரு தோணிபுரம் பூந்தராய் சிரபுரம் புறவம் சண்பை சீகாழி கொச்சை கழுமலம் என்னும் பன்னிரண்டு திருநாமங்களையுடைய திருப்பதியைச்சேர்ந்து எல்லா முடையானை, இமையவர் பெருமானை வணங்கி அவனை யர்ச்சனைசெய்துவருவதே கடப்பாடெனத்துணிந்து அங்கொரு நந்தவன முண்டாக்கித் சந்தனம்,அகில்,பலா,தேமா,மஞ்சாடி, தேக்கு, அசோகு, புன்கு, குரா, தெங்கு, சுரபுன்னை, கரும்பு,கமுகு,வாழை, காஞ்சி, வேங்கை முதலியவற்றை வேலியாகச் செய்து, சாதி, கோங்கு, நாகம், சண்பகம், கொன்றை, ஞாழல், பாதிரி, வாழை, குருந்து, பாரிசாதம் செருந்தி, நாரத்தை, வில்வம், அலரி, வெட்சி, இருவாட்சி, வனமல்லிகை, மருக்கொழுந்து, செவ்வந்தி, முல்லை முதலிய மலர்ச்செடிகளை வைத்து அமைத்து சிவார்ச்சனை புரிந்துகொண்டுவந்தான். இவ்வாறு சிவார்ச்சனை

செய்துவருகையில் சூரபதுமனுல் அனுப்பப்பட்ட தூதுவர் உலகமெல்லாந் தேடித்திரிவதை யறிந்த இந்திரன் மூங்கி லுருக்கொண்டு மறைந்து தவஞ் செய்து வருவதை யறியாமல் அவர்கள் சூரபதுமனைச் சென்றடைந்தார் கள். மேகமும் அவுணர்கள் ஆணையால் மழைமறுக்க அதனுல் இந்திரன் சிவார்ச்சனைக்காக அமைத்த பூஞ்சோலை நீரில்லாமல் வாடிப்போகவே மனங் கலங்கி பிரமன் மாலென்னு மிவ் விருவோரும் கண்டறியாப் பரம்பரனை நினை த்து வேறுவகையறியாமல் வருந்த நீ வருந்தவேண்டாம் இத் தலத்தில் நீ யமைத்த பூஞ்சோலை வாடிப்போயினதே யாயினும் இனி இங்கே சிலநாளில் ஒரு நதிவந்தடையுமென்று அசரீரிசொல்ல, அதைக்கேட்டு இதுவும் சிவபெரு மானருளே யாமென்று துணிந்து வணங்கி மயிர்க்குச்செறியச் சிந்தைமகிழ் சிறந்திருந்தான். இனி அத் தலத்தில் நதிவந்த வகையைச்சொல்லுகின்றேன்.

இந்திரன்கரந்துறைபடலம்.
முற்றிற்று.

---

## விந்தகிரிப்படலம்.

மெய்யுணர்ச்சியையுடைய நாரதமுனிவர் ஒருநாள் விந்தகிரியையடைய அம்முனிவனை அவ் விந்தகிரியும் தெய்வவடிவங்கொண்டு வணங்கிற்று. அதனை யாசிர்வதித்து மேருமலைதான் பிரமன் மாலென்னு மிருவரும் தம்பேதைமை யாற் பரமம் யாமென்றுசொல்லி மயங்க அவர்க்கிடையே அவரறியாவண்ணம் நீண்ட அழல்மலையாக வுருக்கொண்ட இறைவனுக்குத் திரிபுர சங்காரகாலத் தில் வில்லாகநின்ற தன்மையாலும், எல்லா வுயிரையுமீன்றுங் கன்னியா யிருக் கின்ற இறைவி தன் மரபில்வந்து பிறந்த பெருமையாலும், மலைகட்கெல்லாம் சிறந்ததாக வெண்ணப்படுவதனுலும், சூரியனைத் தொடமேலோங்கி யிருப்பத னுலும், இறைவன் சர்வசங்காரஞ்செய்யும் அந்தநாள்வரையிலும் உலகைத் தாங்குவதனுலும், ஆயிரஞ் சிகரங்களோடு கூடியிருப்பதனுலும், கயிலைமலை யைச்சார்ந்திருப்பதனுலும், சூரபதுமனுல் தொலைவில்லாமையாலும், சூரியன் முதலிய கிரகமாலிகை பெற்றிருப்பதனுலும்,தேவர்களுக்கு இருக்கையாயிருப் பதனுலும்,பொன்னுருக்கொண்டு விளங்குவதனுலும், சக்கரங்கள் சூழ்ந்திருப் பதனுலும் தனக்கு ஒப்பென்பதில்லாமல் ஓங்கியிருக்கின்றது. பொன்மலை பெருமைகொண் டிருப்பதை நீ யறியாய்போலும்; அதை உன்னிடத்தே சொல்லவே விரைவாய் இவ்வளவு தூரம்நாடி வந்தேனென்றுசொல்ல, அதைக் கேட்டுத் தெய்வவுருக்கொண்டுநின்ற விந்தகிரியும் கோபமிகுந்து பெருமூச் செறிந்து இது நன்றாயிருக்கின்றது! என்று நகைத்து அது சிவபெருமா னுக்கு வில்லாயிருப்பதனுல் மேன்மையோ! எல்லாவுயிரையு மீன்ற பெரு மாட்டி இமயமலை செய்ததவத்தாற் பிறந்ததல்லாமல் மலைகளுக் கரசனென் னும் தன்னிடத்தே மகளாகப் பிறந்ததுண்டோ! இது உலகைத் தாங்கியிருக் கின்றதென்பது சிவபெருமானது சத்தியாலல்லாமல் வேறொன்றாலாவதோ! சூரியன் முதலிய தேவர்கள் தன்னைச் சூழ்ந்துவருகின்றன ரல்லது என்னைச்

சூழாதிருக்கின்றனரோ, எழுதீவுகளிலுள்ளமலைகளைச் சூழாதிருக்கின்றனரோ, அம் மேருமலைக்குஞ் சிகரங்கள் பல வுண்டென்னில் கள்ளிச்செடிகளும் பல கிளைகளையுடையனவா யிருக்கின்றனவே ; பிரமனுக்கு நான்கு தலைகளுண்டு அதனால் இதுவடைந்த சிறப்பென்ன ? சூரபதுமனால் தொலைவில்லாதிருந்த தென்றால் அவனும்இதனைமலையென் றுவருத்தாதிருந்ததல்லாமல் வேறல்லவே, அதுவோ நீண்டபரிதிப் படையானினும் வல்லமைபடைத்திருப்பதோ ! தான் பொன்னுருவம் படைத்ததென்று எண்ணியிருக்கின்ற தென்றால் அஃது நல்லறிவுடையதேயல்ல, மண்ணிற்செய்த பதுமையின் அழகுபோலும் ! தன் னிடத்தேவசிக்கும் தேவர்கள் பலரும் என்னிடத்தே வசிக்க மனங்கொள்ளா மல் இகழ்ந்தார்களோ, கயிலைமலை யருகேயிருக்கின்றதென் றெண்ணியிருந்த தெனின் எந்தமலை இறைவ னெழுந்தருளியிருக்கும் கயிலைமலைக் கருகே யிருக்கவில்லை, முன்னாளில் ஆதிசேடன் தன் னாயிரமுடிகளாலும் கவிந்து கொண்டு வாயுவோடு பகைத்துநிற்கையில் அவ்வாயுபகவான் தன்வேகமாகிய காற்றினால் தன் மூன்று சிகரங்களையும் கொண்டுபோனதைத் தான் இன்னமு மறியாதோ ! சிங்கவுருக்கொண்ட விஷ்ணுவின் கர்வமடக்கச் சிம்புள்வடிவாக இறைவன் அண்டமுழுதும் வளர்ந்தகாலத்தில்அவன் குளம்புற்றபரலைப்போல நின்றமை தானறியாதோ! அச் சரபமாகிய வீரபத்திரரது சரபவுருவின் சிறகு களிலுண்டாகும் காற்றால் மின்மினிபோல் திரிந்ததையும் அறியமாட்டாதோ! பாரதகதையெழுத எம்பெருமானாகிய கணேசப்பெருமான் கையேடாகக்கொ ண்டு தான் எழுதப்பட்டது உலகத்தில் பொய்த்தகதை யென்று சொல் லப்படுவதாயிருக்குமோ ! அம்மேருவோ தானு மோர் மலையே யல்லாமல் உலகுண்டபெருவாயனோ, அல்லது தாமரைமலரில் வசிக்கும் பிரமனோ ! இந் திரனோ அல்லவே; என்னகாரணத்தால் தன்னை மேலாக மதித்திருக்கின்ற தென்று வடமேருவை யிகழ்ந்துபேசி அதன் செருக்கை யடக்குகின்றே னென்று தன்தெய்வவுருக்கரந்து அநேகங்கோடி மால்கள் மாயையாகக் கை கொண்டு நீண்டாற்போலத் தானொருவிஞ்சையால்பிரமலோகம்வரையு முயர் ந்துநிற்க; அதைக்கண்ட சூரியன், சந்திரன், அங்காரகன், புதன், குரு, சுக்கி ரன், சனி, இராகு, கேதுவென்னும் நவக்கிரகங்களும் மனந்திடுக்கிட்டு இதுதா னவரதுசெய்கைதானே! அல்லது தருமநெறி யெண்ணிப்பாராத அரக்க ராகிய கொடியாரது செய்கையோ! பிரமன் மா லென்னும் பெரியதேவர் செய் கையோ, இதென்ன மாயையாக விருக்கின்றது ! எங்கும் மலையேயன்றி வெற் றிடமில்லாமலு மிருக்கின்றது ! என்று நினைத்து இறைவனருளாற் சிந்தித்து நோக்க, ஆம் ஆம் இதுபொன்மலையோடு பகைத்து நாம் செல்லுகின்ற வழி விலக்குகின்றதென் றுசிந்தித்துத் தேர்ந்து மேருமலைக் கருகில் சிவத்தியானத் தோடுந் தவஞ்செய்துகொண்டிருக்கும் அகத்தியமுனிவர் வந்தால் ஆகாய மளாவிநீண்ட இவ்விந்தமலை யொடுங்கிப்போமென்று நினைத்துச் செந்தமிழா சிரியராகிய அகத்தியமுனிவர் தவஞ்செய்யுமிடஞ் சென்றார்கள்.

விந்தகிரிப்படலம் முற்றிற்று.

# அகத்தியப்படலம்.

---

அவர்கள் அகத்தியமுனிவர் தவஞ்செய்யு மிடஞ்சென்று யானை முதலையால் வருத்தியகாலத்தில் திருமால்சென்று அம் முதலையைக்கொன்று அவ் வியானையைக் காத்ததறியாயோ! பிரமன் தான் படைத்த ஊர்வசிமேல் காமவாஞ்சையாய்க் கிளியாய்த் தொடர்ந்துபோக, அவள் பரமசிவனைநோக்கி யென்னை இக்காலத்திற் றன்னைக்காக்க வேண்டுமென்று புலம்ப அவளைப் பரமசிவன் காத்த துமக்குத் தெரியாதசெய்தியோ! பிருகுபத்தினியாகிய கியாதியைத் திருமால்கொன்றுபோக அத் திருமாலை அப் பிருகு பலபிறப்பெடுத் துழலென்றுசபிக்க அதைநோக்கி வருந்திய திருமால்தன்னை இப்படி பல பிறப்பில் வருந்தச் சபிப்பது முறையோவெனவேண்டி இரக்க அதற்கப்பிருகு இரக்கங்கொண்டு பத்துப்பிறப்பெடுக்க வேண்டுமென்று கருணைசெய்தது நீயறியாததோ! தேவர்க்கேயானாலும் பூமியில்வாழும் யாவர்க்கேயானாலும் ஒரு துன்பமுண்டானகாலத்திலேஅதனை நீக்குவது காத்தற் றொழிலையுடையவர் கடமையாகும்! அக்கடமையை நோக்குமிடத்து அடைவதற்கரிதாகிய மேலான முத்தியின்மேலதல்லவோ! வேதங்களைத் திருடிக்கொண்டோடி யொளித்த சோமுகாசுரனைத் திருமால் மீனுருக்கொண்டுகொன்றாற்போல அக்கடல்முழுதும் உன்னொருகையா லடக்கிக் கள்ளத்தன்மையுடைய விருத்திராசுரனை நாங்கள்காணச்செய்து கருணைசெய்த உன் பெருங்கருணை யுலகமுழுதுங் கொண்டதல்லவோ! விந்தமலை நாரதர்சொன்ன சொல்லைகேட்டு மேருமலையோடு பகைத்து உலகமுழுது மழியுங்காலத்திலு மோங்கியிருக்கும் திருக்கயிலாய மலையைப்போ லோங்கி யிருக்கின்றதே. நாங்கள் செல்லும்கதியை ஆகாயமார்க்கமா யோங்கி மாறுபடச்செய்வதனால் உலகமுழுது மயக்க மடைகின்றன, அதைநீக்கத்தேவரீர் கருணைசெய்ய வேண்டுமென்றுவேண்டிக்கொள்ள, அதை அம் மேருமலைச்சாரலில் தவஞ்செய்துகொண் டிருக்கும் தமிழாசிரியராகிய அகத்தியமுனிவ ரறிந்து விந்தமலையை யடக்கி நவக்கிரகங்களுக்கு வானிற் செல்லும் கதியையுண்டாக்க வேண்டுமென்று தம்முள்ளத்தமைத்து முப்புரம்பொடித்த முழுமுதற்கடவுளைத் தியானித்துநிற்க, பரமசிவனும் அகத்திய முனிவர் கட்புலன்முன் மால்விடைமே லெழுந்தருளித்தோன்றத் தன்கையா லிறைஞ்சி வணங்கி நீர் விரும்பியது யாதென்றுகேட்க, விந்தமலை பொன்மலையோடு பகைத்து ஆகாயவழியடைத்து நிற்கின்றது; அதையடைக்கக் கருணை செய்யவேண்டுமென்று வேண்ட, அப்போது பரமசிவன் உனக்கு விந்தமலையையடக்கும் வல்லமையைத் தருகின்றோம், நீர் தென்றிசையிற் பொதியமலையிற்சென்று வசிக்க வேண்டுகின்றோமென்று கட்டளையிட, அக் கட்டளையையேற்று அவரைவணங்கி யெனக்குஉமது பூசனையை விடாமற்செய்யத் தென்றிசைசிறக்க வொரு நதியுந் தரவேண்டுமென்றுகேட்க, அதற்கு மனமிரங்கித் திருக்கயிலாய மலையிலுள்ள நதிகளேழில் பொன்னியாறென்னும் காவிரி யாற்றைநினைக்க அந் நதிவந்து வணங்கி நின்றது, இத் திசையினின்றும் தென்றிசைக்குப் போகின்ற அகத்தியமுனிவரோடு நீ போகவேண்டு மென்று சொல்ல,காவிரிநதியும் ஐம்பொறியடக்கியமாதவப்பெருமானாயினும் இவ் வகத்தியமுனிவரோடு பெண்ணுருக்கொண்ட யான் போதல் நியாயமாகுமோ!

வென்றுகேட்க, இறைவன் காவிரிநதியைநோக்கி இவ் வகத்தியமுனிவரோ மாறுபடாத சிந்தையையுடையார், நல்வினை தீவினை யென்னும் இருவினை யொப்புவந்த அருந்தவமுடையார், நமது அன்பரின் மிகப்பெரியவர், ஆகை யால் இவர் பின்னே செல்வது நமது ஆணையென்றுசொல்ல, இவரொடு நான் செல்வேனாலும் நானிவரைவிட்டுப் பிரியுங்காலத்தை வெளியிடவேண்டு மென்று கேட்டுக்கொள்ள, நன்று நன்று; நின்காரணத்தை நன்றுநோக்கி இவர் கையிற்காட்டுவேன், அன்று அவரை நீங்கிப் பூமியில்சென்று தங்க வேண்டுமென்று எம்பெருமான் திருவாய்மலர்ந்தருளினன். அப்படிசொன்ன சொல் தன் செவிக்கமுதமாகக்கேட்ட காவிரிநதி அவர் பின்செல்வதைக் கண்டு இறைவன் உன் கமண்டலத்தில் ஏற்றுச் செல்லவேண்டுமென்று சொல்ல, அவ்வாறே காவிரி இறைவன் கட்டளையின்படி அகத்தியமுனிவ ருடைய கமண்டலத்தில் வந்துசேர்ந்தது. அப்போது இறைவன் அகத்திய முனிவரைப்பார்த்து நீ தென்றிசையே நாடிச் செல்லவேண்டுமென்று கட் டளையிட்டுத் தான் இடபவாகனத்தோடு மறைந்துவிடவே, அகத்தியமுனிவர் புத்திரப்பேறுவிரும்பி விதர்ப்பதேசத் தரசன்பெற்ற உலோபாமுத்திரையைக் கலியாணஞ் செய்துகொண்டு தென்றிசை நோக்கிச்சென்றார்.

அகத்தியப்படலம்.

முற்றிற்று.

---

## கிரவுஞ்சப்படலம்.

பொன்மலையாகிய மேருமலையினின்றும் பூமியே வழியாகத் தென்றிசை நோக்கி நடக்கையில் சிங்கமுகாசூரனுக் கிளையவனாகிய தாரகனுக்கு இருப் பிடமாகிய மாயமாபுரமடைய அங்குவசிக்கும் அன்றிற்பறவை யென்னும் பெயருள்ள கிரவுஞ்ச னென்னு மவுணன் அத்திசைநோக்கித் தமிழாசிரிய ராகிய அகத்தியமுனிவர் வருவதுகண்டான். அவன் வானுலகைப் பூமியாக வும் பூமியைப் பொன்னுலகமாகவும் சமுத்திரத்தை மலையாகவும் மலையைச் சமுத்திரமாகவும் சூரியனைச்சந்திரனாகவும் சந்திரனைச்சூரியனாகவும் அணுவை மேருவாகவும் மேருவை யணுவாகவும் சமுத்திரத்தை புவனமாகவும் புவ னத்தைச் சமுத்திரமாகவும் வடவாமுகாக்கினியைக் கடலாகவும் காட்டவல் லவன், மேலும் தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் மிகவும் மயக்கமுண்டா கப் பல மாயைகள்செய்து வருவானென்றால் இவனது மாயாவல்லபம் யாரறி ந்து சொல்லவல்லவர். இப்படிப்பட்ட கிரவுஞ்சனென்னு மவுணன் தமிழா சிரியராகிய அகத்தியமுனிவர் வருகிறவழியில் அவர் நாடிவரும் விந்தமலை போலப் பல சிகரங்களைக்கொண்டு தாங்கும் மலையுருக்கொண்டு அவரைத் தன்னிடமாக வரச்செய்தான். அதை அகத்தியமுனிவர்கண்டு இம் மலையின் வழியாகப் போக ஒரு காடுதோன்ற, அதன்வழியாக ஒரு குரோசவழி நட ந்தார், ஒரு சுரம் தோன்றிற்று.

அவ்வழியாக அகத்தியமுனிவர்போக வழியில்லாமல் திரும்பி முன் வந்தவழியையுங் காணாது மயங்கிப் பின்னொரு வழியைக்கண்டுபோக, தமக்கு நெருப்புப்பற்றியெரியவும் சுழற்காற்றுத் தோன்றவும் மேகம் மழைபொழியவும்இடியிடிக்கவும் இருட்படலம் சுற்றவும் பெருமலையாக அக்கிரவுஞ்சன் வளைக்க, அதையறிந்த தமிழ்முனிவர் இது கொடியவராகிய அவுணரது பட்டிமையொழுக்கமெனத் துணிந்து கைகொட்டிச் சிரித்துக் கோபங்கொண்டு நன்றாயிருக்கின்றது, நம்மையோ ரவுணனோ மயக்கவல்லவன், இவனது மாயாவல்லபத்தை நீக்கவேண்டுமென் றெண்ணி தன் கையிலுள்ள தண்டால் அக்குன்றைக்குத்தித் தொளையுண்டாக்கி "அறிவிலியாகிய கொடியவனே! உன்னுருவமொழிந்து இம் மலையுருவாகவே யிருக்கவேண்டும்; நீ அவுணருக்கெல்லாம் பெருமிதமாகிய இருக்கையாகி அருந்தவக் கொள்கையையுடைய முனிவர்களுக்குந் தேவர்களுக்குந் தீத்தொழில் செய்துவருவை, நமது கைத்தண்டாலாகிய துவாரங்கள் எல்லாம் பற்பல மாயைகளுக் கிருக்கையாக எம்பெருமானாகிய நீலகண்டத்து நின்மல னுதவிய குமாரசற்குருவினது கைவேலால் நீ முடிவெய்துவையெனச்" சபித்துத் தன் கமண்டலத்திருந்த சலத்தைவாங்கி மந்திரஞ்சபித்து மாயையை நீக்கிக்கொண்டு அவ்விடத்தினின்றும் நீங்கித் தென்றிசையே வழியாகச்சென்றார்.

கிரவுஞ்சப்படலம்
முற்றிற்று.

## விந்தம் பிலம்புகுபடலம்.

அன்றுமுதல் அக்கிரவுஞ்சனென்னும் பெயருள்ள அவுணன் மலையுருவமாகவே யிருந்தான். கொடிய நெறியையுடைய அவுணர்கள் எல்லாம் அதைத் தங்களுக்கு அரணாகக்கொள்ள நேற்றுவரையிலும் மலையுருவமாகக்கிடந்தான். குமாரசற்குருவே! அவனை நீ யல்லது யார்தான் கொல்லவல்லவர். தமிழாசிரியராகிய அகத்தியமுனிவர் இமயமலையைக்கடந்து காசிக்ஷேத்திரத்தைத்தரிசித்து விச்சுவநாத ராலயத்தினுட்புகுந்து அப்பெருமானைவணங்கியேத்தி அவ்விடமகன்று விந்தமலையி னொருபுறமடைந்து அதனிலைமை யறியலாமெனத் துணிந்து அவ்விந்தமலையைப் பார்த்து நாம் பொதியமலையடைய வெண்ணிவந்தோம், நாம் போக வழிதர வேண்டுகின்றேன், நீசற்று வழிவிட வேண்டுமென்று கேட்க, அதற்கு அவ்விந்தமலை சூரிய சந்திரர்களுக்கே போகமுடியாதவண்ணம் வழியையடைத்து வானளாவி யிருக்கின்றேன், சிற்றுருக்கொண்டிருக்கின்ற உனக்குப் பயந்து வழிவிடுவேனோ, நீ வந்தவழியே திரும்பிப்போய்விடு எனது தோற்றமறிந்தாயில்லை யென்றுசொல்ல, அதைக்கேட்டுக் கோபத்தொடு நகைத்து எப்பொருட்கு மிறைவனாகிய பரமசிவனது கூற்றங் குமைத்த பொற்றாளைச் சிந்தித்தேத்தி முன்னாளில் இந்திரன்வேண்டச் சமுத்திரமுழுதும் அள்ளிய தன்கையைப்பிரமபதம்வரையுநீட்டி அம்மலையின் மேல் குடங்கைசேர்த்து வன்பாக ஊன்றிசிற்க அம்மலை பூமியிற்றாழ்ந்து பிலத்

S 23.

றின்வழிபுகுந்து ஆதிசேஷன் வாசஞ்செய்யு மிருக்கையை யடைந்தது. நரகத் துன்பமடைவார்போற் பாதலம்புகுந்த விந்தமலை பயந்து உன்னை வழிபடாமல் இகழ்ந்து பழிதேடிக்கொண்டேனே, என் சிறுபிழை பொறுக்கவேண்டுகின்றே னென்று வேண்டிக்கொள்ள; அப்படி வேண்டிய அவ் விந்தமலையை நோக்கி அகத்தியமுனிவர் நான் பொதியமலைக்குச்சென்று இவ் வடதிசையை நோக்கி மீண்டகாலத்தி லுயர்வையென்று நாரதமுனிவன் சூழ்ச்சிக் கொத்துச்சொல்லி நிற்கையில், அப்போது சூரியன் முதலிய தேவர்கள் அகத்திய முனிவரை விரைந்தடைந்து நீர் பண்ணிய உபகாரம்போல் யார்தான் செய்ய வல்லவர்? நாங்களும் ஆகாயமார்க்கமாகச் செல்லப்பெற்றேம்; தேவரீர் எங்கள் பொருட்டாகப் பொதியமலையி லெழுந்தருளி யிருக்கவேண்டுமென்று வேண்டிக்கொள்ள; அவ்வாறே யாகுகவென் றிசைந்து அவர்களுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டு மேற்றிசையாக வருகையில் உயிரிழக்க நாடியிருப்பவர்களாகிய வாதாவி வில்வல னென்னும் அவுணரிருவரும் அவர் வரவுகண்டார்கள்.

விந்தம் பிலம்புகுபடலம்
முற்றிற்று.

---

## வில்வலன் வாதாவி வதைப்படலம்.

இவ்வாறு அகத்தியமுனிவர் வரக்கண்டு இவனே அரக்கர் பலரையும் கொன்றவன், கடலை முன்னாள் குடித்துமிழ்ந்தவன். தேவரைக் காத்தவன்; இவனுக்கு உணவையளித் துயிரை யூனோடும் வாங்குவதே நலமென்றெண்ணி வாதாவி ஆட்டுருவங்கொண்டு அங்கேயுள்ள மலையினோர்புறத்தில் புன்மேய்ந்துகொண் டிருக்கவும், வில்வலன் முனிவர்போ லுருவங்கொண்டு மேலே கட்டிவிட்ட சடையும் நெற்றியில் விபூதியும் காதிற் குழையும் கண்மணியு மணிந்து உடல்முழுதும் விபூதியணிந்து கையில் தண்டும் தோல் உடையும் தரித்த வேடங்கொண்டு அகத்தியமுனிவ ரெதிரில் வந்தான். வெளியே நலம்பழுத்த வேடமும் உள்ளே வஞ்சகமுங் குடிகொண்டு எட்டிக்கனிபோல் மனமுடையவனாகி அவ்வில்வலன் தமிழாசிரியராகிய அகத்தியமுனிவரை மும்முறை வலம்வந்து பணிந்து அஞ்சலிசெய்து நின்றுகொண்டு தேவரீர் எழுந்தருளப் பலநாள் அருந்தவஞ் செய்தேன், இன்று முடிவெய்த வந்தீர், யானும் முனிவர்களுடைய நிலைமையடைந்தேன்; அடியேன் இருக்கும் இடமிது, அது புனிதமாகும்வண்ண மவ்விடத்திற் கெழுந்தருளுவீரென்று சொல்லி; அவனது பாதங்களை வணங்கி நிற்கவும், ஒருகையாற் கடன்முழுது முண்ட அவ் வகத்தியமுனிவர் அவனது துணிவை யறியாமல் அன்பு மிகுந்து அக்கொடியவனாகிய வில்வலனைப் பார்த்து நாற்பத்தெண்ணாயிரம் முனிவரினும் மற்ற முனிவரினும் மிகுந்த நின்னியல்பில் அணுவளவேனும் சிறந்தாரல்லர், உன்னிருப்பிடமேது வருகின்றேமென்று சொல்ல, இதுதான்யானிருக்கு மிடமென்று சொல்ல நடந்தான், தானே முடியும்படி வந்த அவ் வில்வலன் அம்முனிவனைக் கொண்டுசென்று அவ னிருக்கையி லழைத்துப்

போய் ஆசனத்தி லெழுந்தருளச்செய்து வந்தனைவழிபாடு புரிந்து எந்தையே! யானும் என் குலத்தாரும் பிழைக்க வந்தாய் போலும்; இக்காலத்தே என் குடிசையில் எழுந்தருளி யிருந்து வெந்த கூழேனும் உண்டு சேடமளித்துப் போகவேண்டுகிறே னென்று வேண்டிக்கொள்ள, சூரபதுமன் மருமகனாகிய வில்வலன் சொல்லைக்கேட்டு உன்னு விசைந்த உணவை யருந்திப் பின்னே போகின்றேனென்று அகத்தியமுனிவர் சொல்ல, ஆசாரமாக உணவைச்சமை க்கின்றேன் சிறிதுபோதிருமென்று அங்குள்ளதடாகத்தில் நீராடிப் பரிசுத்தனா ய்ச் சமையற்சாலைபுகுந்து அதை நீரும் சாணமுங்கொண்டு சுத்தஞ்செய்து கோலமிட்டு முத்தினைப்போன்ற தூயவரிசியை மும்முறை நீர்வார்த்துக்கழுவி அழகிய பாத்திரத்தில் வைத்து நெருப்பின்மாட்டி யுலைப்பெய்து பதமாகச் சமைத்து பயறுவகைகளையுஞ் சித்தஞ்செய்து பால்முதலியவற்றையும் அமை த்து ஆட்டுருவங்கொண்டு முனிவர்களையே கொல்லுதல் விரதமாகவுடைய் வாதாவியை வலிதிற்பற்றிக் கோடாலியா லிரண்டு துண்டாக்கித் தோலைநீக்கி அதன் பல உறுப்பமையச் சமைத்து வேண்டும் கனிவர்க்கங்களுங் கொண்டு வந்து திருத்தி அகத்தியமுனிவரை உணவுகொள்ள வேண்டுமென்று தாழ்ந்து வணங்கினன்.

அவன் வேண்டுகோளினைச் செவியேற்றுத் தமிழாசிரியராகிய குறுமுனி வர் எழுந்தருள அவரைச் சமையற்சாலைக்குக் கொண்டுசென்று உபசாரஞ் செய்து தூப தீப நைவேத்தியம் கொடுத்து தான் சமைத்த அறுசுவையோடு கூடிய உணவைப்படைக்க, அதை யன்பாக உண்டு பசிதீர்ந்து முக்காலும் வாய்நீர் பூசிக் கைகால் கழுவி அங்கே யெழுந்தருளியிருந்தார். வில்வலனோ பிரமனளித்த வரத்தையெண்ணி அங்கே வீற்றிருக்கும் அகத்திய முனிவரது ஆவியைக்கொள்வதே பொருளாக நினைத்து வாதாவியைக் கூவி யழைக்க, அவன் அகத்தியமுனிவர் வயிற்றில் ஆட்டுருவமாக நின்றுகொண்டு சிறிதும் எண்ணமலே முன்பு கடலையுண்டாற்போல என் மாமிசத்தையு முண்ட கொடியவனாகிய இம்முனிவனதுயிர் கொண்டு இவனது குறுகிய வயிற்றையும் கிழித்துக்கொண்டு வருகிறேன், அண்ணாவே யென்று வில்வலனைப் பார்த்து வாதாவிசொல்ல, அதை அகத்தியமுனிவர்கண்டு இது கொடியார்களாகிய அவுணர்கள்செய்த மாயமென்று தெரிந்து வாதாவி முடியவேண்டுமென்று சிந் தித்து, தமதுகையால் வயிற்றை யொருமுறை தடவவே; அவ்வாதாவி யிறந்து போனான். அவன் இறந்துபட்டா னென்பதறிந்து முன்னையுருவமாகிய அவுண ருருவங்கொண்டு தான்தண்டேந்திக்கொலைசெயத் துணிய; அகத்திய முனி வர்கண்டு கையிற் றருப்பையொன் றெடுத்து அதையே சிவாஸ்திரமாகப்பாவி த்து விட வில்வலனு மிறந்தான்; அகத்தியமுனிவரோ அக்கொடியவர்கள் வாசஞ்செய்திருந்த இடத்தைவிட் டகன்று போனார்.

வில்வலன் வாதாவி வதைப்படலம்

முற்றிற்று.

---

## காவிரி நீங்குபடலம்.

அகத்தியமுனிவர் தமது கையிலிருக்கும் கமண்டல நீரோடு கொங்கு நாட்டை நாடிச்செல்ல, வாதாவியும் வில்வலனுமிறந்தும் தூருவாசமுனிவர் மக்களாதலால் நீண்ட கரிய மேகம்போலு முருவங்கொண்டு மிக்க கோப முடையயாய் ஆரவாரத்தோட னுருவதும் மீண்டும் விண்ணிலுள்ள மேகத்தில் மறைவதுமாகத் தோன்றினர்; அதுகண்டு இது அக்கொடியவர்கள் முனிவர் மைந்தராதலால் வந்த கொடுமை,நாம் கொன்றமையால் பிரமகத்தி சூழ்ந்தது, இதை நிவர்த்திசெய்துகொள்ள வேண்டுமென்றெண்ணி அத்தேயத்திற் கனித்தான இடத்தில் வாசமாக வெழுந்தருளிச் சிவலிங்கப்பெருமானைத் தாபித்துச் சிவார்ச்சனைசெய்துவர அப்பிரமகத்திதோட நீங்கிற்று ; அது நீங்கிய பின்னும் அகத்தியமுனிவர் அங்கேயே வசித்துக்கொண்டிருந்தனர். இது கிடக்க ;

இங்கே இந்திரன் சீகாழியில் சூரபதுமனுக்குப் பயந்து மூங்கிலுருக் கொண்டுகின்றான்,அவன் அவ்வழியேசெல்லும் நாரதமுனிவரைக்கண்டு அவர் பாதங்களை வணங்கினின்றான்; அப்படிவணங்கின இந்திரனைப்பார்த்து எழுந்திருவென்று மார்புறத்தழுவி இங்கேதான் வாசஞ் செய்கிறையோ வென்று கேட்க, இன்றுவரையிலும் உமது பெருங்கருணையால் சுகமே யிருக்கின்றேன், ஆயினும் யான் செய்துவரும் சிவார்ச்சனைக்கு முட்டுப்பாடு இப்போதிருக்கின்றது ; அது இறைவனுக்குரிய பத்திரபுட்பங்களைக் கொடுக்கும் நந்தவனம் நீரின்றி வறட்சியா யிருப்பதென்பதே ; அதனால் சிவார்ச்சனை பிழைத்துப்போகின்றது, இக் குறையால் வருந்துகின்றே னென்றுசொல்லி,அந் நாரத முனிவருக் காசனமொன் றளித்துத் தானும் அம்முனிவர் சொல்லியபடி வேறோ ராசனத்திலிருக்க, அவ் விந்திரனைநோக்கி நாரதமுனிவர் ஆறணிந்த சடைப்பெருமான் திருவருளால் நீயிழந்த பெரும்பதமும்சிலநாளிலுண்டாகும் நீ தளரவேண்டாம், ஆயினும் சிவார்ச்சனைக் கிடையூ றுண்டாயிற்றென்று சொல்லினை ஆதலால் அது மாறிப்போகுங் காலம்வந்துவிட்டது; அதை நன்றாய்ச் சொல்கின்றேன் கேளென்று பரமசிவன் கும்பமுனிவரை யழைத்துப் பொதியமலைக்குப் போகவிடுத்ததும், அவர் விந்தமலையை யடக்கியதும், வில்வலன் வாதாவியென்னும் அவுணரிருவரையும் கொன்றதும் அவர்களைக் கொன்ற பிரமகத்தித்தோட நீங்கக் கொங்குநாடடைந்து திரிபுராந்தகனாகிய பரமசிவனைத்துதித்துச் சிவார்ச்சனைசெய்து அப்பழிநீக்கிக்கொண்ட விதமுஞ் சொல்லிவிட்டு அம்முனிவர் கையிலிருக்கும் கமண்டலத்தடங்கிய காவிரியாற்றைவரும்படிசெய்தால்உன்மனக்குறைநீங்குமென்றுசொல்ல,அதைக்கேட்ட இந்திரன் எவ்வாறு அக்காவிரியாறு இங்குவரும்? அது வருமுறைமையை யெடுத்துச் சொல்லவேண்டுகின்றே னென்று விண்ணப்பிக்க, நீ கணேசப் பெருமானை வழிபாடுசெய்து பூசிப்பையாயின்,அவர் அக் கமண்டலத்தி லிருக்கும் காவிரியாற்றைக் கவிழ்த்துவிடுவர் ; இதுதான் அந் நதி இங்கேவரும் விதமென்றுரைக்க, இந்திரன் சூரபதுமன் கொண்ட திருவும் நாடுந் தான் மீண்டும் பெற்றான்போலக் களிசிறந்து உமது திருவருளால் இப்போதே கணேசப்பெரு

மானை வழிபாடுசெய்கின்றே னென்றுசொல்ல, அவனிடத்திலிருந்து நாரத முனிவர் விடைபெற்றுச் சென்றனர். இந்திரனும் கணேசப்பெருமானை வர லாற்று முறைமையாகத் தாபித்து அருச்சனைசெய்து கரும்பு தேங்காய் தேன் தினை மா வாழை பலா முதலிய கனிகளைநிவேதித்து வணங்க,கணேசப் பெருமான் பல சிவகணங்கள் புடைசூழ அவன் கண்ணெதிரே தோன்றினன். அவர் வருவதைக்கண்ட இந்திரன் மனநடுங்கிநிற்க, அஞ்சவேண்டாமென்று கணேசப்பெருமான் சொல்ல, அவர் பாதபங்கயங்களில் இந்திரன் விழுந்து வணங்கினின்றான்; இறைவன்நீசெய்தபூசையையுள்ளங்கொண்டோம்,நீ வேண் டிய தென்னவென,இந்திரன்கேட்டு மகிழ்வடைந்து எம்பெருமானே! சிவார்ச் சனை செய்தற் பொருட்டாக இச் சீகாழியில் ஒரு நந்தவனம் வைத்தேன், அது நீரின்றிச் சூரியனது வெப்பத்தால் வெந்து தீந்துபோகின்றது, யாது செய்வேனென; அதைத் திருச்செவியேற்ற கணேசப்பெருமான் உனக்காக எழுதலத்தினீரோ! ஆகாயகங்கையோ அல்லது மற்ற நதிகளோ, அல்லது சத்தசாகரங்களோ எவைவேண்டுமேனுந் தருவிக்கின்றோமென, அதற் கிந்திர னும் நான் அவற்று ளொன்றையும் வேண்டேன், யாதுமக்கரியது, யான் கேட்பதொன் றுண்டு; அதாவது வடமேருமலையினின்றும் எழுந்தருளி யாவ ருக்கும் துயரத்தையே செய்துகொண்டிருந்த வாதாவி வில்வலனென்னும் கொடியவர்களைக்கொன்று கொங்குநாடடைந்து சிவார்ச்சனை செய்துகொண் டிருக்கும் அகத்தியமுனிவர் கையிலுள்ள கரகநீரைக் கவிழ்க்க வேண்டுகின் றேன். அவ்வாறு செய்யின் என்னால் வைக்கப்பட்ட இந் நந்தவனம் நீர்வளம் பெற்றுச் செழிக்கும். இதுதான் என் வேண்டுகோளென்று விண்ணப்பிக்க, உனது வேண்டுகோளின்படி செய்கின்றோமென்று அச்சீகாழியைவிட்டு அகத் தியமுனிவர் தவஞ்செய்யு மிடமடைந்து காகவுருவாய் நீரைக் கவிழ்த்துவிட் டனன். அதன் வரலாற்றைச் சிறிதுமறியாமல் இது சாதாரணமான ஒரு காக மென்றுதுணிந்து அக் காகத்தை யோச்ச அக் கணேசப்பெருமான் காவிரி யைப் பெருகக் கட்டளையிட,அது கம்பைநதிபோலும் விண்ணு மண்ணு நடுங்க உலகமெங்கும் பரந்துசென்றது. அதுகண்டு விநாயகப்பெருமான் காகவுருவ நீங்கிப் பிராமண மைந்தனைப்போலத் திருவுருவங்கொண்டு செல்ல அவனை நோக்கி இவன் நமது கமண்டலநீரைக் கவிழ்த்துவிட்டதன்றி இறுமாந்து செல் லுகின்றனன்; இவன்தேவனோ! அவுணனோ! அரக்கனோ! வன்மையையுடைய மேலோன் யாவனோ அறியவல்லோமல்லோம், இவன் வல்லமையை யறிவோ மென்று விரைந்து அவன் பின்னேசெல்ல, அதைக்கண்ட எம்பெருமான் அஞ் சிப் பயந்தார்போல ஓட்டெடுப்ப, அவ் வகத்தியமுனிவர் தன்னைக் குட்டத் துணிந்ததை யறிந்து தான் அவருக்கருகே வருவதும் விண்ணின் மறைவது மாக இவ்வாறு பலதிருவிளையாடல்களைச்செய்ய அவரைத்தொடர்தற் கயர்ந்து இனியாதுசெய்வதென்று சிந்தித்து நின்றதை யறிந்து கணேசப்பெருமான் தன் உண்மை யுருவங்காட்டினன். அதை விரைந்து கண்டுகலங்கி அந்தோ! எரம்பனாகிய நமது விநாயகப்பிரானே என்னையுய்விக்க எழுந்தருளினனென்று அவ்விறைவனைக்குட்டத் துணிந்த கைகளால் தம்மைக் குட்டிக்கொண்டு நின்

ளூர். தாரகப்பிரமமாகிய கணேசப்பிரான் எல்லையில்லாத அருளொடும் பார்த்தருளி நீகொண்ட கருத்தென்ன ? சொல்லென்று அகத்தியமுனிவரைக்கேட்க, அகத்திய முனிவரும் ஐயனே ! உம்மைப் பிராமணச்சிறுவனென்றே குட்டத்துணிந்தேன், என் சிறுபிழைபொறுத்து அதற்குப் பரிகாரமருளிச் செய்யவேண்டுமென்று வேண்டிக்கொள்ள, கணேசப்பெருமானும் நீ கொண்ட கருத்தைத் தவிர்த்துவிடென, அகத்தியமுனிவரும் பலமுறை வீழ்ந்துவணங்கி என் சிறுபிழையை யெண்ணுதிரங்கி யருள்செய்ய வேண்டுமென்றூர். அதற்குக் கணேசப்பெருமான் நம்மை இந்திரனே இந்த நாளில் வழிபாடுசெய்து எம்பிதாவைக் கருதிச்செய்யும் அர்ச்சனைக்குரிய நந்தவனம் வளப்பமடைய வேண்டி யிரந்தனன். நாம் உமது கரகநீரைக் கவிழ்த்துவிட்டு அதைப்போகவுங் கட்டளையிட்டோம், நீசெய்த குற்றங்களைச் சிறிது முள்ளங்கொள்ளோம், அதைத்திருவிளையாடலாகவே யுள்ளங்கொண்டோம், நாம்கோபங்கொண்டோமல்லோம்; நீயோ எம்பிதாவின்பால்பேரன்புடையை யாதலால் எம்மிடத்தும் அவ்வாறே யன்புடையையன்றே! ஆதலால் நீவேண்டியவரங்களை யருளுகின்றேமென்று சொல்ல, அகத்தியமுனிவரும் எனக்குத் தேவரீரிடத்தும்எல்லாமுடையானாகிய இறைவனிடத்தும் எப்பொழுதும் அன்புடையானாக விருக்க வேண்டுகின்றேன், யான் வேண்டுவதும் அதுவேயன்றி வேறில்லை யென்று சொல்லிவிட்டுப்பின்னும் உம்மைக் குட்டிக்கொண்டதுபோல் உமது சந்நிதானத்தில்குட்டிக்கொள்ளும் பலருக்கும்வேண்டியவரங்களைக் கொடுக்கவேண்டுகின்றேன், மேலும் என் கையிலிருந்த கரகநீரும் போய்விட்டதாதலால் இனி நான் நல்லநீரைப்பெறக்கருணைசெய்யவும் வேண்டுமென்று வேண்டிக்கொள்ள; நாம் காகவுருவாய்க் கவிழ்த்துவிட்ட நதியினிடையே தமது திருக்கரத்தை நீட்டி சிறிது நீரை அக்கரகத்திற் பெய்தான். அதைக்கண்டு அகத்தியமுனிவர் மனமகிழ்ந்து பலவிதமாகத் துதிக்கக் கணேசப்பெருமான் தமது திருவுருக்கரந்தனர். பின்புதாம் கொங்குநாட்டை யகன்று விரைந்து தென்றிசை நாடிநடந்தார்.

காவிரிநீங்குபடலம் - முற்றிற்று.

## திருக்குற்றாலப்படலம்.

தேவர்கள் சிவாஞ்ஞையில்லாமல் அக்கடல் கடைந்தகாலத்தில் ஆலவிடந்தோன்றியது; அதைக்கண்டு அவர்கள் அனைவரும் மனம்வருந்த அதைத் திருவுளத்தடைத்து அமுதமாகக்கொண்ட வருட்பெருங் கடலாகிய பரமசிவனது புகழைத் துதித்துக்கொண்டு கருமுகில்வண்ணனாகிய திருமால் வீற்றிருந்தருளும் திருக்குற்றாலமென்னுந் திருநகரைக்கண்டு அகத்தியமுனிவர் குறுக, அத் திருப்பதியில் திருமாலுக்கு வழிபாடுசெய்யும் அந்தணர்கள் சிவனடியார்களைக்கண்டு பொறாது வேதநெறியொழுகாமல் மோகத்தால் தம்மதமேற்கொண்டு தமக்குரிய நன்னெறியிலொழுகாம லிருந்து அகத்தியமுனிவர் அத்திருப்பதியின் வீதிவழியே நடந்துஅக்கோயிலின் அருகேவர அவர்கள் அதிந்து பகைவரைக்கண்டு பரதவிப்பார்போல் கோபித்து முனிவரைநோக்

கித் தகுதியற்ற கண்டிகையும் நீறுமணிக்து கொண்டிருக்கின்றனே ! ;ஆதலால் நீ பிச்சையெடுத் துழலும் புராந்தகனுக் கடிமையென்பதியாவரு மறிந்த விஷயமே ! நீ வருவது தக்கதன்று, கையிலுமொரு தண்டம் பிடித்துக் கொண்டு குறுகிய வடிவங்கொண்டிருக்கின்றனே ! நீ சிறியை யாகையால் இங்கே வரத்தகாது போவென, அதைத் திருச்செவியேற்ற அகத்தியமுனிவரும் கோபங் கொள்ளாது நகைத்து வேதவொழுக்கங்கடந்து நிற்கின்றீர்கள் ! நீங்கள்வாசஞ் செய்வதாகவு மறியேன், எனக் கொருவருஞ் சொல்லவுமில்லை, நல்லொழுக்கத்தினடப்பவராகத் துணிந் திங்கேவந்தேன், உங்கள் ஒழுக்க மறிந்திருப்பேனுனல் இங்கே வரத்துணியேன், என்னைக் கோபிக்கவேண்டாம், யான்போய் விடுகிறே னென்றுசொல்ல, அதைக்கேட்டுப் பொறுமல் அவர்கள் நீ இத்திருப்பதிக்கே வந்தது பெரும்பாவமென்று சொல்லவேண்டும், போவென்றனர் ; அகத்தியமுனிவரும் நீங்கள் சொன்னசொல்லும் உண்மையே ! வேதநூலின் துணிபுமிதுவே என்று தக்கன் வழிவந்தோராகிய அவர்களை நீங்கித் திருநந்திதேவரும், பிரமனும், தூருவாசமுனிவரும், பிருகுமுனிவரும், கவுதம முனிவரும், கண்ணுவமுனிவரும், ததீசிமுனிவரும் மற்றவரு மளித்த கொடுஞ்சாபம் இவர்களை நீங்கிப் பொய்த்துவிடுமோ வெனச்சிந்தித்து, உயிர்க்குயிராகிய பரமசிவ நிந்தனைசெய்த இவர்களுடைய அகந்தையை வேரொடுங் களையவேண்டுமெனவே துணிந்து, தமதுமாயையால் அவர்களைப்போலவே ஒரு பாகவதருருவங்கொண்டு திருமாலிடத்தே யன்புடையார்போல மீண்டு மவ்விடத்திலெழுந்தருளினர். அவரைக்கண்டு திருவடிகளில் வீழ்ந்துவணங்க,இவ் வணக்கம் திருமகள் மணவாளனுகிய இருடிகேசனுக்கே யாகுகவென்று சொல்லிவிட்டு, நீங்கள் திருமாலிடத்தே முடிவில்லாத அன்பினையுடையவர்களென்று கேள்விப்பட்டே இவ்வளவுதூரம் வந்தோம், இப் பூமியின்கண் உமக்கு ஒப்பாவார் பிறரில்லை உங்களைக் கண்டதனுல் யாம்மெய்புணர்ச்சி பெற்றோரானோம்; முன்னே * முத்திதரு பேரழகர் மலையிலிருந்தோம், இப்போது அத்திகிரியிலிருக்கச் செல்லுகின்றோம், நமது பெருமான் வீற்றிருக்கும் இத்தலத்தையடைந்தோமென அவர்களும் தங்கள் விரலைச்சுட்டி அத்தானத்தைக் காட்டகைதொழுது வணங்கி அத்திருமால் எழுந்தருளியிருக்கும் ஆலயத்தைக் கிட்டி அன்பாய் வலம்வந்து கண்ணபிரானுடைய திருவடிகளை வணங்கி மெய்யடியவரை நோக்கி இவர்களை வழிபடத் திருவுளங்கொண்டோம், திருமஞ்சன முதலிய பொருள்களை விரைவாகக் கொண்டுவரவேண்டுமென்று சொல்ல அவர்களும் பரிவாகச்சென்று திருமஞ்சனமும் நல்லனவாகிய மலர்களும் சந்தனமும் அழகிய ஆடைகளும் பிறவும் கொண்டுவந்து அகத்தியமுனிவர் முன்னே வைக்க, அவர்களைப்பார்த்து இப்பெருமானை யாம் அருச்சிக்கின்ற முறைமையைப் பாருங்கோளென்று பரமசிவனைத் திருவுளத் தெண்ணிக் குறுமுனிவராகிய அகத்திய முனிவரும் அத் திருமால் முடிமேல் செங்கையை

* முத்திதருபேரழகர்மலை என்பதற்கு மேருமலையென்றும், அழகரதுமலையென்றும் ; அத்திகிரி யென்பதற்கு காஞ்சியிலுள்ள அத்திகிரி யென்றும், அம்மலையாகிய பொதியமென்றும் பொருளமைத்துக்கொள்க.

நீட்டிக் குறுகு குறுகு குற்றுலாவென அரக்கினுற்செய்த பாவைமேல் தழலுற் றுற்போலக் குழைவித்து ஒரு சிவலிங்கப்பெருமானுக்கி யருளிப் பரம்பொரு ளாகிய பரமசிவனைத் தாபித்து மந்திரங்களையு மெடுத்துச்சொல்லித் தாமும் பழய வுருக்கொண்டு திருமஞ்சன முதலாகிய எப்பொருளுந் தூயனவாக்கி விரைந்து சிவார்ச்சனை செய்ய, அவமே தவமாகக் கொண் டுழலும் வேதி யர்கள் கண்டு இவனே வடிவத்தான் மிகச் சிறியன், புராந்தகனுகிய சிவனுக்கு மெய்யடிவனுக இங்கே நம் முன்னேவர இங்கே நிற்கவேண்டாமென் றிகழ்ந் தோம், இவனே நில்லாமற்போய்ப் பாகதவனுகவந்து நமது சமயத்தை யழித்து விட்டான் ; இப்படிப்பட்ட மாயையில் வல்லவனை விரைந்து பிடிக்கவேண்டு மென்று வளைந்துகொண்டார்கள். அவ்வாறு தம்மை வளைந்துகொண்டவ ரைப் பார்த்து கோபித்துச் கடலிடத்தே விஷத்தைவிடுத்தாற்போல அம் முனிவரது கோபத்தீசெல்ல, அவர்களை யிடைவிடாது பற்றித்துரத்த அவர் கள் அப்பதியையகன்று மண்மேலெங்குஞ் சிதறிப்போயினர். அவர்கள் போக வும் அத்திருப்பதி அன்று முதலாகச் சிவத்தலமாக விளங்கிற்று ; அகத்திய முனிவரோ சிவார்ச்சனை செய்துவிட்டு இறைவனை வணங்கி விடைபெற்றுத் தென்றிசையைநாடி நடந்து பொன்னையு மணிகளையும் வாரிக்கொண்டு அருவி கள் இழிகின்றபொதியமலையையடைந்து சிவபெருமானதுதிருவடிகளையே சார் பாகவெண்ணிமெய்மமையாகிய தவஞ்செய்துகொண் டிருந்தனர். இதுநிடக்க;

திருக்குற்றுலப்படலம் - முற்றிற்று.

---

## இந்திரனருச்சனைப்படலம்.

முன்னே காகத்தினுருவங்கொண்டு அகத்தியமுனிவரது கமண்டலத்தி லிருந்த காவிரியைப் பூமியிற் கவிழ்த்துவிடப்பாரந்ததன்மை பஞ்சபாசத்தடைக ணிக்கிக் குருவருள் எய்தி வரச்சென்ற உயிர்போன்றிருந்தது. பின்னும்வருண னும் சந்தனமும் அகிலும் சங்கும் முத்தும் கவரியும் யானைக்கோடும் பொன்னு மணியும் இந்திரன்பால்செலுத்த அலைகளால் மேற்கொண்டதுபோலவும்,வனா யென்னும் அழகியதேரும் யானைத்தொகையும் மனிதர்களும் அலைகளாகிய குதிரைகளும் கொண்டு சூரபதுமன் இந்திரன்மேல்போர்செய்யும்படியனுப்பிய சேனை வெள்ளமும்போலவு மிருந்தது. இவ்வாறு அக்காவிரியாறு இந்திரன் தவ ஞ்செய்யும் சோலையை யணுகிச்சென்றது. அதை இந்திரன்கண்டு ஆனந்தக் கூத்தாடிச்சிரித்து எமது பெருமானுக்குரிய அர்ச்சனை முடிந்ததென்று பாடி இமையவர்முதல்வனுகிய பரமசிவனைத் துதித்துத் துன்பநீங்கினுன். இவ்வாறு காவிரிநதிபெருகிவர இந்திரன் மனவாட்டந் தீர்ந்ததுபோல அப்பூஞ்சோலையும் வாட்டந் தீர்ந்தோங்கிச் செழித்தது. இந்திரனே பூஞ்சோலை மிகச் செழித்துப் பூத்திருப்பதனுல் காலையிற்சென்று அம் மலர்களைக்கொண்டே சிவார்ச்சனை செய்துகொண்டு அன்றுசீகாழியிலுள்ள வனத்தில் தங்கியிருந்தான். இது நிற்க;

இந்திரனருச்சனைப்படலம்
முற்றிற்று.

---

# தேவர்புலம்புறுபடலம்.

அக்காலத்தில் சூரபதுமன் இடுகின்ற குற்றேவலுக்கஞ்சி எந்தக் காலத்தில் இத் துன்பநீங்குமென்று வருந்திய தேவர்கள் பொன்னுடகன்று பூமியில் வந்து தமிழ்க்கிடமாகிய சோணாட்டில் இந்திரனிருந்த சீகாழியை யணுகி அவ் விந்திரனைக்கண்டு அவனுடைய பாதங்களைப் பணிந்து தங்கள் குறைகளை யெடுத்துச்சொல்ல, அதைக்கேட்ட இந்திரன் அவர்கள் படுந்துன்பத்திற் கிரங்கிப் பெருமூச்செறிந்து தேவர்களே! மாயைபெற்ற சூரபதுமன் என்று விரமாமகஞ்செய்தானே அன்றே நமக்குரிமையாகிய பொன்னாட்டினை யிழந்துவிட்டோமென்று சொல்லியிருந்தேனன்றோ! அவ்வாறே அவன் தான் செய்ததவத்தால் அனாதிமல முத்தனாகிய பரமசிவனிடத்தில் பெறுதற்கரிய வரங்களைப்பெற்று நமது பெரும்பதமுங் கைக்கொண்டு சற்றும்நம்மிடத்திலிரக்கமில்லாமல் நம்மையெல்லாம் தாழ்வாகிய குற்றேவல் செய்துவரும்படி கட்டளையிட்டிருக்கிறான். இதுவல்லாமல் உவர்க்கடலிலிருக்கிறமீனைப்பிடித்து எடுத்துச்சுமப்பதாகிய தாழ்வான குற்றேவல்களை உலகிற்செய்து வருத்தப்படுத்திய தல்லாமல் இந்திராணியைக் கைப்பற்றுதற்கும் என்னைச் சிறையிடுவதற்கு மெண்ணியிருந்தான். அது காரணமாகத் தன் சேனைகளை யனுப்பித்தேடனானதையறிந்து அவளுடனே அவ்விண்ணுலகைநீங்கி இச் சீகாழிநகரையடைந்துசிவார்ச்சனையால் எல்லாப்பேறுங் கிடைக்குமெனத்துணிந்து சிவார்ச்சனை செய்துகொண்டு இங்கேயிருக்கின்றேன். இனி நாமெல்லாம் கயிலைமலையை யடைந்து அவுணர்களிடுங் குற்றேவலால் வருத்தப்பட்டுக் கொண்டிருப்பதைப் பரமசிவனிடத்தே முறையிட்டுக்கொண்டு நமது துன்பத்தைத் தீர்த்துக்கொள்வோம் வாருங்கோ ளென்றுசொல்ல, தேவர்கள் அதைக்கேட்டு மின்னலைக்கண்ட தாழையைப்போலவும் மயிலைப்போலவும் மகிழ்ச்சிகொண்டு இந்திரனைநோக்கி அரசனுநீ! குரவனுநீ! ஆசிரியனுநீ! தெய்வமுநீ! மேலாகிய செல்வமுநீ! நாங்கள்செய்த தவமுநீ! எம்முயிர்நீ! அறிவுநீ! இன்பத் துன்பக் கூறுபாடுகளுநீ! ஆகையால் எங்களுக்கினிக் குறையென்பதுண்டோ! நீ யிட்ட கட்டளையைச்செய்து உன்னை வணங்கித்திரிவதே எங்களுக்குரிய கடைமை; இனி எங்கள் துயரத்தை யோட்டிக்காப்பதே உமக்குக் கடனாகும். அவுணரையும் முன்னே கொன்று குவித்தாய்,இப்போது சூரபதுமன் முதலானோருயிரையுங் கொள்ளைகொள்ள எண்ணியிருக்கின்றாய், பூமியிலிருப்பவர்க்கும் முனிவர்களுக்கும் தேவர்களுக்கும் ஆராயும்போது நீ யன்றித் துணையாவார் பிறரார்? ஆகையால் எங்களுடைய துன்பத்தை நீக்கும்படி நமதிறைவனாகிய பரமசிவனது கயிலைமலைக் கழைத்துக்கொண்டு போவென்றுசொல்ல, அதைக் கேட்ட இந்திரன் அவர்களைச் சற்றிருங்கோளென்று அங்கே நிறுத்திவிட்டுத் தன்னந்தனியே இந்திராணி யிருக்குமிடஞ் சென்றான்.

தேவர் புலம்புறுபடலம்

முற்றிற்று.

---

## அயிராணி கோசப்படலம்.

இந்திராணி தன் நாயகன் வருகையைக்கண்டு வணங்கி இவ்விடத்தே தேவரி ரெழுந்தருள யாதென்னமென்றுவேண்ட, அதைக்கேட்டு நம்மைச் தேவர்கள் சிலர் சூரபதுமனுக் கஞ்சி யடைந்தனர்; அவர்கள் படுந்துன்பத்தை யும் நமது துயரத்தையும் புண்ணியமூர்த்தியாகிய பரமசிவனுக்குத் தெரிவித் து அவுணர்களுக்கு முடிவுதேடி நமது பதவியை மீட்டும் பெறவேண்டும்: ஆகையால் வருத்தத்துடனே நம்மையடைந்த தேவர்களுடன் திருக்கயி லாயமலைக்குப் போகவேண்டுகிறேன்; அதைத் தெரிவிக்க வந்தேனென்று சொல்ல, இந்திராணி கேட்டுப்பொறுமல் மயங்கி விழ்ந்துதுன்பக் கடலிலாழ் ந்து அறிவற்றுக்கிடந்தாள். அவளை அன்பாய்த்தழுவிக்கொண்டு தன் தொடை மேலிருத்திச் சயித்தியோபசாரத்தால் தெளிவிக்க அவள் சிந்தை மயக்கஞ் சிறி தகன்று தெளிவுவர முன்னைத்துயரம் வந்து மீண்டுஞ் சூழ்ந் துள்ளநடுங் கிச் சொல்லுகின்றாள். பொன்னுட்டை யிழந்து பூமியிலும் காடேகதியாய்ச் சஞ்சரித்துக்கொண் டிருந்தாலும் உன்னருளின் வல்லபத்தால் உயிர்வாழ்ந்து கொண்டிருக்கிறேன். என்னு ருயிர்போன்றவனே! என்னை நீ பிரிவாயானுல் பின் னெனக்குத் துணையாவார் யார்? யான் பிழைக்கும் வழியுமுண்டோ! சக்கரவாகப் பறவைக்கும் சகோரபட்சிக்கும் முறையே மேகமும் சந்திரனும் துணையா மாறுபோல நீ யல்லாமல் என் சோகம் எவ்வாறு நீங்கும். உன்னைப் பிரிந்தும் நான் உயிர்தாங்க முடியாதே,எனக்கு யாருந் துணையாவாரில்லாமற் போயின் என்னைத் தேடித்திரிகின்ற அவுணர்கள் கண்டால் தீமை யுண்டாகா திருக்குமோ! நாமோ அவுணர்கள் செய்யுங் கொடுமைக்கு ஆற்றுமல் பொன் னுலகத்தைவிட்டு இக் காட்டிலடைந்து உருக்கரந்து தவஞ்செய்வதும் பழிக் கஞ்சியே யல்லாமல் வேறுண்டோ! தீயர்களாகிய அவுணர்களோ எங்குந் திரி ந்துகொண்டிருக்கின்றனர். அவரோ அறிவிற் சிறியவர்,மாயை பல கைகண்ட வர், பாவத்தொழிலேயே யல்லாமல் புண்ணியமென்பது சிறிது மறியமாட் டாதவர்,பழிக்கஞ்சவேமாட்டார்கள்; நீ யதனையறியாததுண்டோ? இப்போது எனக்குத் துணையாக நம்முடைய மகனுகிய சயந்தனுமில்லை, தேவர்களு மில்லை, ஐராவதமென்னும் யானையுமில்லை, பின்னும் ஒருபெண்துணையுமில்லை; நானே தன்னந்தனியே பெண்பாலா யிருப்பவள் தவஞ்செய்துகொண் டிருக் கலாமோ, மேலும் என்னைப் பொல்லாதவர்களாகிய அவுணர்கள் கண்டால் ஓடிவந்து பிடித்துக்கொண்டுபோய்த் தீயகாரியங்களைச் செய்துவிடுவர்; அப் பழியெல்லாம் உன்னையன்றி யாரைத்தான் சூழும். நான் துணிந்துரைப்பது கேளும்; நானுயிர் பொறுத்திரேன், யாவரையும் படைத்தளித்தழிக்கும் முக் கட்பெருமா னெழுந்தருளி யிருக்கும் கயிலைமலைக்கு உம்மோடு தொடர்ந்து வருகின்றேனென்றுசொல்லிநிற்க; அதுகேட்டுநன்றுகவிருக்கின்றது உன்கருத் தென்று இந்திரன் அவளை யணைத்துக்கொண்டு இந்திராணியே! நான் நீலகண் டத்து நின்மலனெழுந்தருளிய கயிலைமலைக்குப் போனுல் உன்னைக்காப்பவ ரில்லா திருந்தாலன்றோ பெருமகிழ்வோடு என் பின் வரவேண்டும். பரமசிவ

னும் திருமாலும் சேர்ந்துதவியமாசாத்தாநமக்குக்காவலாயிருக்க நீவருந்துவது முறையாமோ! நமது பெருமானருளிய அம்மாசாத்தாவை நினைத்து உனக்குக் காவலாகவைத்துவிட்டுநான் கயிலைக்குப்போய்வருமளவும்கையடையாகக் கொடுத்துப்போகிறேன், உன்னை அக் கடவுட்பெருமானே காப்பான், இங்கே யே யிருவென்றுசொல்ல, அவனது சிறப்பைச் சொல்லவேண்டு மென்று சொல்ல, இந்திரன் சொல்லலாயினன்.

அயிராணி கோசப்படலம்.

முற்றிற்று.

---

## மாசாத்தாப்படலம்.

முன்னாளில் முகுந்தன் முதலிய தேவர்களும் தானவரும் சிவாஞ்ஞை யின்றிப் பாற்கடலைக் கடைந்தகாலத்தில் ஆலவிடம் தோன்றிற்று, அவ்விடத் தைக்கண்டு அவர்கள் மேகத்தைக்கண்ட குயிலினமேபோலக் கலக்கமடைந்து ஓடிப்போய்த் திருக்கயிலைமலையையடைந்து செந்தீவண்ணனாகிய பரமசிவனது பாதங்களைவணங்கி யடைக்கலம்புக, பரமசிவனும் அவர்களை வருந்தவேண்டா மென்று தாமே அவ்வாலவிடத்தை யமுதாகக்கொண்டு புசித்துத் திருமாலே முதலியதேவரைநோக்கி இன்னும் நீர் இப்பாற்கடலைக்கடைவீராயின் அமுதம் தோன்றுமென, அவர்கள் பாற்கடலையடைந்து முன்போல வந்து முடிவதை யறியாமலே கணேசப்பெருமானை வழிபாடு செய்யாமற் கடைந்தார்கள். அவர் கள் கணேசப்பெருமானை வழிபாடு செய்யாமையால் கடலில் நட்டமத்தாகிய மந்தரமலைவருந்தி விழ்ந்து நாகலோகத்திற்போய்ப் படிய அதையறிந்து நாம் கணேசப்பெருமானை வழிபாடுசெய்யாத குறையென்றே அர்ச்சனை செய்தார் கள். அதனால் மந்தரமாகிய மத்தானது முன்போல் பிலத்தினின்றும் பெயர் ந்து மேலேயெழ மகிழ்ந்து வணங்கித் திருமகள் கணவனாகிய விஷ்ணுமூர்த்தி முதலானோர் மீண்டுங் கடலைக்கடைந்தார்கள். அவ்வாறு கடைகையில் அமுத மெழுந்தது. அதைக்கண்ட தேவர்களும் தானவர்களும் அவ் வமுதத்தை விரும்பி உடைகின்ற கடலேபோலச் சூழ்ந்துகொண்டார்கள். எம்மாலிது வந்தமையால் எமக்கே இஃதுரியதென்று ஒருவருக் கொருவர் மாறுபட்டுக் கொண்டு போர்செய்யத் துணிகையில் திருமால் மோகினி யுருக்கொண்ட னன். தானவர்களோ மண்ணிலும் விண்ணிலு மற்றஉலகத்திலும் காணக்கிடை யாத பெண்ணுருவங்கண்டு அமுதத்தைவிட்டு மொய்த்துக்கொண்டார்கள். அதற்குமோகினியாகிய திருமால் நான்வந்திருக்கின்றேன். அமுதமு மிருக்கின் றது, இதனுள் எதுவேண்டுஞ் சொல்லவேண்டுமென்றான். நோற்காமையால் இறக்கின்றவர்களாகிய தானவர்கள் மனம் வேறுபட்டு நீயே வேண்டுமென்ற னர், தேவர்களும் அமுதமே யாங்கள் பெறவேண்டுமென்றனர். அவர்கள் அமு தம்பெற்று மாயைநீங்கிப் போயினர். அவரோடு போர்செய்த கொடியவராகிய தானவர்கள் மோகினி யுருக்கொண்ட திருமாலை யழைத்துக்கொண்டு மிக்க

விருப்புடனேரிடத்திலே போயினர். அவர்களைநோக்கி என்னை மலர்ப்பாயலி லணைந்து தழுவவல்லவனை இங்கே கண்டேனில்லை என்றுசொல்ல, அதைக் கேட்ட அத் தானவர்கள் ஒவ்வொருவரும் எமக்கு மாறாகவே யொருவரு மிலர், நானே யாரினும் வல்லமைபெற் றிருக்கின்றேனென்று வேறுவேறாக ஒவ்வொருவரும் பேசிக்கொண்டு மொய்த்துக்கொண்டு அவளைக்கூடவேண்டு மென்னு மாசையால் போர்செய்து தீமூங்கிலில் தோன்றியே மூங்கிற்காட்டை யெரிப்பதுபோல அவர்கள் தம்மிலிறந்துபட்டனர். அத்தானவர் தொகையில் இருவர்விஷ்ணுவின் மாயையென்றறிந்து இவரோடிருக்கின்றது என்ன பயன்? என்று நீங்கித் தம்முருவநீங்கித் தேவர்களைப்போ லுருக்கொண்டு அத் தேவர் களுடைய கூட்டத்திற் புகுந்திருந்தார்கள். மோகினியாகிவந்த கள்ளமாமா யன் தானவரெல்லாம் ஒழிந்தனரென் றெண்ணி மீண்டுந் தேவரையடைந்து அமுதம் பகிர்ந்து கொடுத்தான். அப்படி கொடுத்துவருங்காலத்தில் தேவர் களுக்கு மத்தியில் இருந்த இருவரும் மந்திரஞ்சொல்லாமல் உண்ணத்தலைப் பட்டனர். தாமரை நண்பனும் பகைவனுமாகிய சூரிய சந்திர ரிருவருங்கண்டு இவர்கள் கள்ளத் தானவர்களென்று சைகையாற் குறிப்பித்தனர். அவ்வாறு காட்டவே இக்கள்ளர்களா தேவருடன் அமுத முண்ணத்தக்கவரென்று தன் கையிலிருந்த சட்டுவங்கொண்டு அவர்கள் தலைமேற் புடைத்தான். அவ்வமு தம் அவர்கள் கண்டத்தில் வருமுன்னரோ துண்டித்ததனுல் யாக்கைநீங்க அழி யாத தலையையுடைய அவர்கள் மாட்சிமைநோக்கி அமுதுண்டமையால் விண் ணில் நிற்பாரெனத் துணிந்து சிவனருள் பெறுவித்து அவர்களை ஏழு கிரகங் களுடனே சாயாக் கிரகங்களாகிய இராகுகேதுக்களாகவிருக்க வமைக்க, அவர் கள் சிவனைப்போற்றித் தவஞ்செய்து கரும்பாம்பு செம்பாம்புகளாக விருக்க வரம்பெற்றுத் தம்மைத் தானவராகக்காட்டிய சூரிய சந்திர ரிருவரையும் மறைப்பாராயினர். இதுதான் அமுதம் வந்தவரலாறு; அமுதுண்ட தேவர் கள்தொழப் பெண்ணுருக்கொண்டு திருமாலிருக்கையில் நால்வகையாகிய பார் வதி துர்க்கை காடுகிழாள் விட்டுணு வென்னுஞ் சத்திகளுள் விட்டுணுவும் ஒருசத்தியாகையால் அதைக் காட்டத் திருவுளங்கொண்டு நீலகண்டத்துநின் மலன் அங்கெழுந்தருளி நீகொண்டவேட மிகச்சிறந்ததென்றுசொல்லிஉன்னை விரும்பிவந்தோம், உன்னைப் புணருங்காத லெமக் குண்டென்றுதெரிவிக்க, பெண்வேடங்கொண்ட பெருந்தகையாகிய திருமால் நாணங்கொண்டு விருப்பு வெறுப்பில்லாதவ னுகையால் என்பாற்கொண்ட விருப்பமு முண்மை யல் லவே, என்னத்தைநாடி யென்னை யடைந்தனையோ அறியேன், உலகில் ஆட வருடன் ஆடவர்சேர்ந்து இன்பமடைத லெங்குங் கண்டோமில்லை, என்னைக் கருதுவதுந் தகுதியன் றெனக்கூற, அதற்கு நீலகண்டத்துநின்மலன் முன் னொருகாலத்தில் பிரமன் இறந்துபடவே உம்மைவிழைந்து கூடினோம், அப் போது பிரமனை யுந்திவழியாகத் தந்தாய், அப்போது நீ யவனுக்குத் தாயல் லவோ! நீ வாவென்றுகூறி அவனைப் பற்றிச்சென்று நாவலந்தீவில் வடதிசை யின்கண் கடம்பமர நிழலில் அடைந்தான். அப்போது இருவரும் கூடினர். அவ்விருவருங் கான்றுமிழ்ந்த உமிழ்நீர்கண்டகி நதியென்று சொல்லப்பாந்தது. அந் நீரில் பொன்மயமான வச்சிரதந்தி யென்னப்படும் கீடங்களுண்டாயின.

அக்கிடங்கள் குடியிருந்தகுடம்பையை நீக்கிப் பொன்னைவாங்கிப் பொறியினைநோக்கி வழிபாடுசெய்வர் ; அதற்குச் சாளக்கிராம மென்றுபெயர். அவர்களிடமாக மாசாத்தா திருவவதாரஞ்செய்தான். அவனை உருத்திரரோடு சேர்த்து வரம் பலவளித்துப் புவனமீந்துபுவனேசனுகச்செய்து மாதவர்களும் வணங்கும் ஏற்றத்தையு மளித்துப் பரமசிவனும் திருமாலும் தத்தம் இருக்கையை யடைந்தனர். மாசாத்தாவும் தனக்களித்த புவனத்திற்கெழுந்தருளித் தன்னைப் புடைசூழும் பூதவெள்ளங்களுடன் சென்று காவல்செய்கின்றான். அவனே மண்ணுலகத்தவரும் வானவரும் பிரமனும் என்றும் அர்ச்சிக்கு நீர்மையையுடையான், கள்ளமாமாயப் பிரானுகிய கண்ணபிரானும் வந்தனைசெய்யும் தகுதியுடையா னென்றால் அவனுக் கொப்பாவார் யாரிருக்கின்றனர். அத்தன்மையானுயினும் என்பா லன்புடையனுயின் உன்னைக் காத்தருளுவனென, இந்திராணியும் இசைந்ததை யறிந்து சிவபெருமானும் திருமாலும் பயந்த மாசாத்தாவை வரும்படி துதிக்க, அவனதை யறிந்து யானைமேலேறிப் பல பூதவெள்ளமும் புடைசூழும்படி பூரணை புட்கலையென்னு மாதரிருவரும் தன்பாலினிது வீற்றிருப்ப எழுந்தருளி இந்திரனுக்குத் தெரிசன மளித்தான். இந்திரன் அவனைக் கண்டவுடன் அவனது சேவடிகளைப்பணிந்து தாழ்ந்துநிற்க உனக் கென்னவேண்டுமென்று கேட்டான், அதற்கு இந்திரன்மாயையைபெற்ற சூரபதுமனே என்னை வருத்துகின்றான், அதனல் பொன்னுடு கைவிட்டு இவளோடும் பூமியையடைந்து காட்டிலுள்ள மூங்கிலாக உருக்கரந் திருக்கின்றேன். நான் என்னுருக்கரந்து இப்பதியில் தவஞ்செய்துகொண் டிருக்கையில் தேவர்கள் என்னை யடைந்து தங்குறைகளையெல்லாம்சொல்லி வருத்தப்பட்டு எம்மைக் காக்கவேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். நானேகயிலைமலையை யடைந்து எங்கள் வருத்தமெல்லா மெடுத்துச்சொல்லி வரத் துணிந்திருக்கின்றேன், நான் கயிலைமலைக்குப்போய்த் திரும்பிவருகின்ற அதுவரையிலும் இந்திராணியைக் காத்திருக்கவேண்டுகிறே னென்றுசொல்லச் செண்டினைக் கையிலேந்திய மாசாத்தாவும் இந்திராணி தீதடையாவண்ணங் காத்துநிற்பேன், நீ தனியே விட்டுப்போகின்றே னென்றெண்ணுமல் கயிலைமலைக்குப் போகலா மென்றுசொல்லித் தாமொரு சூழலிலெழுந்தருளித் தம்பால் வாட்போரில் வல்ல மாகாள ரெனப்படுந் தண்டத்தலைவரை யழைத்து இந்திரன்கயிலைமலைக் குப்போகின்றமையால் அவனது மனைவியாகிய இந்திராணியைக் காக்கவேண்டுகிறேனென்று கட்டளையிட்டான். இது கிடக்க ;

மாசாத்தாப்படலம்
முற்றிற்று.

## இந்திரன் கயிலை செல்படலம்.

இந்திரன் தன் மனையாளாகிய இந்திராணியைநோக்கி நீ வருந்தவேண்டாம், உன்னை மாசாத்தா காத்தருளுவரொன்று அவளை அங்கேயே தனியிருத்திவிரைந்து தேவர்களுடன் கயிலைமலையை யடைந்து நந்திபெருமான் எழுந்தருளிய முதற்றடைவாயலிற் சென்று வழிபாடுபுரிந்து துதித்துநிற்க, அவனை

நோக்கி உனது துயரம் இன்னமு நீங்காதிருக்கின்றது போலும்! சனகர் சனந்தார் சனாதரர் சனற்குமார ரென்னு நால்வருக்கும் வைதிக சைவசித்தாந்தப் பொருளைக் கல்லாலின் கீழமர்ந்தருளி உபதேசிக்கின்றான், இது சமயத்தில் நாமருஞ் செல்வது தகுதியல்லவென்று சொல்லித் தடுக்க, அதைக்கேட்ட இந்திரன் துன்பக்கடலி லழுந்தினன், அவனுடன் தேவர்களும் அவ்வாறே துயரக்கடலி லழுந்தினர். இந்திரனே நந்திபெருமான் சேவடியைவணங்கி நல்லொழுக்கநீங்கிய சூரபதுமனுக்கு ஆயுளோடு வல்லமையும் அளவற்ற செல்வமும் அவன் செய்துகொண்ட தவத்தால் இறைவன் கொடுத்திருக்கின்றனன். நாஞ்செய்த புண்ணியநீங்கித் தீவினை மூண்டதனால் அவனிட்ட கட்டளையால் வருத்த மடைந்திருக்கின்றோம், இப்படி நாங்கள் இங்கேநின்று 'சிவன்செயலாலே யாதும்வருமெனத் தேறேன்' என்றபடி, வருத்தப்படுவதும் அவன் செயலே யல்லாமல் வேறில்லை. சூரபதுமன் செய்துவருந் தீயசெயலைக்கண்டு வருந்தி இறைவனுக்குத் தெரிவிக்க இங்கே வந்தோமென்று இந்திரன் விண்ணப்பித்து, நந்திபெருமானைநோக்கி இந்திரன் பின்னும் அச்சூரபதுமன் தவஞ் செய்தபோது அவன் பெற்றவரங்களும் உரங்களும் தொலைந்தால் சொற்பிழைத்தவ னென்பார்கள், அல்லது எங்கள் அல்லலை நீக்கவிட்டா னென்றால் அருளுக்கொரு தலைவனென்று யாவருஞ் சொல்லுகின்ற நம்மிறைவனுக்குஞ் சிறப்பும் பெருமையு மில்லையாகின்றன, ஆகையால் இவ்வகை யாராய்ந் தெங்களையாளும் பக்குவமறிந்து பரம்பொருளாகிய பெருமான் மோகமில்லாதவராகிய சனகாதிகள் நால்வரும் பெறலருந்தத்துவப் பொருளைப்பெற மோனஞானத்தைக்காட்டி யுறைகின்றான்போலும், இங்கே அவனை யல்லாமல் யாங்கள் படுந்துயரத்தை நீக்கவல்லா ரொருவருமில்லை, திருமகள் நாயகனாகிய கள்ளமாமாயப்பிரானும் அச்சூரபதுமனுக்கு இளைய சகோதரனாகிய தாரக னென்பவனோடு போர்செய்து ஆற்றாமல் தன் கையிலிருந்த சுதரிசனமென்னும் சுடராழிப் படையு மிழந்தான்; மூவருக்கு முதல்வனாகிய நமது பெருமானது திருவருட்செய லிதுவென்றே யானும் தேவர்களும் பூவுலகத்தை யடைந்தோமானால் நாங்கள் அச்சூரபதுமனால் சிறையிடப்படுவது நிச்சயம், ஆகையால் நானும் தேவர்களும் பூவுலகத்திற் போகமாட்டோம், இறைவனது திருவடியைக் காணத்தக்க செய்கையைநாடி தேவராற் காக்கப்படும் இவ்வாயிலி னோர்புறத்தே வசிக்கின்றோ மென்றுசொல்ல, அவ்வாறே செய்யுங்கோளென்று நந்திபெருமான் கட்டளையிட, அக்கட்டளையையேற்று இந்திரனும் மற்ற தேவர்களும் அவ்வாயிலி னோர்பாங் கிருந்தார்கள்; இங்கே தேவர்களுடன் இந்திரன் கயிலையிலிருக்க, இந்திராணியினது செய்கையும் அவனொழிந்த மற்றையோர் செய்கையுஞ் சொல்லுகின்றேன்.

இந்திரன் கயிலைசெல் படலம்

முற்றிற்று.

---

# அசமுகிப்படலம்.

இந்திராணியோ தன்னை நீங்காது வசிக்கும் தன் கணவனாகிய இந்திரன் பிரமன் மாலென்னு மிருவராலு முணரப்படாத தனி முதல்வனாகிய மறை முதலியோகி யெழுந்தருளி யிருக்கும் வெள்ளிமலையாகிய கயிலைமலைக்குப் போனபின்னே, அவள் தன்னைத் தெய்வமடவார் பலர் துதித்துநிற்க அருந் தவஞ்செய்துகொண்டு சீகாழி யென்னும் திருத்தலத்தை யடுத்த வோர் வனத்தில் தவஞ்செய்துகொண்டிருந்தாள். இவ்வாறு தவஞ்செய்துகொண்டு தன் னாயகன் வரவைக் காணமல் உடம்புமெலிந்து மனம் பதைபதைத்து இருக்கையில் சூரபதுமனுக் கிளையாளும் இளையார் பலரா மருவினாலு மிளையாளு மாகிய அசமுகி யென்பாள் காமநோயால் வருந்தி வாடித் திரிந்துகொண்டு யாரையும் பிடித் தெளிதில் அணைந்துமேக மிடியிடித்ததுபோற் பெருங்குரலுடையாளாய்ப் பொறுமையும்புகழுஞ் சிறிதுமில்லால் கற்புடைமையில்லாமல் சூலப்படையை யேந்திக்கொண்டு துன்முகி யென்னுந் தோழியுடனே அங்கே வந்தாள். அவள் அச்சோலையைக் கண்டு காட்டிலுள்ளதாயிருந்தாலும் இது பூமியிலுள்ள சாதாரணமான சோலைபோலவு மிருக்கவில்லை, தேவலோகத்திலுள்ள சோலையைக் கொண்டுவந்து தேவேந்திரன் இங்கே வைத்தான்; இது தப்பாததென்றே சொல்லவேண்டுமெனத் துணிந்து தன் தோழியாகிய துன்முகியுடனே பேசிக்கொண்டு கோலாகலத்துடன் அச்சோலையைக் குறுகி அங்கே வசிப்பவளைக் காண்பேனென்று எட்டுத்திசையையு நோக்கிப்பார்த்தாள். அவ்வாறு பார்க்கையில் மாசாத்தாவினது படைத்தலைவராகிய மாகாளர் கண்டு இவள் செய்கையை யறியலாமென்று வில்லேந்திய வேடரைப் போல வேறோரிடத்தினின்றுங்கார்த்துக்கொண் டிருந்தனர். இவ்வாறு அவர் நின்றதைப்பாராமல் மனத்திற் களிப்பு மிகுந்து அச்சோலைமுழுதுந் திரிந்து இந்திராணி தவஞ்செய்வதைக் கண்டாள். அசமுகி இந்திராணியைக்கண்டுநம் மண்ணனாகிய சூரபதுமனுக்கஞ்சிப் பொன்னுலகைவிட்டிழிந்து இங்கேவாசஞ் செய்கின்றாள், இவளைக் கொண்டுவாருங்கோளெனச் சூரபதுமனும் தன் சேனைகளையனுப்ப அவர்கள் கண்ணுக்குப் புலப்படா திருந்தாள். அப்படி அவர்களால் தேடிக்காணாத இவ்விந்திராணியை நானே வலியக்கண்டேன், மயக்கத்தில் வருந்தாதொழியென்று சூரபதுமனாகிய என் தமையன் வருந்தா வண்ணம் நானே பிடித்துக்கொண்டுபோய்க் கொடுப்பேன், இவளை இந்திரனே இங்கே தனியாகவிட்டுவிட்டுப் போயிருக்கின்றான், இவளைக் காக்க ஒரு தேவனோ மில்லை, அவ்விந்திரன் வருவதற்குமுன் இவளைக் கொண்டுபோவதேநலமென்றடைந்துஇந்திராணியைநெருங்கத்தன்னந்தனியேதவஞ்செய்து கொண்டிருந்த இந்திராணிகண்டு இவளின்னளெனத் தெரிந்திலேனென்று பயந்து விரைந்தெழக்கண்டு அசமுகி இந்நாள்வரையிலும் இந்திரனுடன் கூடியிருந்து சுகமனுபவித்தாய், அவனோ பொன்னுடொன்றே யுடையான், என் தமையனாகிய சூரபதுமனோ பல வண்டங்களையுந் தன்னாணை செலுத்திவருகின்றான். அவனைக்கண்டு பயந்து ஒளித்துக்கொண்டிருக்கின்றவன் இந்திரன், உனக்குத் திருமகளோ அழகிலொப்பானவளுமல்லள், அப்படிப்பட்ட நீ தன்னந்தனியேயிருந்துகொண்டு தவஞ்செய்வானேன்! உன்னைச் சேரும்படி சூர

பதுமன் தவஞ்செய்துகொண் டிருக்கின்றான், அவனை யடைய வெண்ணிறை யில்லை, அவனோ அழிவில்லாதவன், இவனோ அழியுந்தன்மையுடையவன், பழி யில்லாதவனவன், இவனோ அவனுடைய குற்றேவலைச் செய்துகொண்டு திரிப வன், தனிமையாகத் திரிந்துழல்கின்ற அவ்விந்திரனைத் துணையெனக்கொண்டு உடம்புமெலிந்து வாடுகிறாயே! உன்னை எத்தேவர்களும் இந்திரனும் அவுணர்க ளும்அரம்பாஸ்திரிகளும் வணங்கிக்குற்றேவல்செய்ய முத்தேவரும் வழிபடுகிற சூரபதுமனிடத்தே கூட்டுகின்றேன், அவனோ எந்தமாதர்களையும் வெறுத்து உன்னையே நாடிக்கொண்டிருக்கின்றான்; என்னோடு வருவாயாயின்என்னுடன் பிறந்தானிடத்தே கூட்டுகின்றேன்; என்னோடு விரைவாக வாவென்றாள்.

அசமுகிப்படலம்

முற்றிற்று.

---

## இந்திராணி மறுதலைப்படலம்.

அவ்வாறு சொன்னதைக்கேட்டு இந்திராணி தன்னிரண்டு கைகளாலும் தன்னிரண்டு செவிகளையும் பொத்திக்கொண்டு அவ்வசமுகியை நோக்கி நீ சொன்ன கொடிய சொல்லைக் கேட்டவர்கள் மிகத்துன்ப மனுபவிப்பார்கள், அப்படியானால் அதைச்சொன்ன உனக்குண்டாகும் தீமையைச் சொல்லவும் வேண்டுமோ; நீயோ பிரமனது மகனாகிய காசிபமுனிவன் மகள், நீதியில் லாத சொல்லைப் பேதைகள்போலப் பேசுவது நீதியோ! தருமத்தையும் மாத வத்தொழிலையும்கற்பினையும் பெருமையையும்பிறப்பையும் உரிமையையும் உற வையும்பார்த்திலை, பழியையும் படியோரிகழுகின்ற மொழியையும் முறையை யும் அதன்வழியையும் அதனால் வருவதையுஞ்சிறிதும் பாராமலே தீயசொல் லைச்சொல்லத்துணிந்தனை; உலகத்தில் செல்வமும் வல்லமையும் ஆயுளும் சிற ப்புகளும் தொலைகின்றவர்களுக்கு இவ்வித குணக்கேடுக ளுண்டாகும்,நீயதை யறியாமல் சொல்லவந்தாய், அதற் குன்குலத்தாரே சாக்ஷியாகும். நானோ இந் திரனை யல்லாமல் யாரிடத்தும்மனம் வைத்தறியேன், குற்றமற்ற கற்பினையுடை யேன், அப்படிப்பட்ட என்னிடத்தே நீ பழிச்சொற்களை யெல்லாமெடுத்துச் சொல்லவந்தாய்! உன்சுற்றத்தார் பிழைப்பதற்கு வகையான காரியமேயல்ல, உலகத்தில்நீதியல்லாத காரியங்களைச் செய்த அரசர்கள் நரகத்துன்ப மனுப விப்ப தறியமாட்டாயோ! நாளை உங்களையும் அல்லல் குறுகாமலிருக்குமோ, நீதியில்லாத வழியே நடப்பவளாகையால் அறிவுகலங்கிக் கொடுமொழியே சொல்லத் துணிந்தாய்! இதுதகுதியான காரியமல்ல, நீ அதை மறந்துவிடெ ன்று சொல்ல, அதுகேட்ட இந்திராணியும் நான் அகத்திற்காவல் கொண்டிருப் பதுபோல் புறத்திலும் காவல்கொண்டிருப்பேன், இவ்விடத்தைவிட் டொழி யெனக் கேளாமல் அவ்விந்திராணியை நோக்கி நான் நீதியாக வெடுத்துச் சொல்லியும் ஒட்டிவரவில்லை,மாறாகவே பேசிக்கொண்டிருக்கின்றனை; உன்னை யிப்போதே விழுங்கிப் போடுவேன், என் தமையனாகிய சூரபதுமனுக் கென்

திழுத்துக் கொண்டு போவதே தகுதியான காரியம்! உன்னைப் பெருந்தேவர்களாகிய மூவரோ காத்தாலும் போரிலென் கையினின்றும் விடுவிப்பதரிது, இனிப்பாரென்று அவ் விந்திராணியினுடைய கையைப் பிடித்துக்கொண்டு நின்ருள். இந்திராணி தன்னை அவ்வசமுகி தீண்டக்கண்டு புலம்பி ஆவிபோனாற்போல அவசமாய் அறிவுகெட்டுக்கண்ணீர்விட்டுக் கதறியழுது அவ்விடத்தில் பூனைவாய்ப்பட்ட கிளிபோலகப்பட்டுக் கொண்டு தன்னைக் காப்பவரொருவருமேயில்லாமல் திசைமுற்றுந் துருவிப்பார்த்துப் புலம்பிநின்ருள்.

இந்திராணி மறுதலைப்படலம்
முற்றிற்று.

---

## மாகாளர் வரு படலம்.

இவ்வாறு அக்கொடியவள் கைக்கொண்டு ஆகாயமார்க்க மாகக்கொண்டு போக இந்திராணி தரியாது பரமசிவனுக்கும் திருமாலுக்கு மகனாகிவந்த தேவர்கட்கிறையே யோல மென்றும், செண்டைக் கையிலுடையானேயோல மென்றும்,மெய்யருக்குமெய்யனேயோல மென்றும், வேதங்கள் ஒருசார்நின்று உருத்திரனெனக் கூறப்படுவனேயோல மென்றும்,கடனிறத்தை யுடையானே யோல மென்றும்,பூரணை மணவாளனே யோல மென்றும், புட்கலை கணவனே யோலமென்றும், யானைவாகனமுடையானே யோல மென்றும் கூவி மாசாத்தாவைநோக்கி யோலமிட்டுப் புலம்ப,அதைக்கேட்ட மாகாளர் இந்திராணிக்கிடையூறுண்டாயிற்றென்று தாமிகவும்விரைந்துவந்தனர்.இவ்வாறுவந்த மாசாத்தாவினது தண்டத்தலைவராகிய மாகாளர் எங்கே போகின்ருயென்றதட்டிக்கொண்டு இந்திராணியைநோக்கி இம்மியளவும்அசமுகிக்கு நீயஞ்சவேண்டாம்; உன்னைத் தீண்டியகையைத் துணிக்கின்றேன்பாரென்ருர். அதைக்கேட்ட இந்திராணி மழைவளங்கண்ட பைங்கூழ்போல மனமறுக்கந் தீர்ந்துநின்ருள்; அசமுகி மாகாளரை நோக்கி மும்மைப் பெருந்தேவரும் இந்திரன் முதலிய இறைவ ரெண்மரும் ஏனையோரும் என்முன்னே நில்லாரே, தேவரி லொருவனாகிய நீயோ என்னைச் சிறிவைது நிற்பவனென்று வெறித்தகண்ணால் நோக்கி உதட்டைக் கவ்விப் பல்லைக்கடித்துகொண்டு இவனைக் கொன்று தீர்வேனென்று நின்ருள். மாகாளர் அவளை நோக்கித் தவஞ் செய்துகொண் டிருந்த இந்திராணியைத் தனியாயிருந்தாளென்று நினைந்தோ உன் பட்டிமையொழுக்கத்தாற் பற்றிக்கொண்டு செல்லாநின்றனை, இவளை விட்டுவிட்டுப் போய்விட்டால் உன்பிழையைப் பொறுப்பனே யல்லாமல் கொலைசெய்யவு மாட்டேனென, அசமுகி உன்னை யாவரோ இவளைக் காக்கப் பணித்தவரொன் றுருத்துக்கேட்டாள். அதற்கவர்என்னை மூவுலகையும்காக்கும் மாசாத்தா இவளைக் காவல்செய்யப் பணித்தனர்; என்பெயர் வீரமாகாள னென்பானென, அவள் அவரைஇந்திரனுக்குக்குற்றேவல் செய்பவன்போலாமென்று மனத்தெண்ணித் தன் கையிலிருந்த சூலத்தைச் சுழற்றி அவர் மார்பே யிலக்காக எறிந்தாள்.

அதை இரண்டுதுண்டாகத் தமது கைவாளாற் போக்கினின்றார். பின்பவள் தான் பிடித்திருந்தஇந்திராணியைத் துன்முகியினிடத்தேயொப்பித்துத்தோழியாகிய அவள் கையிலிருந்த சூலத்தை வாங்கி வீரமாகாளர்மேல் விடுக்க அதை மீட்டுந்தன்கையிலிருந்த வாளினாலேயே துண்டுகளாக்க அசமுகி யிடைந்துபோய் ஒரு மலையைப் பிடுங்கி யெறிந்தாள். அதைத் தமது கைவாளால் தடிந்தான்; அவ்வாட்படையு மொடிந்தது. அதுகண்டு அசமுகி கடல்போலாரவாரித்துப் பிரமன் முதலிய தேவர்கள் ஆசிசொல்லச் சகலவண்டங்களையு மாண்டுவரும் சூரபதுமனாகிய என் தமையன்தோளிடத்தே வைக்கத்துணிந்து போகவந்தேன், நீயிடையேவந்துதடுத்தாயே; நீதடுப்பதுமுறையேயல்ல, தாரகனாகிய என்தமையனுடைய சேனாவீரர் கண்டால் உன்னைக்கொலைசெய்துவிடுவார்களே. அல்லாமலும் உன்னை யெடுத்து விழுங்கிவிடுவேனென்றாலும் உன்னாலென் பசிப்பிணியும் நீங்கமாட்டாதே; ஆதலால் பிழைத்துப்போ வென்றாள். பாதகியாகிய அசமுகி இவ்வாறு சொல்லக்கேட்ட வீரமாகாளர் என் கைவாளால் உன் சூலப்படைகளைத் துண்ட மாக்கினேனே, உன்னைப் பெண்ணென்றேயெண்ணியேகொல்லாதொழிந்தேன்; இதையறிந்தேஇந்திராணியை விட்டுப் போய்விடு, அல்லையானால் உன் கையை யிழந்து போய்விடுவாயென்று சொல்ல, அசமுகிகேட்டு இவனோ தன்கையிலிருந்த வாட்படையையு மிழப்பித்தான், இவனோடுபோர்செய்வதும் தகுதியான காரியமல்லவே, இவனைவெல்வதோ அரிது, ஆயினும்இந்திராணியைக் கொண்டுபோவதே துணிபான காரியமென்று தன் தோழியாகிய துன்முகி பக்கமாகத்திரும்பி அவளிடத்தே சிறைபட்டிருக்கின்ற இந்திராணியைப் பிடித்துக்கொண்டு மேருமலையின் சிகரங்களைக் கொண்டுபோன வாயுதேவனைப்போலப் பேராற்றலோடு போகக்கண்ட வீரமாகாளர்அவளைநோக்கி நீசெல்கின்றாய்போலுமெனத் தன் கையிலிருந்த உடைவாளை யெடுத்துருவி அசமுகி கூந்தலைப் பிடித்திழுத்து இந்திராணியைப் பிடித்தகையைத் துண்டமாக்கி, அவ்விந்திராணியை விடுவித்து அவ்வசமுகியைக் காலாலுதைத் துருட்டித்தள்ளி அவளுக் கயலினின்று வருந்துகின்ற அவளுடைய தோழியாகிய துன்முகியைப்பார்த்து நீயும் இந்திராணியைத் தீண்டினாயன்றோ வென்று அவளுடைய கையையுந் துணித்து அவளையும் உதைத்தனர். அதனால் அவளும் உள்ளம் பதைபதைத்துப் புலம்பிக்கொண் டிருந்தாள்.

மாகாளர் வருபடலம்

முற்றிற்று.

---

## அசமுகி சோகப்படலம்.

மாகாளரால் அசமுகியும் துன்முகியும் கைகளிழந்து அவற்றாற் பெருகுகின்ற இரத்தம் சூரபதுமன் பெற்ற செல்வத்தைச் சுடுகின்ற தீக்கடைக்கோல் போ லிருந்தது. அசமுகியோ தன் கை துணிந்தமை கண்டு மருண்டு மனம் பதைத்துக் கைம்மறித்துப் பரந்து பூமியின்மேல் தனது நின்றகையை மோதி

இனிநான் இந்திராணியை விழுங்கிவிடுவதே நலமெனத் துணிந்து போவாள்! மீள்வாள்! விழுவாள்! எழுந்திருப்பாள்! சாய்ந்துகிடப்பாள்! இரங்கிச் சோர்வாள்! உதட்டைக் கடிப்பாள்! இவ்வாறு வருந்துவாளாய் அறுபட்ட கையை அறுதகையினாலெடுத்து வாங்கி யொற்றிப் பார்த்துக் கண்களில் உதிரநீர் பெருக்கெடுப்ப என்னைப்போலும் யார்தான் துன்பமடைந்தார்களென்றும், இனிச் சாவதே நன்மையென்றும், எனக்கிப்படியு மாகலாமோவென்றும், யாவரும்புகழ்கின்ற என் தமையன்முன்னேபோய் எவ்வாறுநான் கண்விழிப்பேனென்றும், பூமியிலே நான் தேடுகின்ற கணவர்கள் என்னைக் கைதொடக் கூசுவார்களே யென்றும், முடமென்று பேசிக்கொள்வார்களே யென்றும், இனி நானென்ன செய்வேனென்றும், தேவர்களெல்லாம் நினைத்து என்கை முடமாக்கினார்கள், நானோ இறந்து போவேன், நானப்படி இறப்பதற்குமுன்னே அத் தேவர்களை மறித்து உலகமுழுது மழிக்கின்றேனென்றும், மேகங்களையும் பிறவற்றையும் பற்றி மீள வரிதென்னும்படி யுண்பேனோ வென்றும், நாளையும் அந்நாளுடன் வரும் கோளையும் கொறித்திடுவேனோ வென்றும், எனது சிறந்த கையை யிழந்து யான் வருந்தியதை இச்சூரியன் பார்த்திருக்கிறானே, அவன் ஏறிச் செல்லும் ஒற்றையுருளைத் தேரோடும் அவனைப் பிடித்து வருவதற் கெழுந்திடுவேனோவென்றும், இவ்வாறுபின்னப்படப்பார்த்திருந்தசூரியனைக் கறித்தும் மற்ற தேவர்களையெல்லாம் உணவாகவும் கொண்டு புசித்து எழுகடலையுமுறிஞ்சி யுண்டு பெரும்புறக்கடலிற் சென்று வாய்பூசித் திரும்புவேனோ வென்றும், செம்மையான நன்மை மிகுந்த தென்னந்தோப்பிலே இளநீர் முதலிய அதன் பயனை யனுபவிப்பார்போலச் சந்திரனைப் பிடித்து அவனுடம்பாகிய அமிர்தகலையைப் பிழிந்து குடித்தெறிவேனோ வென்றும், ஐராவதமுதலிய திசை யானைகளைப் பிடித்துத் துவர்க்காயென்று சொல்ல வாயிற்கொண்டு ஐந்தருக்களினிலைகளே வெள்ளிலையாகவும் அவற்றின் மலரைச்சுண்ணப்பொடியாகவும் கொண்டு அடைகா யருந்துவேனோ வென்றும், பணிகளைத் தாக்குவேனோ வென்றும், தலைகீழாகப் பிடித்து பாதல வாசிகளை யாக்குவேனோ வென்றும், பூமியைச் சுழற்றி மேல்கீழாகத் தூக்குவேனோவென்றும், அவற்றையெல்லாந் திருமகள் நாயகனாகிய ஆதிபகவனைப்போல உண்பேனோ வென்றும் சொல்லி இவ்வாறாக யாவரும் அச்சமடையும்படி அக் கொடியவளாகிய அசமுகி பெருந்துன்ப முடையவளாய் நீங்காத மானமேற்கொண்டு வீரவாற்றலுடையாளாகையால் சொல்லிக் கோபித்தாள். இவள் கோபித்த நிலைமையைக் கண்ட துன்முகியென்னுந் தோழி அரக்கர் குலத்திற் றோன்றினவளே யாயினும் அறிவிற்சிறந்தாளாதலிற் பொருக்கென வெழுந்து முன்னின்று அவளுக்குச் சொல்லத்தொடங்கினாள்.

நீ செய்த காரியத்தை நோக்கினால் வைய மென்செய்யும், வான மென்செய்யும், மற்ற தேவர்தா மென்செய்வர், மலைக ளென்செய்யும், கடல்களும் பிறவு மென்செய்யும், இவனாற் கையிழந்தாயாகையால் உலகத்தினை முடிப்பது முறையாமோ! பூமியும் வானும் திசைகளும் பல உயிர்த்தொகைகளும் ஒருங்கே நீ கொல்லவெண்ணினால் ஆர்தான் உன்னை யென்செய்ய முடியும், ஆனா

லும்அவற்றையெல்லாம் முழுதொருங்குடைய சூரபதுமனாகியஉன்தமையனே உன்னைக் கோபிக்கநேரும், அவனுக்குச் செல்வக்கேடுண்டாம், ஆகையால் நீ அதை உன்மனத்தில் எண்ணவில்லை, அவுணர் பெருமானாகிய சூரபதுமன்முன் சென்று இவைகளையெல்லாஞ் சொல்லிநிற்போமானால் வருக்கம் வருக்கமாகக் கொல்லவெத்தனப்படுவான்; நாம் போவதே சிறந்த துணிவெனச் சொல்லிப் பின்னுஞ் சொல்லுகின்றாள். முன்னே தக்கன் யாகஞ்செய்யத் தொடங்கிய காலத்தில் தேவர்களினும் பெண்களிலும் தானவர்களிலும் ஊறுபடாதவர் யாவரோ யிருக்கின்றனர். நினைக்க வரிதாகிய அக்கண்ணுதற் பெருமானாகிய சிவபிரானாலும் அவனையேவழிபடும் அடியவர்களாலும் அல்லாமல் எப்படிப்பட்டவர்களுக்கும் வினையால் உண்டாகிய இழிவைநீக்கமுடியுமோ! இதனாலல்லவாபெரியாரும் "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று-சூழினுந் தான் முந்துறும்." என் றருளிச்செய்திருக்கின்றனர். ஆகையால் அம்மே! நீ யழுது புலம்புவதிற் காரியமில்லை, துயரப்படவேண்டாம், இவர்கள் செய்யும் மோசமு முறையி னேரும், நாம் சூரபதுமனிடஞ் செல்வதே தகுதியான காரியமென்றுதேற்றி நிற்க, அதைக்கேட்ட அசமுகி அதுவே சரியானகாரியமென்று துணிந்து துன்ப மொழிந்து நின்ற அயிராணியைப் பார்த்து மானமாகிய தீச்சுட, அடி பெண்ணே! அயிராணி! எல்லா அண்டங்களிலும் என் அண்ணனாகிய சூரபதுமனுடைய ஆணையும் செங்கோலும் செல்லாத விடமில்லையே! இங்கே நீ யொளித்துக்கொண் டிருந்தாலும் அல்லது நீ யெங்கேபோ யொளித்துக்கொண் டிருந்தாலும் பிழைப்பதரிதல்லவா, மறைந்துகொண்டிருக்கும் இந்திரனையும் இவ்வனத்தில் வாசஞ்செய்யும் உன்னையும் மற்ற தேவர்களையும் இலேசாகப் பிடித்துக்கொண்டுபோய்ச் சிறையிடுவிப்பதே நிச்சயம், நான் உன்னைப்பிடித்துச் சிறையிடச் செய்யாவிட்டால் எல்லா உலகங்களையும் முழுதொருங்குடைய சூரபதுமனது தங்கையேயல்ல, என் மார்பிலெழுந்தனவும் தனங்களேயல்ல, யான் பேடியென்றே துணிந்துவிடென்று சொல்லிப்போயினாள்.

அசமுகி சோகப்படலம்

முற்றிற்று.

---

## இந்திரன் மீட்சிப்படலம்.

தூரமாக நின்ற வீரமாகாளர் சொல்லுகின்றார் அம்மா! சசிதேவியே! நீ யுன்மனத்தில் சூரபதுமன் முதலிய அவுணர்கள் கைப்பற்றிக்கொண்டுபோய் விடுவார்களென்று சிறிது மெண்ணவேவேண்டாம். உன்னுடைய கணவனாகிய இந்திரன் வருகின்றவளவிலும் உனக்கொருகுறை வுண்டாகாதவண்ணங் காக்கின்றேன், நீ சிறிது மனக்கிலேசங் கொள்ளாதை; இங்கேயே வாசஞ்செய்துகொண் டிருவென்று சொல்லிப்போகையில் இந்திராணி அக்காட்டினிடத்திலே தங்கித் தன் கணவன்கொண்ட கருத்து நிறைவேற வேண்டுமென்று தவஞ்செய்துகொண் டிருந்தாள். அதையறிந்த நாரதமுனிவர் வெள்ளிமலை

யிற்சென்று தேவர்களுடன் பரமசிவனடிகளை வணங்கி யேத்தக் காலமில்லா திருந்த இந்திரனைக் கண்டு இந்திராணிக்கு நடந்த இடையூறுகளை யெல்லா மெடுத்துச்சொல்ல, அதைக்கேட்ட இந்திரன் மிகவு மனங்கவன்று தேறி அமலனைக் கருதித் தியானித்துத் தன்னைநொந் திரங்கித் தன்னொடு வந்திருக்கும் தேவர்களுடன் நந்திதேவரை வணங்கிநாங்கள்செய்த தீவினையைநோக்கிஇன்னமும்இறைவன்கருணைசெய்யாதிருக்கின்றனனே. நாங்கள்நிலவுலகத்திற்சென்று தவஞ்செய்ய வருள்செய்ய வேண்டுமென்று பிரார்த்தித்து அவரருள்பெற்றுச் சீகாழியை யடைந்து தன் மனைவியாகிய இந்திராணியைக் காத்திருந்த மாகாளரைக் கண்டு அவரை மார்போ டிறுகத்தழுவிக்கொண் டுபசார மொழிகளைச் சொல்லி அவருக்கு விடைகொடுத் தனுப்பிவிட்டுத் தன் மனைவியைக் கண்டு அவள் துயரத்தை மாற்றி அசமுகிசொல்லிப்போன சூளுரைகளை இந்திராணி சொல்லக்கேட்டு யாது செய்வ திதற்கென்று நினைத்து இங் கிறைப்பொழுது மிருக்கப்படாதெனத் துணிந்து மேருமலையை யடைந்தான். இதுகிடக்க;

இந்திரன் மீட்சிப்படலம்
முற்றிற்று.

---

## சூர னரசிருக்கைப் படலம்.

இவ்வாறு மேருமலையில் இந்திரன் இருக்கையில் முன்னே சென்ற அசமுகி துன்முகியென்னுந் தோழியுடனே சீகாழியை யகன்று மகேந்திர நகர மடைந்தாள். அவள் போகையில் சூரபதுமன் தனது அத்தாணி மண்டபத் திற் கொலுவீற்றிருந்தான். அவ்வாறு கொலுவிருக்கையில் அநேகமாயிரம் அவுணர்கள் நின்றுகொண்டு,சந்திரவட்டக்குடைகள்இருபுறத்தும்நிழலைச்செய்யத் தம்பிய ராகிய தாரகனும் சிங்கமுகாசுரனும் அயலிலிருப்ப அநேகமாயிரம் மந்திரிமாரும் குமரவர்க்கங்களும் ஒருபுறத்திருக்க அநேகமாயிரம் அவுணர்கள் கவரி யிரட்ட,மெல்லிலை துவர்க்காய் சுண்ண முதலியவுடையகாளாஞ்சி கைக்கொண்டு அநேகமாயிரம்பேர் சூழ்ந்திருக்க, அநேகமாயிரம் அவுணத் தலைவர்கள் நெருங்கி யிருக்க, வசந்தக்காற்று கற்பகச்சோலை முதலியவற்றிற் புகுந்து நறுமணங்கொண்டு வீச, அரம்பை ஊர்வசி திலோத்தமை மேனகைமுதலிய அரமகளிரும், இயக்கமாதரும், அரக்கமாதரும், தானவமாதரும், வித்தியாதர மாதரும்,சாரணர் சித்தர்முதலியோர் மாதரும் வெவ்வேறாக நின்று பரதசாத்திரமுறைவழுவாது நடனஞ் செய்ய,பிரமதேவன் காலையில் பஞ்சாங்க மெடுத்துச்சொல்லக் காலம் வாய்க்காமல் ஒருபுறத் தொதுங்கி யிருப்ப, அப்பிரம தேவன் மக்களாகிய நவப்பிரமாக்கள் நாழிகைவட்டிலை நாடி நாழிகைப் பறை யிரட்டிப் பதந்தொறுஞ் சென்று முறைமுறை யுரைத்துத் திரிய,புலிக்கூட்டத்தி னடுவிலே மான்சென்றாற்போல அவுணர்க ளிருக்கையிற் சென்று முனிவர்கள் வேர்த்துடல்பதைக்க வேறுவேறாகநின் றாசிகள்சொல்லி நிற்கையிலே அங்குநிகழும் ஓசையாற் கேளாமல் அவர்கள் இருக்குமிடத்தைநோக்கி அவர்கள்கையைவிரித்து நின்று ஆசீர்வாதக்குறியைக்காட்ட,மேகங்கள் தண்பனித்

நிலைலே பிதற இந்திர னொழிந்த தேவர்கள் யாவரும் அவுணர் நெருக்கத்திற் சென்று புகுந்து நெருக்குண்டு மீண்டு கடைவாயிலில் வந்து காவலாளரால் மொத்துண்டு சமயங்கிடைக்காமல் வருந்தித்திரியக் கொலுவிலிருந்தான். அப்போது அவுணர் தலைவரும் திசைப்பாலகரும் ஏனையோரும் கைதொழுது அவனுடைய பாதங்களில் தூர்க்கும் மலர்களும் பழமையான பெருங் கவிகளும் முனிவர்களும் மந்திர நெறியால் ஆசிகள் கூறிப் புட்பாக்ஷதைளும் வீசித் திரியவும், ஒருவராலும் செய்துமுடிக்கக்கூடாத பெருவேள்வி செய்தமையும் இறைவன் அதற்கிரங்கி அருள்செயப்பெற்றுச் சென்ற வகையும் குபேரன் முதலாகிய யாரு நிலைகெட்டோட வென்ற பேராற்றலும் ஆயிரத்தெட் டண்டங்களிலுஞ் சென்று வெற்றிகொண்ட திக்குவிசயமும் அரசாண்டு வரு நேர்மையும் எதிர்கின் றேத்துவோர் புகழ்ந்துகூறவும், தேவர்களுமுனிவரும் பிறரும் தங்களிடத்தே யல்லாமல் யாரிடத்தேனும் வெகுள்வானாயின் தம் மாவி யிழப் பார்போற் பயமடைந்து இருந்தும் அவன் மகிழ்ச்சி யடையுங் காலத்தில் தாமும் பெருங்களி சிறந்தும் நீங்காமலிருப்பர்.

சூ ரனரசிருக்கைப் படலம்

முற்றிற்று.

---

## அசமுகி நகர்காண் படலம்.

இவ்வாறு சூரபதுமன் கொலுவிற்றிருக்குஞ் சமயத்தில் துன்முகி யென் னுந் தோழியுடனே அசமுகி மகேந்திர நகரம் பெற்றிருக்கின்ற பெருஞ் செல்வங் கெட்டொழியக் கீழ்த்திசை வாயிலைக் கிட்டினாள். அவள்வரவே அவள் கையிழந்ததனைக் கண்டாரெல்லாம் பெருந்துன்பமடைந்து நெருப்பேபோற் கோபித்து நின்று இப்படி யார் இவளை அங்கப்பழுதாக்கினரெனச் சொல்வர். அசமுகியோ துன்பமொழிய ஒரு வழிகாட்டுவதுபோலக் கையினின்றும் இரத்தஞ்சிதறச் செல்லுகையில் அவுணர்களில் தாமாடிக்கொண்டிருந்த சூதாட்டினை யொழித்தும், ஆட்டுக்கடாச் சண்டை விளையாட்டை யொழித்தும், யானையொடு யானையைப் போர்மூட்டுத லீக்கியும், சேவற்சண்டை யொழித்தும், வானிற் பட்டம் விடுதலொழிந்தும், யானை யேற்றம் குதிரையேற்றம் தேரூர்தல் முதலிய வொழித்தும், படைக்கலம் பழகலைவிடுத்தும், வீணைவாசித்தல் முதலியவற்றைத் தவிர்த்தும், மாதரோடு விளையாடுவதை மறந்தும், கள்ளுஞ் சுள்ளு முண்பதைத் துறந்தும், பலர் கண்டு தொடர்ந்து கண்ணீர் விட்டுக் கதறி யழுது மனங்கலங்கிச் சொல்லலாயினர்.

தாரகன் சிங்கமுகன் முதலிய அவுணர்களையு மதியாத வலிபெற்றவளை யோசிக்குமிடத்து திரிபுராந்தகனாகிய சிவபெருமான் செயலென்றே யெண்ண வேண்டும். மகிடன், நிசும்பன், சும்பரன், குருதிக்கண்ணன், இரத்தபீசன் தாரகன், பண்டாசுரன் ஆகிய அசுரரைவென்ற தேவி செயலோ! அநேக முடிகளைக்கொண்ட நரசிங்கமானது இந்திரன்முதலிய தேவர்களை வருத்த அதைக் கண்ட தேவர்கள் அடைக்கலமாக அடைய அந்நரசிங்கத்தை வெற்றிகொ

ண்ட சரபமூர்த்தியோ, திருமகள் கணவனுகிய மாயனும் நீலகண்டத்து நின் மலனுகிய உருத்திரமூர்த்தியும் கலந்ததனுற் பிறந்த மாசாத்தாவோ, யானை முகத்து விநாயகனே, சங்கு கன்னனே, பானுகம்பனே, அல்லது திருமாலோ இக்கொடுஞ் செய்கை செய்திருப்பாரே யென்றால் அவரும் நடுங்குவாரே, பிரமனும் இப்படி துணிந்துசெய்யமாட்டான்; இது நிற்க, இந்திரன் என்பவன் செய்த செய்கையோ வென்றால், அவனே ஒளித்துக்கொண் டிருக்கின்றானே அவனும் இப்படி செய்வானே, ஆனாலும் இவள் பெண்ணாகையால் மதிமயக் கத்தால் உத்தமாங்கத்தி லொன்றாகிய கையைத் துணிப்பதாக வெண்ணித் தன் கையை வெட்டிக்கொண்டாளோ; இவளைக் கேட்பது நமக்கென்ன? நாமொருவேளை கேட்போமானால் நம்மையெல்லாங் கோபிப்பாள்; அவள் போகிறபடியே தொடர்ந்து திரிவோமானால் அறிந்துகொள்ளலாமென்று பலபலவகையாய் அவரவர்க்குநேர்ந்தபடி சொல்லிக்கொண்டிருக்கையில் துன் முகியோடு அசமுகிகைபோய் விரைந்து நடந்துபோகக்கண்ட அவுணமாதர்கள் தமது மென்குழல் தாழ வீதிகடோறும் நெருங்கி கண்ணீராகிய முத்தைச் சிந்திச் சூழ்ந்து நிற்க அவர்களையெல்லாங் கடந்து நகரத்தைப் பிற்படச் சென்று அத்தாணிமண்டபத்தை யடைந்தாள்.

அசமுகி நகர்காண்படலம்

முற்றிற்று.

---

## அசமுகி புலம்புறுபடலம்.

ஆட்டு முகத்தையுடைய அசமுகி அத்தாணிமண்டபத்தைக் கிட்டித் தன் தாயையும் உறவினரையும் மருகனையும் தமையன்மாரையும் சிந்தையி னினைந்து திருமக ளிரியல்போக இவ்வாறு புலம்பத் தொடங்கினாள்.

தாயே! தாயே! பரமசிவன் அருள்புரிந்த மேலைநாளில் வந்து உம்மைப் பிரியாது காத்துத் திரிவேனென்று சொல்லிப்போனாய் அச்சொல்லையு மறந் தாய்போலும்! என்கை போய்விட்ட தறியாயோ! அதற்காகப் பயப்பட வேண்டாமென்றுஞ்சொன்ன யில்லையே! இது உனக்குத் தகுமோ! நான் பெண்ணாகப்பிறந்து படுந்துயர மென்றைக்குத்தான் நீங்குமோ; தந்தை மக் கண்மேலும் தாய் பெண்மேலும் பெருங்கருணை வைத்திருப்பா ரென்பது உலகவழக்கம், ஆகையால் எனது துயரத்தை நீக்கினையில்லை, ஐயோ யாரு மில்லாமல் அயலார்போல் நான் கையிழந்து உயிர் சுமந்துகொண் டிருக்க லாமோ! அவுணவீரர் எங்கும் வருவார்களென்றேயெண்ணி அஞ்சா நெஞ்சு படைத்துஇராணியைவலிதிற்கைப்பற்றிவீரத்தொடும்புறப்பட்டேனே; அதை யறிந்தவீரமாகாளன்என்கையைவெட்டிஅவளையுமீட்டுப்போனானே. அக்காட் டில் ஒருவராயினும் வந்தீரோ, நீங்களும் அத்தேவர்களுக்கு ஒளித்துத் திரிந் தீர்களோ! நீங்களோ நகரத்தையும் வலியையும் பழைய நிலைமையையும்அவர் பெற்ற வரத்தையும் புகழையும் மறையொழுக்கத்தையும் அறிவையும் குறை

த்து அவர்களை யேவல்கொண்டேமென்று இறுமாந்திருந்தீர்கள்; என் கையை அவன் குறைத்தது உங்கள் மூக்கைக் குறைத்ததாயன்றோ எண்ணியிருக்க வேண்டும். இந்திரனோமீன்சுமந்துபழிக்கஞ்சிப் பயந்துநாணோடிப்போனான். அவனோ வலியில்லாதவனென்று சொல்லிக்கொண் டிருப்பீர்கள் போலும், அவனேவின ஒருவனே யென்கையை யறத்துணிப்பா னென்றால் இந்திரன் செய்கை தீயைவீட்டின் கூறையில்வைத்த தன்மைபோலிருக்கின்றதே! உட்பகை எள்ளளவா யிருந்தாலும் கேடு விளைக்குமென்று சொல்லிக் கொள்ளுவார்கள். இதனாலல்லவோ பெரியோரும் 'புறப்பகை கோடியின் மிக்குறினுமஞ்சார் - அகப்பகை யொன்றஞ்சிக் காப்பர்' என்று சொல்லி யிருக்கின்றார்களே. அஃதுண்மையானால் தள்ளூற்றும் குற்றேவல்செய்கின்ற இந்திரன் தான் மறைந்திருந்தே என் கையைத் துணிப்பித்தானே! கடலி னடுவிலிருக்கும் வடவாமுகாக்கினியும் காலம்பார்த்தே உலகை யழிப்பதுபோல் என் கையை யறத்துணித்த மாகாளனும் இனி உங்களையும் அடுவன்போலும்; இங்கிருந் தென்செய்கின்றீர்கள் தேவர்களை வலியில்லாதவனென் றெண்ணி யிருந்தீர்களே! இரணியனுக்கோ முத்தலையுண்டு, அக்கினி முகனுக்கோ இரண்டு தலையுண்டு, வச்சிரவாகுவுக்கோ பத்துத்தலையுண்டு, அவர்கள் தங்கள் தலையை வீணாக வளர்த்துக்கொண் டிருக்கின்றார்களே! இத்தலைகளா லென்னபயன்? ஒருதலையையுடையவனாகிய வீரமாகாளன் என் கையைத் தன்வாளால் வெட்டியெறிந்து விட்டானே! சிறு குழந்தையாகத் தொட்டிலிலிட்டு விளையாடிக் கொண் டிருக்கும் குழந்தைப் பருவத்தில் உன்மேல் சூரியனது வெயில் சாளரவாயலின் வழியாகப்பட, அதைக்கண்டு பொறாது அவனைப் பற்றிக்கொண்டு வந்துகோபத்துடன் கொடுஞ் சிறையிலிட்ட பானுகோபனென்னு மருகனே! என்னை யொருவன்தீண்டி அங்கப்பழுதாக்கவும் பார்த்திருக்கலாமோ! மூவடிகேட்டீரடியா லுலகளந்த கள்ளமா மாயப்பிரானது சக்கரப்படையைப் பொன்னாரமாகப் பூண்டாயென்று இந்நாள்வரையும் ஒருபெய ரொடுத்துத் திரிகின்ற தாரகனென்னும் அண்ணாவே! இம்மாகாளனைக்குறும்பகையென்றெண்ணிக் கைவிட்டாய்போலும்! வயிரப்படையையுடைய இந்திரனை யவ னேறியிருந்த ஐராவதத்துடன் ஒரு கையிலெடுத்தெறிந் துதைத்து வீழ்த்தினை யென்று சொல்லிக்கொள்வார்களே அதைமெய்யென்றே யெண்ணியிருந்தேன் அதுபொய்யோ, அவனேவிய தூதனொருவன் என்னைக் கிட்டிவந்து கோபித் தென்கையையறத்தடிந்தானே! சிங்காமுகாசுரனென்னும் பெயருள்ள அண்ணாவே! ஆயிரத்தெட் டண்டத்திலும்போய் உன் ஆக்கினை சக்கரமும் செங்கோலும் குடையும்செல்லாநிற்கின்றனவே!தேவர்களெல்லாரும்உன்னைக்கண்டல் நடுங்கியிருப்பார்களே! இந்திரன் ஆணையைத்தாங்கியஒருவீரமாகாளனிடத்தே உன் ஆணையைக் காணாதிருந்தேன் வதியார்முன் உன் ஆணைமேவக் ண்டேவில்லையே! தேவர்கள் செய்த தந்திரத்தால் என் மக்களாகிய வாதாவியும் வில்வலனும் அகத்தியமுனிவரால் உயிர்மாண்டு போய்விட்டார்களே அதவும் போதாமல் இக்காலத்தில் என் கையையு மறத் துணித்தார்களே! இவ்வருத்தங்களெல்லாம் பார்த்துக்கொண்டிருந்தும் நன்றாகவே யரசு செய்தாயே!

உனக்குக் குற்றமே யல்லவோ! அரசர் பெருமானே! நான்பட்ட இழிவையு மதியாதிருக்கின்றாயே! உலகமெல்லாங் காத்துவருகின்ற அண்ணாவே! நானே கையிழந் திருக்கின்றேன், யாரெனக்குறவு! அங்கப்பழுதாயும் உயிர்வைத்துக் கொண்டிருக்கலாமோ! அதற்கு முன்னே என்பாவமும் வருத்துகின்றதே! பாவி நானொரு பெண்பிறந்ததுபோதும்! விதிக்கென்னிடத் தேதேனும் பகை யுண்டோ என்று பலவாறு புலம்பிக் கொண்டிருந்தாள்.

அசமுகி புலம்புறுபடலம்

முற்றிற்று.

---

## சூரன் தண்டஞ்செய்படலம்.

இவ்வாறு தன்னைப் பின்றொடர்ந்து வரும் துன்முகியோடும் அசமுகி புலம்பிக்கொண்டே சூரபதுமன் கொலுவீற்றிருந்த கொலுமுக வாசலை யடைந்து புரண்டழுதாள். அவள் பூமியிற் சக்கரம்போற் புரண்டு வீழ்ந் தழு கையில் அச்சபையிலுள்ளா ரெல்லாரும் மனங்கலங்கி நின்றார்கள். சூரபது மனே தன்னிரண்டு கண்ணுந் தீயெழப்பார்த்து நீயிங்கே புலம்பக்காரண மென்ன? அசமுகியையு முன்னையு மதிக்காமலும் என்னையு மெண்ணாமலும் உன்கையையும் இத்துன்முகி கரத்தையும் வாளினால் வெட்டி யெறிந்துமுயிர் நீங்காதிருக்கின்றவர் யாரென்றுகேட்க, இந்திரன் மனைவியாகிய இராணி சீகா ழியிலுள்ள காட்டில் ஓர் புறத்திலிருந்து தவஞ்செய்து கொண்டிருக்கப்பார் த்து உனக்கமைவளேயென் றெண்ணி விரைந்துபோய் அவளைக் கைப்பற்றிக் கொண்டேன்; தேவருளொருவன் எங்களிருவர் கையையு மறத்துணித்து அவளையு மீட்டுக்கொண்டு போய்விட்டான். இதுதான் நடந்த சங்கதியென்று சொல்லி வாய்மூடு முன்னமே விழியினின்றும் தீப்படலம் சுற்றிக்கொண்டது, மூக்கினின்றும் நெட்டுயிர்ப் பெறிந்தது. கோரப்பற்கள் வாயிதழைக் கவ்விக் கொண்டது. அண்டகடாக மெல்லாம் வெடித்தது. கோபநகை யெழுந்தது. இதழ் துடித்தது. புருவமே னிமிர்ந்தது. பற்கள் கடித்துக்கொண்டன. மேக த்தின் புறத்தினின்றும் முத்தினம் சொரிவதுபோல உடல் முழுதும் வேர் வுண்டாயிற்று. மயிர்ப்புறந்தோறும் தீப்பொறி யுண்டாயின. சிந்தையினின் றும் கோபமென்னுந் தீ யெழுந்தது. இவ்வாறு இவன் கோபித்ததையறிந்த திசையுளார் மனம் வருந்தினர். முனிவர்களும் அங்கே நடனஞ்செய்கின்ற தெய்வமாதரும் அவர்புகழைப் பாடுகின்றவரும் மனம் பதைபதைத்தனர். திசையானைகளும் வீறிட்டோடின. மேருமலையு நடுங்கிற்று. நாகராசரெல்லாம் வருந்தினர். தேவர்களெல்லாம் நடுங்கினர். சூரியன் தீங்குநாடியே போய் மீண்டு திரிந்தான். பார் நடுங்கிற்று, விண்ணடுங்கிற்று, கடல்நடுங்கிற்று, பரம பதநடுங்கிற்று, வைகுந்த நடுங்கிற்று, அவுணர்களு நடுங்கினர், அங்கேயாரோ நடுங் காமலிருப்பர். அவன் கொண்டகோபம் சிறிதல்லவே! உலக கண்டகனாகிய சூரபதுமனென்னும் கண்ணோட்ட மில்லாத புன்மனத்தவுணர் பெருமான்

இவ்வாறு கோபித்துத் தேவர்கள் யாரையும் கொல்லத்துணிந்து அங்கே யிருந்த இளையவரைப் பார்த்துச் சொல்லலாயினன்.

மீனைச் சுமந்துகொண்டு நங்குற்றேவல் செய்துழலும் இந்திரன் காட்டி லொளித்துக் கொண்டிருந்து ஒருவனையேவி இவ்விருவர் கைகளையும் துணி படுத்துவானானால் இனிமேல் மானுடர்தா மென்செய்யாதிருப்பர். பரமசிவனு மல்ல, பிரமனுமல்ல, திருமகள் நாயகனாகிய மாயனுமல்ல, எனக்குப் பயந் தோடி யொளித்துக் கொண்ட இந்திரனுமல்ல, அவன் குற்றேவல் செய்கின்ற ஒருவனோ இவர்கள் கையைத் தடிந்துவிட்டு இன்னும் உயிரோ டிருப் பவன். தேவர்களை யுத்தத்தில் படைக்கலங்களாற் பற்றி யென் கண்முன்னே கொண்டுவர அவர்களை என்னிடத்திலிருந்த அவுணர்களைப் பார்த்து உங்கள் பசி யொழியும்படி யுண்ணுங்கோளென்று நான் சொல்லியிருந்தேனா? நான் தருமத்தைப் பார்த்தல்லவோ இருந்தேன்; மறைந்துகொண்டு திரியும் இந்தி ரனையும் அவன் மனைவியாகிய இந்திராணியையும் நான் சிறைவைக்காமற்போய் விட்டேனே, அவர்கள் சிறியவரொன்றெண்ணி யிருந்தேனல்லவா. யானை தன க்குநேர்ந்த கவளமுண்ணா திருந்ததுபோல் இப்பூமியில் இவர்கையைக்குறை த்தது என் மெய்ப்படுத்திய வூனமேயல்லாமல் வேறல்லவே; மலைகளை யெல்லாம் சிறகரிந்த இந்திரனையும் அவன்மனைவியாகிய இந்திராணியையும் தேடிச்சென்ற தூதர்கள் இன்னமும்அவர்களைத் தேடிப் பிடிக்கவில்லையே, நீங் களு மிருக்கின்றீர்கள், என் மக்களுமிருக்கின்றார்கள், என்னுணையும் இருந்தது, என் அழியாததேருமிருக்கின்றது, நானுமிருக்கின்றேன், என்பேருமிருக்கின்றது, யாரிருந்துமென்ன ஆகப்போவதுமொன்றுமில்லை; பஞ்சிமலையோர் தீப்பொறியா லழிவதுபோல நாம் பெற்ற புகழெல்லாம் இவர்கள் கையினின்று மொழுகும் உதிரத்தின் சிறுதுளியால் அறக்கெட்டுவிட்டதே! இவர்களுக்கிழிவென்பது போவாமோ! தேவர்கள்வழியினின்றும் ஒருதுன்பச்செய்தி நம்மிடத்தில் வரப் பெறுமோ! பழியுமென்னிடத்தெய்துமோ; இப்பழிதானும்ஒழியாதாகையால் என்னுயிரைப்பொறுத்துக் கொண்டிருக்கின்றேன். அநேகமாயிரம் அவுணர் வெள்ளம் எங்கும் சூழ்ந்திருக்க என்தங்கையாகிய அசமுகிக்கும் இப்படிப்பட்ட மானக்கேடும் வரலாமோ! நன்றாயிருக்கின்றதென்று நகைத்தான். அவ்வாறு கோபித்துச்சிரிக்கக்கண்ட பானுகோபனென்னும்பெயருள்ளஇளவரசு அக்கினி போற்கோபித்தெழுந்து தன் தந்தையை மும்முறைவலம் வந்துபணிந்து நின்று மக்குக் குற்றேவல் செய்யப்பட்ட இந்திரனோ ஒளித்துக்கொண்டிருக்கின் றானே. தேவர்களோ மிக அற்பவலியுடையார், அவர்களும் இப்படியுந் துணிந்து செய்யமாட்டார்களே. என் அத்தை கையிழந்த மாயமோ இன்னதென்று தெரியாமலேகவலையடைகின்றேன். வந்தியாபுத்திரன் எட்டிவானில்தவழுகின்ற சந்திரனைக் கையிற்கொண்டா னென்பது வழக்காமோ! தேவர்களி லொருவனா உமது தங்கையையும் அவரது தோழியையும் கையைத்துணிக்க உடன்படு வர், அவர்கள் வலிபெற் றுடையராய்ச் செய்தாரெனின் அவர்கள் மிகவும் கோபிக்குந்தன்மை யடைந்தவ ரல்லரோ, சாதாரணமாக நீரிடுங் குற்றேவலா கிய மீன் சுமந்துழல்பவராகையால் அலிகளாந்தன்மை யுடையாரல்லது ஆண்

டன்மையுடையானொன் றெப்படிசொல்லக்கூடும். பரமனைக் கோபித்தாலும் திருமாலைக் கோபங் கொண்டாலும் உருத்திர மூர்த்தியைக் கோபித்தாலும் தகும், மிகச் சிறியராகிய தேவர்களை யொருபொருளாக மதித்துக் கோபங் கொள்ளுவதாற் சிறுமையே யல்லது பெருமையாக மதிக்கப் படுமோ? திரிமூர்த்திகள் உன்கோபத்திற் கிலக்கேயல்லது பிறரிலக்கல்லவே, நீர் மனத்திற் கொண்ட கோபத்தைத் தணியும், நானேசென்று என்விசயவாளிகளால் அத்தேவர்கள் இவர்கள் கையைத்துணித்ததற்காக அவர்கள் கையைத்துணித்தும் உமது மனத்திற்கு மயக்கத்தைக் கொடுத்த இந்திராணியையும் இந்திரனையும் தேவர்களையும் பிடித்துச் சிறையிட்டு வருகின்றேன்; அவர்கள் அங்கில்லாமல் மறைந்து போவாரோயாயின் உலகமுழுதும் தேடியேனும் பார்த்துவிட்டு அவர்கள் குடியிருக்கும் அத்தேவலோகத்தை நீறாக்கி விடுகின்றேன், தேவர்களையும் அவர்கள் மனைவிமாரோடு சிறையிடுகின்றேன்; எனக்கு விரைவாக விடை கொடுமென்று கேட்டான். அப்படி பானுகோபன் வேண்டிக் குறையிரப்ப அவனைப்பெற்ற தாதையாகிய சூரபதுமன் கோபந் தணிந்து படையெடுத்துப் போய்வாவென்று கட்டளையிட அக்கட்டளையை பெற்றுப் பானுகோபன் நல்லதென்று மதித்து சந்தோஷமடைந்து தன்பிதாவைச் சேவித்துக்கொண்டு தன்சிறிய பிதாக்களாகிய சிங்கமுகாசுரனையும் தாரகனையும் வணங்கி அவர்களிடத்தும்விடைபெற்று தன் மாளிகையையடைந்து போர்க்கோலங்கொண்டு போனான். சூரபதுமனே தன்னருகிருந்த தூதரையழைத்துப் பிரமனை யழைத்துக்கொண்டு வாருங்கோளென்று கட்டளையிட அவர்கள் எங்கே சென்றான் பிரமனென்று கூவிச்சென்று அவனிடத்தே நின்னையழைத்துக்கொண்டுவர எமதிறைவன் கட்டளை யிட்டிருக்கின்றானென்று சொல்ல; அப்பிரமனும்விரைந்துசென்று சூரபதுமன் கொலுமண்டபத்தை யடைய அவனைப்பார்த்து உலகமுழுதும் படைத்து வருகின்ற நீ இவர்களிழந்த கையை விரைவாகமுன்போற் படைக்க வேண்டுகின்றேன் சீக்கிரமாகப் படைத்துத் தாவென்று கட்டளையிட்டான். அது அக்கணமே வளர்ந்துவிட்டது, அதைக் கண்ட சூரபதுமன் உன் வல்லமை நன்றாயிருக்கின்றதென்று புகழ்ந்து தன் தங்கையாகிய அசமுகியைத் தன்னகரத்திலேயே யிருக்கக் கட்டளையிட்டுத் துன்முகியைமுன் இந்திராணியிருந்த விடத்தைக்காட்டப் பானுகோபனுடன் போவென்ன, அவளும் அவ்வாறே பானுகோபனுடன் சென்றாள்.

சூரபதுமனே தன்னருகிருந்த தூதரையழைத்து சூரியன் முதலிய நவக்கிரகங்களையும் நக்ஷத்திரங்களையு மிப்போதே யழைத்துக்கொண்டு வாருங்கோளென்று கட்டளையிட்டான். அக்கட்டளையை யேற்ற தூதர்களும் உடனே விரைந்துசென்று சூரியன்முதலியவர்களைநெருங்கியெமதரசன் உங்களை யழைத்துவரக் கட்டளையிட்டான் வாருங்கோளென்று அவர்களை யெல்லாம் அழைத்துக்கொண்டு சூரபதுமன் சமுகத்தே விட்டார்கள். மேகத்தின் மறைந்த மின்னல் மீளவு மெழுந்தாற்போலக் கோபங்கொண்டு ஒழியாமலே ஆகாயத்தில் திரிந்துகொண்டே யிருக்கின்ற நீங்கள் என்தங்கையாகிய அசமுகியைக் கையை வெட்டிவிட்டு இன்னு முயிரோ டிருக்கின்றவன் யார்? நீங்

கள் ஆகாயத்திலேயே திரிந்துகொண் டிருப்பதனால் என்ன பிரயோசனம்
சொல்லுங்கோளென்று சொல்ல, அதைக்கேட்டிருந்த சூரியன் முதலியோர்
அரசனே ; எங்களை யொருபொருளாக மதித்துக் கோபிக்கவேண்டாம், உமது
தங்கை கையைத் துணித்தவன் இன்னவனென் றறியோம், நாங்கள் தினந்
தோறும் செல்லுங்கதியிலேயே சிந்தைவைத் திருந்தோம், நாங்களொன்று
மறியமாட்டோ மென்றார்கள். அதைக்கேட்ட சூரபதுமன் நீதியென்பது
சிறிது மில்லாதவனாய் அவர்களை யெல்லாம் பிடித்துச் சிறையி லிட்டுவிட்
டான். பிறகு வாயுக்களை யழைத்துவரக் கட்டளையிட்டான் ; அத்தூதரும்
அவ்வாறேசென்று வாயுக்களை யழைத்துக்கொண்டு வந்து சூரபதுமன் சமு
கத்தில் விட்டார்கள். அவர்களைச் சூரபதுமன் நெஞ்சழன்று நோக்கி வானி
லும் மண்ணிலும் திசைகளிலும் கடலிலும் பாதலங்களிலும் போய் நீங்கள்
சஞ்சரிக்காத விடமில்லயேயில்லை, நீங்கள் என் தங்கையைக் கையைத் துணி
த்தானை இன்னானென் றறியமாட்டீர்களா ! நமதுபகைவன் தங்கைதானேயென்
றுதாசினமா யிருந்தீர்கள்போலு மென்று கடுகடுத்துக்கூறினான். அவர்கள் தங்
கள் வலியனைத்து மொடுங்கிச் சிறிது முளையாடாமல் அச்சங்கொண்டு நின்
றார்கள். அவர்களை யெல்லாம் பிடித்துச் சிறையி லிட்டுவிட்டான். பின்
னுங் கோபநீங்காமல் வருஷம் இருது மாசம் பக்ஷம் நாள் கடிகை முதலிய
தேவதைகளை யழைத்துவரத் தூதுவரைப்போக்க, அவர்களும் அவ்வாறே
போய் அழைத்துவந்து விட்டார்கள். அவர்களைப்பார்த்து அற்பனாகிய இந்
திரன் கரவடமாகச்செய்த செய்கைக்குநீங்களுமிசைந்து என்தங்கையடைந்த
துன்பத்தை வெளிப்படுத்தாதிருந்தீர்களே, எப்போதும் நமது குற்றேவல்செய்
துவருகின்ற நீங்கள் இருந்தும் பயனென்ன ? இல்லாமற் போய்விடுவதனாலே
என்ன குற்றம் ? நீங்களும் தேவர்களுக்கே உதவியா யிருக்கின்றவர்களாக
வெண்ணவேண்டி யிருக்கின்றதென்று கோபங்கொண்டு அவர்களையும் பிடித்
துச் சிறையிற்போட்டுவிட்டு அதனோடும்போகாமல் அருகேயிருந்த தூதனையு
மழைத்து நீங்கள்போய்த் திசைக்காவலரை யழைத்துக்கொண்டு வாருங்கோ
ளென்று கட்டளையிட்டான். அவர்களு மவ்வாறே அக்கட்டளைமேற்கொண்
டழைத்துக்கொண்டுவந்து அவன் சமுகத்தில் விட்டார்கள். அவர்களும்உடல்
வியர்க்க அச்சமுநாணு முயிரைத்தாக்க உள்ளந்தளர்ந்து வணங்கிநிற்க, அவர்
களைப்பார்த்து இந்திரன் தன்மனைவியாகிய இந்திராணியோடு மொளித்துக்
கொண்டிருப்பது மல்லாமல் நம்பாற் சிறிதுமதியாது இந்திரனுடைய தூத
னொருவன் என்தங்கையாகிய அசமுகியைக் கையை யறத்தடிந்து போய்விட்
டதைப் பார்த்துக்கொண்டு மிருந்தீர்களே ! என்பகைவரோ டுறவுகொண்டீ
ரோ ! அவர்களுக்குப் பயந்து போனீர்களோ ! மாதரிடத்தே செருக்கடைந்
தீரோ ! நீங்களிருந்துமென்னபயன் ? என, அவர்களும் நீர்சொன்னபடி கருத்தி
லொன்றுங் கொண்டிரோம், நாங்கள் உலகைக் காத்துக்கொண்டிருப்பதிற்
கவலைகொண் டிருந்தோம் ; நாங்கள் பகைவரைக் கண்ணாலும் பார்த்தறி
யோம், எமதுதாயாகிய அசமுகியும் அவள் தோழியாகிய துன்முகியும் வரக்
கண்டறியோம், பகைவர் கரந்துறைந்த செய்தியு முணரோம், இதுமாயமா

யிருக்கின்றதென்றுசொல்ல, அதைக்கேட்ட சூரபதுமன் நீங்கள் என்செல்வ மனுபவித்து மயக்கங்கொண்டு உலகைப்புரக்காமல் என்பா லிப்பழி என்று நிலைக்கச் செய்து விட்டீர்கள், இது நேர்ந்தது என்னமாயமா யிருக்கின்றது; அழகாயு மிருக்கின்றதேயென்று கடலிலிருக்கும் வடவைத்தீப்போற் கனன்று தன்கைவாளையுருவித் தன்னயலேயிருந்த சேனைத்தலைவரைத் தண்டஞ்செய் யத்தொடங்கிச் சிலரைநாக்கொய்தும், சிலரைக் கைதுணித்தும், சிலரை நாசி கொய்தும், சிலரைக்காதறுத்தும், சிலரை மார்பு சேதித்தும், சிலரைக் கால் வெட்டியும், சிலரைத்தோளறுத்தும், சிலரைத் தலைதடிந்தும் இவ்வாறு பல விதமான தண்டனைவிதித்துவிட்டு, தம்பியரை விடைகொடுத்து வழிவிட்டுப் பிரமனையும்போக விடைகொடுக்க,அதற்கு அப்பிரமன்சூரபதுமனைப்பார்த்துச் சூரியன் முதலியவர்கள் உலகத்தின்கண் உன்னுடைய குற்றேவலிலிருப்பவர், இவர்களையன்றி உலகத்தி லொருகாரியமும் நடவாதே; அவர்கள் பிழையை யுள்ளத்திற் கருதவேண்டாம்,இவர்களைச்சிறைவிடுக்க வேண்டுகின்றேனென்று வேண்டிக்கொண்டான். அதைக்கேட்ட சூரபதுமன்நன்றென்று அதற்கிசை ந்து தன்னருகேயிருந்த தூதரை நோக்கிச் சிறையிருந்தோரைக் கொண்டுவா ருங்கோளென்று சொல்ல, அவர்களும் கொண்டுவந்து விட்டனர். அவர்களைப் பார்த்து நமதுகுற்றேவலில் நீங்க ளெப்போது மிருக்கவேண்டும். இந்திரனேடு நீங்கள் சேரவேவேண்டுவதில்லை, நீங்கள் செய்துவரும் பழைய வேலையையே செய்து வாருங்கோளென்று சொல்ல, அவர்களும்நாங்கள் அப்படியே செய்து வருகின்றேமென்று விடைபெற்றுப் போயினர். பிறகு சூரபதுமன் பிரமனுக் கும் தன்மக்களுக்கும் மந்திரிமாருக்கும், முனிவர்களுக்கும் படைத்தலைவர் களுக்கும் விடைகொடுத் தனுப்பிவிட்டு தன் னரண்மனைக்குப்போனன்.

சூரன் தண்டஞ்செய் படலம்
முற்றிற்று.

---

## அமரர் சிறைபுகுபடலம்.

அத்தாணி மண்டபத்தை யகன்றுபோன பானுகோபன் சிறந்த படைக் கலங்களைக் கைக்கொண்டு தும்பைமாலை யணிந்து இரண்டாயிரங் குதிரை பூண்ட தேரிலேறிச்செல்ல, அவன் கடைவாயிலைவிட் டகல்வதற்கு முன்ன மே ஆயிரவெள்ளம் அவுணர் சேனையும், குதிரைப்படையும், அதிற்பாதி தே ர்ப்படையும், யானைப்படையும், வந்து சூழ்ந்துகொண்டன, எங்கும் இச்சே னைகள் நெருங்கிச் செல்வதனல் தூளிபடர்ந்தது. வீரர்கள் தோள்கள் போ ர்க்கெழுவதனற் பூரித்தன. அவர்கள் அணிந்த மலர்மாலைகளில் வண்டுக ளாரவாரித்தன. தேவர்கள்மனந் திடுக்கிட்டது. இச்சேனை யொருமுகமாகச் செல்வதனற் பாரஞ்சுமக்க முடியாமல் ஆதிசேஷன் தலையை நெளித்தான். இவ்வாறு சேனைசெல்வதனல் உண்டான தூளி அவுணர்கள் தேவர்கள் இருக் கையைநாடி வருகின்றூர்களென்று அறிவிப்பதுபோல ஆகாய மார்க்கத்தி லெ ழும்பியது. இப்படி தன்சேனை சூழ்ந்துவரச்சென்று அன்முகியைப்பார்த்து

உங்கள்கையை யறத்துணித்த விடமெது காட்டென்று சொல்ல, எங்கள் கையைத்துணித்த வீரனும் இந்திராணியும் ஒருசோலையி லிருந்தார்கள். அந்த விடமிதுதானென்று சீகாழியிலுள்ள அச்சோலையை யடைந்து அச்சோலையை வெள்ளிடையாக்கி அங்கே இந்திராணியையும் வீரமாகாளனையும் தேடிக் காணமல் உலகமுழுதும் தேடித்திரிந்து பொன்னுலகை யடைந்தான்.

அச்சேனைகள் அப்பொன்னுலகத்தை யடைந்ததுகண்டு தேவர்கள் சயந்தனைப்பார்த்துத் தங்களுக் கிடர் வந்ததென்று சொல்லிக் கொண்டார்கள். அதைக்கேட்ட சயந்தன் எமது ஆசிரியராகிய வியாழபகவானே இங்கில்லாமற் போய்விட்டான். தேவர்களிலே பலரு மிங்கிரா தொழிந்தனரோ. என் தந்தையும் தாயும் இன்னவிடஞ் சென்றார்களென் றறியமுடியாததா யிருக்கின்றேனே; நானும் உங்களோ டிருக்கின்றேனே; அப்பானுகோபன் வந்ததோ நம்மைக் கழிபெருந் துயரத் தழுத்தவேண்டுமெனக் கருதியென்றே தோற்றுகின்றது, முன்னைவினையை யார்தா னறியவல்லவர், எம்முடைய தந்தை தாயரும் அமரரும் ஓடி யொளித்துக்கொண்டபழியென்பதோ என்று மொழியாதிருக்க நம்மவர் மனம் வருந்தி அச்சூரபதுமனுக்குக் குற்றேவல் செய்துகொண்டிருந்தும் இந்நாள் வரையிலும் இந்நகரத்திலேயே குடிவாழ்க்கைசெய்துகொண்டிருக்கின்றேனே! என்செய்வேன்! நான்யாரிடத்தில்சரணு கதியடைவேன், எங்கும் போகமுடியாதே! இனி நான்புலம்புவதினுலும்பயனில்லை, ஆவதென்ன! 'வருவது தானே வரும்' என்றபடி வருவது வந்துதானே தீரும், நீங்கிப்போய்விடுமோ! அவர்களுக்கினி யானஞ்சமாட்டேன், ஆவியைப் பொருளாகக் கொள்ளாத அவ்வவுணர்கள் இனிநஞ்சையொத்ததீங்கடைந்தாலும் நடுக்கமடையமாட்டார்கள், துன்பத்திலு மாழமாட்டார்கள், தம் மாண்மையினின்றும்பிழைக்கார்கள். அவர்களைப்போல நானும் அவ்வவுணராசனது சேனையை யெதிர்த்துப் போராடி அநேகரைக் கொன்று வெற்றி பெறுவேன். நீங்கள் யாவரும் அவர்களுடன் போர்செய்ய என்னைத் தொடர்ந்து போர்க்கோலங்கொண்டு வாருங்கோள், உள்ளமஞ்சி நீங்கி யழிந்தாலும் நல்லது, சிறிதும் மனந்தளரமாட்டேன் நான்போர்செய்யவேதுணிந்தேனென்றுசொல்லக்கேட்டுத் தேவர்களும் இடரில் மூழ்கி உன் மனமப்படியானல்வேறென்று செய்யவேண்டுமோ; அவுணர்களுக்கஞ்சி நடப்பதிலும்இறப்பதே நல்லதென்று போர்க்குச் செல்லத்துணிந்தனர்.

அதுகேட்டு சயந்தன் தேவர்கள் கூட்டத்தைப் பார்த்து வருந்திய உமது சிந்தை போர்செயத் துணிந்ததோவென்று வியந்து பொன்னாலாகிய சிங்காசனத்தினின்று மிழிந்து தன் யானையை வர நினைந்தான். அவ் யானைவந்து சயந்தனை வணங்கி நின்றது; அதன் பிடர்மே லேறிக்கொண்டு தன்னைத் தேவர்கள் புடைசூழச்சென்று பானுகோபனிடத்தே யடைந்தான். சயந்தன் தேவர்கள் சூழத் தன்னொடும் போர்செய்ய வந்ததைக்கண்ட அவுணர்கள் இது அற்புத மற்புதமென்று துணிந்து அத்தேவர்களை முட்டியும் தெழித்தும் வேல் வாள் முதலிய ஆயுதங்களை யெறிந்தும் பாணங்களை வில்லிற் றொடுத்து

விடுத்தும் போர்செய்கையிலே தேவர்கள் உடம்புமுழுதும் இரத்தமயமாயின. இவர்களில் தேவர்கள் போர்செய்ய வலியற்றாராய்ப் போர்க்களம்விட்டோடிப் போயினர்கள். அவர்களை விரைந்து தொடர்ந்து பிடித்துக்கொண்டு பானு கோபன்முன்னே விட்டார்கள்; அவர்களைக் காவலி விருத்துங்கோளென்று கட்டளையிட்டதைக் கண்ட சயந்தன் வெகுண்டு தன் வில்லைவளைத்து நாணே ற்றிப் பகைவர் பயப்படப் பாணவருஷம் பொழிந்தான். அவ்வாறு பொழிந்த தைக் கண்ட அவுணர்கள் அவனை யானையோடும் வளைத்துக்கொண்டு தாங் களும் பாணவருஷம் பொழிந்து சயந்தன் விட்ட அம்பு மாரியைத் தகர்த்து விட்டார்கள். அதைக்கண்ட இந்திரகுமாரன் அவுணர்கையிற் பிடித்திருந்த வில்லையும் உடம்பையும் நூறுவெள்ளம் சேனையையும் நிலத்திற் சிந்தச்செய்த தல்லாமல் தேர் கரி பரி முதலியவைகளையு மழித்தான். யானையோ அவு ணர் சேனைகளிற் புகுந்து வாலினாற் றுடைக்கும், துதிக்கையால்வாரியெறியும், காலான் மிதிக்கும், தந்தத்தினாற் கொல்லும், மேகம்போற் கர்ச்சித்துப் பல பேரை யாவியுண்ணும். இவ்வாறு அந்தயானையும் பகைவர் சேனையைக் கலக்கி நின்றது; சயந்தன் தன் யானையைநடத்திப் போர்செய்வதைக்கண்ட நீலகேச னென்னும் அவுணப் படைத்தலைவன் அவன்மேற் பாணமாரி பொழிந்து வரு த்த அச்சயந்தனும் பின்னிடாமல் அவன் பெய்த அம்புமாரியை யகற்றி அந் நீலகேசனையும் வருத்தினான். நீலகேசனும் தன் வில்லிலிருந்து ஒரு பிறை முகக்கணைதொடுத்து சயந்தன் கையிலிருந்த வில்லினாணை யறுத்தெறிந்தான்; அதனால் சயந்தன் தன் கையிலிருந்த வில்லைப் பூமியி லெறிந்துவிட்டு மாயைக ளாற் போர்செய்ய மதித்துப் பல வுருவங்கொண்டு போர்செய்ய, நீலகேச னென்பவன் இது மாயையா யிருக்கின்றதென்று தனக்கொன்றுந் தோன்றாம லிருந்தான். அவுணர்சேனையும் பயந்தோடின. சோமாசுரன், மாயாவலி, சுரகே சரி, பதுமன், மாருதபலி, தண்டகன், வாமன், மதிவருணன், மாகதன் முத லிய சேனைத் தலைவர்கள் அவ்வித்தையை யறியாமல் ஆ! இதென்ன மாய மென வளைந்து நின்று தாங்களும் கற்றமாயைகளையும் காட்டிப் போர்செய்யச் சயந்தன் செய்வது மிகச் சிறந்ததாதலா லெங்ஙனாமென்செய்வதென்று நினை த்தார்கள். அச்சமயத்தில் தன் படைத்தலைவர் மெலிவடைவதுவும் சயந்த னது போர்வன்மையும் தன்சேனைக்கடல் குறைவதும் கண்ட பானுகோபன் இதெல்லாம் சயந்தன்செய்யும் மாயவித்தையென் றறிந்து தனக்குச் சுக்கிரா சாரி முன்னைநாளில் உபதேசித்திருந்த மூலமந்திரத்தையெண்ணிச்சிந்தித்துச் சயந்தன் முன்னேபோகச் சயந்தன் கொண்டிருந்த பல வுருவங்களு நீங்கித் தன்னந் தனியனாய் யானையின்மேலேதோன்றி இதுசுக்கிராசாரி கற்பித்த வித் தையேயாமென்று தன்னை மானமும் கோபமும் வருத்த மனங் கலங்கி நின்றான்.

அவ்வாறுநின்ற அச்சயந்தனைப் பானுகோபன்பார்த்து உன்மாயையோடு வலியும் நான் வருமுன்னே சிந்தித்தறிவாய், உன்னைநான் முன்னாளிற் சூரிய னைப்பிடித்துச் சிறையிட்டாற் போலவே சிறையிடுவேன் போர்செய்யத் திரா ணியிருந்தால் போர்செய்யலா மென்றுசொல்லி, தன்னொரு வில்லையெடுத்து

வளைத்துக் கழுகிறகு பூண்ட பாணங்களைத் தொடுத்துவிடுக்க, சயந்தனும் அவைகளுக் கவைகளை தன் வில்லினின்றும் விடுத்து விலக்க, அவற்றை நடுவது பாதியிலேயே பானுகோபன் அழித்து இருவரும் சலியாமல் போர்செய்தார்கள். இவ்வாறு போர்செய்கையிற் சயந்தனும் பானுகோபன் விடுகிற பாணங்களை விலக்கி அவன்மேல் ஆயிரம் பாணங்களைப் பிரயோகஞ்செய்து அவன் கையிற்பிடித்திருந்த வில்லை யொடித்தெறிந்தான். பானுகோபனோ வெருண்டு வேறொருவில்லை யேந்திக்கொண்டு ஆயிரம் பாணங்களைத் தொடுத்துச் சயந்தனைச் சல்லடைக் கண்களாகத் துளைத்தான். சயந்தனும் பின்னிடாமல் ஆயிரம் பாணங்களைத் தொடுத்து அவன் ஏறியிருந்த தேருடனே குதிரைகளையு மழித்து அவன் சேனைகளையும் வருத்தினான். அதைக்கண்ட பானுகோபன் தன் தேரழியக்கண்டு வேறொரு தேரிலேறிக்கொண்டு பெருமூச்செறிந்து பல்லைக் கடித்துக்கொண் டுதட்டைக்கவ்வி இடியேறுபோ லதட்டித் தன் வில்லைவளைத்து நூறாயிரகோடி பாணங்களைத் தொடுத்து வில்லையும் தூணியையும் வெட்டியெறிந்து சயந்தனையும் யானையையும் வருத்தினான். அதனால் சயந்தன் போர்செய்யத் தெளியாமல் யானைமேல் அமுத முண்டிருந்த பலத்தால் உணர்ச்சி யற்றிருந்தான். அதைக்கண் டவனேறியிருந்த யானை பானுகோப னேறியிருந்த தேர்மேற் பாய்ந்து அதைப் பாகனுடன் குதிரைகளும்பட அழித்து, பானுகோபன் அந்த வெள்ளையானையைக் கோபிக்க அது அவனது மார்பிற்றுக்க அதைக்கண்டு அவனும் தன்கையால் அந்தயானையை வருத்த அதுவும் அயர்ந்து விழ்ந்தது. சயந்தனும் முன்னை யுணர்ச்சி பெற்றுத் தன்னந்தனி நின்று நமதுமாயை கெட்டது, நாமோ தன்னந்தனியாயிருக்கின்றோம், நமது வலியு மிழந்தோம் நம்மைத் தீயராகிய அவுணர்கள் பிடித்துக்கொள்வர், இப்பொன்னகரமு மழியும் நீயுஞ் சிறிது மிரங்கவேண்டாம்; விதியதுவலிமை யார் கடக்கவல்லாரென்று நினைத்துக்கொண் டிருக்கையில்; அவன் தன்னந்தனியனாய் மெய்சலித் துணர்வுகெட்டு யானையோடு வீழ்ந்து கிடப்பதை யறிந்த அவுணர்கள் இவனைக் கட்டுங்கோள், பிடியுங்கோள், கொல்லுங்கோளென்று சூழ்ந்துகொண்டதைப் பார்த்த பானுகோபன் தான் அழகிய தேரிலேறிப்போய் அவுணரை நோக்கி என்வில்லினாற் றொடுக்கப்பட்ட பாணங்களுக் காற்றாமல் மிகவு மெய்தளர்ந் திருக்கின்றான். உணாயாடவும் வலியற் றிருக்கின்றான் இவன் பகைவனென்றெண்ணியே வருத்தவேண்டாம், இவனையும் மற்ற தேவர்களைப்போலச் சிறையிலிடுவதே நலமென்று சொல்ல, அதைக்கேட்ட அவுணர்கள் மந்தரமலையைச் சுற்றிய வாசுகியைப் போலச் சயந்தன் தோளை யுறப்பிணித்துத் தேவர்கள் கூட்டத்திற் கொண்டுவந்து விட்டார்கள்.

இங்கே சிறையிலகப்பட்ட தேவர்களும் சயந்தனுமொழிய நின்றாரையெல்லாங் கோல்லுங்கோ ளென்றும் அப்பொன்னகரம் இன்ன நகரமென்று சொல்லாதிருக்க அதைச்சுட்டுக் கரியாக்கி விடுங்கோளென்றும் பானுகோபன் கட்டளையிட அதைக்கேட்ட அவுணர்கள் அவ்வாறே ஒரு யானையேனும் கொண்டுவந்து விடுத்து அப்பொன்னகரையும் பரமசிவன் திரிபுரங்களைச் சுட்

டெரித்தாற்போலச் செந்தழலுக் கிரையாக்கினர். அதைக்கண்ட பானுகோபன் தன் சேனுவீரரை யழைத்து இவர்களை முன்னேகொண்டுபோங்களென்று கட்டளையிட்டுத் தானும் தன் சேனையுடனே மகேந்திர நகரமடைந்து தேரைவிட்டிழிந்து சேனையை நிறுத்திவிட்டுத் தன் தந்தையிடத்தில் தான் சிறைகொண்ட சயந்தன் முதலிய தேவர்களுடன் சென்று தந்தையை மும்முறைவலம்வந்துபணிந்து நானே இந்திராணியைக் கண்டிலேன், இந்திரனையுங் காணேன், என் கையிலகப்பட்ட சில தேவர்களுடன் இந்திரகுமாரனுகிய சயந்தனைச் சிறைபிடித்துவந்தேன், அப்பொன்னகரத்தைச் செந்தீக் குணவளித்தேன், இதுதான் நடந்த காரியமென்று சொல்ல ; சூரபதுமன் தன்மகனுகிய பானுகோபனை வாரியெடுத்து முத்தமிட்டு மார்போ டிறுகத்தழுவிக் கொண்டு தன் சமுகத்தில்விட்ட சயந்தன் முதலிய தேவர்களைக்கோபித்துக் தூதுவர்களிற் சிலரைப்பார்த்து இவர் அங்கம் பங்கம்படச் செய்யுங்களென்று கட்டளையிட,அவர்களும் அசமுகிகாண அவ்வாறே அத்தேவர்களங்கம் பங்கம் படச்செய்ய அவர்கள் அமுதம் உண்டிருந்த வலியால் சிறிதும் பங்கமடையாதிருந்தனர். அதைக்கண்டு இவர்களையெல்லாம் சிறைச்சாலையிற்கொண்டடைத்துவிடுங்களென்று கட்டளையிட்டான். தூதுவரும் அவர்களையெல்லா மழைத்துக்கொண்டுபோய்ச் சிறைச்சாலையிற் காவலாளிகளிடத்திலே யொப்பித்தனர். அவர்களும் அவர்களைக்காலிற் சங்கிலிபூட்டிச்சிறையிலிட்டனர். சூரபதுமன் தன்மகனுகிய பானுகோபனைப்பார்த்து நின் னகரஞ்செல்லென்று கட்டளையிட, அவனும் விடைபெற்றுப்போனன். பின்பு அச்சூரபதுமன் அத்தாணிமண்டப நீங்கித் தன் னரண்மனையே புகுந்தான். தேவர்களும் நீங்காக் கொடுஞ்சிறையி லகப்பட்டுத் துன்பக்கடலி லாழ்ந்திருந்தனர். அரமகளிரும் அம்மகேந்திர நகரத்திலிருந்துகொண்டு அவுணரிடம் குற்றேவல்செய்துகொண்டிருந்தனர். இவ்வாறு சயந்தன் முதலிய தேவர்கள் துன்பக்கடலி லழுந்தியிருக்க,முன்னே பானுகோபனுற் கோடுகள்மாய்ந்துவருந்திய வெள்ளையானை பொன்னகரினின்று மண்ணிலிழிந்து திருவெண்காடடைந்து சிவாகமமுறை கடைப்பிடித்து முன்னைப்பழம்பொருட்கு முன்னைப்பழம்பொருளாகிய பரமசிவனை முதிர்ந்த வன்பினல் வழிபட்டுத்தானிழந்த நாற்கோடுகளும் முன் போலவே வளரப்பெற்றன.

அச்சமயத்தில் மேருமலையில் ஒளித்துக் கொண்டிருந்த இந்திரன் தன் மகனுகிய சயந்தனுடன் சிலதேவர்களையும் சூரபதுமன் கைப்பற்றிக்கொண்டு போய் மகேந்திர நகரத்திற் சிறையிட்டிருப்பதுமன்றி அழகிய தன்பொன்னகரத்தையும் தீக்கிரையாக்கியதை யறிந்து பரமசிவனைநினைத்துத் தவஞ்செய்ய, அடியார்க்கெளியனுகியமறைமுதலியோகி அவனுடையதவத்திற்கிரங்கிஉனக்கென்னவேண்டுமென்று கேட்க,இந்திரன் பரமசிவனை வணங்கிச் சூரபதுமன் தன் கிளையோடழிய வரம் வேண்டுமென்றுன். அதைக் கேட்டெல்லாமுடைய இறைவன் உமாதேவியை வதுவை செய்துகொண்டு ஒருகுமாரனைத் தருவோம், அவனுல் உங்கள் துன்பமெல்லா மொழியுமென்று சொல்லி மறைந்தருளினர். ஆதலால் அச்சூரபதுமனைத்தேவரீரே கொல்லவேண்டும்.

இதுநிற்க ; அதையறிந்த இந்திரன் பிரமன் மாலொடு மாராய்ந்து தோன்றாத் துணையாகிய பரமசிவனிடத்திலே மதனனையனுப்ப, அவன் நீறாகப் போகவே தேவர்களெல்லாம்வேண்ட மீண்டுமவன்வரக்கருணைசெய்து பிரமன்முதலிய தேவர்களும் சிவகணங்களும் வணங்க உமாதேவியையு மணந்து கைலையை மருவி எங்கள்பொருட்டாகத்தேவரீரானெற்றிக்கண்ணினின்றுந்தாரேவதரித்த பிறகு இந்திரன்பிரமன் மால்முதலிய தேவர்கள் முனிவர்களாகிய இவர்களுக்குப் போனஉயிர்வந்தாற்போலிருக்கின்றது; அவர்களோ துன்பமாகிய கடலைக் கடக்க உம்மைத்தெப்பம்போ லெண்ணி யிருக்கின்றனரே ! இந்திரன்முதலிய தேவர்களுடையதுன்பந்தவிர்க்க நீரெழுந்தருளீரோற்சூரபதுமனுக்கஞ்சிஅவன் கண்ணுற்காண்பானுயின் சிறையிடுவனே யெனத்துணிந்து ஒளித்துக்கொள்ளுவர். இன்னும் இந்திரன்முதலியோர் சூரபதுமனை நினைத்தாலும் நடுக்கமொழியார். அவனே சயந்தனோடு தேவர்களையும் சிறையிட்டிருக்கின்றான். செல்வம் ஆற்றல் மேன்மை முதலியவற்றால் அச் சூரபதுமனுக்கொப்பாவார் யாருமேயிலர். உம்மை யல்லாமல் எங்களுடைய துன்பங்களைபவர் யாரிருக்கின்றனர். பரமசிவன் அளித்தவரத்தால் அவன்ஒருவராலும் கேடே அடையான். தேவரீரொருவரே யல்லது அவனை வெல்லுவா ரொருவருமிலர் ; பிரமனே இன்றும் அச்சூரபதுமனுக்குப் பஞ்சாங்கஞ்சொல்லி யுயிர்பிழைக்கின்றானே. இந்திரனேபோரில்அவனுக்குத்தோற்றோடிப்போனானே. பரமசிவனேஅழியா வரம் கொடுத்திருக்கின்றனன். தேவரீர் ஒருவரே அவனைக் கொல்வதல்லது தேவர்களையும் சயந்தனுடன் சிறைமீட்பிக்க வேண்டுமென்று வியாழபகவான் சூரபதுமன்வரலாற்றை ஆதியோடந்தமாக வெடுத்துச்சொல்லித் தன் புல்லியசொல்லினால் எடுத்துச்சொல்லிய பொம்மல்வாசகத்துப்பிழைபொறுத்தருளவேண்டுமென்றுவணங்கி நிற்க, எமது சொல்லைக்கொண்டு சொன்னமையால் உன்சொல்லில் யாதுமேபிழையிராதென் றருளிச்செய்துகுமாரசற்குரு தன்னருகிலிருந்த இந்திரனைநோக்கிச் சூரபதுமன் தன்குலத்தோடழியவும் சயந்தன் முதலிய தேவர்கள் சிறையகலவும் நீ மீண்டும் விண்குடியேறவும் செய்கின்றோமென்று திருவாய்மலர்ந்தருளினன். இந்திரன் குகப்பெருமானைத் தேவர்களுடன் வணங்கி மனமகிழ்ச்சியோடிருந்தான்.

அமரர்சிறைபுகுபடலம்.

இரண்டாவது

## அசுரகாண்டம் - முற்றுப்பெற்றது.

ஸ்ரீகச்சியப்ப சிவாசாரியர்

திருவடிவாழ்க.

---

உ

வேலுமயிலுந்துணை.

# மகேந்திரகாண்டம்.

## வீரவாகு கந்தமாதனஞ் செல்படலம்.

விரிஞ்சன்மா றேவ ராலும் வெலற்கரும் விறலோ னகிப்
பெருஞ்சுரர் பதமும் வேத வொழுக்கமும் பிறவு மாற்றி
யருஞ்சிறை யவர்க்குச் செய்த வவுணர்கோ னுவி கொள்வான்
பரஞ்சுட ருருவாய் வந்த குமரனைப் பணிதல் செய்வாம்.

இந்திரன் முதலிய தேவரும்பிறரும் மனத்திற்களிகொண்டு இருபுறத்தே நின்று வணங்கத் திருச்செந்தூரிற் சிங்காசனத்தில் இனிது வீற்றிருக்கும் சுப்பிரமணியப்பெருமான் தன்னருளால் பின்வருமா றெண்ணத்தொடங்கி நான்முகன் முதலிய தேவரேபோலவும் முனிவரேபோலவும் அவுணர்களும் எம்பெருமான் மக்களேயாயினும் அவர் நெறிகோடிநிற்பதனல் அவரைக்கொன்று களைதல் நான்முறைமையி னியற்கையேயாகும், அது அறனுமாமன்றே. இதுதுணிபேயாயினும் சூரபதுமனையும் அவனைச்சூழ்ந்த அவுணரையுங்கொல்லுதல்முறையன்று, ஆயினும் தேவர்கள் சிறையினின்றும்பிழைக்க அச்சூரபதுமனிடத்தே யோர்தூதுவனை விரைந்துவிடுவதே தகுதியாகிய காரியம், நம்மால்விடப்பட்ட தூதன்சொல்லைக்கேட்டுத் தேவர்களைச் சிறையினின்றும் விடுப்பானேயாயின் அவனே மாளாமல் இன்னஞ்சிலகாலம் உயிர்பிழைத்து வாழட்டும், கேளாமல் மறுத்தானேயாயின்நாம் அங்கேயெழுந்தருளி அவனைக்கொன்றுகளைவோமெனத் திருவுளத்தடைத்துப் பிரமன் மால் முதலிய தேவர்களை நோக்கி நாளைச் சூரபதுமன் முதலிய அவுணர்களையெல்லாங் கொல்ல வெழுந்தருள்கின்றோம், அப்படி யெழுந்தருள்வதற்கு முன்னரே அச்சூரபதுமன்கொண்ட கருத்தையறிய வோர்தூதனை விடுகின்றோம், உங்கள் கருத்தென்ன ? சொல்லுங்கோளென்று கேட்க, அதற்கவர்கள் அச்சூரபதுமனிடத்தே போர்க்கெழுந்தருள்வதற்கு முன்னரே யோர்தூதனை யனுப்புவதே அறத்தின்வழியென்று சொல்லினர். அவ்வாறு சொல்லிய தேவர்களை நோக்கிச் சூரபதுமனது மகேந்திரநகரில்தூதாகச்செல்லவல்லோர் உங்களில்யாவனென்றுகேட்க, அதைநாடி நான்முகன் சொல்வானயினன். வாயுதேவனே மகேந்திரநகரத்திற்குப்போவதுகஷ்டசாத்தியம், எனக்குமப்படியேயாம், ஆயினும் அம்மகேந்திரநகரிற்சென்று அவுணர்களையெல்லாங் கடந்து மீளவர் துரைக்கவல்லவர் வீரவாகுதேவரோயல்லது வேறொருவராலு முடியாது, வீரவாகு தேவரையே தூதாகவிடுப்பது நல்லதென, அக்கருத்துக்கிசைந்த சண்முகத்தெமபெருங்

கருணைவள்ளல் வீரவாகு தேவரை நோக்கி நீ மகேந்திர நகரஞ்சென்று சூரபதுமனைக்கண்டு சயந்தன் முதலிய தேவர்களையெல்லாஞ் சிறையினின்றும் விடுவித்தாற் சுகமாகவாழலாம், அப்படி நடவாவிட்டால் உன்னை வேரோடே வேற்படையால் கொன்றுகளையச்சண்முகங்கொண்ட நாமேஎழுந்தருள்வதாக அச்சூரபதுமனுக்கு அறிவித்துவாவென்றனன். அவ்வாறு பணித்தருளிய சரவணப்பிரானது சந்நிதானத்தில் வீரவாகுதேவரும் தேவரீர் கட்டளையிட்டபடியே சூரபதுமன்முன்னேபோய் அவனுக்குத் தேவரீர்பணித்ததைத் தெரிவித்து அவனுள்ளமறிந்து வருகின்றேனென்று வணங்கிச்சென்றார்.

இவ்வாறு குமாரசற்குருவின் அருள்பெற்றுத் தூதுவராகச் செல்லுகின்ற வீரவாகுதேவரைக் கிட்டிச்சென்று தேவரீர் மகேந்திர நகரஞ்சென்றால் அங்கேசிறையுண்டு கிடப்போராகிய சயந்தன் முதலிய அமரர்களைத் தேற்றிவர வேண்டுகின்றேன் இது என் சிறுவிண்ணப்பமென்று இந்திரன் வேண்ட, அவ்வாறே செய்கின்றோமென்று விடைகொடுத்தனுப்பிவிட்டு அங்குநின்று நீங்கிப்போகையில் இலக்கத்தெண்மராகிய வீரர்கள் தம்மை நெருங்கியடைய அவர்களை நோக்கி நான் மகேந்திரநகர்சென்று சூரபதுமன்முன் நங்குகப்பெருமான்கட்டளையிட்டவற்றை யெல்லாம் சொல்வேன், அவன் மறுத்தானேயாயின் அவனதுதிருவிருந்த நகரத்தைப்பாழாக்கி மீள்வேனென்றுசொல்லி அவர்களுக்கு விடைகொடுத்தனுப்பிப் பூதவீரர்களையு நோக்கி அவர்களுக்கு மவ்வாறே விடைகொடுத்தனுப்பிவிட்டுக் கடற்கரையை யடைந்து தம்மிறைவராகிய அறுமுகத்தெள்ளமுதை மனத்தே நினைத்து மாலே பிரமனே மற்றதேவரோ வியந்துபார்க்கப் பேருருக்கொண்டு நின்று தம்மருகேயிருந்த கந்தமாதனமலையில்வந்தனர். வரவே அது பிலத்திற்புக நாகர்கள் நடுங்கினர். தேவர்களோ இதுமகேந்திர நகரத்திற்குச் செல்வதற்கேகொண்ட வடிவமன்று ; அவுணர்களைக்கொல்லுவதற்கே கொண்ட வுருவமெனச் சொல்லிக் கொண்டனர். இவ்வாறுசென்ற வீரவாகுதேவர் அக்கந்தமாதன மலையிலூன்றியதைக்கண்டு அங்கிருந்தநெடுமாலே யயனே மற்றதேவரோ முதலிய யாவருங்கண்டு அதிசயமடைந்து மலர் மாரிபெய்துவியந்தனர் ; அத்தருணத்தே வீரவாகுதேவர் எம்பிரான் ஆறிரண்டுதோள்வாழ்க, மூவிருமுகங்கள்வாழ்க, முழுதருள்புரியும் பன்னிரு கண்கள்வாழ்க, வெற்றிவேல் வாழ்க, மற்ற பதினொரு படைகளும்வாழ்க,தேவ தேவனது இளையகுமாரராகிய குமாரசற்குருவின் சேவடி வாழ்கவென்று துதித்துக்கொண்டே ஆராவன்பின் நெஞ்சங்கசிந்துருகி நெட்டுயிர்ப்பெய்தி நின்று ஆனந்தக் கடலிலழுந்தி மொழிதடுமாற மெய்ம்மயிர் பொடிப்ப நின்று சிந்தை தழுதழுத்துத் திருவருட்செயலைநாடி நிற்கக்கண்ட உலகோர் முழுதுமகிழ்ந்தனர். அருட்பெருங் கடலாகிய சண்முகத்தெள்ளமுதிற் கிளவலாகிய வீரவாகுதேவர் இவ்வண்ணஞ்சென்றால் ஆருயிர்வருந்துமெனச் சிந்தித்துத் தானங்குச்செல்ல வனுத்திருவுருக்கொண்டு மகேந்திர நகரை நாடிப்போனார்.

வீரவாகு கந்தமாதனஞ்செல்படலம்

முற்றிற்று.

## வீரசிங்கன்வதைப்படலம்.

இவ்வாறு செல்கின்ற வீரவாகுதேவர் தன்காற்குவருந்திப் பிலத்தூடமூழ்ந்திய கந்தமாதனமலையை மீளவெழுந்துதோன்றெனக்கட்டளையிட, அதுவிரைந்துதோன்றி முன்போனின்றது. பின்பு வீரவாகுதேவர் விரைந்து வானே வழியாகக்கொண்டு மேகங்கள் சுழலவும் ஊழிக்காற்று வருந்தவும் பெயர்ந்து சென்று அச்சூரபதுமனது மகேந்திரநகரின் வடபாலிலுள்ள இலங்கைக்கணித்தாகச்சென்றூர். அப்போது தன்னைப் பல அவுணர்கள்சூழ யாளிமுகன் சூரபதுமனைக்காணச் செல்ல அவன் மகனாகிய அதிவீரனென்பவன் ஆயிரம் வெள்ளம் அவுணர்கள் புடைசூழ அவ்விலங்கையைக் காத்துக்கொண்டிருந்தான். வீரவாகுதேவர் அவ்விலங்கை வழியாகச் செல்கையில் அவனது சேனாதிபதியாகிய வீரசிங்கன்கண்டு இத்தினம்வரையிலும் நமதுகாவலை யாருங்கடந்துபோனதே கிடையாது,இவனாரோசெல்கின்றானென்று வீரவாகுதேவரைநோக்கி நீயார்? தன்னந்தனியனாகச்செல்கின்றனை? உன்னுயிரினிடத்துநண்பு பூண்டரியாய்போலும்! உன்னைக்கொல்வதற்குமுன்னே நீவந்தகாரியத்தைத் தெரிவிக்கவேண்டுகின்றேன் என, அதைக்கேட்ட வீரவாகுதேவர் நான் இந்த இலங்கையைக்கடந்துசூரபதுமன்வசிக்கும் மகேந்திரநகரத்திற்குப்போய் மீளவந்தேன்,என்வலியை யறியவேண்டுமாயின் உன்னாலானதைச் செய்யென்று சொல்ல,வீரசிங்கனும் இவனோநம்மைச்சிறிதேனும் இலட்சியஞ்செய்யாதவனாயிருக்கின்றனன். இவன்பெருவலிபடைத்தவன்போலும்,இவன்போவதழகிதேயென்று நினைத்துத் தன்னைப் புடைசூழ்ந்திருந்த சேனாவீரரைப்பார்த்து இவனுயிரைக் கைக்கொள்ளுங்கோளென்றான். அச்சொல்லைக்கேட்டதே அவுணரெல்லாம் வேடர்கள் மிருகவேட்டைக்குச் சென்று வனத்தை வளைத்துக் கொள்வதுபோல் வளைந்துகொண்டு கோபமூண்டு போர்செய்யத்தொடங்கி வேலை எறிவர், தண்டத்தை யெறிவர், முசலம் விடுவர், இப்படி பலவித ஆயுதங்களையும் வீசியெறிய, சிறிதும் தாம்மனந்தளராமல் தம்மையெதிர்ந்த அத்தனைபேரையும் உறையினின்றும் வாளையுருவிப் போர்செய்து கொன்றுதிரிந்தனர். எங்கேபார்த்தாலும் இரத்தவெள்ளம்பரந்தது, கடனீரெல்லாம் செந்நிறமாயிற்று; அவுணவெள்ளமும் தேர் குதிரை யானைவெள்ளங்களும் அங்கு மிதந்துபோயின; எங்கும் பேய்க்கூட்டங்களே நிறைந்தன; இவ்வாறு நூறு வெள்ளம் அவுணசேனை இறந்துபோகவே எஞ்சிநின்ற அவுணர்கள் உள்ளநொந்திரங்கித் தம்முயிரைக் காத்துக்கொள்ள வானும் மண்ணும் பாதலமுமாகிய திரிவித வுலகத்தினுஞ்சென்று மறைந்தனர். இவ்வாறு ஓட்டெடுப்பக்கண்ட வீரசிங்கன் சினமேற்கொண்டு வீரவாகுதேவர்மேல் ஒரு சூலாயுதம்விட்டான். அதைத் தமதுவாளால் தடுத்து ஒருபடையு மெடுக்காமுன்பெயர்ந்து அவன் முன்னேசென்று அவன் கைகளைத்துணித்து அவனது தலையைவெட்டிக் கடலிலெறிந்து ஆகாயமார்க்கமாக இலங்கையைக் கடந்து சென்றனர். அவ்விலங்கையிலிருந்த அதிவீரனும் மற்ற அவுணரும் அவ்விலங்கையுடன் உவர்க்கடலிற்குப்புறுவதைக்கண்ட வீரவாகுதேவர் மனமகிழ்ந்திருந்தனர்.

வீரசிங்கன் வதைப்படலம்

முற்றிற்று.

## அதிவீரன் வதைப்படலம்.

இலங்கை கடலிற்புகவே அவ்விலங்கையிலிருந்த அவுணர்கள் முதலானோர் கலங்கியழுது மனம்வெருவிப்பயர்தனர். அத்தருணத்தில் அதிலுள்ளாரிற்சிலரைவளைத்து சுரு முதலிய மீன்களும் திமிங்கிலமும் திமிங்கிலங்கிலங்களும் பற்றிவளைந்தன. சில அவர்களைக் கையையிழுத்தும், சிலரைக் காலையிழுத்தும், சிலரைத் தலையையிழுத்தும், சிலரைத் தோளையிழுத்தும், சிலரை மார்பைப்பிடுங்கியும், சிலரை யுடலையிழுத்தும் இவ்வாறு பலவிதமாக அலங்கோலஞ்செய்து நின்றன. அவருள் சிலர் தந்தை தாய் மனைவி மக்கள் இவர்களைக் கூவியெழுவோரும் வருந்திநிற்போரும், தங்கள் கையிலுள்ள ஆயுதங்களையெறிந்துவிட்டு என்செய்வதென்றழுவோரும், அம்மீன்களோடு போர்செய்வோருமாய் அவ்விலங்கைமுழுதும் வருந்த அதைக்கண்ட அதிவீரன் கண்டு வருந்தி நகைசெய்து தன்மனத்தே பலவிதமாக எண்ணுவானாயினன்.

சூரபன்மாவோ! அவனது தம்பிகளிற் சிங்கமுகாசுரனோ! தாரகாசுரனோ! அம்மூவருடைய மக்களோ! இவ்வாறு இவ்விலங்கையை ஆழ்கடலிற் புகச்செய்தவர்; அவரையொழிந்த ஏனையோர்க்கு இவ்வகையானவலியேது? அவர்களோ இந்நகரை இவ்வாறுசெய்வதற்கு எண்ணங்கொள்ளாரோ! தங்கள்திருவந்நகரத்திற்கு ஒருவரோனுந்தீங்குசெய்வரோ! அவர்களிருக்கட்டும், தேவர்களிலே இவ்வாறுசெய்யவல்லவர் யாரிருக்கின்றனர்! அவர்களெல்லாரும் நம்மால் சிறையிடப்பட்டு வருந்துகின்றனர். இந்திரனோ நமக்குப்பயந்து உருக்கரந்திருக்கின்றான். எண்டிசைப்பாலரும், விண்ணவரும், வித்தியாதரரும், சித்தர்களும், மற்றதேவகணங்களும் நம்மிறைவனுகிய சூரபதுமனுடைய ஆக்கினைக்கஞ்சியொடுங்கியிருக்கின்றனரோ; இதைச்செய்யத் துணிவார்களோ! தானவர்கள் இவ்வாறு மாயைவலிகைவந்து போர்செய்யவல்லாரேனும் அவர்களும் நமது இறைவனுக்குப்பயந்து செய்யமாட்டார்களே! அவர்களும் செய்யாவிட்டால் மற்றியார்தான் இச்செயலைநாடிச்செய்தவர்; தாதையகன்றபிறகு தனையனுகிய நான் இந்நகரைக்காத்தது நல்லவிநோதமாயிருக்கின்றது! நான் பிரமனிடத்தில் தவஞ்செய்த வரங்களும் உரங்களும் நன்றாயிருக்கின்றன, என்னை உலகம்பழிக்குமே! அதற்கென்னசெய்வது என்று இப்படிபலபலவிதமாக வெண்ணித் தன்னைச்சூழ்ந்திருக்கும் அவுணவீரருடன் புறப்பட்டு வீரவாகுதேவரைக் கண்டான். அவ்வாறு அவனெதிர்ந்துகண்டு இலங்கையைக் கடலிற்புகவீழ்த்தினவன் தேவருளொருவனுகிய இவனேயாகுமென நகைசெய்து இவன் ஆருயிர் கைக்கொள்வேனென நினைத்து நிற்க, அவனது பெருந்திறலைக்கண்ட வீரவாகுதேவருடன்போர்செய்யத்தானவர்கள்சூழ்ந்துகொண்டனர். வீரவாகுதேவரும் தங்கையிலிருந்த வாளை யுறையினின்றுங்கழித்து அவர்களை யூனுயிர்சிந்தப் போர்செய்யத்தொடங்கவே, சிரங்கள் அற்றார் சிலரும், கைகளற்றார் சிலரும், தோள்களற்றார் சிலரும், தாள்களற்றார் சிலரும், உடலற்றார் சிலரும், உயிரற்றார் சிலருமாக அப்படையெல்லாங் கலங்கின. அவர்களுடைய செம்பட்டமயிரையுடைய தலைகள் அங்கே பாய்கின்ற இரத்தவெள்

ளத்திலே மிதப்பன, கருங்கடலிற் செம்பவளக்கொடி படர்ந்ததுபோல விளங்கின. இவ்வாறு போர்செய்யத் தொடங்கிய வீரவாகுதேவர் அவுணப்படைகளையெல்லாம்கொல்ல, அப்பிணங்கள் இலங்கையோ மலைபோல விளங்கியதோத்திருந்தது.

தன்சேனை இறந்து கடலில்விழ, அதிவீரன் கோபித்துப் பார்த்து என் பாலிருந்தவரை யொழித்து விட்டாய், உன்னைத்தின்று விடுவேன் பாரென்று போரிட முயன்றான். அதிவீரன் வீரவாகுதேவர் தோற்றங்கண்டு விரைவாய்ப் போருக்கு வாவென்றழைத்து ஒரு குந்தாயுதத்தைப் பிரயோகஞ்செய்தான். அதையறிந்த வீரவாகுதேவரும் தமது கையிலிருந்த வாளால் அதனையிரு துண்டமாக்க, அதிவீரனும் பின்வாங்காமல் தண்டைக் கையிலேந்தி அவருடைய மார்பே யிலக்காகவிடுப்ப, அதனைத்தமது மார்பிலேற்றனர். அது பொடிப் பொடியாகக்கண்டு விம்மித மடைந்து மனங்கலங்கி வேறொரு சூலமொன்று கையிலேந்தி அவர்மார்பே யிலக்காகவிடுக்க, அதனையுஞ்சிறிக் கையிற் பற்ற அதைப்பார்த்தும் பொறுது நாந்தகப் படையைப் பிரயோகஞ்செய்யக் கருதிக்காற்றுடியேபோலப் பெரு வட்டணையாக வலமிடமாகச்சாரிவந்து வீரவாகுதேவரை நோக்கி இது பரமனாற் கொடுக்கப்பட்டுள்ளது, எவராலுமாற்றுவதரிது, இதைக்கைப்பற்றி யிருக்கிறேன், நீ சாவது திண்ணம் வாவென்று மிகைபடக்கூறி வீரவாகு தேவர்முன் வந்தான். அதைக்கண்ட வீரவாகு தேவரும் நின்னுடைய வல்லமையும் ஆண்மையும், நன்று நன்று நம்மை வெற்றி கொள்வையேயானால் யாவருமுன்னை வியப்பார்கள். நீ நின்றுபேசுவதனாற் காரியமேயில்லை, விரைவாகப் போர்செய், வெற்றிவீரர்கள் தம்மைத் தாம்புகழவே மாட்டார்களேஎன்றுசொல்லி யெதிர்ந்தார். அவ்விருவரும் எதிர்த்துப் போர் செய்கையில் ஒருவரை யொருவர் வெற்றிகொள்ள முடியை நாடுவர், கழுத்தை நாடுவர், செவி, கன்னம், புயங்கள், கரங்கள், மார்பு, கால் என்னு முறுப்புகளை நாடுவார்கள், இவர்கள் இவ்வாறு நாடித் தாம் கற்றுத்தேர்ந்த வித்தையினால் அணங்கு பூசைசெய்யப் போர்செய்கையில் வீரவாகு தேவர் மிஞ்சி அதிவீரனுடைய பாதங்கள் முடிமார்பு இவைகளைத்தம் கைவாளினாலே துண்டித்தெறிந்தார். அவனுயிரையும் காலன் கைக்கொண்டான்.

அதிவீரன் வதைப்படலம்

முற்றிற்று.

---

## மகேந்திரஞ் செல்படலம்.

வீரவாகுதேவர் அதிவீரனைக்கொன்று களைந்து தமது வாளை யுறையிற் சேர்த்து மகேந்திர நகரம்போக நினைந்து இலங்கையை யகன்று ஆகாய மார்க்கமாகச் செல்லவே, அவ்விலங்கை மீண்டுமெழுந்தது. பிறகு வீரவாகு தேவர் மகேந்திர நகரடைய அந்நகரின் வடவாயிலிற் கோரனென்றும் அதிகோரனென்றும் சொல்லப்படும் இரண்டவுணவீரர்காவல் கொண்டிருந்தனர். அவர்களுக்கு யானைக ளாயிரம்வெள்ளம், தேர்க ளாயிரம்வெள்ளம், குதிரை

கள் இரண்டாயிர வெள்ளம் பதாதிகள் இரண்டாயிரவெள்ளம்; இவ்வாறு சூழ்ந்த சேனையுடனின்ற இவ்விரு அவுண வீரரையும்பார்த்து விம்மித மடைந்து தம்முள் ஆலோசிப்பதாயினர்.

இங்கே நாம்செல்வோமாயின் நம்மொடு இச்சேனை கைகலக்குமே, இவற்றினோடு போர்செய்தால் நமக்குநாள்கழியுமே, இதுமாண்டபோதும் மேலு மேலு நகரிலிருக்குஞ்சேனைகள் வந்துகொண்டே யிருக்குமே, அவ்வாறுவந்த சேனையுடனே நமதுகருணை வடிவாளனுகிய சண்முகப்பெருமானருள்கொண்டு போர்செய்து கொண்டேயிருந்தால் இந்நகரிலுள்ள சேனைகளைக்கொல்லப் பல நாள்செல்லுமே; அவ்வாறு பலநாள் சென்ருலும் செல்லட்டும்,இந்நகரிலுள்ள அவுணப்பெருங்கடல் அழியக்கூடிய வகையாற் போர்செய்தாலும் பின்னே தன்மக்களையும் தம்பியையும் சூரபதும னனுப்புவானே .அவர்களோடுபோர் செய்துவெல்வதரிதாமே;அதுநமது குகப்பெருமானருளால் முடியுமேனும்பின்னே சூரபதுமன்வருவானே. அவனேடு பலநாள்போர்செய்தாலும் அவன்சாவதில்லையே,அவனேமுழுமுதற்கடவுளாகிய பரமசிவகடாக்ஷத்தால் இறவாவரம் பெற்றிருக்கின்ருன். அவனை மாலே பிரமனே மற்றுள்ள தேவரோபொரினும் வெல்லுவதரிது. இன்னு மவனுணைக் கஞ்சித்தேவர்களு மறைந்திருக்கின்றனர். அவனை யார்தான் வெல்ல வல்லவர்கள், அவனேடுபோர்செய்தாலும் அவன் சாகானென்றே யோசித்துத்தாம் இவ்வழிபோதல் தகுதியன்றென்று துணிந்து தாம் தூதுவந்த காரியத்தை முடிக்க வேண்டுமென்று மேற்கொண்டு இவனைத் தொலைப்பது போதநாயகனும் பரம்பொருள் நாயகனும், வேத நாயகனும், சிவனருள் நாயகனும், விண்ணவர் கட்காதி நாயகனும், அறுமுகங் கொண்ட நாயகனும், அமலமாகிய சோதி நாயகனும் ஆகிய குமார சற்குருவினுலல்லது முடியாததலால் இவனேடு நாம் போர்செய்துகொண்டிருந்தால் நமது பெருமானுகிய சண்முகங் கொண்ட தானுவெழுந்தருளி அச்சூரபதுமனை வேலினுல் தடிந்து தேவர்களைச் சிறையினின்று மீட்பான்,இங்கேநின்று நாம்போர்செய்வது முறையோ! இதற்குநங்குகப் பெருமானதாணையுமின்றே, இது தூதர் செய்யும் கடனுமன்றே,போர் செய்யாமற் போதலே கடனென்று வடபுறத்து வாயிலை நீங்கி அப்பால் கிழக்கு வாயிலை யடைந்தனர். அவ்வாயிலோ அவ்வாறே மேற்சொன்னபடி அவுணர் சேனைகளாற் சூழப்பட்டு மேதிக்கண்ணன், வீரபானுவென்னும் தானைத்தலைவராற் காக்கப்பட்டிருந்தது, அதனையும் கடப்பதரிதென்று துணிந்து தென்றிசை வாயிலை யணுகினர்.

மகேந்திரஞ் செல்படலம்

முற்றிற்று.

---

## கயமுகன் வதைப்படலம்.

தென்றிசையில் நாடிச்செல்கையில் கீழ்த்திசை வாயிலின்காவலோனாகிய கயமுக னென்பவன் ஆகாயத்திற் காத்துக் கொண்டிருந்தான். அவனோ ஆயிரமுகமும் மூவாயிரங் கண்களையு முடையவன், தோள்கள் இரண்டாயிரங் கைகளையுடையவன், கோப மிக்கசிந்தையும் யமனுக்கு யமனும் போன்றவன். அவன் எமபுரத்தில் எப்போதும் அரசனா யாண்டுவாழ்பவன், பகைவ ரென்பவரேயின்றி யுள்ளங் குறைபவன். அவன் வீரவாகு தேவரை நோக்கி வலிய காவலை நீங்கி நீயிங்கே புகுந்தாயே, நீ மாயையில் வல்லானோ? இங்கே காற்றென்பதும் எங்கள் ஆணையில்லாமற் சஞ்சரிக்கமாட்டாதே! இதுவறியவ ராகி மயங்கும் சிறிய தேவர்கள் தங்கியிருக்கும் சிறப்பில்லாத நகரமேயென் றெண்ணி வந்தாயோ! நமது ஆணை யாற்றலைச் சிறிதேனு மறியாயோ! நான் கோபமே கொண்டேன்; நீ செத்தவரோ டொப்பாவாய்,மீளவே மாட்டாய்; இங்கே சாகவே யுனக்கு விதிவிதித்ததுபோலும்; சூரபதுமன் வசிக்கின்ற பழமையான நகரத்தில் நீ வந்தது சிங்கங் குடியிருக்கு மலையிலே மான்பிணை யாராயவந்ததுபோலு மிருக்கின்றது! நீ கடலையும் இலங்கையையும் கடந்து இம் மகேந்திர நகரை யடையத் தன்னந்தனியே கையில் ஒரு வாட்படையுடனே வந்தது யாதுகாரணம்? உன்னை ஆலாலமுண்ட சதுரப்பெருமானோ? பாலாழியிற் றுயில்கூர் பரந்தாமனோ! நாலாரண மோதுநான்முக முடையவனோ? வானிறப் பகட்டுப் பாகனோ அனுப்பினார்கள்! இந்நகரமுற்றுஞ் சுற்றிச் சுற்றிப் பார்க்கின்றாயே! நீ வந்தது நோக்கினால் தூதாக வந்ததுபோலத் தோன்றுகின்றது! நீதேவர்கள் சிறையில் வருந்துவதறிந்து அவர்கள் செய்கையை இந்திரனுக்கறிவிக்க ஆளாகி யறிந்துபோக வந்தாயோ! முன்னே எங்களுக்குக்குற்றேவல் செய்து துன்பங்கொண் டொளித்துக்கொண்டிருக்கும் இந்திரனைச் சேர்ந்தானுமல்லை, இன்னும் சிறிதேனும் அச்சங்கொள்ளாமலு மிருக்கின்றாய். கொலைசெய்யும் யமனேயென்று சொல்லச்சிறந்த நீ என்முன்னே நில்லடா எங்கே போகின்றாயென் றுரத்துக்கூவிச் சென்றான்.

இவ்வாறு கூவிச்சென்ற கயமுகனை வீரவாகுதேவர் நெருங்கி என்னிடத்தே நீ சார்ந்தது நீ சாவதற்கென்றே நினை, போர்செய்ய வாவாவென்று கூப்பிட்டு நிற்க, அதற்குக் கயமுகன் தானொருமலையைப் பறித்தெடுத்து உன்னுயிரை இது வாங்கியேவிடுமென்று வீசியெறிந்தான். அப்படி கயமுகன் எறிந்த அம்மலை வீரவாகு தேவர்மேற்சென்றது. அது அவர்மேற்பட்ட காலையில் பொடிப்பொடியாய்விட்டது. அதைக்கண்ட கயமுகன் வீரவாகுதேவருடைய பராக்கிரமத்தைப் பார்த்து மிகுந்த கோபங்கொண்டு அநேகம் ஆயிரம் மலைகளைப்பிடுங்கி யெறிந்து ஆரவாரித்தான். இப்படி அநேகமாயிர மலைகளைவிட, அவைகளெல்லாம் வீரவாகுதேவர் முன் சூரியன் முன்பனிபோல நீங்கக் கயமுகன் மிகவுங் கோபங்கொண்டு தன்கையிலிருந்த தண்டொன்றெடுத்து வீரவாகுதேவர்மேல்விட,அதை யறிந்து தன்கையிலிருந்த வாள்கொண்டு இரண்டு துண்டுகளாக்கினார். பிறகு அவன் மரங்களைப்பிடுங்கி யெறிந்துவீச அவன் ஆயிரங்கைகளையும்வாள்கொண்டு அறுத்துத்தள்ளினார். பின்புதன்னிரண்டாயிரங் கைகளையும்கொண்டு வீரவாகுதேவரைப் பிணித்துக்கொள்வனென்று குறிக்க

அவைகளையுந் தறித்தனர். இவ்வாறு கைகளெல்லாமறுப்புண்டு கிளைகளொழிந்த ஆலமரமேபோலநிற்க,பிறகு தன்புயங்களைத் தட்டியாரவாரித்து இவனைக் கொன்றே நாமுயிர்துறக்க வேண்டுமென்று துணிந்து நிற்க அவனை வாளாலே யோச்சி மார்பி லுதைத்தனர். அதனாற் குப்புற விழுந் துயிர்சிந்த அவனுடலினின்றும் இரத்த வெள்ளம் பெருக்கெடுத் தோடியது. அப்போது வீரவாகு தேவர் அவுணர்களோடு நாம் போர்செய்துகொண்டிருந்தால் இன்றோடு முடியுமோ! இவரோடு போர் செய்வதும் நமது வருகையன்றெனத் துணிந்து ஆரணங்க ளளவிட்டரிய அருட்பெருங் கடலாவான் இவர்களோடு போர்செய்வதற்கே நம்மையேவியதுமன்று, நாம் எந்த வாயிலிற் சென்றாலும் அங்கேயெல்லாம் அவுணவெள்ளங் காவல் கொண்டிருக்கின்றது. நாம் வேற்றுருக் கொண்டு செல்வதே தகுதியென்று சிந்தித்துத் துணிந்து கிழக்கு வாயிலைக் கிட்டி அணுவுருக்கொண்டுவிரைந்து போர்க்களத்தைவிட்டுக் கிழக்குக்கோபுர வாயிலை யடைந்தனர்.

கயமுகன் வதைப்படலம்

முற்றிற்று.

---

## நகர்புகு படலம்.

அந்நகர வாயிலை யடைந்து அந்நகரச் சிறப்பினை மதித்து இதனை யாயிர நாவாலுஞ் சொல்லுவ தரிதெனவேதுணிந்து இது முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம் பொருளாகிய சண்முகப் பெருமானது திருவருள்கொண்டு இந்நகர்ச் சிறப்பைக் காணுந் திறத்தனானேன், மனத்தினா லுடினாலும் பலநாள் கழியுமே,நுணித்து ஆராய்ந்து பார்த்தாலும் இப்பொழுதே நிரம்பாதே ? பிரமனாலும் அறிவரிதாகிய உபநிடதப்பொருளைச் செந்தமிழாசிரியராகிய அகத்தியனார்க் குபதேசித்த பரம காருணிகனாகிய சண்முகப் பெருமான் பணித்த குற்றேவலைச் செய்யாது இந்நகரினையே பார்த்துக்கொண்டிருந்துதாமதிப்பது நன்றோ! என்று அக்கோபுர வாயிலின் சிகரத்தி னின்றும் அம்மாநகரின்வளப்பத்தைப்பார்த்துக் கொண்டே அந்நகரினையடையக் கருதி வானவர் நாயகனும், ஞான நாயகனும், நான்மறை நாயகனுமாகிய சண்முகப் பெருமானருள் கொண்டு அவ்வீதி வழியே சென்று பானுகோபன் வீட்டைக் கடந்து அதனை நோக்கி விம்மித மடைந்து அக்கினி முகனிடத்தையுந் தாண்டி இரணிய னில்லத்தையும் விட்டு வச்சிரவாகு மாளிகைதாண்டி மூவாயிர மைந்தர் திருமனையும்விட்டுத் தலைமைமந்திரியாகியதருமகோபன் கிருகத்தையும்தாண்டிப்பிறகு சயந்தனும் தேவர்களும் சிறையிடப் பட்டிருக்கின்ற சிறைச்சாலையைப் பார்த்தார். அந்தச் சிறைச்சாலையிற் சயந்தன் அகப்பட்டு பலவாறு நினைந்து நைந்தேங்கி என்றுகொல் இச்சிறை நீங்குமென்று பலவாறு புலம்பிக்கொண்டிருக்கையில் அநேகமாயிரம் அவுணர் அச்சயந்தனிடத்தில் வீரவாகுதேவர்புகவருங் காலத்திற்சென்று காயெரிபோல் வருத்திச் சொல்வாராயினர்;சயந்தனே! இந்திரனாகிய உன் தாதையும் அயிராணியாகிய உன் தாயும் போனவிடத்

தைத் தெரிவிக்க வேண்டும், சொல்லா தொழிவீரேல் உன்னுடைய ஆவியை நீக்கிவிடுவோம்,உண்மையைச் சொல்லவேண்டுமென்றுகேட்க,அதற்குச் சயந்தன் அவர்களை நோக்கி என்னைப்பெற்றோர் வானினின்றும் சென்றதைமாத்திரம் பார்த்தேன், அவர்கள் போனவிட மின்னதென்றறியே னென்றனன், பின்புஅவர்கள் தேவர்களையும் வருத்திக்கேட்க அவர்களும் அவ்வாறேசொல்லினர். பிறகு அக்கொடியோர் இவர்கள் உள்ளத்தைச் சொல்லாம லிருக்கின்றனரெனத் துணிந்து அவர்களைச் சின்னபின்னஞ் செய்யத்தொடங்கி உடலைச்சேதித்தும் தண்டால் தலைமேலேமோதியும் பலவகையாய் அக்காவலாளர் அவர்களைப்படாதபாடெல்லாம்படுத்தச் சயந்தனும் தேவர்கள்கூட்டமும்தரியாதுஅனாதிமலமுத்தனாகிய பரமசிவனை யெண்ணியெண்ணித் துதித்துநின்றனர். சயந்தனோ தன்னை அவர்கள் உடல்சேதிக்க வலமழிந்தும் அமுதமுண்டபலத்தால் இறந்துபடாதிருந்தான். பிறகு அவர்கள் தேவர்களையுந் துன்பஞ் செய்ய அவர்களு மிறந்துபடாதிருந்தனர். அக்காவலாளர்களோ தாம் தேவர்களுக்குத் துன்பஞ்செய்தும் அவர்களோ ரிடையூறுமில்லாதவரோயாக மனந்தளர்ந்து நொந்து வருந்தி இவர்களோ பின்னாளில் இறப்பரல்லது நாம்செய்யும் இடையூற்றால் இறந்திலர் ; அமிர்துண்டபலத்தினால் இறக்கவே மாட்டார்கள், தவமிகுதியுடையவர்கள், நாம்செய்த இடையூற்றால்தம்வாயானு மொன்றுஞ் சொல்லாதிருக்கின்றனரோ ; நாமோவாளாலும் தோமரத்தாலும் தண்டாலும் வில் முதலிய படைகளாலும் எத்தனையோ பொல்லாங்கியற்றினோமே, அவை பயன்படா தொழிந்தனவேயென்று சொல்லிக்கொண்டு அவர்களைச் செய்ததுன்பத்தால் தங்கள் கைவருந்தி கவலையடைந்திருந்தனர். இதுநிற்க ;

நகர்புகுபடலம்

முற்றிற்று.

---

## சயந்தன் கனவுகாண்படலம்.

அக்காவலாளிகள் வருத்தியும் பயன்படாதொழிந்து சயந்தன் முதலானோரைக் காத்துக்கொண்டிருக்க, அப்போது சயந்தனோ தேவதேவோத்தமனாகிய சிவபெருமானை யெண்ணி மனங்கரைந்து பின்வருமாறு புலம்புவானயினன்.

"வந்திப்பவர்பவங்கண் மாற்றுவோயெத்தேவர்
சிந்தைக்குமெட்டாச் சிவனேசெழுஞ்சுடரே
இந்தப்பிறவி யிடருழப்பச்செய்தனையோ
அந்தித்தநின்புணர்ப்பை யாரோயறிவாரே.
கைந்நாகத்துக்குங் கயவாய்க்குராரைக்கும்
பைந்நாகத்துக்கும் படருஞ்சிலந்திக்கும்
பின்னாகியவுயிர்க்கும் பேருண்முன்செய்தனையால்
என்னாயகனே யெமக்கேனருளாயே.

*     *     *

ஒன்றாயிருதிறமா யோனாந்தாயையைந்தாய்
அன்றாதியின்மிட்டு மைந்தாயளப்பிலவாய்
நின்றாய்சிவனேயிந் நீர்மையெலாந்திங்ககற்றி
நன்றாயிகட்டு நலம்புரிதற்கேயன்றோ
பொன்மலியுங்கொன்றைப் புரிசடையாயிவ்வழிசேர்
துன்பமகற்றித் துறக்கத்துட்டாழாது
பின்புநனிநோற்றுப் பெறற்கரிதாநின்னடிக்கீழ்
இன்பமொருதலையா யெய்தவருளாயெமக்கே."

என்றிவ்வாறு புலம்பி விடம்பொருந்தினுற் போலத் துன்பமனத்தை நெடிதுவருத்தச் சிறிது முணர்ச்சியில்லாமல் மயங்கியுயிர் கரந்துலேந்துஇறந்து பட்டவர்போலச் சயந்தன் மனமாழ்கியிருந்தான், அவ்வாறே தேவரும் மனங் கலங்கி யுயிர்பிழைப்ப வுணர்ச்சிகெட்டிருந்தனர்.

இவ்வாறு மலேச்சிறைகரிந்த இந்திரன் மகனுகிய சயந்தனும் தேவர்களும் மகேந்திரநகரில் சிறையிலகப்பட்டு வருந்திக்கிடக்க, அவர்கள் கனவின்கலா அரிப்பிரமாதி தேவர்கள் நினைவினும் காண்டற்கரிய பரம்பொருள் ஒருபற்றுக் கோடுமில்லாமல் தன்னந்தனியே வருந்திக்கிடக்கும் மக்கலைத்தழுவி யஞ்ச வேண்டாமென்று காக்குந் தாயேபோல அவர்களுக்கருள்புரியுஞ் சிந்தையால் கொடி வச்சிரம் அங்குசம் பாணம் வேற்படை அபயம் வரதம் பங்கயம் மணி மழு தண்டு வில் இவைகளை யேந்திய பன்னிரு கைகளுடன் மூவிருமுகத்து முத்துக்குமாரனுகிச் செந்திலில் தேவர்கள் துயரத்தைப்போக்க எழுந்தருளி யிருப்பதைவிட்டினிதெழுந்தருளி அவனுக்குக் காட்சிதந்தருளினுர். தந்தை யில்லதோர்தற்பரனைத் தாதையாகவுடைய சண்முகங்கொண்டசதுரப்பெரு மான் தன்னுருவினைக் காட்டியருளத் தன்கண்களாரக்கண்டுதொழுது சொல் வானுயினன். யான்படுந் துன்பங்கண்டே அதுதொலைப்பா னெழுந்தருளிய தன்மையைநோக்குமிடத்து, நீ பிரமனுமல்லை,திருமாலுமல்லை, அவர்களிருவ ராலு மெட்டப்படாத பரமசிவனுமல்லை ; நீ யார் ? அறிவிக்கவேண்டுமென்று குறையிரப்ப அவ்வாறுகேட்ட சயந்தனை நோக்கி நாம் கொன்றையஞ்சடைக் குழகனருளிய மதலை ; உன்னுடைய அல்லலும் இரக்கமும் மையலுமறிந்தே எழுந்தருளினேமென்று பின்னுஞ் சொல்வானுயினன்.

அடா சயந்தனே ! உன்பிதாவாகிய இந்திரன் தன் குறையோடு உன் குறையனைத்து மெடுத்துச் சொல்லி நம்மை வேண்டிக் கொண்டான், நமது வரம்பில்லாத பூதசேனையுடனும் இலக்கத்தொன்பான் வீரருடனும்புறப்பட்டு இப்பூமியி லெழுந்தருளிக் கிரவுஞ்ச மலையையும் தாரகாசுரனையும் வேலாற் களைந்தோம், அவரைக் கொன்று களைந்தபிறகு நாம் திருச்செந்தூரொன்னும் திருப்படைவீட்டி லெழுந்தருளிப் பிரமனுமாலும் உன் பிதாவும் தேவர் களும் நம்மைச் சூழ்ந்துநிற்க வீற்றிருக்கின்றோம்.உன் தங்கையாகிய தெய்வ குஞ்சரியும் மேருமலையி லிருக்கின்றாள். இதுநிற்க ; நமக்கிளவலாகிய வீர வாகுவைத் தனித்திருந் தூதாக விடுத்துச் சூரபதுமன் மக்களி லொருவனைக் கொல்வித்துப் பல அவுணர்களையும் படுப்பித்து இந்நகரையு மழிப்பித்து நீரு

க்கிவிடுவோம்,பின்பு அவன் நம்மைவந்தடைந்தவுடனே நாம் செந்திற்பதியை நீங்கி இந்நகரத்திற் கருகே பாசறை கட்டிக்கொண்டு பத்துநாளையில் சூரபதுமனையு சிங்கமுகனையு பானுகோபன்முதலிய குமாரவர்க்கங்க ளனைத்தையும் அழிப்போம். அழித்தபிறகு உன்னைத்தேவருடனே அந்தச்சூரபதுமனிட்ட சிறையினின்றும் விடுவித்து உங்கள் செல்வத்தையு மீளத்தருவோம், நீ வருத்தப்படவேண்டாம்,இதற்குச்சந்தேகமேயில்லையென்றருளிச்செய்தார். அதைக் கேட்ட சயந்தன் தன் மனத்தில் கொண்ட மயக்கமாகிய மனவிருளகன்று மகிழ்ச்சி பெருக உடம்பில் உள்ள மயிர்சிலிர்ப்ப ஆனந்தக்கண்ணீர் பொடிப்ப தோள்கள் மலைபோற் பூரிக்க அமுதமுண்டு களித்தான் போற்களித்து அப் பெருமானது புகழை வேத மந்திரங்களாற் றுதித்துக்குடந்தம்பட்டுக் கூத்தாடினன். அவன்கொண்ட மகிழ்ச்சிக்கோ ரளவேயில்லை. இவ்வாறு மகிழ்ச்சி பெருகநின்ற இந்திரன் மகன் இளைய பிள்ளையாரைத் திருவடிதொழுது சொல்வானுயினன். ஐயனே நீ எளிதுவந்துமிகவுமற்பரோமாகியஎங்கள்துன்பத்தைத் தவிர்க்க நினைத்து எழுந்தருளியது எங்களாற் சொல்லுந்தரமேயோ ! நாங்கள் உம்மையே யடைக்கலம் புகுந்தோம், எம்மைக் காத்தருள வேண்டுமென்று வேண்டிக்கொண்டான். சயந்தன் இவ்வாறுசொல்லவே எப்பொருட்குமேலாகியபரம் பொருளாம் முத்துக்குமரப் பெருமான் கேட்டருளி உமது குறையைத்தவிர்த்தருள்வதுமெய்ம்மையேயென்றுதிருவாய்மலர்ந்தருளுகின்றார்.சயந்தனேஇந்நகரத்தில் நாமேவிய தூதனுகிய வீரவாகுதேவன் உன்னையும்தேவர்களையுநேரிற்கண்டு உங்களுக் கினியமொழிபுகன்று போகச்செய்வோம். அதையும் காணுவீர்களென்று சொல்லி தன்னுருக் கரந்தருளினன். இறைவன் சென்றவுடன் தான்கண்ட கனவு நீங்கிமுன்னை யுணர்ச்சிபெற்றுக் கனவிற் கண்ட விடயங்களை யெல்லாம் நனவிற் றோன்றிநிற்ப, நமது துன்பமெல்லா மோடிப் போயினவேயென்று நெஞ்சங் குளிர்ந்து நின்று பரசிவ குமாரனுகிய சண்முகத் தயாநிதியின் அருட்கடலில் மூழ்கினன். அவ்வாறே தேவர்களும் அச்சிறைச் சாலையில் நித்திரை செய்துகொண்டிருப்ப அவர்கள் கனவினுஞ் சென்றுணர்த்த ; அவர்கள் விம்மிதமுற்று விழித்தெழுந்து தம்மிற் றும்கண்ட கனவின்பயனைப் பேசிக்கொண்டே சயந்தனைக்குறுகித் தாங்கள் கண்டதைச் சொல்ல, அவனும் அவ்வாறே கண்டேனென்று சொல்லி அங்கேயுள்ள காவலாள ரறியாவண்ணம் சூரபதுமன் அழியக் காலமே குறுகிற்றென்று பேசிக் கொண்டிருந்தனர்.

சயந்தன் கனவுகாண்படலம்

முற்றிற்று.

---

## வீரவாகு சயந்தனைத் தேற்றுபடலம்.

இவ்வாறு சயந்தன் தேவர்களுடனே பரமகருணநிதியாகிய சண்முகத் தொருவனது அற்புத குணங்களைப் பேசிக்கொண் டிருக்கையில் அந்தச் சிறைச்சாலையி னருகே வீரவாகுதேவ ரெழுந்தருளிப் பேய் செல்வத்தைக்

காத்துக்கொண் டிருப்பதேபோற் சயந்தனையுள்ளிட்டதேவர்களை அச்சிறைச் சாலையில் அவுணவீரர் காவல் பூண்டிருப்பதுகண்டு இவர்களென்னைக் காணு வண்ணமாக வுணர்வுகெட்டு மாழ்ந்திருக்கவும் விண்ணவர்கள் மாத்திரம்கண்டு களிக்கவும் யான் போகக்கருணை செய்ய வேண்டுமென்று ஓங்கார மூலப் பொருளாய் உயிர்கடோறு நின்றுமென்று நீங்காமலே யெழுந்தருளியிருக்கும் முத்துகுமாப் பெருமானை நெஞ்சினினைத்து அவனது சடாக்ஷர மந்திரத்தைத் தியானஞ்செய்து போகவே அக்காவலாளர் அச்சிறைச்சாலையில் தம்முணர்வு கெடடொழிந்து அம்மந்திரவலைப்பட்டு மயங்கிக்கிடந்தனர். அங்கே காவலாள ரெல்லாம் சித்திரப்பதுமைபோ லசைவறக்கிடக்கவே சயந்தனையுள்ளிட்டதே வர்களும் வேற்படைக்குமரவேள்விடுத்ததூதராகியவீரவாகுதேவனைக்கண்டு இவர்தான்கம்மையாளவந்தவறுவிருமுகத்து முதல்வன்தூதனென்றுகருதிச்சண் முகப்பெருமான் திருநாமபடனஞ்செய்து தாமிழந்துவிட்ட பொன்னுட்டை மீண்டும் பெற்றூற்போற் களித்து ஆனந்தக்கடலி லாழ்ந்துநின்றனர். சயந்தன் வீரவாகுதேவனைக்கண்டு தேவரீர் இங்கெழுந்தருளிய காரணமென்ன? அரு ளிச்செய்யவேண்டுமென்று வேண்டிக்கொள்ள, நானே ஈசானம் தற்புருடம் வாமனம் அகோரம் சத்யோசாத மென்னு மைந்து திருமுகங்களுடனே அதோமுகமுங்கொண்ட அவசரத்துத் தோன்றிய சண்முகப்பெருமான் பின் வந்தோன், அவன் விடுத்த தூதனுகவந்தேன் நந்திபெருமான்போல எமது குகப்பெருமானிடத்தே யுள்ளேன், வீரவாகு தேவனென்னும் பெயருடை யேன், உங்களை யெல்லாம்சூரபதுமன் சிறையிலிடுவித் திருப்பதனல் அச் சிறையினின்றும் உம்மை விடுவிக்கவேண்டுமெனக்கேட்கவே தூதனுகவெழுந் தருளினேனென்று சொல்ல, அதைக்கேட்ட சயந்தன் மனக்களிப்படைந்து தேவரீரோதூதனுக வெழுந்தருளினமையால் யாங்களெல்லோரும் சிறையி னின்றும் உய்ந்தோம், வருத்தமெல்லாந் தீரும்வகையையும் பெற்றேமென் ருன். வீரவாகுதேவரோசூரபதுமனிடத்தே என்னைத்தூதனுகவிடுத்தவறுவிரு முகத்து முத்துக்குமரப்பெருமான் உங்களைவலிந்தாட்கொள்ளவே யிருக்கின் ருன். முன்னிழந்த செல்வத்தையே பெற்றீர்களாவீர். பின்னும்வேண்டிய வேண்டியாங்கெய்தப்பெறுவீர். இவ்வுலகம்போன்ற எல்லாவுலகமும் படைக் கும் பிரமன் முதலியதேவர்களெல்லாம் அவனுல் பெறலரும்பேறடைந்தார்க ளென்ருல் நீங்கள் பெறுதற்குக் குறையுமுண்டோ? அவன் அனுதிமலமுத்த னுகிய பரமசிவன் வேண்ட, பிரமனைச் சிறையினின்றும்விடுத்து அவனுக்குப் பிரணவப்பொருளைவழங்கினுன். உங்களையும் அவ்வாறு காத்தருள்வான், நீங் களும் பிறவித்துயர மொழிப்பீர்கள், சங்கையேயில்லாத பாவச்செயல்களை யெல்லாம் விரும்பிச்செய்கின்ற மாபாவிகளாகிய அவுணருாகிய இம்மகேந் திர நகரத்தில் அறிவுடையோர்கள் அணுகவே யணுகமாட்டார்க ளெனின் நானேகுகப்பெருமானது சொன்மேற்கொண்டு சேண்வழியினகன்று மனமெ லிந்தடைந்தேன்;உன்னையுங் கண்டதனல் மகிழ்வுமேற்கொண்டேனென்ருன். சயந்தனே மனமகிழ்ச்சிபெருக நின்று யாங்கள் சிறையிடப்படுவதன்முன் சென்ற என்னைப்பெற்றேர் செய்தியைத்தெரிவிக்கவேண்டுமென்ன, வீரவாகு

தேவரும் இந்திரன் சீகாழியிற் சிவபூசைசெய்தது முதல்சிரலைவாயிலில் நமது முத்துக்குமரப்பெருமானுடன்வந் ததுகாறுமுள்ளசெய்திகளையெல்லாமெடுத் துச்சொல்ல,சயந்தனும் உமது திருவாய்மொழிகளைக்கேட்டு சண்முகத் தெம் பெருமானையும் என் தாய் தந்தையர்களையும் எதிரேகண்டு தரிசித்தாற்போ ன்ற பெருமகிழ்ச்சி யடைந்தேனென்றான். வீரவாகுதேவரும் சயந்தனை யுள்ளிட்ட தேவர்களை நோக்கி நம்மிறைவன் இங்கே யெழுந்தருளி சூரபது மனையும் சிங்கமுகனையும் பானுகோபன் முதலானோரையும் தொலைக்குந் தனையும் சிறிதுநாள் இச்சிறையிடத்திலேயே யிருங்கோள். நமது பெருமா னோ சாதாரனமானவ னன்று, தன்னிகரில்லாத மேலாகிய தற்பரவொளி யாய் யாவராலு மெண்ணுதற்கரிய பரம்பொருளாய் நின்ற பரம்பொருளே மூவிருமுகமும் நான்குபுயமுங்கொண்டு சிறுபாலகனேபோலக் கந்தனென் னும் பெயர்கொண் டெழுந்தருளி யிருக்கின்றான். முன்னாளில் தக்கன் யாகத் திற்சென்று அந்தயாகத்தில் அவிர்ப்பாகமுண்டதோஷம் வீரபத்திரரால் கழு வாயடைந்தும் இன்னும் சேடநீங்கவேயில்லை ; அதனாலேதான் உங்களை இத் துன்ப மனுபவிக்கச்செய்தது. சண்முகத்தெம்பெருமானை யல்லது நீங்கள் படுந்துன்பம் நீக்கவல்லார் யார்? சயந்தனே இன்னுஞ்சொல்வதைக்கேள்! கிரவுஞ்சகிரியோடு தாரகனைக்கொன்று களைந்தது சூரபதுமனைக்கொல்ல முன்னே நான்கொண்ட தன்மையென்றே யெண்ணு. வில்லைவளைத்து நாண் பூட்டிப் பாணங்களைச்செலுத்துகையில் ஓர்பாணத்தினுக்குணவாகவே அமையா;இத்தனை அவுணவெள்ளங்களும் எமது சண்முகங்கொண்ட தெய்வமணி யினது கரதலகமலத்திற் பிடித்திருக்கும் சத்துருசங்கார வேற்படை எழுகட லையும் அட்டகுலா சலங்களையும் பதினான் குலகங்களையும் அண்டங்களை யும் ஒருகணப்போதே யுண்டுவருமென்றால் இச்சூரபதுமனை அவுணவெள் ளத்துடன்தொலைப்பதும்ஒருபொருட்டோ! எமதையனாகியசரவணோற்பவன் சூரபதுமனுடைய மார்பின்கண் வடிவேலெறிந்து கொன்று களைந்தாலல்லது சிறைப்பட் டிருக்கின்ற உங்களுடைய சிறைமீளாமையைத் தெரிவிக்கஎண் ணிபோர்வீரர்செய்கின்ற அறநெறியாராய்ந்தே எம்மைத் தூதனாகவிடுத்தான் நமது குகப்பெருமான் வடித்து வடித்துச்சொல்லிய நீதிமொழிகளை யெடுத் துச்சொன்னாலும்அச்சூரபதுமனோசிறிதும்கேட்கவேமாட்டான்.நானேமீண்டு நடந்தசெய்தியனைத்தும் அறிவிக்க இறைவனோ நாளையேபோர்க்கெழுந்தருளி அவனைப் பொருது கொன்றுகளைவனென்பது சத்தியமெனத்துணி. பிரமனோ மாலோ தேவரோ பிறரோ எத்தனையோகாலம்அருந்தவஞ்செய்யினுமறிவரியசண் முகத்தெந்தயாநிதி அங்கே யெழுந்தருளியிருந்தே அச்சத்துரு சங்கார வேற் படையை விடுத்தாலும் அது கொன்று களைந்தேவிடும். இங்கே எழுந்தருளி வந்துவேற்படையைவிடுவானென்பதுஅவனுக்கோர்திருவிளையாட்டென்பதே யல்லது வேறன்றென்று பல பலவிதமாகச் சயந்தனைத்தேற்றிய தல்லாமல் தேவர்களையுந் தேற்ற அவர்களுடன் சயந்தன் யாங்கள்படும் துன்பங்களை யெல்லாம் இந்திரனது செவியிற் புகச்செய்ய வேண்டுமென்று வேண்ட அவ் வாறே செய்வேனென்று விடைபெற்றுத் தேவர்களைக் காக்குங் காவலாளர் கட்கு முன்னை யுணர்ச்சியை யளித்து அவ்விடம் விட்டகன்றனர். அக்காவ லாளரும் முன்போல் சயந்தன்முதலிய தேவர்களைக் காத்து வருவாராயினர்.

வீரவாகுதேவர் சயந்தனைத்தேற்றியபடலம்

முற்றிற்று.

---

## அவைபுகு படலம்.

வீரவாகு தேவரோ சயந்தன் முதலிய தேவர்களைச் சிறையிட்டிருக்கும் சிறைச்சாலையையகன்று சூரபதுமனது கோட்டைவாயிலிலுள்ள அகழியைத் தாண்டி அநேக அவுணவெள்ளம் புடைசூழ்ந்திருக்கும் மேகந்தவழும் மதிலையுங்கடந்து அம்மதிலையடுத்த கோபுரங்களையுங்கண்டு அங்கே மிக்க வலியுள்ள உக்கிரன் மாயூரன் முதலிய வீரர்காக்கும் காவலைநோக்கி யப்பாற்படப்போய் அச்சூரபதுமன் அத்தாணிமண்டபத்தினை வியந்து நோக்கி அவன்கொலுவீற்றிருக்கக்கண்டு பிரமன்மால் உருத்திரனென்னும் மூவரின் முதல்வராகிய முக்கட் பெருமானுடைய பாதங்களை விரும்பி வழிபாடு செய்கின்ற தேவர்களில் சூரபதுமன் படைத்த பெருஞ் செல்வம்போற் செல்வம் படைத்தவர் யாரிருக்கின்றனர். மறத்தொடு தவஞ்செய்து வருந்திமாய்ந்தவரில் இவனைப் போலும்பிறரில்லையே ; முக்கட் பெருமானாகியபரமசிவன் இவனுக்குவழங்கிய வரங்களும் உரங்களும்போல உலகத்தில் ஒருவரும் பெற்றேயிலர், யாகஞ் செய்தும் நமதுபரசிவன் வாராமலிருந்தமையால் தான் அவ்யாகத்தீயில் வீழ்ந்திறந்து மாய்ந்து வச்சிரதேகம் பெற்றதன்றிப் பெருஞ்செல்வமெல்லாமடைந்தானே ! அப்படி யடைந்தும் தன்வாழ்நாளை நீடித்திருக்கச் சிறிதுமெண்ணமிலிருக்கின்றான். வீரமும் வளமும் ஆற்றலும் மிகவு மடைந்திருப்பவர்களும் சிறிதும் பகையையாரிடத்திலும் உள்ளவராகி வாழ்வது பழுதேயுண்டாக்குவதல்லது நன்மையைப்பயக்குமோ ! இந்திரன் தனது மனைவியாகியஇந்திராணியுடனே போகச்செய்த தல்லாமல் அவர்கள் மகனாகிய சயந்தனையும் மற்ற தேவர்களையும் சிறையிட்ட பாவத்தினாலும் இவன் இறப்பதிற் சந்தேகமேயில்லை ; மிக்க வலியுள்ள சூரபதுமனே யல்லாமல் அவன் தம்பிமாரும்மக்களும் சுற்றமும் அவனது நகரமும் செல்வமும் நாளையே அழிந்துபோய் விடுமென் றெண்ணிக்கொண்டே தமது தொல்லுருவை யாவருங்காண அச்சபையிற் காட்டியருளி தாம் மேரு வில்லியராகிய பரமசிவனது நெற்றிக் கண்ணிற்றோன்றிய சண்முகத் தெந்தமனிய மலைவிடுத்த தூதனா மெனவிளக்கி இன்றுநாம் இப்பகைவன் சிங்காசனத்தின் கீழ்நின்று பேசிக்கொண்டிருப்பது தகுதியோவென்று சரவணோற்பவனது பாததாமரைகளைச் சிந்தித்து நிற்க, அநேக மாயிரங்கோடி சூரியர்கள் உதயமானாற்போற் பசும் பொன்னாலும் மணியாலு மமைந்த சிங்காதனமொன்று எப்பொருட்கு முதல்வராகிய குமார சற்குருவினருளால் ஆகாயத்தினின்றும் பூமியிலிழியக்கண்டு தாம் இதுநமது குகப்பெருமானது திருவருளா மெனமதித்து அதன்மேலெழுந்தருளி யிருந்தார். அதனால் அச்சபையி லுள்ளார் மேனி முழுதும் தெய்வதப் படிவமாக்கி விட்டதுமன்றி அச்சூரபதுமனது கீர்த்தியையும் அவனதாணையையும் அவன் மேனியிலணிந்த ஆபரங்களி னொளியையும் விழுங்கி விட்டது ; இவ்வாறெழுந்தருளிய வீரவாகுதேவரைக்கண்டு பலபலவிதமாக அச்சபையிலுள்ள அவுணர்கள் பேசிக்கொண்டனர். சூரபதுமனோ வீரவாகு தேவரை நோக்கி, பற்களைகடித்து நகைத்தரப்பி வெய்துயிர்த்துடல்வியர்ப்பக் கண்கள் தீப்பொறி பறக்கப் புகையுமிழ்ந்து பின்வருமாறு சொல்வானாயினன்.

யோகிகளேயல்லது தேவர்களும் இச்சிறுதொழிலிற் கைவல்லார். இவ்விடத்தில் அதையெல்லாம் உன்போற் காட்டவேமாட்டார்கள் நமது சபையில் நமக்கு முன்பாகக் காட்டிய நடனம் நன்றாயிருக்கிறது, அஃதிருக்கட்டும், என்னையும் சிறிதேனு மதித்தாயல்லையே! என்னெதிரே சிங்காசனத்தி லுட்கார்த் துணிந்தாயே! உன்னைஇப்போதே உடைவாளையுறையினின்றும்எடுத்து ஓரேவெட்டாகவெட்டிப் போட்டுவிடுவேன், நீ வந்தகாரியத்தை முழுதுமறிந்தபின் செய்யலாமென்றே யெண்ணி யிருக்கின்றேன். தேவேந்திரனோ எனக்காற்றாமல் ஓடியொளித்துக் கொண்டிருக்கின்றானே; பிறரும் இவ்வாறு செய்யவே துணியார்களே; திருமாலும் என்னிடத்தில் இவ்வாறு செய்யக் கருதவேமாட்டானே. பிரமதேவனோ எனக்கு ஆசீர்வாதஞ் செய்துகொண்டே தன்னுயிர் பிழைத்துத்திரிந்து கொண்டேயிருக்கின்றானே. யாவர்க்குமுதல்வனாகிய பரம்பரனோ என்னிடத்தே வரமாட்டானே. ஆயினும் நீயார்! தெரிவிக்க வேண்டுமென்று கேட்க, இவ்வாறுகேட்ட கொடியவனாகிய சூரபதுமனுடைய முகத்தை நோக்கி மிக்ககோபங்கொண்டு மாயையைச்செய் தழலாநிற்கும் சிலவலியிலாதவர் போலவோ என்னைநினைத்துப் பேசினாய்; அப்படிப்பட்ட எண்ணத்தை நீவிட்டுவிடு, நான் சொல்வதைக் கேளென்றுபின்னுஞ் சொல்வதாயினர்.

நீ பெறலருஞ்செல்வம்படைத்தும் செய்யத்தகாதகாரியங்களையெல்லாஞ் செய்துமுடித்தனை? மந்திரிமார்கள் சொல்லிய சொற்களையும் கேளாதிருக்கின்றனை? இந்திரன் முதலிய இறைவர்களையும் தேவர்களையும் வருத்திய கொடியவர்கள்தம்செல்வத்துட னழிந்ததல்லாமல் உய்ந்தவரிவரொன்று இதுவரையும் சொல்லப்படுமோ! நீயோதேவர்களைக்கடலிலுள்ள மீன்களைப்பிடித்துவரக்கட்டளையுஞ் செய்திருக்கின்றாய், இது தம்முயிர்மேல் விருப்ப மில்லாதவர்கள் செய்த செய்கையேயல்லது வேறல்ல; இந்திரனுக்குத் துன்பத்தையே விளைத்து அவன் ஆண்டநகரமாகிய அமராவதியிலுள்ள செல்வத்தையழித்தது மல்லாமல் அதிலுள்ள தேவர்களையும் சிறையிலிட்டாய்! அப்படிப்பட்ட தேவரால் நமக்கெல்லாம் துன்பம்வந்துநேர்வது மெய்ம்மையென்று எண்ணாமலே பித்தனைப்போலவே மயங்கி அறியாமை மேற்கொண்டாய்! நீ அப்பொன்னகரத்தை யழித்தகாலத்தில் உன் கையிலகப்பட்ட தேவர்களை யெல்லாம் இன்னமுஞ் சிறையினின்றும்விடாமலிருக்கின்றதன்றி அவர்மேல் இரக்கமுஞ்சிறிதுமில்லாமலிருக்கின்றாயே! அதுபற்றியேசண்முகங்கொண்ட சதுரப்பெருமான் உன்னொடும் போர்செய்ய வெழுந்தருளியிருக்கின்றனன். மேலும் உங்களுக்கெம்பெருமானாகிய கண்ணுதற்கடவுள் எழுந்தருளிவந்து பெருந்திருவளித்தபோது நூற்றெட்டுக மரசாண்டுவரவே வரமளித்திருக்கின்றனன். அங்ஙனம் கொடுத்திருந்தகாலமோகுறுகிவிட்டது. அதைச்சிந்தியாமலு மிருக்கின்றாய்; உலகத்தின்கண் விதிவலியைக் கடப்பவர் யாவர்? எவ்வகையாரும் உங்களை வெல்லவேமாட்டார்கள்; ஆனாலும் எமதுசத்தி உங்களை வெல்லுமென்றே சொல்லியிருக்கின்றான்; அதைநோக்கியல்லவா சண்முகப்பெருமான் கையினின்றும்செலுத்திய வேற்படை தாரகனுடைய உயிரைக்கவர்ந்தது. பேதைக

ளாகியதேவர்களைச் சிறையிட்டமையாலே இத்துன்பம்வந்து நேர்ந்தது. இனிப் பயனென்பதே தராத சிறுதொழிலைச் செய்து துன்பப் படுவது மேலோர் கடமையாமோ? உலகத்தின்கண் நரகமுழுதுஞ் சென்றுசென்று வருந்திச் சுழலுந்தன்மையுடையோர் சூரவர்களையும் சிறுபாலகரையும் பெண்களையும் குற்றமற்ற விரதசீலரையும் மேலோரையும் வேதியரையும் துன்பத்தை யடைவித்தவரல்லரோ! நீ சிறையினின்றும் தேவர்களை விடுப்பையேயானல் குமரநாயகன் உன்னோடு போர்செய்யவேமாட்டான், உன் குற்றத்தையும் மனத்திற் கொள்ளான், ஸ்ரீகயிலாய மலைக்கே மீண்டு மெழுந்தருளி விடுவான். ஆகையால் நீ தேவர்களையெல்லாம் சிறைநீக்கிவிடு, விடாதிருப்பாயானல் உன்னைக் குலத்தோடு மறப்பொருது வாகைமாலை சூடிக்கொள்வதாக என்னை உனக்கு அறிவிக்கச்சொல்லினன், நீ தேவர்களைச் சிறைவிடுத்து அறத்தை மேற்கொண்டு வாழென்று சொல்லிமுடித்தனர்.

இவ்வாறு வீரவாகுதேவர் சொல்லச் சூரபதுமன் சொல்லலாயினன். ஆயிரத்தெட் டண்டங்களையும் வென்று தனியரசு செலுத்து மெனக்குப் பற்களின்னமுந் தோன்றப்பெறாத பாலகனோ இவ்வாறு புத்திமதிகள் சொல்லக் கூடும்; வெற்றியிற் சிறந்த அவுணரோ வலியிலார், மிகவும் வறியராகிய தேவர்களாகியமேலோர், மழலைச்சிறுவனுகிய தனிமுதற் பெருமானுக்கு அடிமைத் தொழில்பூண்டொழுகாநின்றனர்; கடல்சூழ்ந்த வுலகத்தில் இதுவோவல்லவழக்கம்; தேன்மணங்கமழும் முடியையுடைய அவுணர்கள் குலத்தை வருத்தித் தேவர்களோ வறுமையெய்தினர், அவர்கள்பெற்ற செல்வத்தைமாற்றிக்குற்றேவல்செய்யப்பெற்றுக்கொண்டதன்றி அவர்கள் ஒழுக்கத்தையுங்கெடுத்துச் சிறையிலிட்டே எங்குடியிலுள்ளார்முறைமையுஞ்செய்துவருகின்றேன், நானோ பிரமகற்பமுடியுங் காலத்திலென்னுணையைக்கடந்து உலகமுழுதும்கடல்மூடிக் கொண்டதாயினும் அக்காலத்திலும்அத்தேவர்களைச் சிறையினின்றும்விடவே மாட்டேன்; அப்போதும் விண்மேலுள்ள அண்டத்திலே அவர்களையெல்லாம் சிறையிடுவேன், இந்திரன்முதலிய தேவர்களையும் இன்னும் இந்நகரத்திற்கொண்டுவந்து சிறையிடவிருக்கின்றேன், சூரனென்னும் பெயரையுடைய யானேஎன் கையிலகப்பட்டவரைச் சிறையைவிட்டுவிடுவேன். அழியாத வச்சிரதேகமும் வேறு பலவரங்களும் முன்னே நமதுதந்தையாகிய பரமசிவன் எனக்குப்பிரசாதித்ததையாரோதான் பெயரச்செய்வர்! என்னைப்பெரும்போர்செய்து வலிமை கொண்டு வெல்லவல்லாரும் உளரோ? நானே என்தம்பியாகிய தாரகனைக் கொன்ற வேற்படையையுடைய சண்முகங்கொண் டவனோடுபோர்செய்யலா மென்றுதுணிந்தேன், அப்போதுநான்சிறுபாலனோடு போர்செய்வது குற்றமே யென்றென்னை இங்குள்ளவர் தடுத்தார்கள், ஆகையால் நான் அத்துணிவினை யொழிந்தேன்! ஆயினும்என் தம்பியைக்கொன்ற பழிக்குப் பழிவாங்கத் தகுந்தவனைவிடுத்து அப்பழியை வாங்கிக்கொள்வேன். மேலும் எத்தனையோ விஷ்ணுக்கள், எத்தனையோ இந்திரர்கள், எத்தனையோ தேவர்கள் அண்டங்களினடுக்கிலிருக்கின்றனர்; அவர்களெல்லாம் என்னோடும்போர்செய்யவலியில்லாமலே என்னைத் துதித்துப்போனர்கள்; நேற்று நமது முக்கட்பெருமான் கண்ணிற்

றோன்றிய சிறுபாலகனோ என்னெதிர்நின்று போர்செய்யவல்லவன்? இனிவேடி த்து வடித்துச் சொல்லினும் பிரயோசனமென்ன? அச்சிறிது மறிவில்லாத சிறுகுழந்தைசொல்லைக்கேட்டு நீயும் அறிவில்லாதவனுகையால் தூதனுகவந் தாயே! பிழைத்துப்போய்விடு உயிர்ப்பிச்சைகொடுத்தேனென்று சொன்னன்.

இவ்வாறு ஆயிரத்தெட் டண்டங்களையு மாண்டுவருஞ் சூரபதுமன் அச் சபையிற் சொல்லக்கேட்ட வீரவாகுதேவர் தமதுகண்களினின்றும் தீப்பொறி சிதறப் பின்வருமாறுசொல்லலாயினர்; உய்யலாவதாகிய தன்மையைச்சிறிது மறியாமலே உழலாநிற்கும் அறிவில்லாதவனே கேள்! மதிவார் சடைமாமணி நெற்றியிற்றோன்றிய நின்மலக்கொழுந்தைச் சிறுபாலகனென்றே சொல்லத் துணிந்தாயே! அவன் பெருமிதத்தைச் சிறிது மறியவேமாட்டாய்; மனித ரைத்தேவரென்றும் வானிலுள்ள தேவர்களைமுத்தொழிலையுடையராகிய மும் மைப்பெருந் தேவரென்றும் அவருள் பிரமவிஷ்ணுக்களைப் பரம்பொருளென் றும் சொல்லுவர் சிலர்; அது உபசாரவாழ்க்கே யல்லது மெய்ம்மையல்லவே! நீயோ அப்படிப்பட்ட உபசாரமொழியாகக் கொள்ளவேவேண்டாம்! மெய்யுண ர்ச்சியையுடையரால் தியானிக்கப்படுவதும் யாவர்க்கு மெட்டாததும் தெளி ந்தவிடத்து வீடுபேற்றைத்தருவதும் உபநிடதந் துணிந்தபொருளாவதும் யா தென்றால்சொல்லுகின்றேன் கேள்! மண்ணளந்த கள்ளமா மாயனும் தாமரை மலர்த் தவிசாகவுடைய நான்முகனும் பலநாள் தேடியுங் கண்டறியக்கூடாம லிருந்தபரம்பொருளினினுடைய நெற்றிக்கண்ணினின்றும்பரஞ்சுடருருவாய்த் தன்மனத்திற்கொண்டபேரருளால் அப்பரம்பொருள் ஓர்சிறுவனுகவே தோன் றினன். முன்னவர்க்கு முன்னுவோர்க்கு முற்பட்டுத் தன்னையொப்பவரில் லாத ஈசனுகியதனிப்பெயரைத்தாங்கி உயிர்க்குயிரா யருவுருவாய அம்மையப் பனு மவனென்றேதுணி; அப்பரம்பொருளாகியசிவபெருமானே தானோர்திரு விளையாடலையெண்ணிப் பாலகனுகத் தோன்றியிருக்கின்றனன்; அதனை நீஅவ னுறுமுகங்கொண் டிருக்கின்ற உண்மையாலேயே யறிந்துகொள்ளக்கூடும், ஆராயுமிடத்து அவனுக்கும் பரமசிவனுக்கும் பேதமேயில்லை; இது மணியின் ஒளிபோலுமெனத்துணி! பூதமைந்தினுட் கீழ்நிலையாகிய நிலத்தின்கண் உள் ளனவாகிய பல அண்டங்களில் நீயாளும் ஆயிரத்தெட்டண்டங்களும் குற்ற மற்ற செல்வமும் படைகளும் உனக்கே முன்கொடுத்தருளிய அனுதிமலமுத் தனே குமரநாயகனுகத்திருவிளையாடல் செய்யத்தொடங்கினனென்றால் அவ னுல் அதுமாறிவிடுவதுமரிதாமோ. நாம்ஆயிரத்தெட்டண்டங்களும்பெற்றிருக் கின்றோமென் றிறுமாந்துபேசுகின்றனையே! அவனருள் சிறிதுபெறும்பேற்றை யுடையோர் பூதமைந்தினும் ஏனையதிறத்தினும் புறத்து மீதுமாமண்டமெவற் றினையு மரசாண்டிருப்பார்களே. ஆதியாகிய குடிலையும் ஐவகைப்பொறிகளும் சகலவேதங்களும் ஆகமவிதங்களும் அவற்றின்வேறுகவே சொல்லப்படுகின்ற சமஸ்த கலைகளும் அவ்வற்றி னுணர்ச்சியாகிய அறிவும் அக்குமரநாயகனது திருவுருவமேயாகும்; அவனுக்கு எங்கும் முகங்கள் எங்குங் கண்கள் எங்குஞ் செவிகள் எங்குங்கைகள் எங்குந்திருவடிகள் எங்கும் வடிவங்களாக அவைகள் எங்குமாய்ப்பொருந்தச் சண்முகத்தொருவனெழுந்தருளியிருப்பான். பிரமனே

முதலாகிய தேவர்களுக்கும்மறைகளுக்குமெல்லாமுதன்மைவாய்ந்திருக்கின்ற பிரணவமே அம் முருகப்பெருமானுடைய திருமுகமாறி லொன்றேயென்றால் அவனுடையபெருமையையாவரோயெடுத்துச்சொல்லவல்லவர் ? முக்கட்பெருமானும் பிரமனும்திருமாலும் திக்குப்பாலரும்சோமசூரியராக்கினிகளாகிய முச்சுடர்களும் முனிவர்களும் தேவர்களும் அவனேயாம் ; அவனே யாவர்க்கு மேலானவனுயு மிருக்கின்றனன். எல்லா உயிர்களுக்கும் இருவினைப்பயனையு மூட்டுகின்றவனுமவன்! அங்கவைகள்துலையொத்துக்கூடின் அவ்வுயிர்களுக்கு மேனிலைக்கதிபுரிகின்றவனு மவன், காட்டுவான் முதலாகிய வகைகளெல்லா மவன்? அவனே சிறுவனேபோலும் குரவனேபோலும் தினையினும் குறியனே போலும்நெடியனேபோலும் தோன்றுவான், முறைமையாக இன்னவண்ணம் வேறு பலவுருவங்கொண்டுமிருப்பான், ஆகையால் அக்கந்தப்பெருமான் திருவிளையாடலை யாவரோ முற்றுமறியவல்லவர் ? என்று பின்னு மவன்பெருமையைச் சொல்லத்தொடங்கினர்.

சிவபெருமானது திருவிளையாடலாகவே எழுந்தருளியிருக்கின்ற நமது சண்முகப்பெருமான் கட்டளையல்லது உனதுறவுமசையவேமாட்டாது,யாரே தான் அவனது ஒப்பிலாத வல்லமையைக் கடக்கவல்லவர் ! அவனது மாயை யிற்சார்ந்து மிகவுமயங்கினை ? அவனே எல்லாமாயு மல்லாமாயுமருவுருவமாயு மிவ்வண்ணம் பலவகையான வுருவமுங் கொள்ளுவான்,புதியனைப்போலும் பயிலுவான், ஆதியுமனாதியுமாயு மிருப்பான், அவனது பேருருவினுரோமத்தில் அளவில்லாத அண்டங்களுமுதிக்கும், அவனதுபெருமையை யாரறிந்தளக்கவல்லவர் ? அவனது உரோமத்திலுதிக்கும் அண்டங்களும் மீண்டு மொடுங்குங்காலத்தே அவனது வடிவத்திற் சென்று பொருந்தும். அந்த நிலைமையை " மைப்படியுங் கண்ணாளுந்தானுங்கச்சி மயானத்தான் வார்சடையானென்னி னல்லான், ஒப்புடையனல்ல னொருவனல்ல னோரூரனல்ல னுவமனில்லி,அப்படியு மந்நிறமு மவ்வண்ணமு மவனருளே கண்ணாகக் காணினல்லால், இப்படிய னிந்நிறமு மிவ்வண்ணமு மிவனிறைவ னென்றெழுதிக் காட்டொணாதே." என்றுபெரியாரும் பணித்திருக்கின்றமையால், அவனையல்லது வேறியாவர் கண்டறியவல்லவர் ? அவன்திருவுருவி னியல்பை 'காட்டுவித்தாலரொருவர் காணாதாரே காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக்காலே' என்றபடி, தேவரும் அச்சண்முகப்பெருமான் காட்டக்கண்டனர். எம்பெருமான் தேவர்கள் பொருட்டாக மேருமலையிற் காட்டியருளிய திருவுருவத்தை நீயுங்கண்டறியாய்போலும் ! அன்றுஅவன்கொண்ட பேருருவி னுரோமத்திற் றொத்திக்கொண்டிருக்கிற அண்டத்தொகுதிகளில்எங்கேயாம் நீயாண்டு வருகின்றோமென் றிறுமாப்புக்கொண்டிருக்கின்ற இவ்வாயிரத்தெட் டண்டங்களி னரசாட்சி ! இன்னு நீ யதையறியாமலேசிறுபாலகனென்றே சொல்லத் தொடங்கினை? எம்பெருமானே தேவர்களுடைய சிறையைத் தவிர்க்கவும் திருமாலே யயனே மற்றவமரரேகொண்ட துயரமியாவுந்தவிர்க்கவும் கொடியவரை யடர்த்து உலகினை நன்னெறியினடத்தவும் எழுந்தருளியிருக்கின்றான். எம்பெருமானுடைய திருக்கரத்திலேவிளங்கிக்கொண்டிருக்கின்றசெவ்வேலோ

நின் வாழ்நாளும் வன்மையும்வாழும் சுற்றமும்படைகளும் வான்ருெட விளங்கிப் புழுதியாலுயர்ந்த பெருமலையின் சூழலிற்புகுந்த ஊழி காற்றேபோனின்றழிக்கும். ஆகையால் இவற்றையறியாமல் தனக்கொருவரு மொப்பிலாதோங்கிய ஏகநாயகனுகிய முதல்வனைச் சிறுபாலகனென்றே சொல்லி இகழ்ச்சி செய்கின்றனை ; அதுபோகட்டும் ; நீ செய்த குற்றத்தையும் பொறுத்தோம்! என் கண்முன்னே அற்பமாகியசொற்களால் எமதுபெருமானையிகழ்ந்தனையே! அப்படி என்முன்னே யுரையாடிய நாவை அரைநொடியிலேதானே துணித்துன்னுயிரையும் வாங்கிவிடுவேன், அது என்னையேவிய இறைவனது கட்டளை யல்லாமையாலே அத்தனையும் பொறுத்திருக்கின்றேன், நீயோ எமது பிரானது வேற்படைக்குணவாவாய் ; இன்னுமோ ருறுதிமொழியைச் சொல்கின்றேன்,நீயும் உன்சுற்றமும் பிழைக்கவேண்டுமாயின் தேவர்களைச்சிறையை விடுத்துப் பகையை நீங்கி வாழென்று சொல்ல, அதைக்கேட்ட சூரபதுமன் மிகக் கோபங்கொண்டு நன்ருகவே பற்கள் சிறிதும்தோன்ருத மழலைச்சிறு பாலகன் விடுத்த தூதனென் றெண்ணியே உன்னை யுயிரொடும் விடுத்தேன் ; சிறிதும் பெயராமலே அவன்பெருமையைப் பின்னும் பேசிக்கொண்டே யிருக்கின்ருய்! அவன்வீரத்தையும் என்முன்னே புகழ்ந்துபேசுகின்ருய் ; கொஞ்சுகின்ற குதலைச் சொல்லையுடைய அக்குமரநாயகன் எப்பொருட்கு மேலாகிய பரம்பொருளேயாகட்டும்,எல்லா வண்டங்களிலும்சென்றுதேவரையெல்லாம் போர்செய்து வென்ற நானஞ்சுவேனே! நான்தேவர்களைக் கனவினும் விடுகின்றவனல்லன், ஒருபோதேனு நினைக்கவேண்டாம், அவன் பெருமிதம் பல சொல்லிமுடித்தாயே ; அதையெல்லாம் எனக்கெதிரிலிருந்தே ஒரு கணத்திற் காண்பேன் என்றுசொல்லிவிட்டுத் தன்னயலிலே நின்ற ஆயிரவரை நோக்கி நீங்கள் தூதனுக வந்த இவனுயிரை வாங்குதல் பழிக்கிடனும் என்பர், ஆகையால் விரைந்துபற்றிச் சிறையிடுவதே தகுதி ; நீங்கள் இனி இவனைப்பிடித்துச் சிறையிடுங்கோ ளென்ருன்.

அதைக்கேட்ட ஆயிரவரும் எரியென விழித்துப் பார்த்து நெருப்பைச் சூழ்கின்ற புகையேபோல அழகியபொன்னுசனத்தில் எழுந்தருளியிருக்கின்ற வீரவாகு தேவரை வளைந்து கொண்டனர். அவ்வாறுதன்னைச் சூழ்ந்த அவ்வாயிரவரையும் அவர்கள் முடிகளணிந்த சிகைக ளாயிரத்தையும் தன்னொரு கையாற்பிடித்து அவனது பெரிய சபையிலேயே நிலத்திலோங்கி யறைந்து கொன்றனர். அவ்வாயிரவரையும் அப்படியே அங்கொடிப்போதிற் கொன்று நின்று அச்சூரபதுமனை நோக்கி எமது பெருமானுகிய சண்முகப்பெருமான் திருக்கரத்திலேந்திய செவ்வேல் இனிஉன்னைக்கொல்வது நிச்சயமாகையால், நீயிறப்பதன்முன் ஐம்புலனும் விரும்பப் பலசுகங்களையும் அனுபவித்து அறிவு தெளிந்திருவென்று தானுந் தானெழுந்தருளி யிருந்த ஆசனத்துடன்மறைந்து போனுர். இதுகிடக்க ;

அவைபுகு படலம்

முற்றிற்று.

---

## சதமுகன் வதைப்படலம்.

அச்சூரபதுமனது சபையிலேயே அவ்வாயிரம் பேரையுங்கொன்று அவனது சபையினின்றும் போய்விட்ட பிறகு அவனே சதமுகனை நோக்கிச் சதமுகனே இங்கே சண்முகங் கொண்ட ஒருவனால் விடப்பட்ட தூதனொருவன் என்னாலேவப்பட்ட ஆயிரவரையும் என்கண்முன்னேதானே என் பராக்கிரம முழுதும் நிந்தனைசெய்து தன்னை யேவினனது மேன்மை பலவுஞ் சொல்லி அவனைச்சென்று சேர்வதற்கு ஆகாயமார்க்கமாகப் போகின்றான், இவன் நம்மாலேவிய வீரரை யழித்துப் போனானே யாயினும் நம்பால் தூதனாக வந்தமையால் அவனைக் கொல்லுதல் பழிக்கிடனாகும், அவனுடைய வல்லமையை யடக்கி அவனைப் பிடித்துக் கட்டிக்கொண்டு விரைவாக வருவதே கடனெனச் சொன்னான். அவனேசூல்கொண்ட மேகம்போலு நிறங்கொண்டசூரபதுமனது பாதங்களைத்தொழுது வணங்கிஅவனதுவிடைபெற்று நாற்கடல் வந்தடைந்தாலும் கெடுதியில்லாத ஊழிகாற்று ஊழித்தீ இவற்றினைசை தொடர்கின்ற காட்டுத்தீயேபோலச்சென்று எம்மருங்கும் இலக்கம் வீரர்கள் அநேக மாயுதங்களைத் தரித்துக்கொண்டு தன்னுடன் சூழ்ந்து வேகமாய்வர வீரவாகுதேவரை யடைந்து சொல்வானாயினன். அநேக காவலைக் கடந்துவருங்கள்வனே! உலகத்திலுள்ளாரெவரும் வியக்க எங்களிறைவனாகிய சூரபதுமன் முன்னேவந்து நின்றதல்லாமல் அவனையு மிகழ்ந்து சில வீரருயிரையும் கவர்ந்து போவதென்ன? நில்லு நில்லு உன்போர்த்திறமையை யழிப்பேன். இவ்வுலகத்தில் நீயெங்கே போயொளித்தாலும் நான் விட்டு விடுவேனோ! எனப் புறத்தேசென்று நெருங்கினான்.

அவ்வாறனுப்பியவுடனே வீரவாகுதேவரும் இச்சூரபதுமன் நமது சண்முகப்பெருமா னருளிச்செய் தனுப்பிய சொல்லையுங் கொள்ளாம லிகழ்ந்து என்னையும்பிடிக்க ஆயிரம்பேரையு மனுப்பினான்; நானே அவ்வாயிரம்பேரையும்கொன்று பெயரவே இதோ ஒரு வீரனை யனுப்பினான்; நானே இவனையும் கொன்று இந்நகரத்தினை யழிப்பேனென்று மதித்துச் சதமுகனென்பவனைப் பார்த்து சண்முகப்பெருமானுடைய உபய பாதங்களை மனத்திற் சிந்தித்துப் போர்செய்யத் தொடங்கி அவனையும் அவனொடும் வந்த இலக்கம்பேரையு மெதிர்ந்தனர். அவர்களோ தங்கள் கையிலுள்ள வில், வாள், வேல முதலிய ஆயுதங்களால் போர்செய்தனர்; அவருள் இலக்கம்பேரையும் சூளிகையொன்றாற் கொன்றனர். எஞ்சிநின்ற சதமுகனே தன் வில்லைக்கொண்டு போர்செய்தான்; அவனதுவில்லைப்பறித்து முறித்தெறிந்தனர். அதைக்கண்ட சதமுகன் வீரவாகுதேவரைப் பிடிக்கத்துணிந்தான்; அவனைத் தமது புயங்கொண்டு தாக்கிப் பூமியில் விழும்படி தள்ளி முயலகனையும் அந்தகாசுரனையும் கயாசுரனையும் தன்சேவடியா லூன்றிய பரமசிவன்போல் விளங்கி அவனை நொடிப்போதி விடறிக்கொன்றதன்றி மிக்ககோபங்கொண்டு நமதுசண்முகப்பெருமான் திருவாக்கையிகழ்ந்த இச்சூரபதுமனுடைய சபையையும்அழித்து இந்நகரத்தையு மழிப்பேனென்று சிந்தித்தார்.

சதமுகன் வதைப்படலம்

முற்றிற்று.

---

## காவலாளர் வதைப்படலம்.

வீரவாகுதேவரோ குமரநாயகனுடைய சிபாதங்களை யெண்ணிப் படி முழுது மளந்த திருமாலேபோல நெடிய பேருருக்கொண்டு நின்றனர். இவ்வாறு பேருருக் கொண்டகாலத்தில் அவருடைய புயங்களோ திசைகளை யளந்தன, நீண்ட முடிகளோ விண்ணையளந்தன, பாதங்களோ பூமியை யளந்தன, இவ்வாறு பேருருக்கொண்டு நின்றதனால் பூமியைத்தாங்கிய நாகராசரும் ஆதிகூர்மரும் அப்பாரஞ்சுமக்காமல் வருந்தினார்கள். வீரவாகுதேவரோசண்முகப் பெருமானுடைய உபய பாதங்களை யெண்ணுந்தோறும் மாகிலங்கீண்டு சமுத்திரசலம் அப்பிளப்பின் வழியே வந்துகொண்டிருந்தது. அங்ஙனே யானை தேர் குதிரைகாலாள்முதலியசேனைகளைக்கையரிக்கொண்டு நதிகளடித்துக்கொண்டு போவதேபோல நகரமுழுதுஞ்சென்றது. இவ்வாறு வீரவாகுதேவர் கொண்ட பேருருவைக்கண்ட அந்நகரமாந்தர் யாவரும் கையை மறித்து அதிசயமடைந்தனர். அக்கொலுமண்டபத்திலிருந்த காவலாளரெல்லாம் இதோ ஒரு வஞ்சகனடைந்தானென்று கூவி நெருங்கினர். அப்படிநெருங்கிய காவலாளர் வீரவாகு தேவருக்கஞ்சி இவனொடுபோர்செய்யாமற்போவோமாயின் நம்மரசனெம்மை வருத்துவானென்றுநினைத்து எழு தோமரம் பிண்டிபாலம் கதை முதலிய ஆயுதங்களைக்கொண்டெறிந்தனர். வீரவாகுதேவரோ சிவந்த விழுது வீழ்ந்துபடர்ந்தஆலமரமேபோலத் தமது திருமேனியில் உதிரம்பாயக்கண் டதிககோபங்கொண்டுநான்சிறந்த வீரர்மேலல்லது இவ்வசட்டருடன் போர்செய்ய வாளெடுப்பது தகுதியன்றென்றே துணிந்து அச்சேனை முழுவதையும் கடலைக் கலக்கிய மந்தரமலையாகிய மத்தேபோலச் சிலரைமிதித்தும் கொதித்தும் படுத்தும் நசுக்கியும் புதைத்தும் தகர்த்தும் துகைத்தும் உதைத்தும் குத்தியும் உருட்டியும் புரட்டியும் சிதைத்தும் இவ்வாறு மானினங்கூடி யிளைத்துவந்தபோது சிங்கவேறு புகுந்துகொன்றாற்போல அவர்களையெல்லாங் கொன்று குவித்து நின்றார்.

காவலாளர் வதைப்படலம்
முற்றிற்று.

---

## நகரழி படலம்.

இங்ஙனம் ஐம்பதுவெள்ளம் காவலாளரையும் கொன்றுசென்று தன்னெதிரில் ஐஞ்ஞூறுயோசனை யகலமுள்ளதாய் ஆயிரம்யோசனை நீண்டதாயுள்ள வேர்மொன்றைக்கண்டு அதனைப் பிடுங்கி ஒரு கையி லேந்திக்கொண்டு அச்சூரபதுமனது நல்லொழுக்கமகன்ற கொலுமண்டபத்தின்மேல் விட்டெறிந்தார். அது அக் கொலுமண்டபத்தைச் சிதைத்துவிட்டது. அங்குள்ளார் அனைவரும் அம்மண்டபஞ் சிதையவே சிலர் ஓடினர், சிலர் உடம்பில் ஊறுபாடடைந்தனர், சிலர் இறந்துபட்டனர், சிலர் மெலிந்தனர், சிலர் புலம்பிக்கொண்டிருந்தனர். இவ்வாறு அம்மண்டபம் சிதையக்கண்ட சூரபதுமன் தக்கனேபோல மெய்யுணர்ச்சிகெட்டுத் தன்னருகேயிருந்த ஆயிரந்தோளும் ஐஞ்ஞூறு முகமுங் கொண்ட ஆயிரம்பேரைப்பார்த்து அக்குமரநாயகன் விடுத்த

தூதன் வேரமொன்றைப் பிடுங்கி நமதுகொலுமண்டபத்தின்மேலெறிந்தான், அது நமதுமண்டபத்திற் சிறிதிடந் தவிர முற்றுமழித்துவிட்டது, நமக்குப்பழியும்வந்து சேர்ந்தது, நமது புகழு மழிந்தது, அவனைக் கொல்லுவதோ நமக்கு வெற்றியுமன்று, அவனை நெருங்கி அரும்போர்செய்தேனும் கொல்லாமற்பிடித்துக்கொண்டுவந்து என்கண்முன்னே விடுங்கள். நானே அவனை முன்னே நம் மாற்சிறையிடப்பட்டதேவர்களுடன்சிறையிடுகின்றேனென்றான். அவர்களோ இறைவனே எங்கள்விண்ணப்பத்தைக்கேட்டருளும்! நமதுபகைவனால் அனுப்பப்பட்ட தூதனைக் கொல்லத்துணிந்தோமேனும் உம்முடைய ஆக்கினையையெண்ணிப் பயந்தே இதுவரையிலும் தாமதித்தோம், இனி உமது கட்டளையின்படி செய்கின்றோமென்றார்கள். அதைக்கேட்டு மகிழ்ந்து அவர்களை வீரவாகுதேவர்மேல் விடுக்க அவர்களும் வீரவாகு தேவர்முன்னே சென்றார்கள். அப்போது வீரவாகுதேவரோ அம்மண்டபத்தை யழித்ததுமல்லாமல் அம்மகேந்திரநகரையுமழித்துத்தன்னைச்சூழவருவோருடைய மாளிகைகளையு மழிப்பேனென்று மனங்கொண்டுசோலைகள், செய்குன்றுகள், தெற்றிகள், மண்டபங்கள், கோபுரங்கள் முதலியவற்றைப் பாழாக்கி; அகழியையும் தூர்த்துவிட்டனர். மேருமலை அதிர்ந்தது, அதைச்சூழ்ந்த எண்டிசாசலமும் குலுங்கின, நாகலோகமும்கலங்கினது. கடலும் பூமியும் கலங்கின, உயிர்களெல்லாம் வருந்தின, திசையானைகளு மோட்டெடுத்தன, ஒருவராலு முடிவடையப்படாத சூரபதுமனுடைய வளமுழுதுமேயல்லது அந்நகரமுழுது மழிந்தது; அப்போது மாடவீதிக ளிடிந்துபோயின, சோலைகளு மழிந்தன, கோபுரங்களெல்லாம் பொடிப் பொடியாயின, மதில்களெல்லா மழிந்துபோயின, மண்டபங்களும் கோபுரங்களும் வேரங்களும் மதில்களும் மாடகூடங்களும் மனைகளும் இடிந்துபோய் அவற்றாலுண்டான புழுதி விண் மண் முதலிய இடமெல்லாம் எங்கேபார்த்தாலும் செல்வத்தின் மயமாய்ப் பொன்னுலகமென்றே சொல்லச்சிறந்தது. இவ்வாறு அம்மகேந்திரநகரம் தகர்ந்து விழ அந்நகரத்தினிடத்தே வசிக்கின்ற சனங்களுடைய ஓசையோகடையுககாளில் விண்ணும்அண்டகடாகமு முடைந்து அழியக்கண் டுயிர்கள் பேரொலிசெய்வதுபோலவு மிருந்தது. இவ்வாறு அந்நகரமுழுது மழியவே முன்னைவளமனைத்தும் கெட்டொழிந்தது.

நகரழிபடலம்
முற்றிற்று.

## சகத்திரவாகுகள் வதைப்படலம்.

ஆயிரந் தோளையுடைய அவ்வீரர்கள் சூரமதுனு லனுப்பப்பட்டு எழு, சூலம், வில், நாஞ்சில், கழுக்கடை, வளை, கப்பணம், வாள், மழு, கதை, சக்கரம், வச்சிரமுதலிய படைகளை யேந்தி உலகிலுள்ள எல்லா உயிர்களையும் வாயிற்பெய்தாலும் போதாத வயிற்றினையுடையராய் வீரவாகுதேவரையடைந்தனர். அதைக்கண்ட வீரவாகுதேவர் முப்புரம் பொடித்த முன்னவனே போலக் கோபநகை நகைத்து மேலோங்கிய மந்தரமலையென நின்று வான

ளாவியதோர் மராமரங் கையிற்கொண்டு அவர்களோடும் போர் செய்யத் தொடங்க, அவர்களும் அவருடன் போர்செய்யத் தங்கள் கையிலுள்ள படைக்கலங்கள்யாவு மெறிந்தார்கள். வீரவாகு தேவரோ அவர்கள் விடுத்த ஆயுதங்களையெல்லாம் வெறுந்துகளாக்கி அவர்களையெல்லாம் அம்மராமரங் கொண்டேயழித்துக் கொல்லத்தொடங்கிச்சிலரைத் தலைகளைக் கிழித்தும் நெற்றியைப்பிளந்தும் பற்களையிழப்பித்தும் காசியையறுத்தும் கழித்தனர். இவ்வாறு அவர் அவ்வாயிரம்பேரையு மழித்துக்கொன்று தன்னந்தனியனாய் நின்றனர்.

சகத்திரவாகுகள் வதைப்படலம்

முற்றிற்று.

---

## வச்சிரவாகு வதைப்படலம்.

இவ்வாறு சூரபதுமனு லனுப்பப்பட்ட சகத்திரவாகுளாவார் போர் செய்து தம்வலிகெட் டுயிரழிந்துபோதலும், அதனை விரைந்தோடியறிவிக்க ஆகாயமார்க்கமாகச் சென்ற தூதர்கள் தங்க ளரசனிடமடைந்து தேவரீர் அனுப்பிய அவ்வீரரெல்லாம் அத்தூதன் மராமரங்கொண்டே புடைக்க இறந்துபட்டனரென்று நடந்தசெய்தியை யறிவித்தனர். அதைக்கேட்ட சூரபதுமன் மிக்க துயரங்கொண்டு உமாதேவி யளித்த சிறுமகனாகிய அக்குமரநாயகனேவிய தூதனொருவன் என்முன்னேவந்தென்னை அவமானஞ்செய்து சென்றதன்றி, அநேகவீரரையுங்கொன்று இன்னமும் போகாமலுமிருக்கின்றான்,நமது வல்லமை நன்றாயிருக்கின்றதே யென்று சிரித்துச்சொன்னான் இப்படிசொன்ன சூரபதுமனை அடிவணங்கி பத்துமுகம்படைத்த வச்சிரவாகுவென்பவன் தேவரீர்! அற்பனாகிய ஒருதூதுவன்பொருட்டாக இவ்வகையாகச்சொல்லவடுக்குமோ! ஐயனே நானேசென்று அவனை வெற்றிகொண்டு அவனைக் கைப்பிடியாகப்பிடித்து வருகின்றேன்,என் திராணியைப் பாருமென்றான்;அதற்கிசைந்த சூரபதுமன் நீயேபோய்ச் சயங்கொண்டு வாவென்று கட்டளையிட்டான். உடனே தந்தையிடத்தேவிடைபெற்று வச்சிரவாகுஆயுதசாலையிற்புகுந்து வச்சிரக்கவசமணிந்து வீரபட்டந்தரித்து அம்பறாத் தூணிகொண்டு தும்பைமலர்மாலைவேய்ந்து வில்லைக்கையிலேந்தி, பிற ஆயுதங்களையுமெடுத்துக்கொண்டு போர்க்கோலங்கொண்டு புறப்பட்டுத் தன்னொடும் துணையாகவந்தாரைநோக்கி எமது பிதாவோ அக்குமரநாயகனேவியதூதனைக்கைப்பிடியாகப் பிடித்துவரக் கட்டளையிட்டிருக்கின்றனன். அவனைப் போரில் வென்றுதாம்பினாற் பிணித்துக் கட்டிக்கொண்டே வரவேண்டும், நீங்களும் போர்க்குவரச் சித்தமாகுங்க ளென்றான். அப்படியே வருவோமென்று அவர்கள் போர்க்கோலங் கொண்டு தன்னைத்தொடர அவர்களுடனும் போய்ப் போர்க்களஞ்சென்றான்.

அதைக்கண்ட வீரவாகுதேவரும் இங்கே வருகின்றவனே சூரபதுமனேயல்லன், ஆயின் அவனது மக்களி லொருவனுகவே தோன்றுகின்ருன், இவனைச் சேனையுடன்கொன்று இன்று மாலைப்போதுக்குள்ளாகச் செந்திலிற் சென்று நமது குமரநாயகனைக் காண்பதே நலம், அவ்வாறு செய்யேனெனின் நான் அக்குமரநாயகனடித்தொண்டனேவென்று சொல்லிக்கொண்டே நமது சண்முகங்கொண்ட சதுரப்பெருமானுடைய உபயபாத தாமரைமலரையுந் தியானித்துக்கொண்டு போர்செய்ய முயன்று அண்டமுந் திசையும் வானுங் குலுங்கும்படித்தோளொடுந் தோளைத் தட்டிக்கொண்டு ஆரவாரித்தனர். இவ்வாறு ஆரவாரிக்கக்கேட்ட தோராளிகளும் யானைவீரரும் குதிரை வீரருங் காலாட்களும் உடம்பு வேர்த்துச் சிந்தை கலங்கி இது சகல சராசரங்களு மழிய வூழிகாலத்தில் உருத்திரமூர்த்தியால் தன்னந்தனிநின்று ஆரவாரிக்கும் ஆரவாரமோ! அல்லாவிட்டால்கடல்களுக்கரசனுடைய ஆரவாரமோ! அண்டங்க ணெக்குவிட்டதனு லுண்டாகிய ஆரவாரமோ! எழுகடலு முடைந் தொன்றுபட்டதனு லுண்டாகிய வாரவாரமோ! வென்று சொல்லிக்கொண் டார்கள்.

இதை வச்சிரவாகு கேட் டுள்ளம் வருந்தி ஈரேழு பதினு லுலகத்திலும் இப்படிப்பட்ட பேரொலி நான் ஒருநாளுங் கேட்டதேயில்லை, இவ்வகைச் சத்தம் யாது? ஆராயுங்களென்று தன்னருகேயிருந்தவனைநோக்கிச்சொல்ல; அப்போது அவன் தேரைநடத்தும் சாரதியாகிய விசயனென்பவன் சொல்வானுயினன். ஐயனே! இது உமது தேரிற்கட்டிய குதிரையை நடத்தும் சாரதி சொல்லும் சொல்லென்றுஎன்சொல்லை அங்கீகரியாதிருக்கவேண்டாம்;அதை இனிமேற்காணலாம்! இதுவே அருட்கடலாகிய குமரநாயகன் அளவில்லாத சேனையுடனேபோர்செய்ய வருவதை நாடி முன்னே தூதனுகவிடப்பட்டவன் செய்தபேரொலியே யாகுமென்று சொல்லிமுடித்தான். இது தூதனுகவந்தவன்செய்தஆரவாரமென்றுசொல்லி அவன்வாய்மூடுமுன்னேகோபங்கொண்டு கண்களில் தீப்பொறியெழப் பெருமூச்செறிந்து அதட்டி நானேபோய் இந்த க்ஷணமே அவன் வல்லபத்தைக்கெடுத்து அவனையும் பிடித்துக்கொண்டுவந்து என்தந்தையினுடைய சமுகத்திலே விடுகிறேன்பார், இது மெய்யாமென்றே சொன்னன். இப்படிச்சொல்லிக்கொண்டுபோகையில்சேனைகளெல்லாம் அவ்வீரவாகுதேவரைப்போய்ச் சக்கராகாரமாய்ச் சூழ்ந்துகொண்டன; சிலர் தங்கள்கையிலிருந்த வில்லை வளைத்துப்பாணவருஷம் பொழிந்தனர்,சிலர் நாஞ்சிலெறிந்தனர், சிலர் தண்டும் சூலமும் வீசினர்கள், சிலர் மழுப்படை யெறிந்தார்கள், சிலர் பிண்டிபாலத்தைத் தூர்த்தார்கள், சிலர் வேலை யேவினர், சிலர் சக்கரத்தையெடுத் தெறிந்தனர். இதைக்கண்ட வீரவாகுதேவரும் ஆயிரமாயிரம் அவுணர்களை யொருசேரப்பிடித்து அவர் குடுமியைத் தமது கையாற்பிடித்துப் பூமிமேலும் மலைமேலு மெடுத்தெறிவர். சிலரைத் தமது பாதத்தால் மிதித்துழக்குவர், சிலரை யுதைத்துலாவுவர், சிலரை யடித்துக் கொல்வர், சிலரை அம்மியிலரைப்பதுபோ லரைத் துயிர்நீக்குவர்; இவ்வாறு போர்செய்யவே தேர்களழிந்தன, குதிரைக ளழிந்தன, யானைக ளழிந்தன;

தானவர்கள் போரும்புகழும் கெட்டொழிந்தன. வச்சிரவாகுவுடன் வந்த பல அவுணவீரருடைய குமரர்கள் தம்முடன்வந்த நாற்படையுடனே வீரவாகு தேவருடன் போர்செய்யத் தொடங்கினார்கள்.

அதைக்கண்ட வீரவாகுதேவரும் தம்மை யெதிர்ந்தாரை யெல்லாம் தங்கையிற் பிடித்த ஆலமரமாகிய தண்டினாற் பொருது நின்று சின்னாபின்னப்படுத்திச் சாரி வந்தார். இத்தனைபேரு மாண்டதைக் கண்ட வச்சிரவாகுவும் நமது சேனை யிறந்துபட்ட தல்லவா வென்றே மனம்வருந்தி மிக்க கோபமேற்கொண்டு தன் தேர்ச்சாரதியைப் பார்த்து நமது தேரை அத்தூதன்முன்னே செலுத்த வேண்டுகின்றே னென்று சொல்ல, அச்சாரதியும் அப்படியே வச்சிரவாகுவினுடைய தேரைவிரைவாக வீரவாகுதேவர்முன்னே யோட்டிக் கொண்டுபோய் விட்டான். அதைக்கண்ட வீரவாகு தேவரும் மிகவு மனமகிழ்ச்சியடைந்து முழுதுலகளந்த நெடிய திருமாலைப்பார்க்கிலும் மிக நீண்ட உருவங்கொண்டு தம்முடைய பாதங்கள் பூமியை யளக்கவும், புயங்கள் ஆகாயமுழுதுஞ்சென்று நெருங்கவும், முடிகடந்துபோய் அண்டகோளகையை நெருங்கி முட்டவும், தாம் வடிவங்கொண்ட தன்மையைப் பார்த்து ஆதிசேஷன் மதிமயங்கவும், காலடி பெயர்த்துவைப்பதனால் பூமி வெடிக்கவும், இடியும் நாணங்கொள்ளும்படி யாரவாரித்து, முன்னை நாளில் புரமடங்கலும் செயங்கொண்ட பாணமே போன்றானும் இரணியனுடைய வரமடங்கலும் உதிரமடங்கலும் வாணாளுட னுரமடங்கலுமுண்ணத் தநியினிடத்தே தோன்றிய நரசிங்கமூர்த்தியும் பயப்பட நகைத்தார் ; அப்போது வச்சிரவாகு மனங்கலங்கித் தன் முடிகளின் வரிசைகளை யசைத்து நெருப்பெழ விழித்துப் பார்த்துக்கோபங்கொண்டு சொல்லத் தொடங்கினான்.

உன் வீரமும், ஆண்மையும், பேரும், போராற்றலும், நீ பெற்ற சீரும், நீ கற்ற வித்தையும், நீ செய்யும் போரும் நன்று ஆகையால், உனக்கிவ்வாரவாரம் தக்கதே ! நீயோ உன்னுடன்பொரவந்த வீரரையெல்லாம் கொன்றோமென்றெண்ணங் கொண்டிருக்கின்றாய் ! அதைவிட்டுவிடு ; உன்வல்லபத்தை யழித்து என்தந்தையினிடத்தே உன்னைக் கைப்பிடியாகப் பிடித்துக்கொண்டு போய் விடுகிறேனென்று சொன்னான். அப்படி சொல்லக்கேட்ட வீரவாகு தேவரும் உன்னை நான் வெல்ல முயலுகின்றேன், நீயுமென்னை வெல்ல முயலவேண்டும் ; நாமிருவரும் அதைச் சொல்லி நிற்பதினால் ஒருபயனுமில்லை,விரைந்து போர்செய், பின்னே வெல்வார் வெல்லுகவென்று சொல்வதற்குமுன்னே வச்சிரவாகுவும் தன்கையில் உள்ள வில்லை வளைத்து நாணேற்றிட்டு ஆயிரம் பாணங்களைப் பிரயோகஞ் செய்தான். அந்தப் பாணங்கள் வீரவாகு தேவர்மேல் வரக்கண்டு அவர்தமது கையால் அவைகளைப் பிடித்துப் பொடிப்பொடியாய்ப் போகப் பிசைந்து விட்டார். வச்சிரவாகுவோ, தான் செலுத்திய பாணங்கள் பொடிப்பொடியாகவே, கோபங் கொண்டு தன் வில்லை மீண்டும் வளைத்து இலவடிவத்தையுடைய பாணங்கள் பதினாயிரம் அவர் மார்பே இலக்காக நோக்கிவிட்டான். அவரோமுன்னே தம்முடன் போர்செய்தார் கையினின்றும் விழுந்திருந்த முசலமொன்றையெடுத்து அவை

கள் திசைதோறுஞ் சிதறிப்போகும்படி செய்ய,பின்னும் பதினாயிரம் பாணங் களை விடுத்து அவர் பிடித்திருந்த முசலத்தைப் பொடிப் பொடியாகச் செய்த தல்லாமல் தலையி லாயிரம் கண்டத்திலாயிரம் தோளிலாயிரம் மார்பிலாயிரம் தாளிலாயிரமாகப் பாணங்களைத் தூண்டினான். வீரவாகு தேவரோ தன் கையிலிருந்த முசலமுறிந்து போகத் தன்மேனி முழுதும் பாணங்கள் தைப் பதனாற் சிறிது நேரமயர்ந்து பின்பு விரைந்துபோய் அவன் தேரைக் காலா லுதைத்துத் தள்ளினார். அவ்வுதையால் அத்தேரிற் கட்டிய குதிரைகளு மழிந்து தேர்ச்சாரதியு மிறந்துபோய்த் தேரும்பட்டது கண்டு, வச்சிரவாகு வேறொரு தேரிலேறி வீரவாகு தேவர்மேல் ஆயிரம் பாணங்களை அவர் தெற்றியே யிலக்காக விட்டான். இவ்வாறு அவன் விடக்கண்ட வீரவாகுதேவர் தங்கையால் அவனேறியிருந்த தேருடன் அவனை ஆகாயமார்க்கத்தில்விட் டெறிந்ததுமல்லாமல் அங்கேயிருந்த தேர்களை யெல்லாம் உதைத்துச் சின்ன பின்னப்படுத்திவிட்டனர். வச்சிரவாகுவோ பூமிக் கிலட்சம் யோசனைதூரம் வரையும் ஆகாய மார்க்கத்திற்சென்று பின்னழிகின்ற தேருடனே போர்க் களத்தில்வந்து விழுந்தான். அப்படி விழுந்தும் தன்கையிலிருந்த வில்லை வளை க்கவெண்ணவே,அவ்வில்லை வலிதுபற்றிவீரவாகுதேவர் முறித்துத்தள்ளினார். அதைக்கண்ட வச்சிரவாகுவும் மிக்க கோபங்கொண்டு தன்கையில் வாளைக் கொண்டு போர்செய்யும்படி வர, வீரவாகு தேவரும் தம்முடைய இடையிற் கட்டியிருந்த வாளையேந்தி அவன்முன்னேசென்று அதைத் தன் வாளால் விலக்கி அவன் வாளேந்திய கையையறுத்துத் தள்ளினார். தன் கைசிதையக் கண்ட வச்சிரவாகு வேறொரு கையில் தண்டு கொண்டெறிய ; அதையும் வெட்டித்தள்ளி அவனுடைய பத்துத் தலைகளையுங் கொய்து நீக்கினார். இதைக்கண்ட அவுணர்கள் மிகவும் பயந்து அழுதுகொண்டே திசைதோறு மோடிப்போனார்கள். சூரியனோ வச்சிரவாகு இறந்தது கண்டு இங்கே சந் தோஷத்தால்நின்று கொண்டிருப்பேனாயின் சூரபதுமன் கேட்டால் என்ன கேடு நேர்ந்துவிடுமோ வென்று நினைத்து மறைந்துகொள்பவன் போலவே அஸ்தமான மலையைச் சேர்ந்தான். இது நிற்க ;

வச்சிரவாகு வதைப்படலம்

முற்றிற்று.

---

## யாளிமுகன் வதைப்படலம்.

சூரபதுமனுடைய மகனாகிய வச்சிரவாகு இறந்ததும் தன்னொடு போர் செய்யவருவாரில்லாமையும் அவனுடன்வந்தசேனைமுழுதும் இறந்துபட்டதும் கண்டு வீரவாகுதேவர் பின் வருமாறெண்ணுவா ராயினர். எமது பெருமா னாகிய சண்முகத் தொருவனை நிந்தனைசெய்த இச்சூரபதுமனது மகேந்திர நகரத்தையு மழித்தேன், என்னோடெதிர்ந்த சிலவீரரையும் கொன்று குவித் தே என்கோபமுஞ் சிறிது தணிந்தேன்,என்னோடும்போர்செய்ய யாரும்வரா திருக்கின்றனர், சூரியனோ மேற்கடலிற்சென்று அஸ்தமான மலையையடைந்

தான், மாலைக்காலமும் வந்து விட்டது, தருமத்தின்வழியே சிறிதும் நடவாது யாவருக்கும் துன்பஞ் செய்பவராகிய அவுணர்கள் வசிக்கும் இந்நகரினிடத்தே தூதனாகவே வந்த யான் இம்மாலைவரையும் எமது சண்முகத்தெய்வமணியை மறக்கலாமோ! நாம் தேவர்கள் துன்பத்தைத் தீர்ப்பதற்காக இவ்விடத்தி னின்றும் நமது சரவணப் பெருமான் சந்நிதானத்திற்குச் செல்வதுசிதமெனத் துணிந்து அந்நகரைவிட்டுக் காற்றேபோலவும் கனலேபோலவும், காலனே போலவும் கொடுங்கூற்றேபோலவும் வீரவாகுதேவர் அவ்வீதிகளின் வழியாகச் சென்றார். அவர் அவ்வீதி வழியாகச் செல்லக்கண்ட அவுணர்கள் இவனோ யமனோ போன்றவன், இவனை நெருங்க வேண்டாம், உங்களைக் கொன்றே விடுவானென்றுசொல்லிக்கொண்டே யோட்டெடுத்துப்போயினர். இவ்வாறு அவுணர்களெல்லாம் ஓடிப்போக அவ்வீதிகளைக் கடந்து கடைவீதிகளையுந் தாண்டி மகேந்திரநகரையும் கடந்துபோய்; ஆகாய மார்க்கமாய்வழிக் கொண்டுவிரைந்துசென்று முருகப்பெருமானைத் துதித்துக்கொண்டே இலங்காநகரத்தின் வடபாலடைந்தார். அப்போது அதன் வடதிசையில் காவல் செய்துகொண் டிருந்தவனும் ஆயிரமுகமும் இரண்டாயிரங் கைகளுமுடையவனும், யமபுரத்தின் வாயில்களைப் போன்ற வாயை யுடையவனும், பல வாயுதங்களைத் தரித்தவனும், ஊழித்தீப்போன்ற கண்களையுடையவனும், கருணையென்பதே சிறிதேனு முள்ளத்தில் இருக்கப் பெறாதவனும், பல பாதகங்களே செய்து பழகினவனும், வாள்வலி பெற்றவனுமாகிய யாளிமுகனென்று சொல்லப்படுபவன், தான் சூரபதுமனைத் தெரிசிக்கச்சென்று பின் தன்னகரத்தை மீண்டுமடைந்து தன்மகனாகிய வீரசிங்க னிறந்தது கேட்டு மிகமனம் வருந்தியிருப்பவனாதலால், மிகவேகமாய்த்தன்னந்தனியே இவர்வருவதுகண்டு தன்னருகேயிருந்தாரை நோக்கி ஆகாய மார்க்கமாய்த் தன்னந்தனியே வருகின்றானே இவனொன்று கேட்க, அவர்கள்நடந்ததை முழுதும் சவிஸ்தாரமாய்ச் சொல்லினார்கள்.

அதைக்கேட்டயாளிமுகன் மிக்ககோபங்கொண்டு தன்னொடும் சிலவீரர்கள் தொடர்ந்துவர வாளை யேந்திக்கொண்டு வீரவாகுதேவரை யெதிர்ந்து போர்செய்யத்தொடங்கினான். அவனைச் சேனைகளும் போர்செய்யச் சூழ்ந்துகொண்டு பலபடைகளையு மெறிந்தன. வீரவாகு தேவரும் தமது கையில் வாளையேந்தி அச்சேனைக ளத்தனையும் அழித்து விட்டனர். அதைக்கண்ட யாளிமுகன் தன்னாயிரங் கைகளாலும் யுகமுடிவில் தோன்றும் இடியேபோல் அடித்தான்; வீரவாகு தேவரும் தம்மையடித்த அக்கைகளாயிரங்களையும் வாளினால் துண்டமாக்க, மற்ற ஆயிரங்கைகளால் மலைகளையெல்லாம் பிடுங்கியெறிந்தான்; அவைகள் வீரவாகுதேவர் மேற்பட்டுப் பொடிப்பொடியாயின; வீரவாகுதேவரும் மற்ற கைகளாயிரத்தையும் தமது வாள்கொண்டேகுறைத்துத் தள்ளினார். பின்பு யாளிமுகன் தன் துதிக்கை கொண்டு வீரவாகு தேவரைப் பற்றும்படி தொடங்க, அவனது ஆயிரந்தலைகளையு மறுத்துத் தள்ளினார்.

யாளிமுகன் வதைப்படலம்

முற்றிற்று.

## வீரவாகுதேவர் மீட்சிப்படலம்.

அந்த யாளிமுகனைக் கொன்ற பின்னர், வீரவாகு தேவரும் தமது வாளை யுறையிலிட்டு இலங்கையைக் கடந்து கந்தமாதனத்துடன் கடலையுந் தாண்டித் திருச்செந்தூரை யடைந்தார். இவர் திருச்செந்தூரை யடையக் கண்டபோது பூதகணங்கள் சந்திரனைக்கண்ட கடலைப்போல் ஆரவாரித்தன, பாரிடவீரரும் வீரவாகுதேவரை நெருங்கித் தமது கைகளைக்கூப்பி வணங்கி மார்பொடு மார்பு பொருந்தத் தழுவிக்கொண்டு அன்பால் மனமுருகி நின்றூர்கள். வீரவாகுதேவரும் அவர்களைத் தாமும் தழுவிக்கொண்டு நான்மகேந்திர நகரை யடைந்த பாவத்தை உங்களைக்கண்டதனுல் நீங்கினேனென்று பேரன்பால் உபசாரவார்த்தைகளைச் சொல்லிக்கொண்டே தம்மைவந்து வணங்கிய இலக்கத் தொன்பதின்மரையும் மார்புறத் தழுவிப் பின்பு அவர்களுடனே குமரநாயகன் எழுந்தருளிய கோயிலை யடைந்தார். திருமால் பிரம னிந்திரன் முதலிய தேவர்கள் தம்மைப் புடைசூழ்ந்திருக்கக் குமரநாயகன் எழுந்தருளி யிருந்த கோலத்தைக்கண்டு மனமு மென்பும் அழலிடு மெழுகேபோலுருகிக் கண்களினின்றும் இன்பக் கண்ணீர் பெருக விதிர்விதிர்ப் பெய்தி உடல் முழுதும் மயிர் பொடிப்பக் குமரநாயகனது சேவடிகளை மும்முறை வலம்வந்து வணங்கி நின்றூர். எம்மையுடைய பெருமானே வீரவாகுதேவரை நோக்கி நீ மகேந்திர நகரை யடைந்து மீண்டதைச் சொல்ல வேண்டுமென்று கேட்க, வீரவாகுதேவரும் தேவர்களைச் சிறைவிடுதலை யேற்றுக்கொள்ளாமையாற் போர்க்குச் செல்வதே கடனென்றுஞ் சொல்ல, சர்வபரிபூரணராய் அனைத்து முழுதொருங் குணர்ந்த முத்துக்குமாரப்பெருமானே, நீ அங்கேசெய்தசெய்கை யொன்றுஞ் சொல்லாமலிருக்கின்றனையே! அதைச் சொல்லவேண்டுமென்று கேட்க, யான் தேவரீரது திருவடித் தியான பலத்தாலேயே என்னை யெதிர்ந் தாரையெல்லாம் வெற்றிகொண்டு மீண்டேனென்று சொல்லி முடித்தார்.

குமரநாயகனே பிரமன்மா லிந்திரன் முதலிய தேவர்கள் முகத்தைப் பார்த்தருளி நீ தேவர்களையிட்ட சிறைவிடுத்துப் பிழையென்று தூதுவிடுத் தறிவித்தோம், அவன் அதைச்சிறிதும் மேற்கொள்ளாமலிருக்கின்றான், இனி அவனைப்படுப்பதேவிதியாகையால், நாம் அவனொடும் போர்செய்ய நாளையே மகேந்திரநகருக் கெழுந்தருளுகின்றோ மென்று திருவாய் மலர்ந்தருளினர். சண்முகங்கொண்ட தானு இவ்வாறுதிருவாய்மலர்ந்தருளக்கேட்டுத் தேவர்களெல்லாம் மிகமகிழ்ச்சியடைந்தனர். வீரவாகுதேவரும் இந்திரனுக்குச் சயந்தன் முதலானோர் செய்தியு மற்றையவும் விரித்துச்சொல்லி அவன் மனத்தையும் தேற்றினர். இது கிடக்க;

வீரவாகுமீட்சிப்படலம்.

முற்றிற்று.

---

## சூரனகர்புரிபடலம்.

வீரவாகுதேவர் வச்சிரவாகுவைக் கொன்றமையும் அவர் மீண்டமையும் சூரபதுமனிடஞ்சென்று தூதுவ ரறிவிக்கக்கேட்டுத் துக்கசாகரத்தி லழுந்திக் கண்ணினிடத்திலே துன்பக்கண்ணீர்பொழியப் புத்திரசோபத்தால் வருந்தி யழுதிரங்கியிருந்தான். அவன் மனைவியாகிய பதுமகோமளையுங்கேட்டு மலரை முடித்த கூந்தலவிழ்ந் தலையக் கொங்கைமேற்புடைத்து அழுதுவீழ்ந்தோய்ந் தனள்; மற்றமனைவியரும் அழுதுகொண்டிருந்தனர். அந்நகரமோ தோற்கருவி தொளைக்கருவி நரம்புக்கருவிமுதலிய ஓசையகன்று எங்குமழுகுரலோசையே மிகுந்திருந்தது. இவ்வாறு நகரமுழுதும் வருந்தியிருக்கச் சூரபதுமனிடத்தே தருமகோபனென்னு மந்திரிசென்று கைதொழுது யான் சொல்வதைக்கேட் டருளுமென்று சொல்லத்தொடங்கினன்.

அத்தருமகோபனே அவுணர்பெருமானே! நீயோ அண்டங்க ளாயிரத் தெட்டையும் போரில்வென்றே! பெருந்திருவம்பெற்றிருக்கின்றாய்! அழிவில்லாத வரமும்பெற்றிருக்கின்றாய்! பெரும்புகழும் படைத்திருக்கின்றாய்! இவ்வாறு வருந்துதலியற்கையோ! கடல் சக்கரவாளகிரியையும் ஆகாயத்தையு மூடிக்கொண்டாலும் அண்டங்க ளழிந்தாலும் என்றும் அழியாதவச்சிரதேகத்தையுடையவிறைவனே! நீ மனத்திற்கொண்ட திண்மையும் குன்றலாமோ! யாவரும்வியந்துபேசத்தகுந்த அரசனே! நீயே கோவென்று கதறியழுதாயானல் திரிமூர்த்திகளு நகைப்பார்கள், நமக்கேவல்செய்கின்ற தேவர்களு நகைப்பார்கள், உமது புகழும் தேயும்; பூதப்படையேயல்ல, அத்திரிபுராந்தகனுகிய பரமசிவன் அளித்த சிறுபாலகனேயல்ல,அவனுல்விடப்பட்ட தூதனது புன்மையாகியசிறுபோர்க்காற்றுமல்வருந்தலாமோ! தந்தையரேஇறந்தாலுந்தமையன்மார் தம்பிமார் மக்களிறந்தாலும் மற்றும் தம்மைச்சார்ந்தவர் யாவரிறந்தாலும் சயத்தினையே நாடியிருப்பவர் மனேதிடங்குன்றுவதும்மரபோ; இழவூழ்வந்தால் வீரமென்பதேயறியாத மாதர்களும் மகாசுத்தவீரனையும் வெற்றிகொள்வார்களே.இதுபற்றியன்றேபெரியோரும் "யானையெருத்தம் பொலியக் குடைநிழற்கீழ்ச் - சேனைத்தலைவராய்ச் சென்றோரும் - ஏனை-வினையுலப்ப வேறுகிவீழ்வர் தாங்கொண்ட-மனையாளை மாற்றார்கொள." என்றுஞ்சொல்லியிருக்கின்றார்கள்; ஆதலால் வச்சிரவாகுவோ ஆயுள்நாள் குறைந்துபோனதால்தூதனற் கொல்லப்பட்டவனுனன். நீயோ 'வினைவலியுந் தன்வலியு மாற்றான்வலியும்-துணைவலியுந் தூக்கிச்செயல்.' எனப் பெரியோர்சொல்லி யிருப்பதனுல் சத்துருக்களுடைய வினையையும் வன்மையையும் நோக்கி அங்கை நெல்லிக்கனிபோல நாடிச்செய்யத்தக்க காரியங்களைச்செய்யாமல் இங்கே நின்று வருந்திக்கொண்டிருப்பது சாலத்தகுமோ! வரங்களு முரங்களும் அளவில்லாதனபெற்று ஒருவருக்குமஞ்சாத சூரனென்று பெயர்பெற்ற நீ மனம் வருந்தியிருப்பதுஞ் சரியோவென்று நின்றுதேற்றத் தெளிந்த சிந்தையனுய்ச் சூரபதுமன் தூதவரைப்பார்த்து என்மகனுகிய வச்சிரவாகுவைக் கொன்று இந்நகரத்தை யழித்துப்போனுனென்று நீங்களே கண்டசெய்தியோ? அல்லது பிறர் உங்களுக்குச்சொல்ல எனக்கறிவித்ததோ? எனக்குத் தெரியச்சொல்ல வேண்டுமென்றுன்.

அதைக்கேட்ட தூதர்கள் அக்குமரநாயகன் தூதனுய்வந்தவன் அவனைக் கொன்று இந்நகரங்கடந்தே இலங்கையை நோக்கி அப்புறம்போய்விட்டான். நாங்கள் அதைக்கண்டேவந் தறிவித்தோமென்னச் சூரபதுமன் பின்னும் அருகிலிருந்த ஒற்றரை நோக்கிப் பிரமனை யழைத்துவாருங்கோளென்றான். அதற்கவர்கள் இவ்வண்டத்திலுள்ள பிரமன் மால் இந்திரன் முதலியதேவர்கள் நம்மோடும் போர்செய்யப் பூதப்படையுட னெழுந்தருளிய அக்குமரநாயகனுக்கு அனுக்கத்தொண்டராய் அவனைச்சார்ந்திருக்கின்றனரென்று கண்டவர்சொலக் கேட்டிருக்கின்றோமென்று சொன்னார்கள். சூரபதுமன்கேட்டு இதுவும் நன்றாயிருக்கின்றதென்று குலுங்க நகைத்து வேறோரண்டத்திலிருந் துலகத்தைப்படைக்கும் பிரமனை விரைவாயழைத்துக்கொண்டு வாருங்களென்றான். அப்படியேசெய்கின்றோம் மகாபாக்கியமென்று அத்தூதர்களோடிச் சென்று தங்களரசன் கட்டளையை யெடுத்துச்சொல்லி அவன் முன்னே அப்பிரமனைக் கொண்டுவந்துவிட்டார்கள். சூரபதுமனே வேறண்டத்திலிருந்து சிருட்டித் தொழில் செய்யும் பிரமனைப்பார்த்து பெருமைகுன்றி யிருக்கும் இம்மகேந்திர நகரத்தை முன்போலிருக்கச் சிருட்டிக்கவேண்டுமென்று கட்டளையிட்டான். அக்கட்டளையைத் தலைமேற்கொண்டு அவன்விரும்பியவாறே அம்மகேந்திர நகரத்தைத் தன் கைத்தொழிலாற்செய்து முடித்து அவனது அரண்மனையையும் முன்போலவே சிறப்பாகப்புனைந்து கொடுக்க மகிழ்ந்து சூரபதுமனேதன்னை அவுணர்களெல்லாம் துதித்துவணங்க முன்போற்சிங்காசனத்திலிருந்து அப்பிரமனுக்கு விடைகொடுத் தனுப்பிவிட்டான். பிரமனும் விடைபெற்றுத் தன்னுலகமேபோய்ச் சேர்ந்தான்.

நகர்புரிபடலம்

முற்றிற்று.

---

## சூரனமைச்சியற்படலம்.

அந்தருணத்தில் சூரபதுமனுடைய ஏவலை மேற்கொண்டு சில தூதர்கள் கருங்கடலைக்கடந்து திருச்செந்தூரையடைந்து ஸ்ரீபாலசுப்பிரமணியனையும் அவனது சேனையையும் கண்டு தேர்ந்து அவனை வணங்கிச் சொல்வாராயினர். எம்பெருமானே! பிறப்பிறப்பில்லாத பிஞ்ஞக னருளிய பிள்ளை இரண்டாயிரவெள்ளம் பூதப்படையும் அப்படைகட்குத் தலைவராகிய தூற்றெண்மரும், இலக்கத்தொன்பதின்மராகிய வீரரும் தன்னைப் புடைசூழ்ந்துவரத் தாரகாசுரனையும் கிரவுஞ்சமலையையும்பிளந்த வடிவேலைக் கையிலேந்திக் கொண்டு செயந்திநகரமென்றும்நாமனூரலைவாயென்றும் சந்தனசலமென்றும் சொல்லப்படுகின்ற திருச்செந்தூரி லெழுந்தருளித் தானொரு தூதனை யனுப்பித் தன்வரவையறிவித்தான். அவனேநமது மகேந்திர நகரத்துக்குவந்ததுமேயல்லாமல் வழியிலே யாளிமுகனையுங் கொன்று இலங்கையையும் கடலையுங் கடந்துபோனான்; இனி அக்குமரநாயகனே கடலைக்கடந்து தன்னைச்சூழ்ந்துவரும் பூதகணங்களுடன் இங்கே யெழுந்தருளிப் போர்செய்ய எண்ணங்

கொண் டிருக்கிறுன். இதுமெய்யென்றே சொல்லி கின்றனர். அதைக்கேட்டுத் தன் மந்திரிமாரையும்மக்களையும் சுற்றத்தாரையும் சேனைத்தலைவரையும் ஒரு கணப்போதேவரக் கட்டளையிட்டான்! அவரும் வந்துசேர்ந்து அவனை வணங்கி ஒருபுறத்தே தங்கியிருந்தனர். அவர்களைப் பார்த்துச் சூரபதுமன் மிகக் கோபத்துடன் சொல்லலாயினுன்.

தேவர்களையெல்லாம் நான் பிடித்துச் சிறைவிட்டது கண்டு வருந்தி இந்திரன் வெள்ளத்தைச் சடையில்வைத்த வேதகீதன் பாதங்களைப்பணிந்து தன் குறைகளைச் சொல்லிக்கொண்டான். அக்கடவுட்பெருமானே தானெரு மகனைத்தந்து அவனை நோக்கி நீசென்று தேவர்கள் சிறையை விடுவித்துவாவென்று நம்மேல் அனுப்பியிருக்கின்றனன். அப்பாலகனே அக்கயிலையையகன்று தன்னைப்பூதகணங்கள் புடைசூழ்ந்துவரவும் பிரமன்மாலிந்திரன்முதலிய தேவர்கள் வாழ்த்தெடுப்பவும் மண்ணுலகை யடைந்து தாரகனையும் கிரவுஞ்ச மலையையும் தன் கையிலேந்திய வேற்படையாற் பிளந்து செந்திமாநகரத்தின்கண் பாசறையில் வீற்றிருந்ததன்றி என்னிடத்தேயோர் தூதனையனுப்பினுன். அத்தூதன் இலங்கையைக் கடந்து நமது மகேந்திரநகரத்தை யடைந்து அத்தாணி மண்டபத்திற் சேர்ந்து சிறிதேனு மனங்கலங்காமல் தேவர்கள் சார்பாகவே சில வார்த்தைகளைப்பேசி இங்கிருந்த சிலவீரரையுங்கொன்று இந்நகரத்தையு மழித்தான். அதைக்கண்ட சிலவீரர்கள் அவனைப்போயெதிர்த்தனர். அவனே அவர்களையெல்லாங் கொன்றதன்றி நமது வச்சிரவாகுவையுங் கொன்றுன். இத்திருநகரும் அழிந்தது. அநேகம் சேனைகளுமொழிந்தன, பிணக்குவியல் எங்கு மிருந்தன, பூமியெங்கும் உதிரவாருேடிற்று, என்னுணையுஞ் சாய்ந்தது. என் மேன்மையுங் குறைந்தது; நானே தன்னந்தனியனுய்த் தூதனுகவந்தவனையும் பிடித்துச் சிறை வைத்திலேன், அவனைத் துன்பமுஞ்செய்தறியேன், எப்படி இனி வசைச்சொல்லுக்கோர் முடிவுசொல்வது? இப்படியெல்லாம் நமக்கு இங்கேசெய்துபோன தூதன் நமது நகரத்தைக் கடந்து இலங்கையை யடைந்து அந்நகரத்தைக் காவல்கொண்ட யாளிமுகனைக்கொன்று கடலைத்தாண்டித் திருச்செந்தூரையடைந்து கறைமிடற்றிறைவன் காதன்மகனுகிய சண்முகப்பெருமான் சந்நிதானத்திற் சென்று தெரிசித்துக்கொண் டிருக்கின்றுன். அம்முருகப்பெருமானே சமுத்திரத்தைக்கடந்து இங்கே யெழுந்தருளி நம்மோடும் போர்செய்ய வெண்ணங்கொண் டிருக்கின்றுனென்று சாரணர் சொல்லுகின்றனர். நானே பூதகணங்களைக்கொன்று வீரர்களையும் வென்று குமரநாயகனையும் போரிற்சயித்து ஏனையோரையும் வெற்றிகொண்டுவர வல்லேனே! சூரனென்று ஒப்பற்ற பெயரைக்கொண் டிருக்கின்ற நான் பாலகனுேடும் பாரிடவீரரோடும் போர்செய்தாலும் வீரத்தன்மை யன்றென்று வறிதிருக்கின்றேன். உலகத்தின்கண் திரமாகவனுபவிக்குஞ்செல்வத்தினும் வலியினும் சூழ்ச்சியினும் எவ்வகைப்பட்ட பெரியாரேயானுலும் தாம் ஒருகாரியத்தைச்செய்ய வெண்ணுவாரோயானுல் தமக்கு மெய்த்துணையாயுள்ளவரோடுசாவியல்லது செய்யவேமாட்டார்கள். ஆதலால் யான் உங்களைவருவித்து வினுவினேன், எனக்கிங்கொன்று சொல்லவேண்டு

மென்று சூரபதுமன் சொல்ல, அதைக்கேட்டு வணங்கி மேதியனென்னும் பெயரையுடையவன் சொல்லலாயினன். அவுணர்பெருமானே! மிகச்சிறந்த மாயைகள் செய்பவல்ல கிரவுஞ்ச மலையையும் திருமாலைச் செயங்கொண்ட தாரகாசுரனாகிய உன்தம்பியையும் ஒருகணப்போதிலேகொன்று களைந்தவனை நீ பாலனென்றே சொல்லிக்கொண் டிருக்கின்றனையே! அஃதிருக்கட்டும், அத்தாரகனுடைய போர்வீரரை யெல்லாங்கொன்ற திறமுடையாரைச் சிறி தும்வலியிலாத எளியனென்றும் பூதனென்றுமிகழ்வது அறிவின்பகுதியோ! இவ் வளவுதூரமும் கடலைக்கடந்துவந்து நமது நகரத்தையு மழித்துப்போனதுமல் லாமல் வச்சிரவாகுவாகிய உமது குமாரனையும் கொன்றுபோனவனைச் சாதா ரணமாகவே தூதனென்றுசொல்லவந்தீர். இது அறிவுடையார் சொல்லத்தக்க தோ! நாம் யோசிக்கும்போது திருமாலோ! பிரமனோ! இந்திரனோ? இப்படி வேற்றுருவங்கொண்டுவந்து போனதல்லாமல் தூதுவந்தவன் சாதாரணமா னவனெனப்படுமோ! எப்போது உன்தம்பியாகிய தாரகனையும் கிரவுஞ்சமலை யையும் வெற்றிகொண்டானோ! அப்போதே அத்திரிபுராந்தகனென்னும் பரம சிவனுடைய திருக்குமாரனாகிய குமரநாயகன்மேற் போர்க்கெழவேண்டும். அல்லாமற் போமாயின் உன்சேனையையாவது தூண்டியிருக்கவேண்டும், நீ யொன்றுஞ்செய்யாமலே காலதாமதஞ் செய்துவிட்டாய்! நெருப்பழல் சிறிதே யானாலும் அதைச் சிறிதென்றுசொல்லி நிந்திப்பார்களா! அதை யவிக்கவே முயலுவார்கள், அப்படி முயலாவிட்டால் உலகமுழுதையும் சிறிதுபொழுதிற் குள்ளேயே யழித்துவிடும். பகைவர் செய்யுஞ்சூழ்ச்சியே நமக்குமாறாக வே றொருநிலைமையதே யாயினும் அடைவதற்கு முன்னமே யெதிர்காப்பாரோ யாயின் அவர்களுக்குத் துன்பம்வந் தடையுமோ! நீங்குவ தரிதாகிய செல்வத் தை யனுபவித்து நாம் செய்யும் வகைகளை மறந்து வன்மையாளரை யெறிந் தாரை இகழ்ந்து இவ்வாறு வாழ்வோமானால் சிறந்தவர் நாமல்லாமல் எவர்? முன்னமே அக்குமரநாயகன்மேல் கோபித்துப் போர்க்குச் சென்றிருப்பா யானால் உன்னகரத்திற்குத் தூதுவனும் வந்திருப்பானோ! நீயதைச்செய்யா திருந்து இப்போதிந்நகரமழிந்ததென் றிரங்கலாமா! உன்மக னிறந்தமையும் உன்னகரமழிந்துபோனமையும் செய்யவேண்டிய காரியங்களைத்தெரிந்துசெய் யாத மதிமோசத்தால் வந்த காரியமாம்? இனிப்போனதற் கிரங்குவது அறி ஞர்க்கு இயற்கையானதேயல்ல? போனதெல்லாம் போகட்டும், நானொன்று சொல்கின்றேன்கேள்! அதையிழிந்ததென் றெண்ணவேண்டாம்! இமையோ ரையிற்செய்! அதுவோவேறல்ல, நம்முடைய சேனையுடனே விரைந்துபோய் அக்குமரநாயகனை வளைந்து போர்செய்யலாம்; முன்போல் இனித்தாமதிக்க வேண்டாமென்று சொல்லிமுடித்தான்.

இவ்வாறு அவன்சொல்லிமுடிக்க, துர்க்குணன் என்பவன் இது நன்றா யிருக்கின்றதேயென்றுகையெறிந்து நகைத்துநீகருடனைவாகனமாகக்கொண்டு போர்க்குவந்தகள்ளமாமாயன்மேலும்தேவர்கள்மேலும்போர்செய்யச்சென்றா யில்லை, இளையவரால் வெற்றிகொண்டு சிறந்தாய், இப்போதோ ஒருபாலகன் மேற்போர்செய்யும்படி போகலாமோ, அழிவில்லாத ஆயுளும் ஆணையும்கெடா

தசெல்வமும் வலியும் வீரமும் பிறவும் தவஞ்செய்தேபெற்றாய், இவ்வளவுபெற் றும் சிறியபாலகன்மேற் போர்செய்வதற்கா? தம்மைப் பெரும்பசிவருத்தப் பலியைமிகுதியாகவிரும்பும் பூதகணங்களையும் தூதனையுந்தொடர்ந்து போர் செய்யும்படியோ போகத்துணிந்தாய்! தேவர்களையெல்லாம்புறங்கொண்டோ டச்செய்தபுரவலனே! நீ இப்போது உன் படைத்தலைவரையேவியேகிரவுஞ்ச மலையைத் தன் கைவேலாற் கீண்ட குமாரநாயகனைப் பூதவெள்ளத்துடன் வென்றுவரும்படி கட்டளையிட்டால் அவர்களேபோய் வெற்றிகொண்டு வரு வார்கள்; இதுவே நல்லயோசனையென்றான்.

இப்படி அவன்சொல்லிமுடிக்கவே, அவனைக் கையமைத்துத் தரும கோபனென்னு மந்திரி சொல்லத்தொடங்கினன். நவமணிபதித்துப் பொன்னா லாகிய கலப்பையைக்கொண்டு அற்பமாகிய பயற்றுவருக்கத்தை யாக்கத்தாற் புலம்பக்கீறுவதுபோலும் நீசிலம்பணிந்த காலையுடைய சிறுபாலகனோடு போர் செய்யத்துணிந்தது பரமசிவன், விஷ்ணு, பிரமன், யமன் என்பவரோ யல்லா விட்டால் நீ பாலகனோடும் போர்செய்யத்தொடங்கினாற் பயனுண்டோ? இளங்குதலைமொழியையுடைய குழந்தைமேல் போர்செய்ய நடந்தாயானல் அவனோ உன் பேராற்றலைக்கண்டு புறங்கொடுத்து விடுவனேயல்லது போர் செய்யவும் வல்லமைபடைத்திருப்பானோ? தேவர்களைத்தான் ஒப்பாகக்கொ ண்டு போர்செய்து பெரிதுமாய்வதும், பூரியராகிய அற்பருடையகடைமையே யல்லாமல் அறிவுக்கேற்குமோ. அக்கினிமுகன் இரணியன் முதலிய உன் குமாரவர்க்கங்களில் ஒருவனுக்கு அக்குமாரநாயகனிடத்தேயிருக்கிற இலக்கத் தொன்பதுவீரரும், பாரிடவீரரும் பூதவெள்ளமும் போதுமோ! நகத்தால் கிள்ளிப்பிடுங்கியெறியத்தக்கதைக் கோடரிகொண்டா களையவேண்டும். நமது சேனைகொண்டு முடித்துவிடவேண்டிய அப்பாலகன் முதலானோரை நீயும் படையெடுத்துக்கொண்டு போகலாமோ? கிரவுஞ்ச பருவதத்தைப் பிளந்தா னென்றும் தம்பியைக் கொன்றானென்றும் வச்சிரவாகு தூதனாற் கொல்லப் பட்டானென்று மெண்ணிக்கொண் டிருக்கின்றாயே! சிறிது முன்னடந்தமை யை யாராயாமலிருக்கின்றனை? கங்கையைச்சடையிற்கரந்த கண்ணுதற்பெரு மான்தந்த வேலை அப்பாலகன்செலுத்தினமையால் அப்படையை வெல்லும் படையொன்றில்லாமலே தம்பி தாரகன் முடிந்தான். அக்கிரவுஞ்ச மலையோ செந்தமிழாசிரியராகிய அகத்தியமுனிவர் சாபமொழியால் இறுதியையடைந் தது, இதையெல்லாம் அறியாமல்சிறிய காரியங்களையே செய்யத்துணிந்தாய்! வச்சிரவாகுவோ தவத்திற்பெறாத வில்லைக்கொண்டு போர்செய்யும்படி தூத னோடு சென்றமையாற் கொல்லப்பட்டான்; இனிப் பலபலசொல்லி யாவ தென்ன? நம்முடையசேனையில் ஒருவீரனைக் கூவியழைத்து அவனை நால் வகைச்சேனைகளோடும் அனுப்பி முருகனோடே போர்செய்யக் கட்டளையிட் டால் அவனே வெற்றிகொண்டுமீள்வான். இதைத்தான் செய்யவேண்டு கின்றேனென்று சொல்லி முடித்தான்.

இவ்வாறு தருமகோபனென்னு மந்திரி சொல்லி நிற்க, காலசித்தென் னும்பெயருள்ள வேறொருவன் சொல்லுகின்றான். அரசனே! திருச்செங்

தூரில் திருப்படைவீடுகொண் டெழுந்தருளியிருக்கின்ற அக்குமரன் தன் பூத வெள்ளமாகிய சேனையுடனே இவ்விடத்திற்குவருவானாயின் அவனைச்சயிக்க வேண்டினு லிரண்டொருவீரரையேவி வெற்றிகொண்டுவிடுவதாயிருக்க இத ற்கு மந்திராலோசனையும் வேண்டுமோ? இந்திரன் சயந்தன்முதலிய தேவர்க ளையுஞ் சயங்கொள்ளத்துணிந்தகாலத்தில் அதற்கு மந்திராலோசனை யில்லா மலே வெற்றிகொண்டு சிறந்தனை, பால்மணங்கமழும்வாயையுடைய சிறுபாலக னொடுபோர்செய்ய இற்றைநாளின் மந்திராலோசனை செய்யும்படி துணிந்தது வும் மதிமயக்கமென்றே யெண்ணுகின்றேன். எனக்குக் கட்டளை யிடுவை யேயானால் நானேபோய் அக்குமரனிடத்தேசென்று அவனையும் அவனொடும் போந்த பூதப்படைகளையும் காலபாசத்தாற் பிடித்துக் கட்டிக்கொண்டு வரு கின்றேனென்று சொல்லிமுடித்தான்.

அப்படி அவன்சொல்லவே கண்டனென்னும் பெயருள்ளவன் விரைந்து சூரபதுமனுக்குச் சொல்லத்தொடங்கினான். அவுணர்பெருமானே! மிக்க பசி நோய்வருத்த வருந்தும் பூதவீரரும் இளம்பிள்ளையாகிய குமாரனும் அவனுக் குத் துணையாகவந்த பிறரும் மிக்க சூழ்ச்சியையுடையரோ? அவர்களுக்காக நீ மந்திராலோசனை செய்யத்தொடங்கினை? உம்முடைய கட்டளைபிறவாமை யால் இதுவரையும் தாமசமாக விருந்தேன், அது இப்போது கிடைக்கப்பெற் றதனால் நானேபோய்ப் பூதரையும் அப்படையுடன்வந்த குமரனையும் பிறரை யுங் கொன்று களையவே என்னை யேவவேண்டுகிறேன், நானிமையோரை யிற்சென்று திரிமூர்த்திகளேவந்துதடுத்தாலும் அவர்களையும் வெற்றிகொண்டு பூதப்படையுடனே குமரனையும் புறங்கண்டு மீள்வேனென்று சொன்னான்.

அதைக்கேட்டிருந்த அனலியென்பவ னெழுந்து கோபநகைதோன்றச் சொல்வானாயினன், அரசே! நம்பாற்பகைத்துவந்தவன் சிறுவனேயாயினும் படைத்திறங்கொண்டு நம்மோடுபோர்செய்யும்படி யெதிர்ந்துவருவனேயாயின் அவனொடும் போர்செய்ய மேற்செல்லாமலே எங்களோடிருந்து மந்திராலோ சனைசெய்வதுந் தகுதியோவென்று சொல்லிமுடித்தான். பின்பு சிங்கனென்ப வன் எரிசொரியுங்கண்ணையுடையனாய்ப் பெருமூச்செறிந்து மனங்கன்றி வாயி விதழைக்கவ்விக்கொண்டு சொல்லுகின்றான். அரசனே! நீ மிக்கபோராற்றலை யுடைய வீரரைக்கொன்றமையும் இப்போது மந்திராலோசனைசெய்யத்தொட ங்கியமையும் மனத்திற்கொண்ட சூழ்ச்சியும் இந்திரகுமரனாகிய சயந்தனைவெற் றிகொண்டபானுகோபனுடைய பெருந்திறலைச்சிந்தவெண்ணியென்றேதுணிய வேண்டும். எல்லாவண்டத்தி லிருப்போரும் சத்துருக்களாகியே வரட்டும்; அவர்களெல்லாரையும் நானொருவனே தன்னந்தனியனாகச்சென்று அவர்களை யெல்லாம் வெற்றிகொள்வேன்; உனக்குக் குற்றேவல்செய்யும் என்வலிமை யைச் சிறிதேனும் எண்ணலைபோலும்; நானே என்வலிமையைச்சொல்வது மரபேயன்று, என்னைப் போர்க்குச்செல்லென் றனுப்புவையேயாயின் நால் வகைச்சேனையுடன் சென்று உன்மேற் பகைகொண்டிருக்கிற அத்தனைபேரை யும் கொன்றுகளைந்து மீள்கின்றேன் என்றான். இவ்வாறே அங்கிருந்த மந்திரி மாரெல்லாரும், படைவீரரும் பிறரும் தங்களுக்குத் தோன்றியவண்ணமெல் லாம்அவுணர்பெருமானாகிய சூரபதுமனுக்கெதிரேநின்று சொல்லிமுடித்தனர்.

மற்றைய மந்திரிமாரும் பிறரும் இவ்வாறே யெடுத்துச் சொல்லப் பானு கோபன் தன் தந்தையை வணங்கிச் சொல்ல லாயினன். ஐயாவே! தன் பால் எவ்வகைப்பட்ட அருந்தவ முடையாரும் அடைந்த காலத்தில் அவர் களை யெல்லாம் மயக்கும் அக்கிரவுஞ்சமலையையும் தாரகனுகிய என்சிறிய தா தையையும் அக்குமரன் கொன்று களைந்தானென்றல் அற்றைப் பொழுதே என்னை யழைத்து விடுக்காமல் இன்று நீர்மந்திராலோசனைசெய்யத் தொடங் கியது கீர்த்தியாக விருக்கின்றதே, எல்லாருள்ளத்தும் கரந்த கள்வனுகிய அப்பரமசிவன் அளித்த பாலகன் அனுப்பியதூதனே வந்து இங்கேபோர்செய் தானென்றல் பற்களின்னமும் தோன்றுத பிள்ளையையா அவன் தூதனுக விடுத்திருப்பான்; எல்லாமறிந்த உனக்கு இது தெரியாதிருப்பது என்ன மதி மோசம்! இழிந்த தூதனல் துன்பப்பட்டா யென்ற பழிச்சொல் மேற் கொண்டிருக்கின்றுயே! என் தம்பியாகிய வச்சிரவாகுவையும் கொல்வித் தாயே! நகரத்தினையும் சீர் கெடுத்தாயே! இவ்வளவும் நடந்தது உன்னறியா மையாலென்றே துணியவேண்டும். பொருளல்லாத தொன்றைப்பொருளாகக் கொண்டு பயப்படுவதும் வினைய மறியாமல் ஒரு செய்கையை விரைந்து செய்து வருந்தி வாழ்வதும் பெரியவர்கள் கடமையாமோ! இவ்வளவும் அறி யாமையென்றே சொல்லப்படு மன்றே! நானே சென்று குன்றையும் சிறிய தந்தையையும் வேலேவி வதைத்த அக்குமரனுடைய வெற்றியையும் பூதவீர ருடைய பேராற்றலையும் தூதனுகவந்தவனது நிலைமையையும் அழித்துவிட்டு அவர்களை யென்பாசத்தாற் பிணித்துக் கட்டிக்கொண்டு வருகின்றேன். இது வரையிலும் ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் நாயகம்பூண்ட இறைவனே! பரம சிவனுடைய குமாரனெடு போர்க்குறித் தெழுவது சிறந்த தன்றென்றே துணிந்தென்னையேவ வேண்டுகின்றேன்; அதனல் நீ வெற்றி பெறுவது திண்ணம், என்னைப் போர்க்கனுப்பினையே யாயின் நானே போர்செய்து என் னெடும் போர்க்கு வருகின்றவரையெல்லாம் வெல்வதல்லாமல் அங்கிருக்கும் தேவர்களையும் வெற்றிகொண்டு மீள்கின்றேனென்று சொல்லி முடித்தான்.

இவ்வாறு பானுகோபன் சொல்லி முடித்தவுடனே இரணிய னென்னும் மற்ற குமார னெழுந்து தந்தையாகிய சூரபதுமனை மும்முறை வலம்வந்து பணிந்து சொல்லுகின்றுன். ஐயாவே! நான் சொல்வதைக்கேள்; வள்ளற் றன்மையும் பெருந்திறலுமுடைய சூரபதுமன் ஒருசிறு குழந்தையினுடைய போர்வலிக் கிரங்கினனென்ற சொற் பிறந்தால் உன்னை நெஞ்சிலே நினைத்தா லும் நடுநடுங்கி நிற்கும் சத்துருக்களும் நிந்திப்பதற்கிடமாய் விடுமே. நீ ஆலோ சனை செய்யத்தொடங்கியதையே விட்டுவிடு,மணிமிடற்றெருவன்பயந்தமுத் துக்குமரப்பெருமான் நிலத்தில் வந்தானென்ற சொற்கேட்ட காலத்திலேயே என்னையனுப்பிப் போர்செய்ய விடுக்காமற் போய்விட்டாயே! என்னை யாது காரணமாக வெறுத்தாய்! நானேதேனும் குற்றஞ்செய்ததுண்டோ! நீலகண் டத்து நின்மலன் பயந்தபாலன்மேலும் பசி நோய்க்காக மாமிசத்தைவிரும்பி யுழலுகின்ற பூதர்மேலும் மற்றவர்மேலும் என் தமையனுகிய பானுகோபனை அனுப்புவதும்வசையை யுண்டாக்கிவிடுமே! நானே நால்வகைப் படையுடன்

போர்க்குச் செல்கின்றேன். நானே சென்று போர்செய்து பகைவர் கூட்டத்தை யெல்லாம் கொன்று தேவர்களையு முடித்து வருகின்றேன், இன்று எனக்கு விடைகொடுக்க வேண்டுமென்று கேட்டான்; இவ்வாறு இரணியன் சொன்னதைக்கேட்டிருந்த அக்கினிமுகாசுரன் சொல்லத்தொடங்கினன்.

பிதாவே! நீயோ ஆயிரத்தெட் டண்டங்களையும் ஒரு குடைநிழலிலாள்கின்ற பெருஞ்செல்வம் பெற்றிருக்கின்றாயே! உனக்குத் துணையாக ஆயிரஞ் சிங்கமுகங்கொண்ட என்சிறியபிதாவைப்பெற்றிருக்கின்றனையே! உமதுமக்களாகவோ கணக்கில்லாத பானுகோபனே முதலாகிய பேர்களிருக்கின்றோம், யானை,குதிரை,தேர், காலாள் முதலிய அவுணப் படைகளோகணக்கில்லாதன விருக்கின்றன. அழிவில்லாத பாகரும் தேரும் வில்லும் அதுவேயுமன்றி ஒழியாத பாணங்களும் அப்பாணங்க ளடங்கியிருக்கின்ற அம்பறாத் தூணியும் பலவிதப் படைகளு மிருக்கின்றன. இதுவேயு மன்றி ஆக்கினை சக்கரமு மிருக்கின்றது. இது நிற்க; ஆயிரத்தெட் டண்டங்களையும் ஒரு கொடியிற் போய் மீண்டு வருகின்ற இந்திர ஞாலத்தேரும் அதிற்பூட்டி யிருக்கின்ற சிங்கங்களு மிருக்கின்றன. மேலும் கள்ளமாமாயப் பிரானு மதிமயங்கும் மாயைகள் பலவும் கை தேர்ந்திருக்கின்றாய். இப்படிப்பட்ட பெருஞ்செல்வ மடைந்து வாழ்கின்ற உன்னைப்போன்றவர் இவ்வுலகத்தின்கண் யாரிருக்கின்றார்கள். அப்படிப்பட்ட நீ ஒருபாலகன் அனுப்பிய தூதனுடைய பராக்கிரமத்திற்கஞ்சி உள்ளங்கவல்வதும் தகுதியா யிருக்கின்றதோ! அவனையும் அவனைச்சூழ்ந்த பூதவீரரையும் வெற்றி பெற்று வரத்தக்கவரையெல்லா மனுப்பாமல் நீ அதற்காக மந்திராலோசனையும் செய்யவேண்டுமோ! நான் என்தம்பியைக்கொன்ற அந்தத்தூதனைப் பழிக்குப் பழிவாங்கி அவனேவிய பாலகனையும் அவனைச் சூழ்ந்த பூதசேனைகளையும் கொன்று வருகின்றேன்; அப்படிசெய்யாமல் இந்த மகேந்திர நகரத்திற்குத் திரும்பவே மாட்டேனென்று சொல்லி முடித்தான்.

இப்படி அக்கினிமுகாசுரன் சொல்லவே,அருகேயிருந்த தம்பியாகியசிங்கமுகாசுரன் தன் தமையனாகிய சூரபதுமனுடைய முகத்தைப்பார்த்துச் சொல்லுகின்றான். அண்ணா! மந்திரிமார்களும் சேனைத்தலைவர்களும் நமது மக்களும் தங்கடங்களுக்கியன்ற வல்லமையே யெடுத்துச்சொன்னார்களே யல்லாமல் இந்திரதிருவம்பெற்ற உனக்கியன்ற சொல்லைச் சிறிதேனும் சொல்லாமற் போய்விட்டார்கள். மிக்க செல்வத்திற்றோன்றிய கோபம் கற்றவருடைய அறிவையும் கடக்கும், அது முடிவதன்முன்னே அன்புடையவராயிருப்பவர்கள் அவர்களுக்குத் தகுந்த வார்த்தைகளைச் சொல்லி யுணர்த்தவேண்டும். அரசர்செவியில் நெருப்புமடுத்தாற்போல நல்லநெறியைத்தருகின்ற நடுவாகிய நீதியைச்சொல்பவராகிய மந்திரிமார்கள்,துணைவர்கள்,மேலோர்கள். அவர்கள் பகைவர் விரும்பாவண்ணம் சொல்கின்றார்கள். முடியவருவதைத் தொடங்குவதுமன்னதாம், அதனால்வரும் பயன்களும் பிறவுமாராய்ந்தே தெற்றென வுணர்ந்து பின்னே பலவற்றையும் செய்வாராயின் குற்றமென்பது அவரிடத்தே குறுகுமோ! இதுநிற்க; நீமேல்வருவதை யாலோசியாமலே யிருக்

தின்றனே! இந்திரன் முதலாகிய இறைவர்களையும் தேவர்களையும் வருத்திய கொடியவர்கள் தாங்கள் பெற்ற செல்வத்தொடும் முடிவதே யல்லாமல பிழைத்தவர்கள் இவர்களென்று சொல்லவும் போமோ! தேவர்களெல்லாரையும் கடலிலிருக்கின்ற மீனைப்பிடித்து வரத்தகாதவண்ணம் கட்டளையிட்டு வருத்தினையே! இதுதகுதியான செய்கையாகத் தோன்றுகின்றதோ! இப்படிப் பட்ட காரியத்தை உயிர்மேல் விருப்பமில்லாதவரோ யல்லாமல் வேறியார் இதைச்செய்யத் துணிவார்கள். இந்திரனுக்குத் துன்பத்தைப் பெருக்கி அவனுடைய பெருவாழ்வினை யழித்துவிட்டாயே! அதுவேயுமன்றி அவனது பெரும் பதத்தையும் நீருக்கிவிட்டாயே! தேவர்க ளெல்லாரையும் சிறையிலுமிட்டாயே! அப்படிப்பட்ட தேவர்களாலேதான் நமக்கிப்படிப்பட்ட துன்பநேர்ந்து விட்டது; இதை மெய்யென்றே மனத்திற் கொள்ளாமலு மிருக்கின்றனை, பித்தரைப்போலு மதிமயங்கிப் பேதைமையு மடைந்தாய்! நீபொன்னகரத்தையழித்த காலத்தில் உன்கையிலகப்பட்ட தேவர்களை யெல்லாம் இன்னமும்சிறையினின்று நீக்காமலிருக்கின்றாய்; இரக்கமும் இல்லாமற்போனாய்! நமக்குப் பரமசிவன் எழுந்தருளிவந்து வரமளித்த காலத்தில் நீங்கள் நூற்றெட்டு யுகம்பெருஞ்செல்வத்துடன் அரசாண்டுவருவீரென அருளிச் செய்தான். அப்படிசொன்ன காலமும்குறுகியது;அதைச்சிறிதேனும் தேருமலிருக்கின்றாயே; விதி வலியைக் கடப்பவர் உலகின்கண் யாவரோ! இதுபற்றி, யன்றோ பெரியோரும் 'ஊழிற் பெருவலியாவுள மற்றொன்று சூழினுந்தான் முந்துறும்' என்றுஞ் சொல்லி யிருக்கின்றார்கள். எப்படிப்பட்டவரும் உங்களை வெல்லவே மாட்டார்கள். பரமசிவன் எமது சத்தியே வென்றிபெறு மென்றான் அதனாலேயல்லவோ குமரநாயகன் விட்ட வேற்படைசென்று நமது தம்பியாகிய தாரகனையு முயிருண்டது, பேதைகளாகிய தேவர்களைச் சிறையிட்டாய்; ஆதலால் உனக்கானதே துன்பம்,அதையல்லாமல்ஏதுமோர்பயனில்லதாகிய சிறிய தொழிலைச் செய்து வேதனைப் படுவது மேலோர்கடனாமோ! உலகத்தின்கண் குரவரையும் சிறு பாலரையும் மாதர்களையும் குறைவற்ற விரதத் தொழில் பூண்டவரையும் மேலோரையும் அருமறை யுணர்ந்த அந்தணரையும் வருத்தினவரோ யன்றோ வேதாகமங்களிற் சொல்லப்பட்ட நரக வகைகளை யெல்லாம் சென்று மூழ்குகின்றவர்கள். தேவர்களை யிட்ட சிறையை நீக்கிவிடுவையே யாயின் குமரநாயகன் இங்கேவந்து நம்மொடு போர் செய்யும்படி கருதவேமாட்டான்,நம்முடைய சிறுபிழையையும்தன்னுளத்திற் கொள்ள மாட்டான். நாளையே வடகயிலாய மலையை யடைந்து விடுவான். நீ மேலோர்களாக விருக்கின்ற தேவர்களைச் சிறையினின்றும் விடுக்காமல் இருப்பாயாயின் முப்புரம் பொடித்த முதல்வன் பாலகனாகிய குமரநாயகன் நம்முடைய குலத்தை யெல்லாம் அறக்களைந்து நின்னையும் கொன்று விடுவான்; இதுவே யுண்மையென்று சொல்லி முடித்தான்.

இப்படி சொன்ன சிங்கமுகாசுரனைப் பார்த்துச் சூரபதுமன் கையொடு கையறைந்து பெருமூச்செறிந்து கோபநகை யுண்டாக நகைத்துப் பற்களை இதழுடன் கவ்விக்கொண்டு தன் தலையை அசைத்துச் சொல்வானாயினன்.

அடா தம்பி சிங்கமுகனே! நமக்கேவல் செய்து கொண்டு இன்னமு மொளித்துக்கொண்டு திரியும் இந்திரனுக்கும் தேவர்களுக்கும் குமரனுக்கும் அவனைச் சூழ்ந்த கயிலையைக் காக்கும் பூதர்கட்கும் உள்ளங்கலங்கிவிட்டாய் போலும்! நானோ பரமசிவன் நூற்றெட்டு யுகம் அரசாண்ட பின் நமது சத்தி உங்களை வெல்லு மென்பதாகக் கேட்டறியேன். அப்படியானால் அவனளித்த அழியாத பெரும்பேற்றை யாராலேதான் அழிக்கக்கூடும். அது பிழைபடுமோ! ஆதிநாயகனாகிய பரமசிவன் எமது பெருஞ் சத்தியேயல்லாமல் அன்னியர் வெல்ல மாட்டாரென்றாலும் சத்தியும் இறைவனும் பேதமோ; வரம் கொடுத்திருந்தவன் அழிப்பானென்றது பிழையாமே! நீ சொல்லிவந்த வழக்குமும் உண்மையாவ தல்லவே! நம்போற் பழுதடையாமலும் வேள்வியையும் செய்யாமலும் அழிவில்லாதவரம் பெற்றிலன், ஆகையால் தம்பியாகிய தாரகன் அன்று குமரனால் மாண்டான்; பேதையாகிய குழந்தை யாகையால் வச்சிரவாகுவும் தூதன்கையிற் பொன்றினன். இதுவும் குறையோ! ஆயிரத்தெட் டண்டங்களையும் ஒரு குடைநிழலி லரசாளும் பெருஞ் செல்வமும் நான் பெற்றிருக்கிறேன். தேவர்க ளெல்லாரும் எனக்குக் குற்றேவல் செய்து நடுநடுங்கும் பெரும்பாக்கியமு மடைந்திருக்கின்றேன். யார் என்னுடன்வந்து போர்செய்தாலும் அழியாத வச்சிரதேகமும் பெற்றிருக்கின்றேன்; அப்படிப்பட்ட எனக்கொப்பானவரும் உலகத்தில் ஒருவர் இருக்கின்றார்களா? தவத்தைச் செய்துழலுகின்ற தேவர்களிலும் அரக்கரிலும் அவுணரிலும் ஆயிரத்தெட் டண்டங்களையும் ஆண்டுவரும் தனி யரசாட்சியைப் பெற்று வாழ்ந்தவரும் எனக்கு நேராக யாரேனு மிருப்பாரா! மாலே பிரமனே முதலானோர் யான் தேவர்களை அநேக காலமாகச் சிறையிட்டிருப்பதைக்கண்டு மிகவும் அஞ்சி நடுநடுங்கி யிருந்தார்களே யென்றால் நேற்றுச் சிவபிரானுடைய நெற்றியிற் றோன்றிய சிறுபாலகனோ அழியாத வச்சிரதேகத்தையுடைய என்னைக்கொன்று களைபவன். என்னை அச்சிறுபாலகனும் கொல்வானென்பது ஆகாயத்திற் செல்லுகின்ற சூரியனையோர் கனியென விரும்பிக் கண்ணிலாக் குருடன் காட்டக் கையில்லாதவன் பேராசையால் எண்ணிப் பிடித்ததை யொத்திருக்குமென் றிப்படி சூரபதுமன் சொல்ல, இது சிறந்த தல்லவென்று சிங்கமுகாசுரன் கேட்டு நானின்னமும் ஒன்று சொல்லுகின்றேன் கேளென்று சொல்லத் தொடங்கினான்.

அண்ணாவே! நிலாவணித்த நீண்முடியும் பவளமலைபோலுந் திருமேனியும் சோமசூரியாக்கினியென்னு மூன்றுகண்களும் நீலமணிபோலும் கண்டமும் நாற்பெருந்தோளுங்கொண்டு பரம்பரனிற்கின்றனன். அப்பரம்பொருள் என்னகாரணமாக இவ்வாறுருக்கொண் டிருக்கின்றனனென்பதைச் சிறிதுமறியாமலிருக்கின்றாய்; அவனென்னகாரணமாக இவ்வாறு திருவுருக்கொண்டிருக்கின்றா னென்பையாயின் சிருட்டி திதி சங்காரம் திரோபவம் அனுக்கிரகமென்னும் பஞ்சகிருத்தியங்களைச் செய்து நித்தியமாகிய உயிர்வருக்கத்தின் பாசபந்தங்களை முழுதுமகற்றி விடுபே றளிக்கவேண்டுமென்றெண்ணிய பெருங்கருணையென்றே துணியவேண்டுகின்றேன். அப்படிப்பட்ட பரமசிவனை

யுள்ளத்தி லெண்ணியே அளப்பருங் காலம் அருந்தவஞ் செய்தனே, அது கண்டு தான்வெளிப்பட்டுத் தனக்கொப்பேயில்லாத வரங்களையுதவி அவ்வரங் களொழிவினையு மறிவித்து மிருக்கின்றான். அதை நீயுமறியாமலிருக்கின்றாய், பெறலருந்திருவமுடைய நீ அறத்தை விரும்பி முறைபுரியாது உன்வல்ல மையால் தேவர்களைப்பகைத்து வருத்திக்கொண்டிருப்பதையறிந்து உன்வலி மைக்கெடுத் துன்னையுமிறுதிசெய்யத் திருவுள்ளங்கொண்டே இறைவன் குமர னாகத்திருவுருவங் கொண்டிருக்கின்றான். இவனை மனிதரிலும் விலங்கிலும் பறவைகளிலும் மற்றும் தாழ்வுள்ளனவா யுமுழலும்பிறவிகளிலும் பிறந்தவரே போல நினைக்கவேண்டாம், வேதங்களுங்கடந்த தனிமுதல் பரஞ்சுடரா கிய பரமசிவனுடைய நெற்றிக் கண்ணினிடத்தே திருவவதாரஞ் செய்தான். அண்ணா! ஒழுக்க மற்றவராலறிவரிய சிற்பரனாகிய கந்தப் பெருமானை நீ பாலனென்றே சொல்லி விட்டாயே? அவனிடத்தே பலபொருளும் மேலை நாள் வந்துதித்தமை சிறுமீன் சினையினு நுண்ணிதாகிய ஆலத்தின்விதை யில் இலை தளிர் பூ காய் கனி சாகை விருக்ஷ முதலியன வடங்கி யிருப்பன போன்று யாவுந்தோன்றி அப்படிதோன்றியவண்ணமே மீளவுமொடுங்கிவிடும். அவனே அருவமாயு மிருப்பான், உருவமாயு மிருப்பான், அருவுருவங் கடந்த தன்மையனாயு மிருப்பான், ஊழின் கருமமாயு மவற்றி னிமித்த மாயு மிருப்பான்; இப்படிப்பட்டவன் திருவிளை யாடலை யாவரோ இத்தன் மையென வெடுத்துச் சொல்ல வல்லவர்? வேதவளவைக்கும் உபநிடதங் களினுடைய உச்சியில் விரித்துக் கூறப்பட்டபோதவளவைக்குங் காண்பதற் கருமையாயுமிருப்பான். அவனே 'மூப்பானிளையவன் முன்னவன்பின்னவன்' என்றபடி. தனக்குப் பின்றோன்றிய உடம்பினை யுடையார் யாவரும் மூப்ப வும்தான் என்று நிலைபெற்ற கட்டிளமை யுடையானும், எவ்வகைப் பட்டவர் யாக்கைக்கும் முன்னே தன்னிச்சையாற் கொள்ளப்பட்ட கழிபெரு மூப்பா கிய திருமேனி யுடையானும் முடிவிற்கு முடிவாயும் ஆதிக்காதியாயும் உயிர்க் குயிராயுமிருப்பான். அந்த ஞானத் திருமேனியுடையவனிலக்கணத்தை யானு நீயுமாயிருந்து சொல்வதாயின் அஃதெளிதாமோ! மோன நீங்காத முனிவரும் இன்னமுந்தேறா திருக்கின்றனர். அவனைத் 'தன்பெருமை தானறியாத் தத்து வன்' எனப் பெரியாரும் பணித்தமையால் தானும் தன்பெருமையை இனைத் தென் றறியான். தத்தஞ் சொல்லாலே நிறுத்துகின்ற சமயிகள் பலரும் கத்து கின்ற புன்சொற்களை வினவினல்லது, அவன்செயலையே காணார்கள். வாதுள முதலிய வாகமத் தொகுதிகளை ஆராய்ந்தறியும் மெய்யுணர்ச்சி யுடையாரே யொருசிறிதறிவர். காட்சி, காட்டுவான், காண்பவன், காட்சிப் பொருளாகிய நான்கையும் ஐவகைப்பொறியும் இருவினைகளும் காலமும் இடமும்முறையாக முற்றும் பயனுமாகவு மிருக்கின்றனன். தாம்பிரமமென்று தம்மைக் கண்டு நாம் பிரமமென்று கூறும் பிரமன் மால்என்னும் இருவரும் அவனது மாயை வழிப் பட்டா ராகின்றனரோ! மூலமாகிய தத்துவ முழுவதுங் கடந்து மேலோங்கிய தனிமுதலோ அவனல்லதியாவர்? அவன் மண்முதல் சுத்தமாயை யிறுவுள்ள புவனங்களு முயிர்களும் பல பொருள்களுமாயு மிருக்கின்றனன், அவை

யல்லவுமாயு மிருக்கின்றனன், அவனது மாயைக்கடந்தா ரொருவருமிலர், வேதங்களு மவனதுமாயையை யுணராமலே மயங்காநின்றன. இத்தன்மைய னாகிய பரம்பரனைப் பாலனென்றிகழ்ந்தே கூறுகின்றனை! அவனே அவுணர் கள்கிளையை யெல்லா மகழ்ந்து நின்னையுங் களைந்து ஒரிமைப்போதி னிரப்பு கின்ற தன்கருணைத் திறத்தைக் காட்டவே போர்க்கெழுந் தருளினன். நீயோ ஆயிரத்தெட்டண்டம் பெற்றிருக்கின்றனை யென்றே வியந்து கொண்டி ருக்கின்றனையே! தத்துவபோத முழுதும்அறிந்தாயல்லையே, புவனங்களோ அள வில்லாதனவுள, மற்றபுவனங்களைக் கேட்பாயாயின் மருள்கொள்வை, சுத்த மாயையிருக வாரியே முதலாகக் கூடியுள்ள அண்டங்களோ அளவில்லாதன வென்பார்கள் ; ஒன்றோடொன்று பொருந்தி யுள்ளதாகிய புவனத்தின் இறப் பையாரோ யறியவல்லவர், நாமுடிவடையாதபொருளை முடிவுபெறக்கூறவல்ல தோ! அன்ன தன்மையாகிய புவனங்கள் பல கோடிகளையும் தன்னாணையா லோரிமைப்போதிற்றரவும் பின்னேமாற்றவும் வல்லானாகிய ஆதிநாயகன் போ ரா விளையாட்டாகச்செய்தற்கே செந்திமாநகரத்தில் வீற்றிருக்கின்றான். இது நிற்க, நீ வச்சிரதேகம் பெற்றோமென்று நின்னை நீ மதிக்கும் இந்தச்சிரத்தை யைவிட்டுவிடு, உயிர்களோ இருவினைக்கீடா யுடம்பெடுத்திறப்பனவென்று அறி ஞர் நிச்சயிப்பாராயின் நீதான் முடிவில்லாம லிருப்பையோ! வானிலும் நிலத் திலும் பெற்றிருக்கின்ற இருவகை யானதேகமும் உண்மையாகவே இறந்து விடும். உன்வச்சிரதேகமும் பிருதிவி சம்பந்தமாகையால் அதுமாத்திர மழியா திருக்குமோ! அழியாத வரம் பெற்றிருக்கின்றோமென்று நினைத்துக்கொண் டிருக்கின்றாயே! அதற்கு நான் சொல்லுகிற நியாயம் கேள்! திரிவிதவுலகத்தி லும் உள்ள மற்றவுயிர்களைப்போல் சிலகாலத்திற்கெடாது பலகாலத்திற் பெரு கிவாழுந் தன்மையை நோக்கி அச்சுதன் அயன் அமரர் முதலானோர்க்கும் உள்ள பெயர்கள் உபசாரமாகக் கூறப்பட்டவாறேபோல உன்னுடைய வச்சிர தேகமும் அழிவிலாத வரமும் மூவுலகமுந் தொழும்படி பலயுக மிருப்பதா முடியும். வானில் வசிக்கின்ற தேவர்களை நீ வருத்துவததிந்தே எவ்வுயிர்க்கு முயிராமொருவன் தான் கொடுத்திருக்கின்ற வரத்தைத்தானே தவிர்ப்பா னாயின் எனப்படி செய்தனையென்றவனைக் கேட்பாரு மொருவருமிலர். கெடு தலில்லாத செல்வத்தொடு நீயும் நின் சுற்றமும் வெகுகால முயிரொடு வாழ லாமென் றெண்ணியே இன்னன சில சொற்கள் கூறினேன். நீ தேவர்களை யெல்லாம் சிறையினின்றும் விடுவிக்க வேண்டு மென்று சிங்கமுகாசுரன் விண்ணப்பஞ் செய்தான்.

இவ்வாறு சிங்கமுகாசுரன் சொல்லி முடித்தவுடனே சூரபதுமனே தன் மணிமுடியை யசைத்து தன் காதில் நெருப்புச் சொரிந்தாற்போலக் கோபித் தெழுந்து சொல்கின்றான். தம்பி சிங்கமுகனே! காற்றினால் தள்ளுண்டு நெருப்பினால் சூடுண்டு கங்கை யாற்றினால் தாக்குண்டு சரவணம் புகுந்தலே யுண்டு கார்த்திகைமுதலிய அறுவர் முலையுண்டு அழுது விளையாடும் நேற்றுக் குழந்தையாகிய குமரனையோ பரம்பொருளென்று நினைத்து விட்டாயே! கடத்திற் பிரதி பலனமாகிய சூரியன் பல தோற்றினாற்போல பிரமமாகிய ஒரு

பொருள் உயிரென்று சொல்லப்பட்டு பலவுருக்கொண்டு தன்மாயையாலே அளவில்லாத கருமபேதங்களைச் செய்யும், கடந்தகர்ந்தபோதோ அவற்றி லுள்ளவெளி அவ்வெளியிற்கலந்தாற்போன்று தேகவகைகளனைத்தும் முடிந்த காலத்தே தொன்மைபோல வாக்குமனங்கடந்த பரம்பொருள் பேதமாகும் பிரமமே இவர்கள், இவர்களல்லரென்று பேதித்து இருதிறமாகக் கொள்ள வேண்டாம், உடம்போவேறு, பிரமமாகிய உயிரெல்லா மொன்றேயாம், இது பொன்னும் பணியும்போலு மென்றேதுணி. வெற்றியும் வல்லமையுமில்லாத வர் தாழ்வர், மேலோரே யோங்குவர், இது உலகநிகழ்ச்சி! என்று முடிவில் லாத பெரியோன் யான், சிறியோன் ஆறுமுகங்கொண்ட குமரன், ஆதலால் யான் அவனைவெல்வதுநிச்சயம். கூட்டமாகிய நமதுபெரியோர்பலருயிரையும் தொலைத்த பகைவராகையால் நான் அந்தத்தேவர்களை யெல்லாம் சிறையில் வைத்தேன். இது குற்றம் செய்வதாமோ அரசன் தண்டம் விதிப்பது மனு முதலியோர் கூறிய நூற்றுணிவு; இதுபற்றியே பெரியாரும் "கொலையிற் கொடி யாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்-களைகட் டதனொடு நேர்." எனவும் பணித் திருக்கின்றனர். நானே தேவர்களைக்காவலினின்றும் விடவேமாட்டேன், அத் தேவேந்திரனையும் பெருஞ்சிறையி லிடுவேன், ஏகநாயகனாகிய இறைவனேவந் தாலும் எதிர்ந்து போர்செய்வேன், ஆகையால் இச்சிறு தேவரில் அயர்ந்துவிடு, இனிசொல்வ தென்னவிருக்கின்றது. ஒருவயிற்றென்னுடன்பிறந்து பெருக்க மடைந்தனை? நமதுகுலத்துக்குப் பகைவராயுள்ள அத்தேவர்களை வருத்தாது அவர்களிடத்தேயிரக்கங்கொண்டனையே? நீயிருக்கவும் வேறொருபகையுமென க்கு வேண்டுமோ? ஆயிரஞ் சிங்கத்தின்தலைகளும் இரண்டாயிரந்தோள்களும் என்னத்துக்காகப்பெற்றிருக்கின்றனை? வன்மையுமுரமும் எங்கேயிழந்தனை? பித்தரினும் பேதைமைகொண்டிருக்கின்றனை? தானவர் வழிமுறையும் விட்டு விட்டாய், தேவர்கள்போன்று வன்மையு மொழிந்தனை? வலிமையும் வெற் றியுமிழந்தனை? இனி மோனத்துடனிருந்து அருமையாகிய தவஞ் செய்யப் போ! மறத்தையு மிழந்தாய்! மானமு நீங்கினை! சிறந்திருக்கின்ற அவுணர்கள் சிறப்பைக் கெடுக்கப் பிறந்தொரு பயனும் பெற்றாயில்லை, இறந்தாயல்லது இருக்கின்றாயுமல்லை, நீ எனக்கு மந்திரியாகையால் இதற்கு நீ மனத்தில் பயங் கொண்டால் நான்முகங்கொண்ட பிரமர்களைப்போற் படைகளை யெறிந்து விட்டுப் பஞ்சாங்கஞ் சொல்லிக்கொண்டிருக்க வேண்டுகிறேன். கள்ளி கிளை யொடு கிளைத்தாற்போலப் பலபல சிங்கமுகங்களும் பெற்றிருக்கின்றனை! அநே கம்கைகளையும் சுமந்து கொண்டிருக்கின்றனை? வலியில்லாதவனே! யாது செய் யத்துணிகின்றனை? முன்னே உணர்ச்சியில்லாத பருவமாகையால்யமனையும் வருணனையும் விலங்கிட்டனை, தேவர்களையும் இப்போது அறிவு முதிர்ந்திருக் கவும் பேடிபோன்ற நீதான் பெண்டிரைப்போல நடுக்கங்கொண்டனையே? பல தலைகளையுடைய பாலனாகின்ற உன் வல்லமையும் ஆண்டன்மையும் கண்ணாற் பார்க்க இன்னமு நம்மைப் பெற்றதாயாகிய மாயையோ வராதிருக்கின்றாளே! அன்னையினது குறையாமோ இது அருவமானது பகைசிறிதே வந்த போதிலும் பதைபதைத்தெழுந்து மிகுந்த வெற்றியைச் சிங்கவேறடையக் கண்டிருக்

னென்றேன், நீ அச்சிங்கத்தினது பலதலைகளையும் பெற்றதும் வீணே? பூதர்களையும் அப்பூதத் தலைவர்களையும் குமரநாயகனையும் மற்ற பகைவர் யாரையும் யானே வெற்றிகொள்ளச் செய்கின்றேன் நீ மனந்தளர வேண்டாம், உன்னுடைய நகரமே போய்ச்சேரென்று சூரபதுமன் கட்டளையிட்டான்.

அதைக்கேட்ட சிங்கமுகாசுரனே இவனறிவு நன்றாயிருக்கின்றதென்று சிரித்துக் கண்களில் தீப்பொறிசிதறத் தன்னுள்ளத்தாராயத் தொடங்கினன். நானேஎன்தமையனுக்கு உறுதியைநாடியே யெடுத்துச்சொன்னேன். அவனோ என்னை வீணாகவே யிகழ்ந்தான். இனி வருவ தறியாமலுமிருக்கிறான். தான் சாம்வகையையே நாடிக்கொண்டிருக்கின்றான். எப்போதேனும் யாதொன்றையும் அறிவில்லாதவருக்குப் புத்திசொல்கின்றவர் அவரைப் பார்க்கிலும் அறிவில்லாதவரே யாவார் என்று பெரியோர் கூறுகின்றனர். எட்டி மரத்தைத் தேன்மழை பெய்வித்து வளர்த்தாலும் அது தன்கைப்பு நீங்காதிராது, இது பற்றியே பெரியோரும் "உப்பொடு நெய்பாறயிர் காயம் பெய்திடினும் - கைப்பறு பேய்ச்சுரையின்காய்" என்றுஞ் சொல்லி யிருக்கின்றார்கள். பிறரால் தொலைக்க வருமையான இச்சூரபதுமனுடைய அறிவைக் கலக்கினும் உய்யும் வகை கருதவேமாட்டான். நாம் துன்பப்பட்டாவதென்ன? விதி வலியையும் கடக்க வல்லமோ, இதுபற்றியே "விதிப்பயனை வெல்வதற்கு வேதமுதலாமனைத்தாய நூலகத்துமில்லை" என்றும் பெரியோர் சொல்லக் கேட்டிருக்கிறோம். நமது பரமசிவன் அளித்த காலமோ முடிந்து போவதாயிருக்கின்றது. இங்கிருப்பவர்கள் யாவரும் நம்மரசனுடனே இறப்பர், இந்திரன்செய்ததவமும்போய்த்துப் போமோ. அரசனே இறப்பது மெய்ம்மை, என்னுடைய சொல்லையும் கடந்து பேசினன். வேண்டுமென்று இகழ்ந்தாலும் என்பிழையைப் பொறுத்தருள வேண்டுமென்றல்லது இன்னும் மறுத்தெதிர் மொழிய மாட்டேன், நமதண்ணனே இறைவன் வேலால் இறப்பது நிச்சயம், இங்கே யிருந்தின்னமும் பேசுவதோ பிழையாய் முடியும், இவனுக்கு முன்னே நாமே முடிவது முறையாமென்று சிந்தித்த சிங்கமுகாசுரன் தன் ஐம்பெருங்குரவரிலொருவனெனத்தகும் சூரபதுமனுடையபாதங்களை யெட்டுறுப்பு நிலமுறப்பணிந்து யான் செய்த பிழையைப் பொறுத்தருள வேண்டுகின்றேன். 'சிறியோர் செய்த சிறுபிழையெல்லாம் பெரியோராயிற் பொறுப்பது கடனே' என்பாராகையால் நீர் கோபியாமல் பொறுத்தருளும். நான் இதோ போர்க்குச் செல்கின்றேன், பகைவர்மேற் செல்ல விடை கொடுக்க வேண்டுகின்றேனென்று தம்பியாகிய சிங்கமுகாசுரன் கேட்க, அதைக்கேட்ட சூரபதுமன் தம்பியை யருகழைத்து அவனை மார்பொடிறுகத் தழுவி ஐயனே! நான்திக்கு விசயஞ்செய்யச் சென்றபோது அடையாத வெற்றிவேறியாவரடைந்திருப்பர்! நீ முன்னே சொன்னவைகளை யாராயும்போது என்மனத்துணிவும்திண்மையும் முயற்சியுமறியவேயாம்; நீமிருகங்களையெல்லாம்வெற்றிகொள்ளும் சிங்கவேறு போன்றவனல்லவோ! இனிப்பகைவர் இறந்தனரென்றே சொல்லவேண்டும்,

நீயே போர்க்கெழுந்தால் அவர்களைக் கொன்றபின்னும் அவர்கள் கும்பிட்டுப் புறமுதுகிட்டோட வென்றபின்னும் அல்லது கோப நீங்குவையோ! உன்னுற்றலையும் நானறியா திருப்பதுண்டோ? இந்தக்கணமே நின்னகரஞ்சென்று அவ்விடத்திலுள்ள சேனைகளையெல்லாமொருங்கே சேர்த்துக்கொண்டிரு, குமரநாயகன் வந்தால் தெரிவிக்கின்றேன் வாவென்று கட்டளையிட்டான். அதைக்கேட்ட சிங்கமுகனே நமது மகேந்திர நகரிற் குமரநாயகன் வருவானே யாயினும் அவனெடும் போர் செய்யப் போகவேண்டாம், எனக்கு ஒரு தூதனை யனுப்பினல் உடனே நான்வந்து விரைந்து போர்செய்கிறேனென்றுன்; அதற்குச் சூரபதுமனும் மகிழ்ந்து விடை கொடுக்கத் தாழ்ந்துபோய்த் தன்னகரமே யடைந்தான். பின்னே சூரபதுமன் அச்சபையிலிருந்த மக்கள் மந்திரிமார் பிரதானிமார் இவர்களைத் தத்த மிருக்கைக்கனுப்பிவிட்டுத் தான் இந்திர திருவமடைந்திருந்தான்.

சூரனமைச்சியற் படலம்.

மூன்ருவது

மகேந்திரகாண்டம் - முற்றுப்பெற்றது.

ஸ்ரீகச்சியப்ப சிவாசாரியர்
திருவடி வாழ்க.

---

சிவஞானயோகிகள்
சேவடிவாழ்க.

---